கழக வெளியீடு : ௧௧௨௬

# தென்னிந்திய தமிழ்ச் சாசனங்கள்

(ஆராய்ச்சிக் குறிப்புரைகளுடன்)

[சென்னைப் பல்கலைக்கழக வித்துவான்,
கீழ்க்கலைத் தேர்வுகளுக்கும், எம். ஏ.
தமிழ்த் தேர்வுகளுக்கும் பாடமாகவுள்ளது]



உரையாசிரியர் :
வித்துவான் வ தங்கையா நாடார்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி—6 சென்னை-1.
1967

# பதிப்புரை

தென்னிந்திய தமிழ்ச் சாசனம் என்பது நம் தமிழகத்தில் தமிழில் வரைந்துள்ள கல்வெட்டுக்கள் என்ற பொருளை யுணர்த்தும். சாசனம் என்பது வடமொழி: சிலா என்பதும் அதுவே. சிலாசாசனம் என்றும் சிலாலேகை என்றும் வழங்கு கிறது. கல்லின் வரைந்த உறுதிமொழி, அல்லது ஆணை என்பது இதன் பொருளாம். நீண்டகாலம் நிலைபெற்று வழங்கிவருதற்குரிய அறக்கட்டளையையும் அரசன் ஆணையையும் கல்லிலும் செம்பினும் தீட்டிக்காட்டுவது பண்டைக்கால மன்னர் பான்மையாம். செப்புப் பட்டயம், செப்பேடு, தாமிரப்பட்டயம், தாமிர சாசனம் என்ற பெயர் பல தமிழகத்தில் வழங்குவன காண்கின்றோம். இவ்வழக்கு நம் நாட்டில் ஏறக்குறைய ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்னர்த் தோன்றியதென்பதற்குச் சான்றுகளாகப் பலநூல்கள் உள்ளன. தொல்காப்பியம் பொருளதிகாரத்தில் "காட்சி, கால்கோள், நீர்ப் படை, நடுகல்' எனவும், அகம் கூஎ இல் 'பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்' எனவும், புறம் உகூச இல் 'அணிமயிற் பீலி சூட்டிப் பெயர்பொறித், தினிநட்டனரே கல்லும்' எனவும் நடுகல் வந்துள்ளமை சான்றும். நடுகல் என்பது, போரில் நேர்நின்று வீரமுடன் பொரு துயிரிழந்த தறுகண்மறவருடைய ஆண்மை, பெருமை, புகழ் முதலிய பண்புஞ்செயலும் பெயரும் பொறித்துக் கல்லினை நட்டு அக்கல்லினைத் தெய்வமாக மதித்து மயிற்றோகை மாலைசூட்டி வழியில் நட்டு யாவரும் வணங்குமாறு நிறுத்துவதாம். "ஆடவர், பீடும் பெயரும் எழுதி யதர்தொறும், பீலி சூட்டிய பிறங்கு நிலை படுகல்" எனவரும் அகநானூற்றுச் செய்யுளும் இதனை விளக்கும். இதனாற் கல்லிற் சொற்பொறிக்கும் வழக்கம் நம் தமிழ் நாட்டில் இருந்ததெனக் காண்க.

பின்னர் வந்த மன்னர் முதலிய யாவரும் இவ்வழக்கினை வழி வழியாகக் கையாண்டுவந்தனர் என்பதும் நாம் அறிந்த தொன்றே. பௌத்த சமணத் துறவிகள் தம் மதத்தைப் பரப்பத் தமிழ்நாட்டுக்கு வந்துயிர் துறந்து மறைந்த செய்தியை அவர் மாணவர்கள் மலைப்பாறை, குன்று, குகைகளிற் பொறித்து வைத்துள்ள இடங்கள் செஞ்சிக்கடுத்த திருநாதர் குன்று. நெல்லை மாவட்டம் கழுகுமலை, மதுரைமாவட்டம் ஆனைமலை, திருச்சிராப் பள்ளிமலை இவற்றிற் காணலாம். கிறித்துவமதம் பரப்பவந்த மேனாட்டறிஞர்கள் தமிழ்நாட்டில் வந்து மறைந்தபோது அவர்கள் பண்பும் செயலும் கல்லறைகளிலும் கோயில்களிலும் பொறித்து வைத்துள்ளமையும் காணலாம். இவ்வாறு முதலில் எழுந்த

கல்வெட்டுக்கள் பல்லவர் காலம் கி. பி. 4 ஆம் நூற்றுண்டு முதல் 9 ஆம் நூற்றுண்டுவரை வளர்ச்சியுற்றன என்னலாம். பின்னர் சோழர் கல்வெட்டுக்களும், பாண்டியர் கல்வெட்டுக்களும் தோன்றின.

இச்சாசனங்களைப் பல்லவர் சாசனங்கள், சோழர் சாசனங்கள், பாண்டியர் சாசனங்கள் என்று மூன்றுவகையாகப் பகுக்கலாம். பல்லவர் சாசனம் இரண்டு, சோழர் சாசனம் இருபது, பாண்டியர் சாசனம் எட்டு ஆக முப்பது சாசனங்கள் இந்நூலுள் அடங்கியுள்ளன. தொடக்கத்தில் தமிழ்ச்சாசன வரலாறும் அம்முப்பது சாசனங்களையும் குறித்த விரிவான ஆராய்ச்சிக் கட்டுரையும் ஆசிரியர் அமைத்துள்ளார். இறுதியில் சிறப்பான குறிப்புக்களும் அமைந்திருக்கின்றன.

ஒவ்வொரு சாசனத்தின் முன்னரும் முன்னுரையாக அது காணப்படும் அதன் காலம், அக்காலத்திய அரசர் எழுதப்பட்ட மொழி, எழுத்துவகை வரி முதலியவையும் கூறப்படுஞ் செய்தியும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. அடிக் குறிப்பில் அவ்வவ்வரசர் வரலாறு விளக்கமாக எழுதப்பட்டுள்ளன. சாசனப்பகுதிகட்கு அவ்வப்பக்கங்களில் அடிக்குறிப்பாக விளக்கந் தந்து சாசனத்தின் முடிவிற் பயிற்சி வினுக்களும் வரையப்பட்டுள்ளன.

தென்னிந்திய தமிழ்ச்சாசனம் என்னும் இந்நூல் ஆசிரியர் வ. தங்கையா நாடார் அவர்கள் வெளியீடாகப் புதிய முறையில் முன்னர்வந்து உலவியது. இந்நாள் அது கழக வெளியீடாக வெளிவருகின்றது. தெளிவாகவும் திருத்தமாகவும் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இந்நூல் தேர்வுக்குப் பயிலும் மாணவர்க்கும் சாசனவறிவு பெற விழையும் அறிஞர்க்கும் பெருந்துணைபுரியும் என்பதிற் சிறிதும் ஐயமின்று. பேராசிரியர், பள்ளித் தலைவர்கள், மாணவர், நூல் நிலையத் தலைவர், கழகம், மன்றம் நடத்தும் செயலாளர் எவரும் வாங்கித் தமிழ் நாட்டின் அருமை பெருமையையாய்ந்துணர்ந்து மகிழ்க.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

# முன்னுரை

நானே வழியுமெய்யு நல்லுயிரு மென்றபொருள்
தானேமுன் னிற்கவருள் தந்து.

'தென்னிந்திய தமிழ்ச் சாசனங்கள்' என்னும் பெய ருடைய இந்நூல், சென்னைப் பல்கலைக் கழகத்தார் 1958 ஆம் ஆண்டு முதல் வித்துவான், கீழ்க்கலைத் (B.O.L.) தேர்வுகளுக் கென வெளியிட்டுள்ள முப்பது கல்வெட்டுக்களையும், அவற்றிற் குரிய குறிப்புரை, விளக்கவுரை, வரலாற்றுரை, ஆராய்ச்சியுரை முதலியவற்றையும் கொண்டுள்ளது. இதற்கு முன்னர் வித்து வான் தேர்வுக்குரியதாய் என்னால் வெளியிடப்பட்ட சாசன உரைநூல், 'தமிழ்ச் சாசனங்கள்' என்று பெயரிடப்பெற் றிருந்ததால், இஃது அதனிலும் வேறு என்று அறிதற்கு இப் பெயர் இடப்பட்டது. முந்திய சாசனத் தொகுதியில் இருந்து, இத்தொகுதியில் எட்டுச் சாசனங்கள் இடம் பெற்றுள்ளன. 1914 ஆம் ஆண்டு முதல் பி. ஏ. ஆனர்சு., எம் ஏ., தமிழ்த் தேர்வுகளுக்கும் இது பாடமாய் இருந்து வந்துள்ளமையும் குறிப்பிடத்தக்கது.

இந்நூலில் ஒவ்வொரு சாசனத்தின் முன்னரும் முன்னுரை யாக அது காணப்படும் இடம், அதன் காலம், அக்காலத்திய அரசர், எழுதப்பட்ட மொழி, எழுத்துவகை வரி முதலியவையும் அதில் கூறப்படும் செய்தியும் தெளிவாய்க் கூறியிருப்பதோடு, அடிக்குறிப்பில் அந்தந்த அரசர் வரலாற்றினையும் விரிவாகக் கூறியுள்ளேன். சாசனப் பகுதிகளுக்கு அந்தந்தப் பக்கங்களில் அடிக் குறிப்பாக விளக்கம் தந்திருப்பதோடு, சாசனத்தின் முடி வில் பயிற்சி வினாக்களும் அமைத்துள்ளேன்.

நூலின் தொடக்கத்தில், தமிழ்ச் சாசன வரலாறும், நூலில் அமைந்துள்ள முப்பது சாசனங்களைப் பற்றிய விரிவான ஆராய்ச்சிக் கட்டுரையும் எழுதியிருப்பதோடு, இறுதியில் 'விசேடக் குறிப்புக்கள்' முதலியனவும் அமைத்துள்ளேன். இந்நூல் தேர்வுக்குப் பயிலும் மாணவர்களுக்கு மட்டுமன்றி, தமிழ்ச் சாசன அறிவுபெற அவாவும் தமிழறிஞர் அனைவர்க்கும் அருந்துணை புரியு மென்பதற்கு ஐயமில்லை. பேராசிரியர்கள், பள்ளித்தலைவர்கள், மாணவர்கள், நூல்நிலையப் பொறுப்பினர் அனைவரும் இந்நூலை வாங்கி ஆதரிப்பார்கள் என்று நம்பு கின்றேன்.

பாளையங்கோட்டை,
1—6—1958.

ஆசிரியர்.

# உள்ளுறை

# தமிழ்ச் சாசன வரலாறும் ஆராய்ச்சியும்

சாசனம் என்பது ஒரு வடசொல்; அது கட்டளை அல்லது உத்தரவு என்று பொருள்படும். அரசர்கள் கோயில்களுக்கும், புலவர் முதலியவர்களுக்கும் அளித்த தானங்களைப் பற்றிய உத்தரவு அல்லது கட்டளை ஆதியில் சாசனம் என்று பெயர் பெற்றது. இடைக்காலத்தில் பிறதானத்தைக் குறிப்பதற்கும் அச் சொல் வழங்கப்பட்டது. இப்பொழுது நிலத்தின் கிரயப் பத்திரத்தைக் குறிப்பதற்கு நாம் அச் சொல்லை வழங்குகின்றோம்.

சாசனங்கள் தங்கம், வெள்ளி, செம்பு முதலிய உலோகங்களில் எழுதப்படினும், பெரும்பாலும் அவை கல்லில் வெட்டப் பட்டு வந்ததனால், 'கல்வெட்டுக்கள்' என்றும், 'சிலாலேகை' என்றும் பெயர் பெற்றன. செம்பு முதலிய உலோகங்களில் எழுதப்பட்டவை செப்புப் பட்டயம், செப்பேடு எனவும், தாமிரப் பட்டயம், தாமிர சாசனம் எனவும் பெயர் பெற்றன. அவற்றை வேறு அடைமொழி யின்றிப் 'பட்டயம்' என வழங்குதலு முண்டு. உலோகங்கள், கருங்கற்கள் ஆகியவற்றி லன்றிச், சாசனங்கள் மட்பாண்டம், செங்கல், சுட்டமண், பளிங்குக்கல், படிமம் முதலியவற்றிலும் எழுதப்பட்டு வந்தன.

தமிழ் நாட்டில் கோயில் சுவர்கள், கற்பாறைகள், மலைக்குகைகள், மண்டபங்கள், படிமங்கள், நடுகற்கள் முதலியவற்றில் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. செப்பேடுக ளெல்லாம் கல்வெட்டுக்களின் படிகளே யாதலின், அவையும் கல்வெட்டுக்கள் என்றே சொல்லத் தகுந்தனவாம்.

தென்னிந்தியாவில் பிராகிருதம், சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, கன்னட முதலிய பல மொழிகளில் எழுதப் பெற்ற கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. அவைகளிற் சில கல்வெட்டுக்கள் இருமொழிகள் கலந்து காணப்படுகின்றன. தமிழ் மொழியில் எழுதப் பெற்ற சாசனங்களும் கூடக் கிரந்த எழுத்துக்களும், சமஸ்கிருத மொழிகளும் கலந்து எழுதப் பெற்றுள்ளன. சில செய்யுள் வடிவத்திலும், சில உரை நடையிலும், இன்னும் சில அவை இரண்டும் கலந்தும் காணப்படுகின்றன. இந்நூலில் தென்னிந்தியாவில் தமிழ்மொழியில் எழுதப் பெற்ற முப்பது கல்வெட்டுக்களைப் பற்றிக் கூறப்படுதலின், இது 'தென்னிந்திய தமிழ்ச் சாசனங்கள்' என்று பெயர் பெற்றது.

இத்தகைய கல்வெட்டுக்கள் தமிழ்நாட்டில் பழங்கால முதலே தோன்றியுள்ளன என்பதற்குப்பல சான்றுகள்காணப்படுகின்றன.

இன்றைக்குச் சுமார் ஐயாயிரம் ஆண்டுகட்கு முன் தோன்றிய தாகக் கருதப்படும் 'தொல்காப்பியம்' என்னும் இயற்றமிழ் இலக்கண நூலில்,

"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தலென்
றிருமூன்று வகையிற் கல்லொடு புணர" (தொல். 1006)

என வரும் சூத்திரத்தாலும், அதன் உரையாலும், அக்காலத்தில் போர்க்களத்தே வென்று பட்ட வீரர்களுக்குக் கல்லெடுத்தலும், அக் கல்லில் அவர்தம் வீரச் செயல்களைப் பொறித்து நடுதலும் அதற்குக் கோயிலெடுத்து வழிபடுதலுமாகிய செய்திகள் கூறப் பட்டுள்ளன என்பது புலனாகின்றது. இச்செய்திகளைக் கடைச்சங்க காலத்தில் தோன்றியனவாகக் கருதப்படும் அகநானூற்றில்,

"நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடு மெழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்" (அகம். 67)

எனவும், புறநானூற்றில்,

"மரல்வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொ
டணிமயிற் பீலி சூட்டிப் பெயர்பொறித்
தினிநட் டனரே கல்லும்" (புறம். 264)

எனவும் வருவனவற்றால் காணலாம். தொல்காப்பியத்தின் வழியாகப்பிறந்த பன்னிருபடலம், புறப்பொருள் வெண்பாமாலை முதலிய இலக்கண நூல்களிலும் இச் செய்திகள் பல வெண்பாக் களால் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. திருக்குறள், கலிங்கத்துப் பரணி, மூவருலா, திருவாரூர் மும்மணிக்கோவை முதலிய தமிழ் இலக்கிய நூல்களிலும் இவைகள் பற்றிய குறிப்புக்கள் பல காணப்படுகின்றன.

முற்காலத்தில் போர்வீரர்களின் வெற்றிகளேயன்றி அவர்தம் கொடைச் சிறப்பும் கல்லில் பொறிக்கப்பட்டன என்பதைப் புறநானூற்றுப் பாடலொன்று குறிப்பாகக் காட்டுகின்றது. அக நானூற்றுச் செய்யுளொன்றிலும்,

"ஆடவர்,

பீடும் பெயரும் எழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்"

எனவரும் அடிகளான் அக்காலத்து நடுகற்களில்போர்வீரர்களது பெருமைக்குக் காரணமான கல்வி, தறுகண், புகழ் முதலியனவும் எழுதப்பட்டு வந்தன என்பது விளக்கமாகின்றது.

இடைக்காலத்தில் பௌத்த, சமண முனிவர்கள் தத்தம் மதத்தைப் பரப்புதற்கென்று தமிழ் நாட்டிற்கு வந்து, அரிய நோன்பியற்றி, தம் ஆருயிர் துறந்த இடங்களில், அவர்தம் மாணுக்கர்கள் அவர்களைப் பற்றிய செய்திகளை மலைப்பாறைகளிலும், குன்றுகளிலும், குகைகளிலும் பொறித்து வைத்துள்ளமையைச் செஞ்சிக் கடுத்த திருநாதர் குன்றிலும், திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள கழுகுமலையிலும், மதுரை மாவட்டத்திலுள்ள ஆனைமலையிலும், திருச்சிராப்பள்ளிக் குன்றிலும் நாம் இப்பொழுதும் காணலாம். இவ்வாறு கிறித்து சமயத்தைப் பரப்புதற்கு மேனுட்டினின்றும் வந்து, தமிழ்நாட்டில் இறந்தவர்களுடைய கல்லறைகளிலும், கிறித்துவக் கோயிற் சுவர்களிலும் பொறித்து வைக்கப் பெற்ற அவர்தம் செய்திகளை யெல்லாம் தொகுத்து, இற்றைக்குப் பத்து ஆண்டுகட்கு முன்னர் நமது சென்னை அரசாங்கத்தார் "List of Inscriptions on Tombs or Monuments in Madras" என்ற பெயரோடு இருபெரு நூல்களாக வெளியிட்டுள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

இவ்வாறு நடுகல் சாசனங்களாகவும், சமாதிச் சாசனங்களாகவும் தோன்றிய கல்வெட்டுக்கள், கி. பி. 4 ஆம் நூற்றுண்டு முதல் 9 ஆம் நூற்றுண்டுவரை தமிழ்நாட்டின் வடபகுதியை ஆண்ட பல்லவர்கள் காலத்தில் வளர்ச்சியுற்றன என்று நாம் சொல்ல வேண்டும். அவர்கள் முதலில் தங்கள் தாய்மொழியான பிராகிருதமொழியிலேயே சாசனங்களை எழுதி வந்தனர். பின்னர் வடமொழியிலும். கி.பி. ஆரும் நூற்றுண்டு முதல் தமிழ்மொழியிலும் அவர்தம் கல்வெட்டுக்கள் தோன்றலாயின. அவர்கள் கி. பி. ஏழாம் நூற்றுண்டு முதல் தமிழ்நாட்டில் கற்கோயில்கள் பல கட்டினுர்கள். அக்கோயில்களில் நாள்வழிபாடும், திங்கள் விழா, ஆண்டுவிழாக்களும் நடைபெறும்பொருட்டுப் பொன்னும் நிலமுமாகப் பல நிவந்தங்களைக் கொடுத்தனர். அவர்களைப்போலப் பிற அரசியல் அதிகாரிகளும், பொதுமக்களும் கோயில்களுக்குத் தானங்கள் வழங்கினர். அவர்கள் அளித்த தானங்களைச்செப்பேடுகளில் எழுதிக் கோயில்களுக்குக்கொடுத்தனர். கோயில் அதிகாரிகளும், ஊர்ச்சபையினரும் அதனை எல்லாரும் அறிந்து எப்பொழுதும் அது நடைபெறுமாறு எல்லாரும் காணக்கோயில் சுவர்களில் பொறிக்கலாயினர். இங்ஙனம் நடுகல் சாசனங்களும் சமாதிச் சாசனங்களும் பல்லவர்கள் காலத்தில் கோயில் சாசனங்களாக வளர்ச்சியுற்றன.

பல்லவர்களுக்குப் பின் ஏறக்குறைய நானூற்றுமுப்பது ஆண்டுகள் சோழர்கள் தஞ்சையிலிருந்து தமிழ்நாட்டை ஆண்டனர். அவர்களைத் 'தஞ்சைச்சோழர்கள்' அல்லது 'பிற்காலச்

சோழர்கள்' என்று கூறுவார்கள். அவர்களும் பலகற்கோயில்களைக் கட்டி நிவந்தங்கள் கொடுத்துச் சாசனங்களைப் பிறப்பித்தனர். அவர்களுக்குப்பின் வந்த பிற்காலப் பாண்டிய மன்னர்களும் சாசனங்களை எழுதி வைக்கும் பழக்கத்தைமேற்கொண்டனர். அதனால் பிற்காலத்தில் சாசனங்கள் பல வகையிலும் வளர்ச்சியுற்றன. அரசர்களும் பொதுமக்களும் கோயில்களுக்கு மானியம் அளிப்பது பார்ப்பனர்களுக்கு ஊர் அளிப்பது, அறச்சாலைகளுக்கு நிவந்தங்கள் தருவது, கோயில்கள், மண்டபங்கள் எடுப்பது, கோயில் திருப்பணிகள் பல செய்வது, கோயில்களுக்கு நந்தாவிளக்குகள் அளிப்பது. திருவிழாக்கள் நடைபெறுவதற்கு மானியமளிப்பது, அரசர்கள் அல்லது அடியார்கள் பிறந்த நாட்களைக் கோயில்களில் கொண்டாடத் தானமளிப்பது முதலிய பலவகைச் செய்திகள் பற்றியும் சோழர்காலத்திலும், பாண்டியர் காலத்திலும் சாசனங்கள் தோன்றலாயின. சுருங்கக் கூறின், தமிழ்நாட்டின் இடைக்கால வரலாறு அவர்கள் காலத்திய சாசனங்களின் வாயிலாகவே அறியக் கூடியதாயுள்ள தென்றால், சாசன வளர்ச்சி அவர்கள் காலத்தில் எவ்வாறிருந்த தென்பது சொல்லாமலே விளங்கு மல்லவா?

பல்லவர் கல்வெட்டுக்கள் மூன்று கூறுபாடுகளை யுடையன. அதன் துவக்கத்தில் அக் காலத்து அரசனுடைய பெருமை கூறப் பெற்றிருக்கும். பின்னர் இன்னின்னார் இன்னின்ன அறத்தின் பொருட்டு இன்னின்ன பொருட்களைக் கொடுத்தனர் என்பன போன்ற செய்திகள் காணப்படும். முடிவில் அவ்வறத்தின் பாது காவல் பற்றிக் கூறும் 'காப்புநிலை' குறிக்கப் பெற்றிருக்கும். அவர்கள் சாசனங்களின் துவக்கத்திலும் முடிவிலும் ஏதாவது ஒரு வடமொழிச் சுலோகத்தைப் பெற்றிருப்பதும் உண்டு. பல்லவர் காலத்தை அடுத்து வாழ்ந்த சோழர், பாண்டியர் சாசனங்களில் அரசனது பெருமை, சிறப்பு முதலியவைகளைக் கூறும் பகுதி வடமொழியிலும், செய்திகளைக்கூறும் பிற்பகுதி தமிழ் மொழியிலும் அமைந்து காணப்பட்டன. முதலாம் இராசராசன் காலத்திலிருந்து தான் அரசனது போர் வெற்றிகள், ஆட்சிச் சிறப்பு கொடை முதலியவற்றைக் கூறும் மெய்க்கீர்த்திகள் விரிவாகக் கூறப்பட்டு வந்தன.

*"சீர்நான் காகி இரண்டடித் தொடையாய்*
*வேந்தன் மெய்ப்புகழ் எல்லாம் சொல்லியும்*
*அந்தத் தவன்வர லாறு சொல்லியும்*
*அவளுடன் வாழ்கெனச் சொல்லியும் மற்றவன்*
*இயற்பெயர்ப் பின்னர்ச் சிறக்க யாண்டெனத்*
*திறம்பட உரைப்பது சீர்மெய்க் கீர்த்தி"*

(பன்னிருபாட்டியல். 101)

என்பது சாசனங்களின் துவக்கத்தில் செய்யுள் வடிவில் காணப் பெறும் மெய்க்கீர்த்திக் குரிய இலக்கணமாகும். இவ்விலக்கணம் பன்னிரு பாட்டியல் என்னும் பாட்டியல் நூலில் கூறப்படுகிறது. மெய்க் கீர்த்தியின் இலக்கணத்தைக் கூறும் வேறு நூல்கள் வச்சணந்திமாலை என்னும் வெண்பாப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல் முதலியன வாகும்.

இச் சாசனங்களிற் குறிக்கப் பெறும் செய்திகளும் பலவாம். கோயில்களில் நடைபெறும் நாள் வழிபாடுகள், விழா நிகழ்ச்சிகள், இரவும் பகலும் இடைவிடாமல் எரிக்கப்படும் நந்தா விளக்குகள், வழிபாட்டு வேளைகளில் மட்டும் எரிக்கப்படும் சந்தி விளக்குகள், படிவம் திருவுருவங்களுக்குரிய அணிகலன்கள், வெள்ளி செப்புக் கலங்கள் முதலியவற்றின் எடை முதலியன, கோபுரம், மண்டபம் திருச்சுற்று மாளிகைகள், படிமம் ஆகியவற்றின் பெயர்கள் முதலிய வற்றைப் பற்றிய செய்திகள் கல்வெட்டுக்களில் காணப்படுகின் றன. அன்றியும் அரசர் அரசியல் அதிகாரிகள் முதலியோர் செயல், தானங்கள், உறுதிமொழிகள், அறச்செயல்கள் முதலியனவும் சாசனங்களிற் கூறப்பெற்றுள்ளன.

இத்தகைய சாசனங்களாலும், சாசனங்களில் அமைந்த மெய்க் கீர்த்திகளாலும் உண்டான பயன்கள் பலவாகும். நாம் கேட்கும் பாரம்பரியக் கதைகள், படிக்கும் இலக்கியங்கள், காணும் கலை நுட்பங்கள் ஆகிய இவைகளின் மூலம் தோன்றும் வரலாற்றை வரிசைப்படக் கூறுவது சாசனங்களே. சாசனங்கள் நாட்டு வர லாற்றைக் கூறும் நோக்கத்தோடு எழுதப்பட வில்லை யாயினும் அவைகளின்றேல் இன்றைய நம் இந்திய நாட்டு வரலாறுகள் இத்துணை விரிவாக எழுதப்பட்டிரா என்பது வெளிப்படை. இலக்கியங்களும், கலைகளும், உண்மை வரலாற்றுடன் கற்பனைகள் பொதிந்தவை; வரிசைப்பட அமையாதவை. அவற்றுள் உண்மை இன்னது, அவைகளின் வரிசை இன்னது என்பதைச் சாசனங்கள் நமக்குப் புலப்படுத்துகின்றன.

சாசன ஆராய்ச்சியால் போந்த பயன்களைக் கூற வந்த வரலாற்றுப் பேராசிரியர் உயர்திரு. T. V. சதாசிவபண்டாரத்தா ரவர்கள் 'புறநானூறும் கல்வெட்டுக்களும்' என்ற அவரது சொற் பொழிவில் பின்வருமாறு கூறியுள்ளார் :—

''கல்வெட்டுக்களில் காணப்படும் செய்திகள் எல்லாம் வெறும் கற்பனைச் செய்திகள் அல்ல; பயனற்ற செய்திகளுமல்ல. அவை அனைத்தும் நம் முன்னோர்களுடைய உண்மை வரலாறுகளை யுணர்த்தும் பழைய வெளியீடுகளே. சேர, சோழ பண்டியராகிய முடியுடைத் தமிழ் வேந்தரும், பல்லவரும், குறுநில மன்னரும்,

பிற தலைவர்களும் செய்த அறச் செயல்களும், வீரச்செயல்களும், அன்னோர் செய்து கொண்ட உடன்படிக்கைகளும், அக்கால அரசியல் முறைகளும், போர் நிகழ்ச்சிகளும், பழைய தலைவர்களைப் பற்றிய செய்திகளும் மண்டலம்-வள நாடு-கோட்டம் - நாடு-கூற்றம் என்பவற்றின் வரலாறுகளும், பல ஊர்களின் உண்மைப் பெயர்களும், முற்கால வழக்கங்களும், சமய நிலையும், மற்றும் பல அரிய நிகழ்ச்சிகளும் நம் நாட்டுக் கல்வெட்டுக்களாலும் செப்பேடுகளாலும் நன்கு அறியக் கிடக்கின்றன. சுருங்கச் சொல்லுமிடத்து நமது நாட்டின் பழைய சரிதங்களை உள்ளவாறு உணர்ந்து கொள்வதற்குத் தக்க கருவியாயிருப்பன கல்வெட்டுக்களும் செப்பேடுகளுமே யாம்.''

இத்தகைய பெருமை வாய்ந்த கல்வெட்டுக்களை நம் முன்னோர் பலவிதமாகப் பாதுகாத்து வந்தனர். கோயில் கல்வெட்டுக்கள். கோயில் கண்காணிப்புக்கு வேண்டுவனவாகவும். பொது மக்களும், ஊர்ச் சபையினரும் அவற்றை அறிந்து நடத்தற்குரியனவாயு மிருந்ததால், அவைகளுக்கு எண்ணெய் பூசுவதும், அவைகளை அவ்வப்போது கவனித்துக் கொள்வதும் பண்டைக் கோயில் மேற்பார்வையாளரின் கடமைகளாக இருந்து வந்தன. அவர்கள் கல்வெட்டுக்களுக்குச் செப்புத் தகடுகளில் படிகள் எடுத்து வைத்திருந்தனர். பழுதுற்ற கோயில்களை இடித்துக் கட்டுவதற்கு முன்னர், அவைகளிலுள்ள கல்வெட்டுக்களை ஓலைகளில் படி எடுத்து, கோயில் கட்டி முடிந்ததும் ஊர்ச் சபையார் மேற்பார்வையில் மீண்டும் அவைகளை அந்தந்த இடங்களில் செதுக்குவித்து வந்தனர். "திருமண்டப மிழிச்சி எடுப்பதற்கு முன்புள்ள சிலாலேகைப்படி" எனவும், "ஸ்ரீ விமானம் இடித்துவதற்கு முன்புள்ள சிலாலேகைப்படி" எனவும் வரும் சாசனத் தொடக்கத் தொடர்கள் இதனை வலியுறுத்தும், திருமழபாடி, திருவாவடு துறை, திருவிடைமருதூர், திருப்புகலூர், திருவையாறு முதலிய இடங்களில், இங்ஙனம் கோயில் சாசனங்களைப் படி எடுத்து, கோயிலை இடித்துக் கட்டிய பின் மீண்டும் அந்தந்த இடங்களில அவைகளை வெட்டியுள்ளமை காணப்படுகின்றன.

இதுவரை கிடைத்துள்ள தமிழ்ச் சாசனங்களில் பழைமையானது, செஞ்சிக்கு அடுத்த திருநாதர் குன்றிலுள்ள சாசனமெனவும், மிகவும் நீளமானது. செங்கல்பட்டு மாவட்டத்தில் திருமுக்கூடலிலுள்ள வீரராசேந்திர சோழன் காலத்துச் சாசனமெனவும் இன்றைய சாசன ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

ஆனால் தமிழ்நாட்டில் அந்நியராட்சி ஏற்பட்ட காலத்தில் இச்சாசனங்களைப் பாதுகாக்க வேண்டுமென்பதைத் தமிழ் மக்கள் மறந்தனர். அவைகளின் அருமை பெருமைகளும் அவர்

களுக்கு விளங்காமல் போயிற்று. இந்நிலையில் சொமானிய தேசத்தவரான டாக்டர் உல்சு (Dr. Hultzch) துரை மகனார் இந்தியாவிற்கு வந்து, இந்தியக் கோயில்களிலுள்ள சாசனங்களின் பெருமைகளை உணர்ந்தார். அவர் அக்காலத்தில் ஆங்கில அரசப் பிரதிநிதியாயிருந்த ரிப்பன் பிரபுவிடம் அதைப்பற்றிப் பேசி, அவர் உத்தரவு பெற்று ஆங்காங்குள்ள கல்வெட்டுக்களைத் தொகுப்பதற்கும் ஆராய்ச்சி செய்வதற்கும் ஏற்பாடுகள் செய்தார். 1886 ஆம் ஆண்டு முதல் 1903ஆம் ஆண்டு வரை சென்னை அரசாங்கத்தாரின் சிலா சாசன ஆராய்ச்சித்துறைத் தலைவராக இருந்து தென்னிந்திய சாசனத் தொகுதிகளில் முதல் மூன்று தொகுதிகளைத்தக்க மொழி பெயர்ப்புடனும், முன்னுரையுடனும் ஆராய்ச்சிக் குறிப்புரையுடனும் வெளியிட்டார். வரலாற்றாராய்ச்சிக்கு உதவியாகச் சாசன ஆராய்ச்சி ஆண்டு அறிக்கைகளையும் அவர் வெளியிட்டார். இந்திய சாசனத் (Ephigraphia Indica) தொகுதிகளில் மூன்றாம் தொகுதி முதல் ஒன்பதாம் தொகுதியின் ஒரு பகுதி வரை வெளியிடும் பொறுப்பை அவரே ஏற்றுச் சிறப்பாக நடத்தினார். சமஸ்கிருதம் பிராகிருதமுதலிய மொழிகளில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்த அவர், அம்மொழிகளிலுள்ள பல நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டார். அக்காலத்தில் உயர்திரு து.அ.கோபிநாதராவ், திரு வி.வெங்கையா முதலியவர்களை அவர் தம் ஆராய்ச்சிக்குத் துணையாகக் கொண்டு அவர்களையும் அவர் அதில் ஈடுபடும் படியாகச் செய்தார். நாளடைவில் பலர் இத்துறையில் ஈடுபட்டுச் சிறந்த பணி செய்து வந்துள்ளனர்.

இதுகாறும் தென்னிந்திய சாசனத் தொகுதிகளில் பதின்மூன்று தொகுதிகளும் அவைகளைப் பற்றிய ஆண்டு அறிக்கைகளும் வெளிவந்துள்ளன. அவைகளில் முதல் மூன்று தொகுதிகள் உல்சு துரைமகனாரால் ஆராய்ச்சிக் குறிப்புரைகளுடன் வெளியிடப்பட்டன என்று மேலே கூறினோம். நான்காம் தொகுதி முதல் எட்டாம் தொகுதி வரை சாசனங்களின் மூலம் மட்டும் அமைந்த தொகுதிகளாகக் காணப்படுகின்றன. 9, 10, 11 ஆம் தொகுதிகள் தெலுங்கு, கன்னடமொழிகளில் அமைந்த சாசனங்களாகும். 12, 13 ஆம் தொகுதிகள் இரண்டும் ஆராய்ச்சி முன்னுரையுடன் வமிச வாரியாக முறையே பல்லவர்களையும் சோழர்களையும் பற்றிய சாசனங்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன.

உயர்திரு. து. அ. கோபிநாதராவ் அவர்கள் 1902 ஆம் ஆண்டு முதல் திருவனந்தபுரம் சமத்தானத்தில் சாசன ஆராய்ச்சித் துறைத் தலைவராக விருந்து வெளியிட்ட தொகுதிகளே திருவாங்கூர் சாசனத் தொடர் (Travancore Archaeological series) என்று பெயர்பெறும் சாசன ஆராய்ச்சிக்குத் துணையாக

அவர் எழுதிய பண்டைத் தமிழ் எழுத்துக்கள் பற்றிய ஆராய்ச்சி கள் யாவராலும் போற்றத்தக்கன வாகும். இவை யன்றிப் புதுக்கோட்டை இராச்சிய சாசனங்கள், கர்னுடக இராச்சிய சாசனங்கள் முதலிய பல சாசனத் தொகுதிகளும் வெளிவந்துள்ளன. அரசாங் கத்தார் படி எடுத்த சாசனங்களில் இன்னும் வெளியிடப்படாதன முப்பதிணுயிரத்திற்கு அதிகமாயுள்ளன என்று கூறுகின்றனர். அவைகளும் வெளிவரக் கூடுமாயின், இந்திய நாட்டின் வரலாற் றுண்மைகளை அறிவதற்குப் பெரிதும் உதவு மென்பதற்கு ஐயமின்று.

இங்ஙனம் இந்திய நாட்டு வரலாற்று ஆராய்ச்சிக்கு மிகவும் சிறந்த சான்றுகளா யுள்ள சாசனங்களின் பதிப்புக்களுக்குக் காரணமாயிருந்த மேனுட்டவரில் ராபர்ட் சிவெல், டாக்டர் கீல் ஹார்ன், டாக்டர் பர்னல், டாக்டர் பூலர், டாக்டர் உல்சு, கர்னல் காலின் மக்கென்ஸி முதலியவர்களும், தமிழ் நாட்டவரில் உயர்திரு. து. அ. கோபிநாதராவ், திரு வி. வெங்கையா, திரு. P. T. ஸ்ரீனிவாசையங்கார் எம். ஏ. முதலியவர்களும் குறிப்பிடத் தககவ ராவர். இக் காலத்திலும் திரு. மு. இராக்வையங்கார், திரு. T. N. சுப்பிரமணியன். திரு. C. M. இராமச்சந்திரன் செட்டியார், திரு. T V. சதாசிவபண்டாரத் தார் முதலியோர் சாசன ஆராய்ச்சியில் மதி நுட்பமுடையவர்க ளாய்ப் பல வரலாற்றுண்மைகளைக் கண்டு வெளியிட்டுள்ளனர்.

இச் சாசனங்களில் சென்னைப் பல்கலைக் கழகத்தார் முப்பது சாசனங்களைத் தேர்ந்தெடுத்து, ஆங்கில முன்னுரையுடனும், சாசன மூலத்தை யடுத்து ஆங்கில மொழிபெயர்ப்புடனும், ஓரளவு அடிக் குறிப்புடனும் 1952 ஆம் ஆண்டு வெளியிட்டனர், அஃது 1954 ஆம் ஆண்டு முதல் பி. ஏ. ஆனர்சு, எம். ஏ. தமிழ்த் தேர்வுகளுக்குப் பாட நூலாகவும், 1958 ஆம் ஆண்டு முதல் தமிழ் வித்துவான். கீழ்க்கலைத் (B. O. L.) தேர்வுகளுக்குப் பாட நூலாக வும் குறிக்கப் பெற்றுள்ளது. அதில் முதல் சாசனம் இந்திய சாசனத் தொகுதியிலும், 2 முதல் 22 வரையுள்ள சாசனங்கள தென்னிந்திய சாசனத் தொகுதியிலும், 23, 24, 25, 26, 30 ஆம் சாசனங்கள் திருவாங்கூர் சாசனத் தொகுதியிலும் 27, 28, 29 ஆம் சாசனங்கள் புதுக்கோட்டை இராச்சிய சாசனத் தொகுதியிலும் இருந்து தொகுக் கப் பெற்றவை யாகும்.

அவற்றுள், முதல் சாசனம் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலிலும், 2 ஆம் சாசனம், திருச்சானூர் (சித்தூர் மாவட்டம்) பத்மாவதி அம்மன் கோயிலிலும், 3 ஆம் சாசனம் ஆனைமலை (மதுரை மாவட்டம்) நரசிங்கப் பெருமாள் கோயிலிலும், 4 ஆம் சாசனம் திருப்பாக்கடல் கர்ப்பூர ஈசுவரன் கோயிலிலும் 5, 8, 9, 10, 11, 12, 14, 18, 20 ஆம் சாசனங்கள் தஞ்சைப் பெரிய

கோயிலிலும், 6 ஆம் சாசனம் உக்கல் (செங்கல்பட்டு மாவட்டம்) விஷ்ணு கோயிலிலும், 7 ஆம் சாசனம், மேற்பாடி (வடார்க்காடு) சோழேசுவரர் கோயிலிலும், 13 ஆம் சாசனம், திருமலை குந்தவை சினலயத்திலும், 15, 16, 17, 22 ஆம் சாசனங்கள் மணிமங்கலம் (செங்கல்பட்டு) இராச கோபாலப் பெருமாள் கோயிலிலும், 19 ஆம் சாசனம் திருவரங்கம் (திருச்சி) சம்புகேசுவர சுவாமி கோயிலிலும், 21 ஆம் சாசனம் திருமழபாடி (திருச்சி) வைத்திய நாத சுவாமி கோயிலிலும், 23 ஆம் சாசனம், திருக்கோகர்ணம் (புதுக் கோட்டை) கோகர்கணேசுவரர் கோயிலிலும், 24 ஆம் சாசனம் மலையக்கோயில் (புதுக்கோட்டை) குடம்போகக் கோயிலிலும், 25 ஆம் சாசனம் கண்ணனூர் (புதுக்கோட்டை) பால சுப்பிரமணிய சுவாமி கோயிலிலும் 26, 30 ஆம் சாசனங்கள் நெய்வாசல் (புதுக்கோட்டை) அகத்தீசுவரர் கோயிலிலும், 27, 28 ஆம் சாசனங்கள் தென்காசி (நெல்லை) விசுவநாத சுவாமி கோயிலிலும், 29 ஆம் சாசனம் செங்கோட்டை (நெல்லை) சிவன் கோயிலிலும் பொறிக்கப் பெற்றவையாகும்.

இச் சாசனங்களைப் பல்லவர் சாசனங்கள், சோழர் சாசனங்கள் பாண்டியர் சாசனங்கள் என மூன்றாகப் பிரிக்கலாம். பல்லவர் சாசனங்கள் இரண்டும் தந்திவர்மன் (கி. பி. 775 825) காலத்தன வாகும். சோழர் சாசனங்களில் முதலாம் பராந்தகன் (907-953) சாசனம் ஒன்று; இரண்டாவது பராந்தகன் படைத்தலைவனை பார்த்திவேந்திராதி வர்மன் (957-970) சாசனம் ஒன்று; முதலாம் இராசராசன் (985-1014) சாசனங்கள் நான்கு; முதலாம் இரா சேந்திர சோழன் (1012-1044) சாசனங்கள் ஆறு; முதலாம் இராசாதிராசன் (1018-1054) சாசனம்; ஒன்று இரண்டாம் இரா சேந்திரசோழன் (1051-1063) சாசனம் ஒன்று: முதலாம் வீரரா சேந்திரன் (1063-1070) சாசனம் ஒன்று; முதலாம் குலோத்துங்க சோழன் (1070 1120) சாசனங்கள் இரண்டு; விக்கிரம சோழன் (1120 1136) சாசனங்கள் இரண்டு; மூன்றும் இராசராச சோழன் (1216-1256) சாசனம் ஒன்று.

பாண்டியர் சாசனங்களில், மாறன் சடையன் (765—790) சாசனம் ஒன்று; குலசேகர தேவர் (1190—1216) சாசனம் ஒன்று; சுந்தரபாண்டியன் (1216—1238) சாசனங்கள் இரண்டு; அரிகேசரி பராக்கிரம பாண்டியன் (1422—1463) சாசனங்கள் இரண்டு; குலசேகர தேவ பராக்கிரம பாண்டியன் (1543—1552) சாசனம் ஒன்று; வீரபாண்டியன் (1296—1342) சாசனம் ஒன்று. எனவே, பல்லவர் சாசனங்கள் இரண்டு ; சோழர் சாசனங்கள் இருபது; பாண்டியர் சாசனங்கள் எட்டு ஆகும். இவைகளில் காலத்தால் முந்தியது, மாறன் சடையன் சாசனமும் (கி. பி.

781—'82), தந்திவர்மன் சாசனமும் (கி பி. 789) ஆகும். காலத்தால் பிந்தியது. குலசேகரதேவ பராக்கிரம பாண்டியன் சாசனம் (கி. பி. 1545) ஆகும்.

தந்தி வர்மன் சாசனம் தமிழ்மொழியில் எழுதப்படினும் கிரந்த லிபியில் சமஸ்கிருத மொழிகள் பல கலந்து எழுதப் பெற்றதனால் பல்கலைக் கழகப் பதிப்பில் அதன் ஆங்கில மொழிபெயர்ப்பே பாடமாகக் குறிக்கப் பெற்றுள்ளது. அது 'ஸ்வஸ்திஸ்ரீ' என்று தொடங்கி. 'சுவஸ்தி' என முடிவு பெற்றிருப்பது குறிப்பிடத் தக்கது. முதலாம் பராந்தக சோழன் சாசனம் என்னும் மூன்றாவது சாசனம், தமிழ்மொழியில் வட்டெழுத்தில் எழுதப் பெற்றது. பிற சாசனங்கள் எல்லாம் தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப் பெற்றன வாகும்.

பல்லவர் காலத்துத் தந்திவர்மன் சாசனங்கள் இரண்டும். அவன் அரசியல் தலைவர்களான புகழ்த்துணை விசயரயனாலும், சோழநாட்டுச் சோழரான உலகப் பெருமானாராலும் ஏற்பட்டவை, முதலாம் பராந்தகன் சாசனம், அவனது அரசியல் தலைவனை மருதூருடையான் அருணிதிக் கலியனாலும், பார்த்திவேந்திராதி வர்மன் சாசனம், காவிரிப் பாக்கம் என்னும் அவனி நாராயண சதுர்வேதி மங்கலம் ஊர்ச்சபையாராலும், முதலாம் இராசராசன் சாசனங்கள் நான்கனுள் ஒன்று அவனாலும், மற்றொன்று பொய்கை நாட்டுக் கிழவன் ஆதித்தசூரியன் என்னும் அவன் அரசியல் தலைவனாலும், இன்னொன்று கண்ணன் ஆரூரன் என்னும் அவன் வேலைக்காரனாலும், பிறிதொன்று மேற்பாடியாகிய இராசாச்ரயபுரத்து நகரத்தாராலும் ஏற்பட்டவையாகும். இவைகளில் முதலாம் இராசராசனால் ஏற்பட்ட சாசனம் தஞ்சைப் பெரிய கோயிலில் திருப்பதியம் விண்ணப்பம் செய்ய ஏற்பாடு செய்ததாகும்.

முதலாம் இராசேந்திர சோழன் சாசனங்கள் ஆறனுள், ஒன்று அவனாலும், மற்றொன்று அவன் அத்தையான ஆழ்வார் பராந்தகன் குந்தவையாராலும், மூன்று சாசனங்கள் அவன் அரசியல் தலைவனை பொய்கைநாடு கிழவன் ஆதித்த சூரியனாலும், மற்றொன்று வியாபாரியான நன்னப்பையன் மனைவியாகிய சாமுண்டப்பையாலும், ஏற்பட்டனவாகும். அவற்றுள் முதலாம் இராசேந்திர சோழனால் ஏற்பட்ட சாசனம், அவன் தம் சைவ ஆச்சாரியராகிய சர்வ சிவ பண்டிதர்க்கும், அவர் மாணவர்க்கும் ஆசாரிய போகமாக ஆண்டுதோறும் 2000 காடி நெல் கொடுத்த செய்தி பற்றியதாகும்.

முதலாம் இராசாதிராசன் சாசனம், இரண்டாம் இராசேந்திர சோழன் சாசனம் இரண்டும் மணிமங்கலம் சபையோரால்

ஏற்பட்டவை. முதலாம் வீரராசேந்திர தேவன் சாசனம் அவன் படைத்தலைவனான சேனாதிபதி செயங்கொண்ட சோழ பிரமாதி ராயரால் ஏற்பட்டது. முதலாம் குலோத்துங்க சோழன் சாசனங்கள் இரண்டனுள் ஒன்று அவனது மெய்க்கீர்த்தி மட்டுமுள்ளது மற்றொன்று முனையன் அருண்மொழித் தேவனான வில்லவ ராயனால் ஏற்பட்டது. விக்கிரம சோழன் சாசனங்கள் இரண்டும் அவனால் ஏற்பட்டவை. அவைகளில் ஒன்று அவன் கல்லாலை என்பவனைக் காணிக்காரளவு என்னும் அலுவலில் வைத்தமையும், மற்றொன்று அவன் தில்லையில் செய்த திருப்பணியைக் கூறுவது மாகும்.

பாண்டியர் சாசனங்களில் மாறன் சடையன் சாசனம் வர குணவதி அரையன் என்னும் நக்கஞ் செட்டியாராலும், குல சேகரதேவர் சாசனம் கல்வாயில் நாடுடையான் என்னும் அரசியல் தலைவனாலும், சுந்தரபாண்டியன் சாசனம் இரண்டனுள் ஒன்று அவனாலும், மற்றொன்று கூத்தன் தில்லைநாயகன் என்னும் வியாபாரியாலும், அரிகேசரி பராக்கிரம பாண்டியன் சாசனங்கள் இரண்டும் அப்பாண்டியனாலும், குலசேகர பராக்கிரம பாண்டியன் சாசனம், குலசேகரபராக்கிரம பாண்டியனாலும் வீரபாண்டியன் சாசனம் அழகிய பெருமாள் என்பவனாலும் ஏற்பட்டனவாகும்.

இச்சாசனங்களை யெல்லாம் தான சாசனங்கள் எனவும், இலக்கிய சாசனங்கள் எனவும், வரலாற்றுச சாசனங்கள் எனவும், சமய சம்பந்தமான சாசனங்கள் எனவும் வாழ்க்கைச்சாசனங்கள் எனவும் போலிச் சாசனங்கள் எனவும் பலவகையாகப் பிரிப்பர். இவற்றுள் தான சாசனம் என்பது, இம்மை மறுமை இன்பங் கிடைக்குமாறு கோயில்களுக்கும், பிறர்க்கும் கொடுத்த தானங்களைப் பற்றிய சாசனங்களாகும். தந்திவர்மன் சாசனம் புகழ்த்துணை விசயரயன் திருவல்லிக்கேணி கோயிலார் ஒற்றி வைத்த நிலத்தைக் காசு கொடுத்துத் திருப்பி, அதன் விளைச்சலில் ஒரு பகுதியை அக் கோயிலுக்குக் கொடுத்ததாகவும், ஈழவிளக்கு, வட்டில், உலோக பானை முதலியன கொடுத்ததாகவும் கூறுகின்றது. விசயதந்தி விக்கிரமவர்மன் சாசனத்தால் சோழ நாட்டுச் சோழரான உலகப் பெருமானார் திருச்சோகினூர் திருவிளங்கோயிலுக்கு ஒரு நந்தா விளக்கும், அதன் செலவுக்கு முதலாக 30 கழஞ்சு பொன்னும் கொடுத்ததாக நாம் அறிகின்றோம். முதலாம் பராந்தகன் சாசனம், மருதூருடையான் அருணிதிக் கலியன் என்பான் நரசிங்கப் பெருமாள்கோயில் கடனைத் தீர்த்து, இறைவன் திருவமுதுக்கும், ஐந்து வேதப்பிராமணர்க்கும் 300 கலநெல் தானமாகக்கொடுத்த செய்தியைக் கூறுகின்றது. முதலாம் இராசேந்திரன் சாசனம் ஒன்றில் வைகாவூர் ஸ்ரீ குந்தவை சினாலயத்திற்குச் சாமுண்டப்பை

என்பாள் ஒரு நந்தாவிளக்கு வைத்து அதன் செலவுக்கும், அக்கோயில் தேவர் திருவமுதுக்கும் முப்பது காசு கொடுத்ததாகச் சொல்லப்படுகிறது.

இனி, முதலாம் இராசேந்திர சோழன் தன் சைவ ஆசாரியரான சர்வ சிவபண்டிதர்க்கும், அவர்தம் மாணவர்களுக்கும் ஆசாரிய போகமாக ஆண்டுதோறும் 2,000 காடி நெல் கொடுத்ததாகக் கூறும் சாசனமும் தான சாசனமே யாகும். இரண்டாம் இராசேந்திர சோழன் சாசனத்தில், மணிமங்கலம் சபையார் காமக்கவ்வையள் என்பாளிடம் பணம் பெற்று, அமண்பாக்கம் கிராமத்திலுள்ள சில நிலங்களை மணிமங்கலம் காமக்கோடி விண்ணகராழ்வார்க்குத் தானமாகக் கொடுத்த செய்தி கூறப்படுகிறது.

இவ்வாறு பாண்டியர் காலத்து மாறவர்மன் சாசனத்தில் கல்குறிச்சி வரகுணவதி அரையனை நக்கஞ் செட்டி என்பான் திருக்கோகர்ணங் கோயில் இறைவற்கு ஒரு நந்தா விளக்கு வைத்து அதன் செலவுக்கு 15 கழஞ்சு பொன் கொடுத்ததும், சுந்தரபாண்டியன் சாசன மொன்றில், கூத்தன் தில்லைநாயகன் என்னும் வியாபாரி சில நிலங்களை விலைக்கு வாங்கி அகத்தீசுவரம் கோயிலுக்கு நெல்லும், ஊர்ச்சபையாருக்கு வரியும் கொடுத்ததும், அரிகேசரி பராக்கிரம பாண்டியன் சாசனமொன்றில் அவன் தென்காசிக் கோயிலுக்குச் சில ஊர்களைத் தானமாகக் கொடுத்ததும், குலசேகரதேவ பராக்கிரம பாண்டியன் சாசனத்தில் அவன் சில நிலங்களைச் செங்கோட்டைச் சிவன் கோயிலுக்குத் தானமாகக் கொடுத்ததும், வீரபாண்டியன் சாசனத்தில் சூரைக்குடி பொன்னனை அழகிய பெருமாள் என்பான் கல்வாயில் நாட்டில் சில நிலங்களை விலைக்கு வாங்கி நெய்வாசல் அகத்தீசுவரர் கோயிலுக்கு உரிமையாக்கி அதன் விளைச்சலில் ஒரு பகுதியை அக்கோயில் இறைவற்கும், கோயில் அதிகாரிகளுக்கும் கொடுத்ததுமான செய்திகள் தான சாசனச் செய்திகளாகவே கொள்ளப்படும்.

இனி, இலக்கிய சாசனமென்பது, இலக்கியப் பண்புடைய சாசனங்களைக் குறிக்கும். பொதுவாகச் சாசனங்களே தனி இலக்கியப் பண்புடையன; ஆயினும் சிறப்பாக, அச்சாசனங்களில் வரும் மெய்க்கீர்த்திக ளெல்லாம் இலக்கிய வளம் பொருந்தியவாய் இலக்கண அமைதி பெற்று விளங்குகின்றன. இந்நூற் சாசனங்களில் 6, 7, 8, 13, 14, 15, 16, 17, 18, 19, 20, 21, 24, 25, 27 ஆகிய பதினைந்து சாசனங்களிலும் மெய்க்கீர்த்திகள் அமைந்துள்ளன. முதலாம் குலோத்துங்க சோழன் சாசனமொன்று முழுவதும் செய்யுள் நடையிலமைந்த மெய்க்கீர்த்தி

யாகவே யுள்ளது. அரிகேசரி பராக்கிரம பாண்டியன் இரண்டாவது சாசனம் ஆசிரிய விருத்தம், கட்டளைக் கலித்துறை, வெண்பா முதலிய செய்யுட்களிலமைந்த சாசனமாகவே காணப்படுகிறது. அஃது அரிகேசரி பராக்கிரமபாண்டியன் செய்த திருப்பணிகளை வரிசைப்படக் கூறுதலின், அதனை இக் காலத்தார் 'திருப்பணி மாலை' என்னும் நூல் வகையில் சேர்த்துக் கூறுவர்.

வரலாற்றுச் சாசனம் என்பது, ஒருவரது புகழையோ, சிறப்பையோ பற்றிக் கூருது அவர் கால நிகழ்ச்சியை வரிசைப் படக் கூறும் சாசனமாகும். முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திர சோழன், முதலாம் இராசாதி ராசன் முதலியோர் சாசனங்களிலமைந்த மெய்க்கீர்த்திப் பகுதிகள் அந்தந்த மன்னருடைய போர் வென்றிகளை வரிசைப்பட எடுத்துக் கூறுகின்றன. வீரராசேந்திரன் சாசனத்தில் அவன் ஆகவமல்லனேடு ஐந்து தடவை போர் செய்து அவனை வென்ற செய்தி கூறப்படுகின்றது. அன்றியும் அவரவர் காலத்தை நிச்சயித்துக்கொள்வதற்கும் இவ்வகைச் சாசனங்கள் உதவுகின்றன என்னலாம். உதாரணமாக, முதலாம் பராந்தகன் சாசனத்தில், கூறப்படும் ஐந்து வேதப்பிராமணர்களுக்கு உணவு அளிக்கும் நாளின் தொடக்கத்தைக் கொண்டு, சோதிட நூல் வல்லார் அவன் காலத்தை நிச்சயித்துள்ளனர். கோயில்களில் திருப்பதியம் பாடுவதற்கு முதலாம் இராசராசன் ஏற்பாடு செய்தது, விக்கிரம சோழன் தில்லையின் திருப்பணி செய்தது, அரிகேசரி பராக்கிரம பாண்டியன் தென்காசி விசுவநாதர் கோயிலைக் கட்டியது முதலிய நிகழ்ச்சிகளெல்லாம் அன்னூர் சாசனங்களில் காலக்குறிப்போடு அமைந்திருப்பது வரலாற்றுண்மைகளை விளக்குவனவாகும்.

முதலாம் இராசராசன் காலத்திலும், முதலாம் இராசேந்திர சோழன் காலத்திலும் பொய்கை நாடு கிழவன் ஆதித்த சூரியன் என்பான், தஞ்சைப் பெரிய கோயிலில் தேவாரம் பாடிய மூவர், மெய்ப்பொருள் நாயனர், சிறுத்தொண்ட நாயனர் முதலியோர்க்குத் திருவுருவங்கள் செய்து வைத்து, அணிகலன்கள் பல சார்த்தியதாகக் கூறும் செய்திகளிலிருந்து, நாயன்மார் சிலருடைய காலத்தை ஒருவாறு நிச்சயிப்பதற்கு அச்சாசனங்கள் உதவி புரிகின்றன. "தத்தா நமரே காண் என்ற மிலாடுடையார்" என வரும் பொய்கை நாடு கிழவன் ஆதித்த சூரியனல் ஏற்பட்ட ஒரு சாசனத் தொடர், பெரிய புராணத்தின் பழைமையை நமக்கு எடுத்துக்காட்டுகின்றது. இவையன்றி, முதலாம் இராசராசன் திருப்பதிய விண்ணப்ப சாசனத்தில் குறிக்கப் பெறும் பெயர்களால் பிற சிவனடியார் காலத்துடன் கம்பர் காலத்தையும் நிச்சயித்தற்கு இடமுள்ள தென்பது குறிப்பிடத் தக்கது.

இனிச், சமய சம்பந்தமான சாசனங்களும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன என்னலாம். முதலாம் இராசராசன் காலத்திலும், முதலாம் இராசேந்திர சோழன் காலத்திலும், பொய்கை நாடு கிழவன் ஆதித்த சூரியன் என்பான் தஞ்சைப் பெரிய கோயிலில் நம்பியாரூரர், நங்கை பரவையார், திருநாவுக்கரையர், திருஞான சம்பந்த அடிகள், பெரிய பெருமாள் (முதலாம் இராசராசன்), உலோகமாதேவியார், சிறுத்தொண்ட நம்பி, திருவெண்காட்டு நங்கை, சீராளதேவர், மெய்ப்பொருள் நாயனர் முதலிய அடியார்க்குப் படிமங்களும், சந்திரசேகர தேவர், சேத்திர பாலதேவர், வைரவ மூர்த்திகள் முதலிய தேவர்களுக்குத் திருமேனிகளும் செய்து வைத்து, அணிகலன்கள் பல சார்த்தினமை பற்றிய சாசனங்கள் (5, 10, 11, 12) சமய சம்பந்தமான சாசனங்களாகும். முதலாம் இராசராசன் திருப்பதிய விண்ணப்ப சாசனமும் (5), முதலாம் இராசேந்திர சோழன், சாசனங்களுள் ஆழ்வார் பராந்தகன் குந்தவையார், திருப்பணி சாசனமும் (9), விக்கிரம சோழன் தில்லைத் திருப்பணி சாசனமும் (21), மூன்றும் இராசராச சோழன் சாசனமும் (22), அரிகேசரி பராக்கிரம பாண்டியன் தென்காசிக் கோயில் திருப்பணி சாசனமும் (28) சமய சம்பந்தமான சாசனங்களே.

இவையன்றி வாழ்க்கைச் சாசனங்கள் அல்லது சமூகம் பற்றிய சாசனங்களும் இந்நூலில் சில உள. பார்த்தி வேந்திராதி வர்மன் சாசனம் (4), காவிரிப் பாக்கமாகிய அவனி நாராயண சதுர்வேதி மங்கலம் சபையார் புறம்போக்கு நிலத்தைப் பயனுள்ள நிலமாக்குவதற்கு ஏற்பாடு செய்த செய்தியைக் கூறுகின்றது. முதலாம் இராசராச சோழன் பெயரால் அவன் வேலைக்காரனை கண்ணன் ஆரூரன் ஒரு கிணறு வெட்டித் தண்ணீர்ப் பந்தல் வைத்த செய்தியை அம் முதலாம் இராசராசன் சாசனங்களிலொன்று (6) கூறுகின்றது. அவனுடைய மற்றொரு சாசனம் (7) அவன் தன் பாட்டனை அரிஞ்சய சோழன் பெயரால் மேற்பாடி என்னுமூரில் கட்டிய கோயிலுக்கும், அதன் திருச்சுற்றாலயம் முதலியவற்றிற்கும் அவ்வூர்ச் சபையினர் நிலங் கொடுத்த செய்தியைக் கூறுகின்றது. முதலாம் இராசாதிராசன் சாசனத்தில் (15) மணிமங்கலம் சபையோர் கோயில் பணத்திலிருந்து நூறுகாசு கடன் வாங்கி, அக்கடனுக்கு வட்டியாக அவ்வூரிலுள்ள சில நிலங்களைக் கொடுத்த செய்தி கூறப்படுகிறது.

மேலும் அரசியல் பற்றிய சாசனங்களும் இந்நூலில் ஒன்றிரண்டு காணப்படுகின்றன. விக்கிரம சோழன் சாசனங்களில் ஒன்று (20), விக்கிரம சோழன் இராசராச பல்லவரையனை ஆவுடையான் அரையன் உடையானுக்கு உரிமையாய் இருந்த காணி காரளவு (கோயில் நெல்லை அளந்து களஞ்சியத்தில்

சேர்க்கும் பணி) என்னும் அலுவலை அவன் இறந்தபின் அவன் மகன் கல்லாலை என்பவனுக்கு உரிமையாக்கிய செய்தி கூறுகின்றது. குலசேகர தேவர் சாசனத்தில், கல்வாயில் நாடுடையான் என்னும் அரசியல் அதிகாரி அரசனுடைய உத்தரவு பெற்றுச் சில தேவதான நிலங்களுக்குரிய கடமை, வரி, அந்தராயம் என்னும் வரிகளை நீக்கிய செய்தி கூறப்பட்டுள்ளது. திருநாவலூர், அஞ்சன மங்கலம் என்னும் ஊர்களிலுள்ள குடிகள் கேட்டுக் கொண்டபடி அவர்கள் செலுத்தவேண்டிய வரியைக் குறைத்த செய்தி சுந்தரபாண்டியன் சாசனத்தால் (25) அறியப்படுகிறது.

இனிப், போலிச் சாசனங்கள் என்பது, ஒருவர் தமக்கு உரிமையல்லாத நிலத்தை உரிமைப் படுத்துவதற்காகவும், தம்மிடமுள்ள உரிமைச் சீட்டை இழந்து அதை உறுதிப்படுத்திக் கொள்வதற்காகவும், தாமே கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொண்ட சாசனங்கள் ஆகும். அவை பெரும்பாலும் அரசியல் மாற்றத்தால் ஏற்பட்டவை. இடைக்காலத்துத் தமிழ் இலக்கியங்கள் பலவற்றில் இடைச்செருகல்கள் தோன்றியது போல, பிற்காலச் சாசனங்களிலும் போலிச் சாசனங்கள் பல தோன்றலாயின. அத்தகைய போலிச் சாசனமொன்றும் இந்நூலில் காணப்படவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

இனி, இச் சாசனங்களின் அமைப்பு முறையை நோக்குமிடத்து ஒவ்வொரு சாசனமும் ஐந்து பகுதிகளையுடையதாய் அமைந்திருப்பதைக் காணலாம். அவை மங்கலமொழி, சாசனம் தோன்றிய காலம், செய்திகள், கையெழுத்துக்கள், காப்பு நிலை என்பனவாகும்.

சாசனங்களின் தொடக்கத்தில் மங்கல மொழியாக 'ஸ்வஸ்திஸ்ரீ' என்று பெரும்பாலும் காணப்படுகிறது. 'மங்களம் உண்டாக' என்பது அதன் பொருள். அதனைப் பல்லவர், சோழர் சாசனங்களில் மிகுதியும் காணலாம். சில சாசனங்களில் இம் மங்கலமொழி சாசனத்தின் இறுதியிலும் அமைந்துள்ளது. உதாரணமாக, தந்திவர்மன் சாசனத்திலும், சுந்தரபாண்டியன் முதல் சாசனத்திலும் அங்ஙனம் வந்திருத்தல் காண்க. பிற்காலப் பாண்டியர் சாசனங்களில் மங்கல மொழியாக 'சுபமஸ்து,' 'சுபமஸ்து உ' என வந்திருத்தலை அரிகேசரி பாரக்கிரம பாண்டியன் சாசன முதலியவற்றில் காணலாம். குலசேகரதேவ பராக்கிரம பாண்டியன் சாசனத்தின் தொடக்கத்தில் 'சுபமஸ்து ஸ்வஸ்திஸ்ரீ' என மங்கலமொழி அமைந்திருத்தலும் குறிப்பிடத்தக்கது.

சாசனங்களில் மங்கலமொழியை யடுத்து அரசனது ஆட்சியாண்டு குறிக்கப் பெற்றிருக்கும். அதுவே அச்சாசனம்

தோன்றிய காலத்தைக் குறிப்பதாகும். உதாரணமாக, தந்திவர்மன் சாசனத்தில் 'ஸ்ரீதந்திவர்ம மஹாராஜற்கு வர்ஷவர்த்தனம் யாண்டு பன்னிரண்டாவது' எனவும், விசயதந்தி விக்கிரமவர்மன் சாசனத்தில், 'ஸ்ரீகொவிசெயதந்தி விக்கிரமவர்மற்கு யாண்டு ஐம்பத்தொன்றுவது' எனவும், முதலாம் இராசராசன் சாசனத்தில் 'ஸ்ரீராசராசதேவர்க்கு யாண்டு உ௰கூ ஆவது' எனவும் வந்திருத்தல் காண்க. இனி, 'ஸ்ரீராஜராஜீஸ்வரம் உடையார் கோயிலில் யாண்டு இருபத்தொன்பதாவது வரை' என்பது போலவும், 'பராக்கிரம பாண்டிய தேவர்க்கு யாண்டு இருபத்தெட்டாவதின் எதிராவது' என்பது போலவும் சாசன ஆண்டுகள் குறிக்கப் பெறுதலுமுண்டு. இதில் 'இருபத்தொன்பதாவது வரை' என்பது, 'இருபத்தொன்பதுக்கு முன்பு' எனவும், 'இருபத்தெட்டாவதின் எதிராவது' என்பது, 'இருபத்தெட்டாவதற்குப் பின்பு' எனவும் பொருள் படும். இவ்வாறன்றி, 'ஸ்ரீபார்த்திவேந்திராதிபன்மர்க்கு யாண்டு மூன்றுவது நாள் முப்பத்தொன்பதாவது' எனவும், ஸ்ரீராசேந்திர சோழ தேவர்க்கு யாண்டு ௰கூ ஆவது நாள் இருநூற்று நாற்பத்திரண்டினால்' (14) எனவும் அரசன் ஆட்சி ஆண்டுடன் நாளும் குறிக்கப் பெறுதலுண்டு.

இனி, இரண்டாம் இராசேந்திர சோழன் சாசனத்தில் 'ஸ்ரீ ராசேந்திர தேவர்க்கு யாண்டு நாலாவது நாள் அ௰உ ஜயங்கொண்ட சொழமண்டலத்து செங்காட்டுக் கொட்டத்து மாகணூர் நாட்டு ......இவ்வாட்டை ஸிம்ஹ நாயற்று அபரபக்ஷத்து அஷ்டமியும் வியாழக் கிழமையும் பெற்ற ரோஹிணி நாள்'' என வரும் குறிப்பால், அரசனது ஆட்சி ஆண்டு, நாள் இவற்றுடன், திங்கள், பக்ஷம், திதி, கிழமை, நட்சத்திரம் முதலியனவும் குறிக்கப் பெறுதலுமுண்டு என்று அறிகின்றோம். இவ்வாறே 'ஸ்ரீராஜராஜ தெவற்கு யாண்டு ௰அ ஆவது தநுநாயற்று பூர்வபக்ஷத்து பஞ்சமியும் புதன் கிழமையும் பெற்ற அவிட்டத்தினாள்' (22) எனவும், 'சிரி விரசுந்தர பாண்டிய தெவற்கு யாண்டு ௩ ஆவதின் எதிரமாண்டு இசப நாயிற்றுயிருபத்திரண்டாந்தியதியும் திங்கட் கிழமை புணர்பூசத்து நாள்' (26) எனவும் வந்திருத்தல் காண்க.

இனி, ஆண்டு, திங்கள், பக்ஷம், திதி, கிழமை, நாள் இவற்றுடன், யோகம், கரண முதலியனவும் குறிப்பிடப் பட்டிருப்பதைக் குலசேகரதேவ பராக்கிரம பாண்டியன் சாசனத்தில் காண்கின்றோம். அதில் அரசனுடைய ஆட்சியாண்டு சக ஆண்டு முறையில் 'சகாப்தம் ௲௩௱ கூ௰௭ ல் மூன்றுவது விஸ்வாவஸு வர்ஷம் அற்பசி மாஸம் முப்பதாந் தியதி'' எனக் குறிப்பிட்டிருத்தலும் ஆராயத் தக்கது. இதனால், அவ்வரசனது ஆட்சிக் காலம் இன்னதென நாம் எளிதில் கண்டுகொள்ளவும் முடிகின்றது. மேலும்

சாசனங்கள் தோன்றிய காலத்தைக் குறிக்கு முறையில் காணப் படும் வெவ்வேறு முறைகளை அரிகேசரி பராக்கிரம பாண்டியன் திருப்பணி சாசனத்தில் (28) கண்டுகொள்ளலாம். அதில் தென் காசிக் கோயில் கோபுரம் கட்டத் தொடங்கிய நாள் கலியுக ஆண்டு முறையிலும், சக ஆண்டு முறையிலும் கூறப்பெற்றிருத்தல் குறிப்பிடத் தக்கது.

சாசனம் தோன்றிய காலக்குறிப்பிற்குப் பின்னர், செய்திகள் கூறப்பெற்றிருக்கும். அச்செய்திகள் பல திறப்படும். இந்நூலில் காணப்படும் சாசனங்களில், கோயிலார் ஒற்றி வைத்த நிலத்தைக் காசு கொடுத்துத் திருப்பிப் பயிரிட்டு, கோயிலுக்கு வேண்டும் நெல் கொடுத்தல், ஈழ விளக்கு, வட்டில், உலோகபானை முதலி யன கொடுத்தல் (1), திருவிளக்கும் அதன் செலவுக்கு முதலும் கொடுத்தல் (2, 13), கோயில் கடனைத் தீர்த்து அதற்குப் பதிலாகக் கோயில் நிலத்தை விதைக்கும் உரிமை பெற்று, கோயி லுக்கு வேண்டும் நெல் முதலியன கொடுத்தல் (3), ஊர்ச் சபை யாரிடம் முறையிட்டுக் குறை தீர்த்துக் கொள்ளுதல் (4), கோயில் களில் பிரதிமங்கள் செய்து வைத்தல் (5,9,10,11,12), தண்ணீர்ப் பந்தல் வைத்தல் (6), திருப்பதியம் பாட ஏற்பாடு செய்தல் (7), ஆசாரிய போகமாக நெல் கொடுத்தல் (14), கோயில் பணத் தில் கடன்வாங்கி வட்டி கொடுத்தல் (15), கோயிலுக்கு நிலம் வாங்குவதற்குப் பணம் கொடுத்தல் (16), கோயில் அர்ச்சனு போகத்திற்கு நெல் முதலியன கொடுத்தல் (17), பயிரிடாது பாழாய்க் கிடந்த கோயில் நிலத்தைத் திருத்திப் பயிரிட்டுக் கோயில் பூசைக்கும் விழாவிற்கும் வேண்டும் நெல் கொடுத் தல் (19), கோயில் நெல்லை யளந்து களஞ்சியத்தில் சேர்க்கும் காணிக் காரளவு என்னும் அலுவலுக்கு ஆட்களைத் தெரிந்து நியமித்தல் (20), கோயில் திருப்பணிகள் செய்தல் (21, 22) முதலிய செய்திகள் பல்லவர் சாசனங்களிலும், சோழர் சாச னங்களிலும் காணப்படுகின்றன.

(கோயிலுக்கு நந்தா விளக்கு வைத்து; அதன் நிரந்தர செல வுக்கு முதலாகப் பல இடங்களிலும் யாசித்துப் பணங் கொடுத்த செய்தி மாறன் சடையன் சாசனத்தில் காணப்படுகிறது. தேவ தான நிலத்திற்கு வரி நீக்கிய செய்தியும், வரிகுறைத்த செய்தியும் முறையே குலசேகர தேவர் சாசனத்திலும், சுந்தரபாண்டியன் சாசனத்திலும் காணப்படுகின்றன. அரிகேசரி பராக்கிரம பாண் டியன் சாசனங்களில் அவன் தென்காசிக் கோயில் எடுத்த செய்தி யும், அதன் நாள்வழிபாட்டிற்கும் ஆண்டுவிழாவிற்கும் சில நிலங்களைத் தானமாகக் கொடுத்த செய்தியும் கூறப்பட்டுள்ளன

குலசேகர தேவ பராக்கிரம பாண்டியன் சாசனமும், வீரபாண்டியன் சாசனமும் நிலத் தானத்தைக் குறிப்பிடுகின்றன.

இனிச், சாசனங்களின் செய்திகளை யடுத்து, அச்சாசனம் எழுதியவர், கையொப்ப மிட்டவர் முதலியோர் பெயர்கள் குறிக்கப் பட்டுள்ளன. அதற்குச் சான்ருகப், பார்த்திவேந்திராதிவர்மன் சாசனத்தையும்(4), வீரபாண்டியன்சாசனத்தையும் (30) கூறலாம். அன்றியும், 'இந்நகரத்தார் சொல்ல எழுதினென் இந்நகரக் கரணத்தான் நாராயண னடைக்கலவனென் இவை யென்னெழுத்து' (7) எனவும், 'திருமந்திரி ஓலை செம்பியன் விழுப்பறையன் எழுத்திஞல்... த்திருவாய்க் கெழ்விப்படி கல்லில் வெட்டித்து'' (14) எனவும், ''பணிகெட்டு எழுதினென் இவ்வூர் ஊர்க்கரணத்தான் அலங்காரன் சீராமநென் இவை என் எழுத்து' (16) எனவும், 'பணிகெட்டு எழுதிநென் ஊர்க்கரணத்தான் வடுகன் பாக்கரநென் இவை என் எழுத்து' (17) எனவும், ''கொயிலில் ஸ்ரீமாஹெச்வரொமும்...உள்ளிட்ட ஸ்தாநத்தொம் எழுத்து'' (21) எனவும், ''இவை கிடாரத்துருடையான் எழுத்து உதுல்யம்'' (27) எனவும் வந்திருத்தல் காண்க.

இனிச், சாசனங்களின் முடிவு சிவன்கோயில் சாசனமாயின், 'இது பந்மாஹேஸ்வர ரக்ஷை' என்றும், விஷ்ணு கோயிலாயின், 'வைஷ்ணவ ரக்ஷை' என்றும் காணப்படும், ''சைவ அடியார்கள் காப்பார்களாக'' 'வைணவ அடியார்கள் காப்பார்களாக' என்பன முறையே அவற்றின் பொருள்களாகும். இவை சாசனங்களின் 'காப்பு நிலை' என்று சொல்லப்படும். முதலாம் இராசராச சோழன் சாசனங்களில் ஒன்றும் (7), முதலாம் குலோத்துங்க சோழன் சாசனங்களி லொன்றும் (19), சுந்தர பாண்டியன் சாசனங்களிலொன்றும் (26) 'இது பன்மஹேஸ்வரரக்ஷை' என்று முடிந்துள்ளன. முதலாம் இராசேந்திர சோழன் சாசனங்களி லொன்று (14), ''இவ் வம்சத்துள்ள சைய்வ ஆசார்ய்யர்களே இத்தன்மம் ரக்ஷிக்க உ'' என முடிவுபெற்றுள்ளது. ''இதனை ரக்ஷித்தாரடி இரண்டும் என் முடிமேலனஸ்வஸ்தி' (3) எனவும், 'இதன்மம் ரக்ஷித்தான் ......'' (3), எனவும் முறையே தந்திவர்மன் சாசனமும், முதலாம் பராந்தகன் சாசனமும் முடிந்துள்ளன.

இதுகாறும் சாசனங்களின் பொதுவான தன்மைகளை ஆராய்ந்தோம். இனிச், சிறப்பாக இச்சாசனங்கள் மூலம் நாம் அறியக் கூடும் அக்கால அரசியல் நிலைகளைக் காண்போம். சாசனங்கள் மெய்க்கீர்த்தி பெற்றும் பெருமலும் வரப்பெறு மென்பதைத் தந்திவர்மன் சாசனத்தாலும், முதலாம் இராசராசன் சாசனங்களாலும் அறிகின்ருேம். மெய்க்கீர்த்திகள் அரசனின் வெற்றிகள், ஆட்சி முறை முதலியவற்றைத் தெரிவிக்கின்றன. முதலாம் இராசராசன் முதலிய பிற்காலச் சோழமன்னர்கள் புதி

தாகச் செயித்த நாடுகளை அறிய அவர்கள் மெய்க்கீர்த்திகள் பெரிதும் உதவுகின்றன. காம்பிலி கொப்பம், கூடல் சங்கமம், கலிங்கம் முதலிய இடங்களில் ஆகவ மல்லனேடு சோழ மன்னர்கள் நடத்திய போர்களைப் பற்றிய விரிவான செய்திகள் அவர்கள் மெய்க்கீர்த்திகளில் கூறப்பட்டுள்ளன. மெய்க்கீர்த்தி யில்லாத சாசனங்களிலும்,அரசர்களுடைய புகழைக்குறிக்கும் தொடர்கள்அமைந்தே காணப்படுகின்றன. சான்ருக, தந்திவர்மன் சாசனத்தில் "பல்லவ குலதிலத பாரத்துவாஜ கோத்ராலங் காரபதியாகிய ஸ்ரீ நந்திவர்ம மஹராஜற்கு" எனவும், முதலாம் பராந்தகன் சாசனத்தில் 'மதிரை கொண்ட கொப்பரகேசரி பன்மற்கு" (3) எனவும் வந்திருத்தல் காண்க.

மெய்க் கீர்த்திகளில், சோழமன்னர் மெய்க்கீர்த்திக்கும் பாண்டியமன்னர் மெய்க்கீர்த்திக்கும் ஒரு பெரிய வேறுபாடு காணப்படுகிறது. சோழமன்னர் மெய்க்கீர்த்திகளில் அந்தந்த மன்னர் வெற்றிகளே கூறப்படுகின்றன. பாண்டிய மன்னரோ அவர்கள் வெற்றிகளோடு அவர்களுடைய முன்னேர்களின் அரிய செயல்களையும் சேர்த்துக் கூறியுள்ளனர். இதற்குச் சான்ருக, குலசேகரதேவர் சாசனத்தி லமைந்த மெய்க்கீர்த்தியைக் கூறலாம். இனிச், சோழமன்னர்கள் தங்கள் இயற்பெயர்களுக்கு முன் 'இராசகேசரி', 'பரகேசரி' என்ற பட்டப் பெயர்களையும், பாண்டிய மன்னர்கள், 'மாறவர்மன்' 'சடையவர்மன்' என்ற பட்டப் பெயர்களையும் வைத்து வழங்கி வந்தமையாகிய தொல்லை மரபொன்று சாசனங்களில் காணப்படுகின்றது. சோழர்களில் தந்தை இராசகேசரியானல், மகன் 'பரகேசரி' என்றபட்டப் பெயரைப் பெற்றுள்ளான். முதலாம் இராசராசன் 'இராசகேசரி' பட்டம்பெற்றவன். அவன் மகன் முதலாம் இராசேந்திரசோழன் 'பரகேசரி' என்று அழைக்கப்பட்டுள்ளான். அவ்வாறே பாண்டிய மன்னர்களில் குலசேகரதேவ பாண்டியன் 'சடையவர்மன்' என்றும் அவனுக்குப்பின் பாண்டிய மன்னனுன சுந்தர பாண்டியன் 'மாறவர்மன்' என்றும் சிறப்புப் பெயர் பெற்றுள்ளனர். இச்சிறப்புப் பெயர்களால் இன்ன அரசனுக்குப்பின் பட்டமெய்தியவன் அன்னுன் என்று அறிய முடிகின்றது. முதலாம் வீரராசேந்திர தேவன், முதலாம் குலோத்துங்க சோழன், இவர்கள் இருவரும், 'இராசகேசரி' பட்ட மெய்தியவர்கள் எனவே, முதலாம் வீரராசேந்திர தேவனுக்குப்பின் 'பரகேசரி' பட்ட மெய்திய ஒருவன் ஆண்டிருத்தல் வேண்டும். அவனே பரகேசரி அதிராசேந்திர சோழனுவான் என்றறிக.

கோயிலுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட பொருட்களில், ஈழ விளக்கு, வட்டில், உலோகபானை என்பவை தந்திவர்மன்

சாசனத்தாலும், நந்தாவிளக்குஎன்பது விசயதந்திவிக்கிரமவர்மன் சாசனத்தாலும், முதலாம் இராசேந்திர சோழன் சாசனத்தாலும் மாறஞ்சடையன் சாசனத்தாலும் அறியப்படுகின்றன. இனிப், பண்டைக் காலத்தில் கோயிலார் கொண்ட கடனைத் தீர்த்து, அதற்குப் பதிலாகக் கோயில் நிலத்தைப் பயிரிட உரிமை பெற்று, கோயிலுக்கு நெல் அளந்த செய்தி தந்திவர்மன் சாசனத்தாலும் முதலாம் பராந்தகன் சாசனத்தாலும், கோயில் நிலத்தை விலை கொடுத்து வாங்கி, பயிர் செய்தற்கு உரிமை யாக்கிய செய்தி முதலாம் வீரராசேந்திர தேவன் சாசனத்தாலும் தெரிகிறது. பண்டைக் காலத்தில் ஆறு மாதங்களளவும் தண்ணீர்ப் பந்தல்கள் வைத்து நடத்தப்பட்டு வந்தனவென்பதும், கோயில்களில் திருப்பதியங்கள் பாடப்பட்டன வென்பதும், அப்பொழுது உடுக்கை, கொட்டிமத்தளம் போன்ற இசைக் கருவிகள் வாசிக்கப்பட்டன வென்பதும், கோயில் கட்டும் பணியில் அரசரும் குடிகளும் ஒன்றுபட்டுப் பணிபுரிந்து வந்தனரென்பதுமான செய்திகள் முதலாம் இராசராசன் சாசனத்தால் விளக்கமாகின்றன.

சோழமன்னர் காலத்தில் கோயில்களுக்கே யன்றி, கோயில்களில் பணிபுரியும் வேதப் பிராமணர்க்கும், ஆசாரிய போகத்திலுள்ளவர்களுக்கும் நிவந்தங்கள் கொடுத்து வந்தனரென்பது முதலாம் பராந்தகன் சாசனத்தாலும், முதலாம் இராசேந்திர சோழன் சாசனத்தாலும் அறியப்படுகிறது. முதலாம் இராசாதிராச தேவன் காலத்து மணிமங்கலம் சபையோர் சாசனம், கோயில் பண்டாரத்திலிருந்து கடன்வாங்கும் பழக்கம் அக்காலத்தில் இருந்ததென்பதைத் தெரிவிக்கின்றது. கோயில்களுக்கு நிவந்தமாக நிலங்களே யன்றி நெல் முதலிய பொருட்களையும் கொடுத்து வந்தனரென்பது, பல்லவர், சோழர் சாசனங்களால் புலனாகின்றது. தானம் கொடுத்தற்கு மட்டுமன்றி, நிலவரியை நீக்குதற்கும், குறைத்தற்கும் சாசனங்கள் ஏற்பட்டன என்பது குலசேகர தேவர் சாசனத்தாலும், சுந்தரபாண்டியன் சாசனத்தாலும் அறியப்படுகிறது. கோயில் நிலங்கள் சிலவற்றிற்கு வரிவாங்கப்பட்டு வந்ததென்பது, முதலாம் பராந்தகன் சாசனத்தாலும், சுந்தர பாண்டியன் சாசனத்தாலும் தெரிகின்றது.

சோழமன்னர் சாசனங்களால் சோழ இராச்சியம் பல மண்டலங்களாகவும், மண்டலம் பல வளநாடுகளாகவும், வளநாடு பல நாடுகளாகவும், நாடு பல கூற்றங்களாகவும், கூற்றம் பல ஊர்களாகவும் பிரிக்கப்பட்டிருந்ததென அறியப்படுகிறது. சோழமண்டலம், ஜெயங்கொண்ட சோழமண்டலம், அதிராசராச மண்டலம் முதலிய மண்டலங்களும், நித்தாவிநோத வளநாடு, குலோத்துங்க சோழ வளநாடு, இராசேந்திர சோழ வளநாடு

க்ஷத்திரிய சிகாமணி வளநாடு முதலிய வளநாடுகளும், தென் கரை நாடு, வெங்கலநாடு, மாகணூர் நாடு முதலிய நாடுகளும், ஆவூர்க் கூற்றம், குன்றக் கூற்றம் முதலிய கூற்றங்களும், ஆவூர் முதலிய ஊர்களும் சோழர் சாசனங்களில் காணப்படும் மண்டலங்களும் அவைகளின் பிரிவுகளுமாகும். நாடுகளில் சில 'தனியூர்' என்றும், 'சதுர்வேதி மங்கலம்' என்றும் அழைக்கப்பட்டன. ஸ்ரீவிக்கிரமாபரணசதுர்வேதி மங்கலம், செயங்கொண்ட சோழமண்டலத்துக் காலியூர்க் கோட்டத்திலுள்ளது. மண்டலங்களில் செயங்கொண்ட சோழமண்டல (தொண்டை மண்டலம்) மட்டும் பல்லவர் காலத்தில் இருந்தபடி பல கோட்டங்களாகவும், நாடுகளாகவும், ஊர்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தது.

பாண்டிய இராச்சியமும் இவ்வாறு பல நாடுகளாகவும் ஊர்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தமை அவர்கள் சாசனங்களால் அறியப்படுகிறது. வளநாடுகளும், 'சதுர்வேதி மங்கலங்களும்' பிற்காலத்தில் ஏற்பட்டனவாய், அந்தந்தக் காலத்து அரசர்களின் பட்டப் பெயர்களைப் பெற்று வழங்கி வந்திருத்தல் குறிப்பிடத்தக்கது. முதலாம் இராசராசன் காலத்தில் 'இராசேந்திரசிங்க வளநாடு' என்று பெயர் பெற்றிருந்த வளநாடு, முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் 'தியாகவல்லி வளநாடு' என்றும், விக்கிரமசோழன் காலத்தில் 'திரிபுவன முழுதுடை வளநாடு' என்றும் பெயர் பெற்றிருந்தது. முதலாம் இராசாதிராசன் காலத்தில் செயங்கொண்ட சோழ மண்டலத்துச் செங்காட்டுக் கோட்டத்து மாகணூர் நாட்டிலிருந்த மணிமங்கலமான இராச சூளாமணி சதுர்வேதி மங்கலம் என்னும் ஊர், முதற் குலோத்துங்க சோழன் காலத்தில் குலோத்துங்கசோழ வளநாட்டுக் குன்றத்தூர் நாட்டிலுள்ள மணிமங்கலமான 'பாண்டியனை இருமடி வென்கொண்ட சோழ சதுர்ப்பேதி மங்கலம்' என்று அழைக்கப்பட்டது.

அக்கால அரசர்கள், அவர்கள் ஆட்சியின் காலத்திலேயே அவர்களுடைய மக்களுக்கு இளவரசுப் பட்டம் கொடுத்து அரசராக்கியுள்ளதாகத் தெரிகின்றது. அதனாலேயே, அரசர்களுடைய ஆட்சியாண்டு, சாசனங்களில் அவர்கள் இளவரசுப் பட்டம் பெற்ற ஆண்டிலிருந்து கணக்கிடப் படுகின்றது. முதலாம் இராசராசன் கி. பி. 985 முதல் 1014 வரை சோழநாட்டை ஆண்டான் என்றும், அவன் மகன் முதலாம் இராசேந்திர சோழன் கி. பி. 1012 முதல் 1044 வரை ஆண்டான் என்றும் குறிக்கப் பெற்றுள்ளன. இவ்வாறே முதலாம் இராசேந்திர சோழன் மகனை முதலாம் இராசாதிராசன், அவன் தந்தைக்குப் பின் கி. பி. 1054 வரை ஆண்டானாயினும், சாசனங்களில் அவன் ஆட்சி கி. பி. 1018 முதல் எண்ணப்பட்டு வந்திருப்பது குறிப்

பிடத் தக்கதாகும். இனிச் சோழ மன்னர் தங்கள் நாடுகளின் பல பிரிவுகளையும் ஆளும்படி அவர்களுக்கு நெருங்கிய இனத்தவரையும், மக்களையும், பெயரர்களையும் நியமித்த செய்தி முதலாம் இராசாதிராச தேவன் சாசனத்தாலும், இரண்டாம் இராசேந்திர சோழன் சாசனத்தாலும் அறியப்படுகிறது.

சுந்தரபாண்டியன் தன் மைத்துனனை அழகப் பெருமாளை அரசியல் அதிகாரியாக நியமித்துள்ளமை அவன் சாசனத்தால் அறியப்படுகிறது. விக்கிரமசோழன், அவன் ஆட்சியின் நாலாவது ஆண்டில், தஞ்சைப் பெரிய கோயில் காணிக்காரளவு என்னும் அலுவலுக்கு, இராசராச பல்லவரையன் என்னும் ஆவுடையான் அரையன் உடையானையும், அவன் இறந்தபின் அவன் மகன் உடையான் கல்லாலை என்பானையும் நியமித்த செய்தி அவ் விக்கிரமசோழன் சாசனத்தால் தெரிகிறது.

புகழ்த்துணை விசயரயன். சோழநாட்டுச் சோழரான உலகப் பெருமானர் இருவரும் நந்திவர்மன் காலத்து அரசியல் அதிகாரிகளாவர். சோழபாண்டியர் காலத்து அதிகாரிகளில் 'உடன் உட்டத்து அதிகாரிகள்' குறிப்பிடத் தக்கவராவர். வரியிலார், புரவுவரி, புரவுவரித் திணைக்கள நாயகம், திருவாய்க் கேள்வி, திருமந்திரவோலை, திருமந்திரவோலை நாயகம் முதலிய அதிகாரிகளும் அக்காலத்தில் இருந்ததாகச் சாசனங்கள் கூறுகின்றன. இவர்களில் வரியிலார், வரிகளாக வரும் தொகையைக் கணக்கில் எழுதிக் கொள்பவரும், அரசிறை நீக்கிய ஊர்களிலிருந்து வருவதற்குரிய பிற வரிகளைக் கணக்கு வைப்பவரு மாவர். அவர்கள் 'புரவுவரி' என்றும், அவர்களுக்குத் தலைவராயிருப்பார், 'புரவுவரித் திணைக்களநாயகம்' என்றும் அழைக்கப்பட்டனர். அரசன் திருவாய் மொழிந்தருளியதைக் கேட்டுத் திருமந்திரவோலை முதலியவர்களுக்கு அறிவிப்பவர் 'திருவாய்க் கேள்வி' என்றும், அரசன் ஆணை முதலியவற்றை எழுதியவர் 'திருமந்திரவோலை' என்றும், அவர்களுக்குத் தலைவராயிருப்போர் 'திருமந்திரவோலை நாயகம்' என்றும் அழைக்கப்பட்டனர். இதனை முதலாம் இராசேந்திர சோழன் ஆறுவது சாசனத்தில் காண்க.

அரசியல் அதிகாரிகளுக்கு அரசன் பல பட்டப்பெயர்களை வழங்கி வந்ததோடு, தன் பட்டப் பெயர்களையும் அவர்கள் இட்டுக் கொள்வதற்கு உரிமை யளித்திருந்தனன். மூவேந்தவேளான், தொண்டைமான், வாணகோ வரையன், சேதிராயர், வாணராயர், விழுப்பரையன் என்பன, அவற்றுள் சில பட்டப் பெயர்களாகும். **சோழ நாட்டுச் சோழனர், சோழப் பெருமானடிகள் அதிகாரிகள், ஊராள்கின்ற பல்லவன், கண்காணி, தென்னவன் மூவேந்த வேளான்**

(செம்பியன்) விழுப்பரையன், வில்வராயன் சேனுபதிகள், பிள்ளையார் (அழகப்பெருமாள்) முதலியன இந்நூற் சாசானங்களில் காணப் படும் அரசியலதிகாரிகளின் பட்டப் பெயர்களில் சிலவாகும்.

அக்கால மன்னர்களுக்கு நிலவரியே யன்றி, பல வகைத் தொழில் வரிகளும், சுங்கவரி முதலியனவும் வருவாயாக வந்த தெனத் தெரிகிறது. குடிகள் செலுத்திவந்த நிலவரி 'காணிக் கடன்'எனப்பட்டது.அஃது ஆறிலொன்று என்பது, 'ஆறிலொன்று ஆவனியுட் கூறுகொள் பொருள்களும்' என முதலாம் இராசாதிராச தேவன் சாசனத்தில் வரும் தொடரால் விளங்குகிறது. கடமை, வரி, அந்தராயம், திருவெழுச்சி, குடிமை, நாடென்ற வரி, வெட்டி, முட்டையாள், இறை, குடிமை வாரமங்கலம், கணக்கப் பேறு, அஞ் சாலி, பாட்டம், முறைபாடு, முதலியன பிற வரிகளாகும். சிற்றுாயம், ஏலவை, உகசை முதலியன இறையிலி நிலங்களிலுள்ளவர்களிடம் வாங்கப் பெற்ற வரிகளாகும். பகைவர் நாட்டைச் செயித்துக் கொள்ளைகொண்ட பொருள்களும், பலவகைத் தண்டப் பொருள் களும் அக்கால அரசர்களுக்குப் பிறவகையால் வந்த வருவாய்கள் என்னலாம். மன்றுபாடு, தண்டம், குற்றம் முதலியன அக்காலத்தில் தன்மாசனத்தார் குற்றவாளிகளுக்கு விதித்த அபராதங்களாகும். கோயில் சம்பந்தமான சில குற்றங்களுக்குத் தண்டனையாகக் குற்றவாளிகளைக் கோயிலில் திரு நந்தா விளக்குப் போடுவதற்கு ஏற்பாடு செய்ததுமுண்டு.

பல்லவர், சோழர் காலத்தில் வழங்கிவந்த நாணய மொன்று 'நற்காசு' என்று பெயர் பெற்றுள்ளது. எனவே அது பொன்னல் செய்யப்பட்ட நாணயமென்பது வெளிப்படை. அதனைப் 'பொன்' என்று தந்திவர்மன் சாசனங்கள் கூறுகின்றன. "காண விலையின் புடவை" என வரும் தொடரில் 'காணம்' என்ற பெயரும் அக் காலத்தில் வழங்கியதொரு பொற்காசையே குறிக்குமென்று தெரி கிறது. நான்கு குன்றி எடை கொண்டது ஒரு காணம் என்றும், பத்துக் காணம் கொண்டது ஒரு காசு என்றும் இதற்கு வாய்பாடு கூறுவர். இனி, முதலாம் பராந்தகன் சாசனத்தில், ஒரு வகைக் காசு 'ஈழக்காசு'என்றும், அதன் பகுதி 'புத்தக்கம்' என்றும் பெயர் பெற்றுள்ளன. அவை 'பொற்காசு' என்னும் பொருளையே குறித்து நின்றன, அக்க மென்பது பொன் புத்தக்கம் என்பது புதியபொன் என்று பொருள்படும். $7\frac{1}{2}$ புத்தக்கம் கொண்டது ஓர் ஈழக் காசாகும், சுந்தரபாண்டியன் சாசனத்தால் 'திரமம்' என்னும் ஒருவகை கிரேக்க நாணயம் நாட்டில் வழங்கி வந்ததாக அறிகின்றோம்.

அக்காலத்தில் நிலங்கள் அளக்கப்பட்டும், அதனதன் தன்மைக் கேற்றவாறு பிரிக்கப்பட்டும் குடிகளிடம் நிலவரி வாங்கப்

பட்டதென்று அறிகின்றோம். நிலங்கள் அவைகளின் விளைச்சலுக் கேற்றவாறு நன்செய், புன்செய், காடு (தோட்டம்) என மூன்றுகப் பிரிக்கப்பட்டிருந்தன. முதல் கொண்ட நிலம் நீரிலி நிலம், குளப் புரவு கண்ணுறு முதலியன பாண்டியர் சாசனங்களில் கூறப்படும் நிலப்பிரிவுகளாகும். இவைகளில் நெல், கரும்பு, நவிரை, வரகு, எள், தினை, மஞ்சள், வாழை முதலியன விளைவிக்கப்பட்டன. கார், பசானம் என்பன நன்செய் நிலத்தில் விளையும் இருபோக நெல்லைக் குறிக்கும். ஆடிக்குறுவை, அற்பசிக்குறுவை, என்னும் நெல் வகை சுந்தரபாண்டியன் சாசனத்தில் கூறப்பட்டுள்ளன.

கோயில் பிரதிமங்கள், திருமேனிகள் முதலியவற்றின் அகல உயரங்கள் தோரை விரல், சாண் முழம் முதலிய அளவைகளால் அளக்கப்பட்டு வந்தனவென்பது முதலாம் இராசராசன் முதலாம் இராசேந்திர சோழன் ஆகியோர் சாசனங்களால் அறியப்படுகிறது. குழி, மா, வேலி என்பன அக்காலத்தில் நிலங்களை அளக்கும் நீட்டலளவைப் பெயர்கள். "நிலம் ஒன்பது மா முந்திரிகையின் மூன்றுமா முக்காணியும் நீங்கலாக" (27) எனவரும் தொடர் அக்காலத்தில் நிலங்கள் எவ்வளவு நுட்பமாக அளக்கப்பட்டிருந்தன வென்பதைக் காட்டும். குலசேகரதேவ பராக்கிரம பாண்டியன் சாசனத்தில் (29), அவன் செங்கோட்டைச் சிவன் கோயிலுக்குத் தானமாகக் கொடுத்த அரைமா நிலத்திற்கு அளவு கூறுமிடத்தும் இத்தகைய அளவு குறிக்கப்பட்டிருத்தல் காண்க. வரி நீக்கப் பட்டதான இறையிலி நிலங்கள், புதிய பெயர்களைக் கொண்டிருந்தன. சைவ வைணவ கோயில்களுக்குத் தானமாகக் கொடுக்கப் பட்ட இறையிலி நிலங்கள் முறையே 'தேவதானம்' என்றும், 'திருவிடையாட்டம்' என்றும், சைவ பௌத்த கோயில்களுக்குக் கொடுக்கப்பட்ட நிலங்கள் மடப்புறம் என்றும் அழைக்கப்பட்டன. கோயில் அந்தணர்களுக்குக் கொடுக்கப்பட்ட நிலங்கள் பிரமதேயம் எனப் பட்டன.

நில அளவைகளைப் போலப் பொருட்களை அளப்பதற்கு உபயோகித்து வந்த நிறுத்தலளவைகளும், முகத்தலளவைகளும் இச் சாசனங்களில் காணப்படுகின்றன. மணி, பொன் முதலியவற்றை நிறுப்பதற்கு மா, குன்றி, மஞ்சாடி, கழஞ்சு ஆகிய நிறைகற்கள் உபயோகத்திலிருந்தன. அவை யொழிந்த பொருட்கள் கஃசு, பலம் என்னும் எடைக் கற்களால் நிறுக்கப்பட்டன. தஞ்சைப் பெரிய கோயிலில் பொன்னை நிறுத்தற்கு ஆடவல்லான் என்னும் நிறைகல்லும், மணி முதலியவற்றை நிறுத்தற்குத் 'தக்ஷணமேரு விடங்கன்' என்னும் நிறைகல்லும் வழக்கத்திலிருந்ததாக, முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திர சோழன் சாசனங்களால் அறிகின்றோம். நெல், அரிசி, நெய், பால், உப்பு முதலியவற்றை

அளப்பதற்கிருந்த பல அளவைகளில் செவிடு, ஆழாக்கு, உழக்கு, உரி, நாழி, குறுணி (மரக்கால்), பதக்கு, தூணி, காடி, கலம் என்பன சிலவாகும். இவற்றைத் தந்திவர்மன் சாசனத்திலும், முதலாம், இராசராசன் சாசனங்களிலும் காணலாம். 'ஐ' என்பது நெல்லை யும், 'ங' என்பது குறுணியையும், 'களா' என்பது கலத்தையும் 'வத' என்பது இரு தூணியையும் குறிக்கும் எழுத்துக்களாகச் சாசனங்களில் வழங்கியுள்ளன. அருண்மொழித் தேவன் மரக் கால், இராசராசன் மரக்கால், ஆடவல்லான் மரக்கால், அருண் மொழி நங்கை மரக்கால் என்பன சாசனங்களில் காணப்படும் சில மரக்கால்களின் பெயர்களாகும்.

'உடையார் கொயிலில் முழத்தால் அளந்தும்' (5) எனவும், 'கல் வாயில் நாட்டுக்கடைமைக்காலர்லிறுப்பதாகவும்' (26) எனவும் ''கோல் குடி தாங்கியால் புள்ளி புக்க நிலம் ஒருமாவுக்கு' (26) எனவும் வரும் தொடர்களால், அக்காலத்தில் அரசியலாரிடத்தும், குடி களிடத்தும், கோயில்களிடத்தும் வெவ்வேறான அளவைகள் வழக்கத்தில் இருந்தனவென்று காண்கின்றோம்.

அக்காலக் கோயில்கள் கருப்பகிருகம், அர்த்தமண்டபம், இடை நாழிகை, மகா மண்டபம் முதலியவற்றையும், உயர்ந்த கோபுரங் களையும், சுற்றிலும் சிறு தெய்வங்களுக்குக் கோயில்கள் அமைக் கப்பெற்ற திருச்சுற்று மாளிகைகளையும், சுற்று மதில்களையும் உடையனவாய்த் திகழ்ந்தன. திருவுண்ணாழிகையுள்ளவார், பலி கொட்டுவார், திருப்பள்ளித் தாமம் பறிப்பார், திருப்பதியம் பாடுவார் முதலிய திருப்பணியாளர்கள் கோயில்களில் இருந்து திருப்பணி செய்து வந்தனர். அவர்கள் 'தேவகன்மிகள்' என்றும், அவர்களை மேற்பார்வை செய்வார் 'ஸ்ரீகாரியஞ்செய்வார்' என்றும் அழைக்கப் பட்டனர். குலங்கிழார் என்றும் அன்னோர் அழைக்கப்பட்டுள்ளமை தந்திவர்மன் சாசனத்தால் அறியப்படுகிறது. விக்கிரம சோழன் தில்லைத் திருப்பணி சாசனத்தில், ஆதிசண்டேஸ்வர தெவர் ஆதெசம் அருளால் இக்கோயிலில் ஸ்ரீமாஹெச்வரொமும் ஸ்ரீ காரியஞ் செய்வாரும் இக்கோயில் கணக்கு நெல்குப்பெயுடையாநு முள் ளிட்ட ஸ்தாநந்தொம்' (21) என வரும் அடிகளால் கோயில் பணி யாளர் இன்னின்னார் என்பது புலனாதல் காண்க.

அக்கால அரசர்களுக்குக் காலாட்படை, குதிரைப்படை, யானைப்படை ஆகியவை இருந்தன, ஆனால் அவர்களுக்குத் தேர்ப்படை இருந்ததாகத் தெரியவில்லை. காந்தளூர்ச்சாலைக் கல மறுத்தது, ஈழங்கொண்டது, கடாரம் கொண்டது போன்ற செய்திகளால் சோழ மன்னர்களுக்குப் பலம் பொருந்திய கப்பற்படைகளுமிருந்தன என்று தெரிகிறது.

முடிவாகக், கிராமச் சபைகளைப் பற்றிச் சிறிது கூறுவோம். சோழபாண்டியர் காலத்தில் ஊர்தோறும் கிராமச் சபைகள் இருந்தன என்று தெரிகிறது. இச்சபையினர் ஊர்ப் பொது மக்களால் குடவோலை மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கிராமங்கள் சிறிதாயிருப்பின் இரண்டு மூன்று கிராமங்களைச் சேர்த்து, அவைகளுக்குப் பொதுவான ஒருசபையை ஏற்படுத்தி ஆட்சி புரிந்து வந்தனரென்று அறிகின்றோம். இச் சிறுகிராமங்களின் தொகுதியே பிற்காலத்தில் 'சதுர்வேதி மங்கலம்' என்று பெயர் பெற்றது போலும். இச்சபையில், சம்வற்சரவாரியம், தோட்டவாரியம், ஏரிவாரியம், கழனி வாரியம், பஞ்சவார வாரியம், கணக்கு வாரியம், கலிங்கு வாரியம், தடிவழி வாரியம் முதலிய பல உட்கழகங்கள் இருந்தனவென்பது, பார்த்திவேந்தி ராதிவர்மன் சாசனத்தால் அறியப்படுகிறது.

ஊர்ச் சபையின் உட்பிரிவுகள் ஒவ்வொன்றும் பல உறுப்பினரையுடையதாய், தனித்தனி வேலைகளைச் செய்து வந்தது. நியாயம் வழங்குவது, அறநிலையங்களைக் கண்காணிப்பது, நீர் நிலைகளைப் பாதுகாத்துப் பயன்படச் செய்வது, நிலபுலங்களைப் பரிபாலிப்பது, அரசனுக்குக் குடிகள் செலுத்தவேண்டிய நிலவரியையும், பிற வரிகளையும் வாங்கி அரசாங்கப் பொருள் நிலையத்திற்கு அனுப்புவது போன்ற எல்லா வேலைகளையும் கிராமச் சபையினரே செய்து வந்தனர். கோயில் ஆட்சியும் அவர்கள் வசமே இருந்து வந்தது. சுருங்கக் கூறின், இவர்களே கிராம ஆட்சியை நடத்தி வந்தனரென்னலாம். அவர்கள் கூடித் தங்கள் கடமைகளை நிறைவேற்றுவதற்கு ஊர்தோறும் பொது மன்றங்களிருந்தன. சில சமயங்களில் கோயில் மண்டபங்களும், பள்ளிக் கூடங்களும், ஊர்ச்சபை கூடுவதற்குப் பயன்பட்டன. சபையில் நிறைவேற்றும் தீர்மானங்களையும் பிறவற்றையும் எழுதி வைப்பவன் 'ஊர்க்கரணத்தான் அல்லது மத்தியஸ்தன்' என்று அழைக்கப்பட்டான்.

சாசனங்களில், 'ஊர்க்கரணத்தான் வடுகன் பாக்கரநென்' (17) 'இந்நகரக் கரணத்தான்' 'நாராயணன டைக்கலனென், (7) நாட்டுக் கணக்கு மயிலேறும் பெருமாள் ஸிவஞாந, தெவன்' என வரும் தொடர்கள் அக்காலத்தில் ஊர்ச்சபை, நகரசபை, நாட்டுச் சபைகள் இருந்தன என்பதைப் புலப்படுத்தும். அவை இக்கால ஊர்ப் பஞ்சாயத்து, நகராண்மைக் கழகம், நாட்டாண்மைக் கழக முதலியவற்றிலும் சிறப்பாக விளங்கின என்பது இச் சாசனங்களால் அறியப்படும் உண்மையாகும்.

---

# தமிழ்ச் சாசனங்கள்

## 1. தந்திவர்மன் சாசனம்*

### முன்னுரை

தந்திவர்மன் சாசனம் என்பது, தந்திவர்மன் காலத்துச் சாசனம் என்று பொருள்படும். இச் சாசனம் பல்லவ மன்னனான தந்திவர்மன் காலத்தில், அவனது ஆட்சியின் 12ஆம் ஆண்டில் ஏற்பட்டது. இது திருவல்லிக்கேணி பார்த்தசாரதி சுவாமி கோயில் கருப்ப கிருகத்திற்குச் செல்லும் வாயிலுக்குப் பக்கத்தில் உள்ள தளவரிசைக் கல் ஒன்றில் காணப்படுகிறது. தமிழ்மொழியில், கிரந்த எழுத்தால் எழுதப் பெற்ற பல சமஸ்கிருத சொற்கள் கலந்துஎழுதப்பட்டது. பத்தொன்பது வரிகளையுடையது.

இச் சாசனத்தில் தந்திவர்ம பல்லவன், பல்லவ குல திலதம் என்றும், பாரத்வாஜ கோத்திரா லங்கார பதி என்றும் கூறப் பெற்றுள்ளான். திருவல்லிக்கேணி குலங்கிழார் (கோயில் அதிகாரிகள்) கருமாரச் சேரியிலுள்ள கோயில் நிலத்தில் ஒரு பகுதியை ஒற்றிவைத்ததால், அதிலிருந்து கிடைத்த நாற்பத்தைந்து காடி நெல்லுக்குரிய வட்டியைக் கொண்டு கோயில் இறைவனுக்குத் திருவமுது செய்வது தடை பட்டது. அதனால் புகழ்த்துணை விசையரயன் என்னும் அரசிய லதிகாரி முப்பது காடி நெல்லும், ஐந்து கழஞ்சுப் பொன்னும் கொடுத்து,

---

* Epigraphia Indica, Vol, VIII, No 29, pp 290—96.

1. இவன் இரண்டாம் நந்திவர்ம பல்லவன் மகன். இவன் தாயின் பெயர் ரேவா. இவள் இராஷ்டிரகூடர் முதலரசனான தந்திதுர்கன் என்னும் தந்திவர்மன் மகளா யிருத்தல் வேண்டுமென்று வரலாற்றாசிரியர் கூறுகின்றனர். எனவே, இவன் பாட்டன் பெயரே இவனுக்கும் இடப்பட்டது என்று கருதப்படுகிறது. தொடக்கத்தில் தொண்டை நாடும், சோழ நாடும் இவனாட்சியின்கீழ் இருந்தன. ஆகையால் இவன் கல்வெட்டுக்கள் அவ்விரு நாடுகளிலும் காணப்படுகின்றன. இவன் ஆட்சியின்கீழ் முத்தரையர் சிற்றரசர்களா யிருந்தனர். ஆனால், இறுதிக் காலத்தில் இராஷ்டிரகூட மன்னருள் மூன்றாம் கோவிந்தன் இவனோடு போர் செய்து, இவன் வலிமையை அழித்தான். வரகுண பாண்டியன் இவனை வென்று சோழ நாட்டையும் தொண்டை நாட்டின் ஒரு பகுதியையும் தன்னாட்சியின்கீழ்ப் படுத்தினான். இவன் காலத்தில் குளங்கள்,

அந்த நிலத்தை மீட்டுத் தனக்குரியதாக்கி, அதன் வருவாயிலிருந்து 45 காடி நெல் கோயிலுக்குத் தானமாகக் கொடுத்தான். கோயில் அதிகாரிகள் அந் நெல்லுக்கு வட்டியாக நாளொன்றுக்கு வந்த ஐந்து நாழி நெல்லை வாங்கி, அரிசியாக்கி இறைவனுக்கு நாள்தோறும் இரவு நிவேதனம் கொடுப்பதாகவும், அங்ஙனம் நிவேதனம் கொடுக்கத் தடை ஏற்பட்டால், கோயிலுக்குரிய சில நிலங்களின் விளைச்சலிலிருந்து கொடுப்பதாகவும் அவனுக்கு உறுதி செய்து கொடுத்தனர். இச் செய்திகளுடன் புகழ்த்துணை விசையரயன் அக்கோயிலுக்கு ஓர் ஈழ விளக்கும், வட்டிலும், உலோக பானையும் தானமாகக் கொடுத்து, அவைகளைப் பாதுகாக்குமாறு கோயில் அதிகாரிகளை வேண்டிக்கொண்ட செய்தியும் இதில் கூறப்பட்டுள்ளது. எனவே இச் சாசனத்தைத் திருவல்லிக்கேணி குலங்கிழார் சாசனம் என்றாயினும், புகழ்த்துணை விசையரயன் சாசனம் என்றாயினும் நாம் கூறலாம்.

தந்திவர்ம பல்லவன் கி. பி. 775 முதல் 825 வரை தமிழ் நாட்டை ஆண்டான். இச் சாசனம் அவனது ஆட்சியின் 12ஆம் ஆண்டில் ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 789ஆம் ஆண்டு என்னலாம்.

சாசனம்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ பல்லவகுல திலத பார -
2. த்வாஜ கோத்ராலங் கார பதி யாகிய ஸ்ரீ -

---

ஏரிகள், கால்வாய்கள் பல வெட்டப்பட்டுள்ளன. சோழ நாட்டில் பல பிரமதேயங்களை இவன் செய்துள்ளான். மாற்பிடுகு, வயிரமேகன் என்னும் பெயர்களும் இவனுக்கு உண்டு. சில சாசனங்களில் இவன் பெயர் 'கோவிசய தந்தி விக்கிரம வர்மன்' என்று காணப்படுகிறது. இவன் காலத்தில்தான் சுந்தரர் வாழ்ந்ததாகத் தெரிகிறது நம்மாழ்வாரும் இவன் காலத்தில் இருந்தார் என்று கூறுவர். புகழ்த்துணை விசையரயன், உலகப்பெருமானார் முதலியோர் இவன் அரசியல் அதிகாரிகளாவர்.

குறிப்புரை

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ:** இது சாசனங்களின் துவக்கத்தில் மங்கலமாக வழங்கும் ஒரு வடமொழித் தொடர். மங்களம் உண்டாக என்பது இதன் பொருள். 'நலம் வளர்க' என்றும் இதற்குப் பொருள் கூறுவர்.

**பல்லவ குல திலகம்:** பல்லவ குலப் பிரிவுகளில் இஃது ஒரு பிரிவின் பெயர். இக்குலத்தினர் பாரத்துவாச கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள். தந்திவர்மனும் அவனுக்குப் பின் வந்த பல்லவ மன்னர்களும் இக்குலத்தைச் சேர்ந்தவர்கள் என்று தெரிகிறது. இனிப், பல்லவ குல

3. தந்திவர்ம்ம மஹாராஜற்கு வர்ஷவர்த்தன -
4. ம் யாண்டு பன்னிரண்டாவது திருவல்லி -
5. க்கேணி குலங்கிழார்கள் கருமாரச்சேரிப் புலம்
6. ஒற்றியிட்டு நாற்பத்தைங் காடி நெல் பொலியூட்ட திரு -

---

திலகம் என்பது, தந்திவர்ம பல்லவனுக்கு வழங்கிய பட்டப்பெயர்களில் ஒன்று என்பாருமுளர்.

2. **பாரத்வாஜ கோத்ர லங்கார பதி:** பல்லவர்களுக் குரிய கோத்திரங்களில் பாரத்துவாச கோத்திரமும் ஒன்று. பல்லவர்க்குக் குடி முதல்வன் திருமால் என்றும், அவன் வழி வந்தோர் பிரமன், ஆங்கிரசு, பிரகஸ்பதி, சம்யு, பாரத்துவாசன், துரோணன், அசுவத்தாமா, பல்லவன் முதலியோர் ஆவர் என்றும் கூறுவர். தந்திவர்மன் அப் பாரத்துவாச கோத்திரத்து மன்னர்களில் புகழ்பெற்றவனாதலால், அவன் 'பாரத்வாஜ கோத்திரா லங்கார பதி' என்று அழைக்கப்பட்டான். கோத்ரம் - குடி ; அலங்காரம் - அழகு, ஒளி; பதி - மன்னன், தலைவன் .

3. **ஸ்ரீ நந்திவர்ம்ம மஹாராஜர்:** இவன் வரலாற்றை இச் சாசன முன்னுரைப் பகுதியில் காண்க.

**வர்ஷ வர்த்தனம் யாண்டு** - ஆட்சியின் நிறைவு ஆண்டு; வர்ஷம் - ஆட்சி ஆண்டு; வர்த்தனம் - நிறைவு வளர்ச்சி.

4. **திருவல்லிக்கேணி:** இது சென்னை நகரைச் சுற்றியுள்ள மயிலாப்பூர், திருவான்மையூர், எழுமூர், நுங்கம்பாக்கம், திருவறையூர் முதலிய ஊர்களைப் போன்று பழங்கால முதலே சிறப்புற்றிருந்த ஒரு சிற்றூர். இவ்வூரில் பார்த்தசாரதி சுவாமி கோயில் உளது. அக் கோயிலில் தந்திவர்மன் சாசனத்தோடு, சோழருடைய பல சாசனங்களும், பாண்டியன் மாறவர்மன் குலசேகரன் கல்வெட்டுக்களும், விஜய நகர மன்னர்களுடைய சாசனங்களும் காணப்படுகின்றன. இவைகளால் இக்கோயில் தந்திவர்மன் காலமாகிய கி. பி. எட்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்டது என்று தெரிகிறது.

5. **குலங்கிழார்கள்** - கோயில் வேலையை நடத்துபவர்கள்; குலம் - கோயில்; கருமாரச் சேரிப்புலம் - கருமாரச்சேரி என்னும் ஊரிலுள்ள நிலம்; புலம் - வயல் நிலம்.

6. **ஒற்றியிட்டு** - ஒற்றி வைத்து, அடகு வைத்து; நாற்பத்தைங் காடி நெல் பொலியூட்ட - 45 காடி நெல்லுக்குப் பொலியூட்டாக வந்த நெல்லால்; காடி என்பது, அக்காலத்திய முகத்தலளவைகளில் ஒன்று. தானியங்களைப் பெரும்பாலும் இவ்வளவையினால் அளப்பர். செவிடு, ஆழாக்கு, உழக்கு, உரி, நாழி, குறுணி, பதக்கு, தூணி, காடி, கலம்

7. வடிகட்கு திருவமிர்து முட்ட புகழ்த்துணை விசெய்
8. யரையன் முப்பதின் காடி நெல்லும் ஐங்கழஞ்சு
9. பொன்னும் குடுத்து மீட்டுத் தனதாக்கி நாற்பத்-
10. தைங் காடியும் நிசதி ஐஞ்ஞாழி நெல்லால் இருநா-

---

என்பவை பல்லவர் காலத்து முகத்தலளவைகளாகும். 5 செவிடு = 1 ஆழாக்கு; 2 ஆழாக்கு = 1 உழக்கு; 2 உழக்கு = 1 உரி; 2 உரி = 1 நாழி; 8 நாழி = 1 குறுணி; 2 குறுணி = 1 பதக்கு; 4 குறுணி = 1 துணி; 5 குறுணி = 1 காடி; 12 குறுணி = 1 கலம்.

பொலியூட்டு - வட்டி பெறுகை; பொலி - பொலிசை, தானியமாகக் கொடுக்கும் வட்டி.

**திருவடிகட்கு** - கோயில் இறைவனுக்கு.

7. **திருவமிர்து** - நிவேதன உணவு (Boiled rice offered to an idol or great person); முட்ட - தட்டுப்பட, தடைபட; **புகழ்த்துணை விசையரயன்:** இவன் தந்திவர்ம பல்லவன் அரசியல் அதிகாரிகளில் ஒருவன்; திருவல்லிக்கேணி கோயில்கிழார்கள் கோயில் நிலத்தில் ஒரு பகுதியை ஒற்றி வைத்ததால் அதன் வருவாயாக வந்த 45 காடி நெல் குறைந்து அதற்குக் கிடைக்கும் வட்டியும் இல்லாமல் போக, இவன் 30 காடி நெல்லும் 5 கழஞ்சு பொன்னும் கொடுத்து, அந்த நிலத்தை மீட்டுத் தனக்குச் சொந்தமாக்கி, அந்த நிலத்து வருவாயிலிருந்து 45 காடி நெல் தானமாகக் கொடுத்தான். அந்நெல்லுக்கு நாளொன்றுக்கு வட்டியாகவந்த 5 நாழி நெல்லைக்கொண்டு கோயில் அதிகாரிகள் இறைவனுக்கு நாள்தோறும் இரவு நிவேதன உணவு படைக்குமாறு ஏற்பாடு செய்தான். அன்றியும் இவன் அக்கோயிலுக்குத் தானமாக ஓர் ஈழ விளக்கு, வட்டில், உலோக பாண்டம் ஆகியவற்றைக் கொடுத்து, அவைகளைப் பாதுகாத்து வருமாறும் அவர்களை வேண்டிக்கொண்டான்.

8. **முப்பதின் காடி நெல்** - 30 காடி நெல்; **ஐங்கழஞ்சு பொன்** - 5 கழஞ்சு பொன்; கழஞ்சி - 12 பண எடை அல்லது 20 மஞ்சாடி. இஃது ஒரு நிறுத்த லளவை; பொன் முதலியன இதனால் நிறுக்கப்படும். 2 குன்றிமணி = 1 மஞ்சாடி; 20 மஞ்சாடி = 1 கழஞ்சு.

9. **குடுத்து மீட்டு** - கொடுத்து வாங்கி; **தனதாக்கி** - தனக்குச் சொந்தமாக்கி; **நாற்பதைங் காடியும்** - 45 காடி நெல்லும் கொடுத்து; 5 குறுணி அல்லது 40 நாழி = 1 காடி.

10. **நிசதி** - நாள்தோறும்; **ஐஞ்ஞாழி நெல்லால்** - 45 காடி நெல்லுக்கு வட்டியாக வந்த ஐந்து நாழி நெல்லைக்கொண்டு. இதனால், அக்காலத்தில் 45 காடி நெல்லுக்கு ஆண்டுக்கு $18\frac{3}{4}$ கலம் நெல், வட்டி என்று அறிகின்றோம்.

11. ழி தூக்குத்த லரிசியால் இராப்போனகம் ஜங்க ச-
12. ர்மனும் ஜத்தி சர்மனும் இளைய சத்தி சர்மனும் கா
13. ட்டுவாரானூர்கள் முட்டில் அவிப்புலத்தும் தத்தன் புல-
14. த்தும் காரைக்கிழான் புலத்தும் சுவாமி போகத்துத் திருவ
15. மிர்து காட்டுவோ மானேம் இத்தர்மத் துள்ளார் யாவ
16. ரேனுங் கோச் செய்வது செய்து செலுத்த வொட்டிக் குடுத் -

---

**11.** தூக்குத்த லரிசியால்—தீட்டிய குத்த லரிசியால் ; **இராப்போனகம்**—இராப்போசனம், இரவு உணவு ; போனகம்—போசனம் ; நிவேதன உணவு.

**12.** ஜங்க சர்மன், ஜத்தி சர்மன், இளைய சத்தி சர்மன் : சர்மா என்பது அந்தணருக்குரிய பட்டப் பெயர். இவ்வாறு அரசர் வர்மா என்றும், வணிகர் கருமா என்றும், சூத்திரர் தாசர் என்றும் அழைக்கப் படுவர். சங்க சர்மன் முதலிய மூவரும் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலில் திருப்பணி செய்து வந்தவர்கள். இவர்களே புகழ்த்துணை விசையரசன் மீட்ட நில வருமானத்திலிருந்து கொடுத்த 45 காடி நெல்லுக்கு நாள் தோறும் வட்டியாக வந்த 5 நாழி நெல்லையும் வாங்கி, குற்றித் தீட்டி இரண்டு நாழி அரிசி யாக்கி, கோயில் இறைவனுக்கு இரவு நிவேதனம் கொடுக்க உறுதி கூறியவர்களாவர்.

**13.** காட்டுவாரானூர்கள்—உறுதி கூறினர் ; முட்டில்-தடைபட்டால்.

**14.** அவிப்புலம், தத்தன் புலம், காரைக்கிழான் புலம் : இவை மூன்றும் திருவல்லிக்கேணி கோயிலுக்குச் சொந்தமான வேறு வயல் நிலங்கள் ; கோயில் அதிகாரிகளுக்குக் கொடுக்கப்பட்டவை. முந்திய ஏற்பாட்டின் படி இவர்கள் கோயில் இறைவனுக்கு நாள்தோறும் இரவுப் போனகம் கொடுக்கத் தடைபட்டால், இம்மூன்று நிலங்களின் வருவாயினின்றும் போனகம் கொடுத்தல் வேண்டுமென்பது இச்சாசனத்தில் கண்ட வாக்குறுதிகளில் ஒன்றாகும். சுவாமிபோகத்து—சுவாமிக்குரிய நிலத்து விளைச்சலில் ; அஃதாவது, அவிப்புலம் முதலிய மூன்று புலங்களிலிருந்தும் கோயிலுக்கு வரும் விளைச்சலில் என்பது.

**15.** காட்டுவோ மானேம்—உறுதி சொன்னேம். இத் தர்மத்து **உள்ளார்**—இப்பணியைச்செய்ய ஏற்றுக்கொண்டவர்கள் ; **யாவரேனும்**—யாவரானாலும்,

**16.** கோச் செய்வது செய்து—நாட்டு மன்னன் குடிகளுக்குக் குறைவின்றி உதவி செய்வதுபோல, இத் தருமத்தைக் குறைவின்றிச் செய்து; **செலுத்த**—நடத்த ; **ஒட்டிக் கொடுத்தோம்**—உறுதிசெய்து கொடுத்தோம்.

17. தோம் ஈழவிளக்கும் வட்டில் லோகபானையும் ரக்ஷிப்ப
18. து புகழ்த்துணை விசையரயன் தர்மமிது இதனை ர-
19. க்ஷித்தா ரடி இரண்டும் என் முடி மேலின ஸ்வஸ்தி.

---

17. ஈழவிளக்கு—கோயிலுக்குத் தானமாகக் கொடுக்கும் விளக்கு வகைகளில் ஒன்று: இவ்வகை விளக்கு, ஈழநாட்டிலிருந்து வந்தது போலும். இனி, ஈழம் என்பதற்குப் பொன் என்று பொருள்கொண்டு, இதனைப் 'பொன் விளக்கு' என்பாரு முளர். வட்டில்—கிண்ணம்; உண் கலம் எனினுமாம். லோக பானை—உலோக பானை; அஃதாவது உலோகத்தால் செய்த பானை; இதனை வெண்கலப் பானை என்பாரும், செப்புப் பானை என்பாரு முளர்.

ஈழவிளக்கு, வட்டில், உலோக பானை மூன்றும் புகழ்த்துணை விசையரயனால் பார்த்தசாரதி சுவாமி கோயிலுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்டவை. இவைகளைப் பாதுகாக்கும் பொறுப்பு கோயில் திருப்பணியாளர்களான சங்கசர்மன், சத்திசர்மன், இளஞ்சத்தி சர்மன் ஆகிய மூவர்களிடமும் விடப்பட்டது.

18. தர்மம்—தானம்; அவைகளாவன திருவல்லிக்கேணி பார்த்தசாரதி சுவாமிக்குத் திருவமிர்து படைக்கப் புகழ்த்துணை விசையரயன் 45 காடி நெல் கொடுத்ததும், கோயிலுக்கு வேண்டும் ஈழ விளக்கு, வட்டில், உலோக பானை ஆகியவற்றைக் கொடுத்தது மாகும். ரக்ஷித்தார்—காத்தார்.

19. அடியிரண்டும்—பாதங்கள் இரண்டும்; என்முடி மேலின—என் தலையில் இருக்கக் கடவது; அஃதாவது, இத் தருமங்களைக் காத்தார் பாதங்கள் இரண்டிற்கும் என் வணக்கம் என்பது. ஸ்வஸ்தி: இவ்வட சொல், இச் சாசனத்தின் துவக்கத்தில் ஸ்வஸ்தி ஸ்ரீ என வந்துள்ளது. சாசனங்களின் இறுதியில் இவ்வாறு வருதல் சிறுபான்மையாகும்.

## பயிற்சி வினாக்கள்

1. நந்திவர்மன் சாசனம் எங்குக் காணப்படுகிறது? அதன் காலம் எது?

2. இச் சாசனத்தில் சொல்லப்பட்டுள்ள செய்திகள் யாவை?

3. ஸ்வஸ்தி ஸ்ரீ, பல்லவ குல திலகம், பாரத்வாஜ கோத்ரம், வர்ஷவர்த்தனம், கருமாரச் சேரிப்புலம், புகழ்த்துணை விசையரயன்—இவற்றை விளக்குக.

4. இச் சாசனத்தில் குலங்கிழார் செய்துகொடுத்த உறுதிகள் யாவை?

5. குலம் கிழார்கள், பொலியூட்டல், திருவமிர்து, நிசதி, இராப் போனகம், ஒட்டிக்கொடுத்தல், ஈழவிளக்கு—பொருள் தருக.

6. இச்சாசனத்தில் வரும் அளவைப் பெயர்களைக் குறிப்பிட்டு விளக்குக.

7. இச்சாசனத்தில் அறியப்படும் வட்டி வகைகளைக் குறிப்பிடுக.

# 2. விஜய தந்தி விக்கிரமவர்மன் சாசனம்*

## முன்னுரை

விஜய தந்தி விக்கிரம வர்மன் என்பது, தந்திவர்ம பல்லவனுக்கு வழங்கிய மற்றொரு பெயர். விஜய தந்தி விக்கிரம வர்மனை தந்திவர்மன் காலத்துச் சாசனம், விஜய தந்திவிக்கிரமவர்மன் சாசனம் எனப்பட்டது. இச் சாசனம் தந்திவர்மன காலத்தில், அவன் ஆட்சியின் 51 ஆம் ஆண்டு ஏற்பட்டது. சித்தூர் மாவட்டம் சந்திரகிரி தாலூகா திருச்சோகினூரிலுள்ள பத்மாவதி அம்மன் கோயில் வாயிலுக்குப் போகும் வழியில் தரையில் தனியாக அமைந்த ஒரு கல்லில் காணபபடுகிறது. இது தமிழ் மொழியில், கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது. ஐந்து வரிகளை யுடையது.

இச் சாசனத்தில், திருவேங்கடக் கோட்டத்தைச் சேர்ந்த திருச்சோகினூர் திருவிளங்கோயில் பெருமானுக்குச் சோழநாட்டுச் சோழரான உலகப் பெருமானர் என்னும் அரசியல் அதிகாரி ஒரு திருவிளக்கு வைத்து, அதற்கு முதலாக 30 கழஞ்சு பொற் காசுகள் தானம் அளித்துள்ளமையும், ஊர்ச் சபையோர் அப் பொற் காசு முப்பதுக்கும் கருக்குப்பட்டி என்னும் நிலத்தை ஈடாகக்கொண்டு, அதன் வருவாயிலிருந்து கோவிலுக்குத் திருவிளக்கு வைப்பித்தமையுமாகிய செய்திகள் கூறப்படுகின்றன. எனவே, இச்சாசனத்தை உலகப் பெருமானர் திருவிளக்குச் சாசனம் என்றாயினும், திருச்சோகினூர் சபையோர் சாசனம் என்றாயினும நாம் கூறலாம்.

தந்திவர்ம பல்லவன் கி. பி. 775 முதல் 825 வரை தமிழ் நாட்டை ஆண்டான். இச் சாசனம் அவனது ஆட்சியின் 51ஆம் ஆண்டில் ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 824-825ஆம் ஆண்டு என்னலாம்.

### சாசனம்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கொவிசெய தந்தி விக்கிரமவர்மற்கு யாண்டு அம்பத்தொன்றாவது திருவெங் -

---

* S. I. I., Vol. XII, No. 43, pp. 17—18.

### குறிப்புரை

**1.** ஸ்வஸ்தி ஸ்ரீ—மங்களம் உண்டாக ; 'நலம் வளர்க' எனினுமாம். கொவிசெய தந்தி விக்கிரமவர்மர் : இது தந்திவர்ம பல்லவனுக்கு

2. கடக் கொட்டத்துக் குடவூர் நாட்டுத் திருச்சொகினூர்த் திருவேங்கடத்து எம்பெருமா னடிகளுக் -

3. கு எழுந்தருளுவித்த திருவிளங் கோயிற் பெருமா னடிகளுக்குச் சொழநாட்டுச் சொழனர் -

4. உலக பெருமானர் வைத்த திருவிளக்கு முதல் முப்பதின் கழஞ்சு இம்முதலுக்காகக் கருக்கி -

---

வழங்கும் மற்றொரு பெயர். தென்னிந்திய சாசனத் தொகுதிகளில் பன்னிரண்டாவது தொகுதியில் இவனைப்பற்றி ஆறு சாசனங்கள் (39-44) காணப்படுகின்றன. அவைகளிலெல்லாம் இவன் பெயர் இவ்வாறே வழங்கப்பட்டுள்ளது. [இவனுடைய வரலாற்றை முந்திய சாசனக் குறிப்புரையில் காண்க]. யாண்டு அம்பத் தொன்றுவது—ஆட்சியின் 51ஆம் ஆண்டு.

**2. திருவெங்கடக் கொட்டத்துக் குடவூர்நாட்டுத் திருச்சொகினூர்:** பல்லவர் ஆண்ட தொண்டை நாட்டுப்பகுதி இருபத்துநான்கு கோட்டங்களாகவும், ஒவ்வொரு கோட்டமும் பல நாடுகளாகவும் ஊர்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தது. திருவேங்கடக் கோட்டம், தொண்டை நாட்டு இருபத்து நான்கு கோட்டங்களில் ஒன்று; குடவூர் அக்கோட்டத்தினுளடங்கிய ஒரு நாடு. அக்கால நாடுகளை இக்கால மாவட்டத்திற்கு ஒப்பிடலாம். திருச்சோகினூர் குடவூர் நாட்டிலுள்ளது. அஃது இப்பொழுது திருச்சானூர் என்று வழங்குகிறது. **திருவெங்கடத்து எம்பெருமானடிகள்:** இது திருச்சோகினூர் இறைவன் பெயர். எம்பெருமான் என்பது, திருமாலுக்கு வழங்கும் சிறப்புப் பெயர்.

**3. எழுந்தருளுவித்த** — அபிடேகம் செய்துவைத்த, **திருவிளங்கோயில் பெருமானடிகள்:** இளங்கோயில் என்பது, பழைய கோயிலைப் புதுப்பிக்குமிடத்து, அக்கோயில் மூர்த்தியைப் பக்கத்தில் எழுந்தருளச் செய்து வழிபடும் இடத்தைக் குறிக்கும். எனவே, இங்குக் குறிப்பிட்ட பெருமானடிகள், திருவேங்கடத்து எம்பெருமானடிகளின் திருமூர்த்தியையே குறிக்கும். மூர்த்தி இறைவன் திருவுருவம்.

**சொழநாட்டுச் சொழனர் உலக பெருமானர்:** இவர் தந்தி வர்மன் ஆட்சியின் கீழ் சோழநாட்டுப் பகுதியை ஆண்டுவந்த, அவன் அரசியல் தலைவர்களில் ஒருவராவர். இவர் சோழர் பரம்பரையைச் சேர்ந்தவராதலால், 'சோழநாட்டுச் சோழனர்' எனப்பட்டார். உலகப் பெருமானர் என்பது, இவரது இயற்பெயர். இதனால் சோழநாட்டின் ஒரு பகுதி தந்திவர்மன் ஆட்சியின்கீழ் இருந்ததென்பது போதரும்.

**4. வைத்த**—தானமாகக் கொடுத்த; **திருவிளக்கு முதல் முப்பதின் கழஞ்சு**—திருவிளக்குச் செலவுக்காக முதலாகக் கொடுத்த முப்பது கழஞ்சு எடையுள்ள முப்பது பொற்காசுகள். **திருவிளக்கு**—கோயில்

5. பட்டி இப்பொன்னுக்குக் கொண்டு குடுத்துத்
திருவிளக்கு வைப்பித்தோம்.

---

நந்தா விளக்கு; முதல்—செலவுக்காகச் சேமித்து வைக்கும் மூலநிதி; கழஞ்சு என்பது பொன் முதலியவற்றை நிறுக்கும் ஒரு நிறுத்தலளவையின் பெயர்; 20 மஞ்சாடி எடையுள்ளது. இதனால் பல்லவர் காலத்தில் கழஞ்சு எடையுள்ள பொற்காசுகள் இருந்ததென்று தெரிகிறது.

**கருக்கு பட்டி :** இது திருச்சோகினூர் கோயில்நிலங்களில் ஒன்றன் பெயர். ஊர்ச் சபையோர் மேல் பார்வையில் இருந்தது. உலகப் பெருமானார், அக்கோயிலில் திருவிளக்கு வைப்பதற்குத் தானமாகக்கொடுத்த முப்பது கழஞ்சு பொன்னுக்கும் ஈடாக, ஊர்ச் சபையோர், இந்த நிலத்தைக் காட்டி இதன் வருமானத்தைக்கொண்டு திருவிளக்கு வைக்க ஏற்பாடு செய்தனர்.

5. இப்பொன்னுக்கு—இந்தப் பொற்காசுக்கு; கொண்டு குடுத்து—ஈடாகக் காட்டி; வைப்பித்தோம்—வைக்க ஏற்பாடு செய்தோம்; இங்ஙனம் ஏற்பாடு செய்தவர், திருச்சோகினூர் ஊர்ச் சபையோர்.

## பயிற்சி வினாக்கள்

1. விஜய தந்தி விக்கிரம வர்மன் யார்? அவன் சாசனம் எங்குக் காணப்படுகிறது?

2. இச் சாசனத்தில் கூறப்படும் செய்திகள் யாவை?

3. திருச்சோகினூர் அக்காலத்தில் எங்கு இருந்தது? இக்காலத்தில் அஃது இருக்கும் இடம் யாது?

4. திருவேங்கடத்து எம்பெருமானடிகள், திருவிளங்கோயில் சோழ நாட்டுச் சோழனூர், கருக்குபட்டி—இவற்றை விளக்குக.

5. கோட்டம், திருவிளக்கு, எழுந்தருளுவித்தல்—பொருள் தருக.

6. பல்லவர் காலத்தில் அவர் நாடு எங்ஙனம் பிரிக்கப்பட்டிருந்தது? சான்று காட்டி விளக்குக.

# 3. முதலாம் பராந்தகன் சாசனம்*

## முன்னுரை

முதலாம் பராந்தகன் சாசனம் என்பது, முதலாம் பராந்தக சோழன் காலத்துச் சாசனம் என்று பொருள்படும். இச் சாசனம் சோழ மன்னனான முதலாம் பராந்தகன்[1] காலத்தில், அவன் ஆட்சியின் 33 ஆம் ஆண்டில் ஏற்பட்டது. இது மதுரையை யடுத்த ஆனைமலையிலுள்ள நரசிங்கப் பெருமாள் கோயில் நடுவிடத்துக் கருப்ப கிருகத்திற்குச் செல்லும் வழியில் ஒரு பாறையில் காணப்படுகிறது. தமிழ் மொழியில், வட்டெழுத்தில் எழுதப் பெற்றது. இருபத்திரண்டு வரிகளையுடையது. இதன் இறுதியிலுள்ள சில சொற்கள் விடப்பட்டுள்ளன.

இச் சாசனத்தின் தொடக்கத்தில் முதலாம் பராந்தக சோழன், 'மதுரை கொண்ட கோப்பர கேசரி பன்மர்' என்று குறிக்கப்பட்டுள்ளான். பின்னர், நரசிங்க மங்கலத்துச் சபையார், முதலாம் பராந்தக சோழனது அரசியலதிகாரியான மருதூருடையான் அருணிதி கலியனுக்குச் செய்து கொடுத்த சில உறுதிமொழிகள் காணப்படுகின்றன. அஃதாவது, திருவானைமலையிலுள்ள நரசிங்கப் பெருமாள் கோவிலிலிருந்து ஊர்ச்சபையாருக்கு இறைக் காசாகக் கொடுக்க வேண்டிய ஈழக்காசு பதினெட்டில், சபையாரிடம் கோவிலிலிருந்து வைக்கப்பட்ட 15 ஈழக்காசுக்கு வட்டியாக வந்த ஈழக்காசு ஆறு நீங்கலாக, மீதி 12 ஈழக்காசுகளைச் செலுத்துவதற்கு அருணிதி கலியன் என்பான், முதலாகக் கொடுத்த காசுக்கு அவன் பெற்றுக்கொண்ட ஊருடையான் குளமென்னும் கலியனேரியை, அவன் விரும்பிய படி ஆழமாகத் தோண்டவும், அதன் கரையை நீளமாகவும், உயரமாகவும் அமைக்கவும், அதில் அதிகமாகச் சேர்க்கப்படும் தண்ணீரை அவன் விரும்பிய வயல்களுக்கு நீர்ப்பாய்ச்சவும் ஊர்ச்சபையினர் அவனுக்கு உரிமை கொடுத்தனர்.

---

* S. I. I. Vol. III Part III No. 106, pp. 239—242.

1. இவன் ஆதித்த சோழன் மகன். கி. பி. 907 இல் பட்டமெய்தியவன். பரகேசரிப் பட்டம் பெற்றவன். இவன் நாடு வடக்கே திருக்காளத்திவரையும் பரவியிருந்தது. தொண்டை மண்டலமும், கொங்கு நாடும் இவன் ஆட்சிக்குட்பட்டிருந்தன. இவன் ஒரு சிறந்த வீரன். இவனுக்கும் இரண்டாம் இராசசிம்மனுக்கும் வெள்ளூர் என்ற இடத்தில் பெரும் போர் நடந்தது. அப் போரில் இவன் வெற்றி பெற்றான். பாண்டியநாடு இவன் வசமாயிற்று. பின்னர், இவன் இராசசிம்மனுக்கு உதவி

அன்றியும், அவன் அந்தக் குளத்துப் பாய்ச்சலில் இரண்டு வேலி நஞ்செய் நிலம் வாங்கி, அந்த நிலத்தினின்றும் விளைவித்த 300 கலம நெல்லையும் ஊர்ச் சபையோர் பெற்று, அவன் விரும்பியபடி அதில் 150 கலம் நெல்லால் நாள்தோறும் மூன்றுவேளையும் கோயில் இறைவனுக்குத் திருவமுது படைக்கவும் மீதி 150 கலம் நெல்லால் நாள்தோறும் ஐந்து வேதப் பிராமணர்களுக்கு உணவு கொடுக்கவும் அவர்கள் உறுதி கூறினர். எனவே இச் சாசனத்தை நரசிங்கமங்கலத்துச் சபையோர் சாசனம் என்றாயினும், மருதூருடையான் அருணிதி கலியன் சாசனம் என்றாயினும் நாம் கூறலாம.

இதில் வேதப்பிராமணர் ஐவருக்கும் உணவளிக்கும் நாளின் தொடக்கம், கர்க்கடக ஞாயிறாகிய ஆடி மாதம் வெள்ளிக்கிழமை சூரிய கிரகணமும் ஆயிலிய நாளும் கூடிய நேரம் என்று குறிக்கப்பட்டிருப்பதால், முதலாம் பராந்தக சோழன் காலத்தைக் குறித்தற்கு இச் சாசனம் பெரிதும் உதவுகின்றதென்று சோதிட வல்லார் கூறுவர்.

முதலாம் பராந்தகன் கி. பி. 907 முதல் 953 வரை சோழ நாட்டை ஆண்டான். இச் சாசனம் அவனது ஆட்சியின் 33 ஆம் ஆண்டில் ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 939-940 ஆம் ஆண்டு எனனலாம்.

---

புரிந்த இலங்கை மன்னனுன ஐந்தாம் காசிபனேடு போர்செய்து வெற்றியடைந்தான். அதனுல் இவன் 'மதிரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி' என்று அழைக்கப்பட்டான். சங்கிராமராகவன் என்ற இவனது சிறப்புப்பெயரும், இவனது இலங்கை வெற்றி பற்றி ஏற்பட்டதேயாகும். இவையன்றி, இவன் இரு வாணகுல மன்னரையும், வைதும்பராயனுன சயர்தன் என்னும் தெலுங்கர் மன்னனையும் வென்றதாகத் தெரிகிறது. ஆயினும் தக்கோலம் என்னுமிடத்தில், இவனுக்கும் இராஷ்டிரகூட மன்னனுன மூன்றும் கிருஷ்ண தேவனுக்கும் நடந்த போரில் இவன் தோல்வி அடைந்தான். இவன் முதல் மகனுன இராசாதித்தன் அப்போரில் இறந்தான். இவன் ஆட்சிக்கு உட்பட்டிருந்த தொண்டைநாடும், திருமுனைப்பாடி நாடும் மூன்றும் கிருஷ்ண தேவன் வசமாயின.

முதலாம் பராந்தகன் சிறந்த கடவுள் பத்தி யுள்ளவன். தில்லைச் சிற்றம்பலத்தைப் பொன்னுல் வேய்ந்தான். இவன் காலத்தில் பல கற்கோயில்கள் கட்டப்பட்டன. ஏரிகள் தோண்டப் பட்டன. எமகர்ப்பம், துலாபார தானம் முதலியவைகளை இவன் செய்தான். நாட்டில் கிராம ஆட்சி சிறப்பாக நடந்தது. வீரசோழன், பண்டித வற்சலன், குஞ்சர மல்லன் முதலிய இவனுடைய சிறப்புப் பெயர்கள் இவன் பெருமையைப் புலப்படுத்தும்.

சாசனம்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மதிரை கொண்ட கொப்பரகெசரிபன்
மற்கு யாண்டு முப்பத்து மூன்றாவது இவ்வாண்டு
தெவ தானங் கிழிரணிய முட்டத்துப்படும் பி -

இவனுக்குப் பல மனைவியர் இருந்தனர். சேரகுலப் பெண்மணியான கோக்கிழானடி என்பவளே இவன் பட்டத் தரசியாவாள். இராசாதித்தன் அவள் மகன். இவனுக்கு நான்கு புதல்வரும் இரு மகளிரும் இருந்தனர். இவன் கி. பி. 953இல் இறந்தான். இவனுக்குப் பின் சோழ நாட்டை ஆண்ட இவன் மகனான கண்டராதித்தன் கி.பி. 953இல் பட்டத்திற்கு வந்தான்.

குறிப்புரை

**1** ஸ்வஸ்தி ஸ்ரீ - மங்களம் உண்டாக; 'நலம் வளர்க' எனினுமாம். மதிரைகொண்ட கொப்பரகெசரி பன்மர்: இத்தொடர் முதலாம்பராந்தக சோழனைக் குறிக்கும். இவன் வெள்ளூர் என்ற இடத்தில் நடந்த போரில் இரண்டாம் இராச சிம்ம பாண்டியனை வென்று இத்தகைய சிறப்புப் பெயரைப் பெற்றான். பரகேசரி என்னும் சிறப்புப் பெயர் பெற்றவன். இவன் வரலாற்றை இச்சாசனத்தின் முன்னுரைப் பகுதியில் காண்க.

பிற்காலச் சோழ அரசர்கள் தங்கள் இயற்பெயர்களுக்கு முன் இராசகேசரி, பரகேசரி என்னும் யெயர்களைத் தமக்குள் மாறி மாறிப் புனைந்து வந்தனர். உதாரணமாக, முதலாம் பராந்தகன் தந்தையான ஆதித்தசோழன் இராசகேசரி பட்ட மெய்தியவன். பராந்தகன் பரகேசரி பட்டம் பெற்றவன். இவன் மகன் கண்டராதித்தன் இராசகேசரி பட்டம் பெற்றுள்ளான். இதனால் இன்ன அரசருக்குப் பின் இன்ன அரசர் பட்ட மெய்தினர் என்பதை நாம் எளிதில் அறிந்துகொள்ள முடிகிறது. இவ்வாறே, பிற்காலத்துப் பாண்டிய மன்னர்களும் மாறவர்மன், சடைய வர்மன் என்னும் பட்டப் பெயர்களை அவர்களுக்குள் மாறி மாறிப் புனைந்து வந்துள்ளனர். இராசகேசரி என்பது, அரசர்களுக்குள் சிங்கம் போன்றவன் என்றும், பரகேசரி என்பது, பகைவர்களுக்குச் சிங்கம் போன்றவன் என்றும் பொருள்படும்.

**யாண்டு முப்பத்து மூன்றாவது** - ஆட்சியின் 33ஆவது ஆண்டு; சோழ நாட்டை முதலாம் பராந்தகன் கி. பி. 907 முதல் 953 வரை ஆண்டான். எனவே இவன் ஆட்சியின் 33ஆவது ஆண்டு, கி. பி. 910 ஆகும். இவ்வாண்டு முதற் பராந்தகன் ஆட்சியின் 33ஆவது ஆண்டாகிய கி. பி. 940 ஆம் ஆண்டு. தெவதானம் - கோவிலுக்கு விடப்பட்ட இறையிலி நிலம். கிழிரணிய முட்டத்துப் படும் - கிழக்கு இரணிய முட்டத்திற்கு உட்பட்ட; இரணிய முட்டமென்பது; மதுரையை யடுத்த ஆனைமலைப் பகுதியைச் சேர்ந்த ஒரு சிறு நாடு என்று தெரிகிறது.

2. ரம்மதெயம் நரசிங்கமங்கலத்துச் சவையொஞ் சொழப் பொருமானடிக ளதிகாரிகள் சொழநாட்டுப் புறங்கரம் பைனாட் -

3. டு மருதூர் மருதூருடையா னருணிதி கலியனுக்கு ஒட்டிக்குடுத்த பரிசாவது எங்களூர்த் திருவானை மலை நரசிங்கப் பெருமானடிகள் த -

4. முடைய நிலத்தால்ச் சவையொமுக்கு ஆண்டெடுத்து இடக் கடவ ஈழக்காசு பதினெட்டு இக்காசு பதி னெட்டிலும் முன்றத்தொன்று ஈ -

---

படும் - உள்ளடங்கும். பிரம்ம தெயம் - பிரமதேயம், பிராமணருக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட ஊர்.

2. நரசிங்க மங்கலம்: இஃது ஆனைமலை நரசிங்கப் பெருமாள் கோயிலுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட இறையிலி நிலமாகிய இரணிய முட்டத்தைச் சேர்ந்தது; பிரமதேயமா யமைந்தது. எனவே, இவ்வூர் அந்தணர் வாழும் இடமென்பது போதரும். சொழப் பெருமா னடிகள் அதிகாரிகள் : சோழப் பெருமான் அடிகள் என்றது, முதலாம் பராந்தக சோழனைக் குறிக்கும். அவனுடைய அரசியல் அதிகாரி, 'சோழப் பெருமா னடிகள் அதிகாரிகள்' எனப்பட்டான்.

3. மருதூருடையான் அருணிதி கலியன் : இவன் முதலாம் பராந் தகன் அரசியல் அதிகாரிகளில் ஒருவன். மருதூரைச் சொந்தமாக வுடையவன். அது சோழ நாட்டின் ஒரு பகுதியான புறங்கரம்பை நாட் டைச் சேர்ந்தது. அருணிதி கலியன் என்பது இவனது இயற்பெயர். ஒட்டிக் குடுத்த - உறுதி செய்து கொடுத்த; பரிசு - சாசனம்; எங்கள் ஊர் : இவ்வாறு நரசிங்கமங்கலத்து ஊர்ச் சபையினர் கூறினர்.

திருவானைமலை நரசிங்கப் பெருமானடிகள்: இதில் 'நரசிங்கப் பெருமான் அடிகள்' என்றது, நரசிங்க மங்கலத்துக் கோயில் இறைவன் பெயர். அக்கோவில் ஆனைமலையில் உள்ளது.

4. தமுடைய நிலத்தால் - நரசிங்கப் பெருமாள் கோவில் நிலத் திற்கு வரியாக ; சபையொமுக்கு-நரசிங்க மங்கலத்துச் சபையோராகிய எமக்கு ; ஆண்டெடுத்து இடக் கடவ-ஆண்டுதோறும் இறைக் காசாகக் கொடுக்க வேண்டுவது. ஆண்டெடுத்து - ஆண்டுதோறும். ஈழக்காசு: இது சோழர் காலத்து நாணய வகைகளில் ஒன்று; இதில் 'ஈழம்' என்ப தற்குப், 'பொன்'எனப்பொருள் கொண்டு, இதனைப் 'பொற்காசு' என்று கூறலாம். இக்காசு பதினெட்டிலும் - இப்பதினெட்டுப் பொற்காசு களில். முன்றத்தொன்று-மூன்றில் ஒரு பகுதி; அஃதாவது, ஆறு ஈழக் காசு என்பது.

5. முக்காசு ஆறு இவ்வாறு ஈழக்காசுக்கும் பலிசையாகச் சவையார் கைய்வழி குடுத்த ஈழக்காசு பதினொன்து பதினைஞ்சினுலும் வந்த பலி -

6. சையாவது ஈழக்காசின் வாய்த் திங்கள் காற் புத்தக்க மாக ஒரோ திங்களால் வந்த புத்தக்க முன்றெ முக்கால் முன்றெ முக்காலு ஓராண்டு பங்திரண்டு தி -

7. ங்களால்வந்த புத்தக்கம் நாற்பத்தைஞ்சு நாற்பத்தைஞ் சினுலொரு ஈழக்காசுக்குப் புத்தக்கம் எழரை ஆக ஈழக் காசு ஆறு இவ்வாறு ஈழ -

8. க் காசும் இறை நீக்கித் தெவர் சவையார்க்கு இடக் கடவ காசு ௰௨ பன்னிரண்டும்நீக்கி அதிகாரிகள் மரு தூருடையான் அருணிதி கலியன் இறை காவலாக காத்த

---

5 பலிசை - பொலிசை, வட்டி: சவையார் கைய்வழி குடுத்த - ஊர்ச் சபையார் கையிடத்து முதற்பொருளாகக் கொடுத்த; பதினொன்து- பதினைந்து.

நரசிங்கப்பெருமாள் கோயில் நிலத்திற்கு வரியாக ஊர்ச் சபையாருக்குக் கொடுக்க வேண்டிய 18 ஈழக்காசில், 6 ஈழக் காசு கோயிலிலிருந்து சபையாரிடம் கொடுக்கப்பட்ட 15 ஈழக்காசுக் குரிய வட்டியிலிருந்து பெறுவதற்குக் கோயில் அதிகாரிகள் ஏற்பாடு செய்தனர்.

6. ஈழக்காசின்வாய் - ஈழக்காசு ஒன்றுக்கு; புத்தக்கம்: இஃது ஒரு பொன் நாணயம் போலும்; அக்கம் - பொன்; புத்தக்கம் - புதிய பொற்காசு. $7\frac{1}{2}$ புத்தக்கம்=1 ஈழக்காசு. ஒரோ திங்களால் - ஒரு திங்களுக்கு; திங்கள் - மாதம். ஓராண்டு பந்நிரண்டு திங்களால் வந்த புத்தக்கம் நாற்பத்தைந்து - [ஓர் ஈழக்காசுக்கு ஒரு மாதத்திற்கு வட்டி கால் புத்தக்கமாக 15 ஈழக்காசுக்கு ஒரு மாதத்திற்கு $3\frac{3}{4}$ புத்தக்கமாய்] 12மாதங்களுக்கு வட்டி 45 புத்தக்கம்.

7. நாற்பத்தைஞ்சினுல் - புத்தக்கம் 45க்கு; ஒரு ஈழக் காசுக்குப் புத்தக்கம் ஏழரை வீதமாக- ஓர் ஈழக்காசுக்கு $7\frac{1}{2}$ புத்தக்கமாக; எனவே, 15 ஈழக்காசுக்கு ஆண்டு வட்டியாக வந்த 45 புத்தக்கம், 6 ஈழக்காசு ஆகும்.

8. இறை நீக்கி - வரி தள்ளி: இறை - அரசிறை; தெவர் - நரசிங்கப் பெருமாள் கோயில் இறைவன்; இடக் கடவ - கொடுக்க வேண்டிய; பன்னிரண்டும் நீக்கி - 12 ஈழக்காசையும் தள்ளி: அதிகாரிகள் மருதூருடையான் அருணிதி கலியன் - முதலாம் பராந்தகன் அர

9. காசினல் வந்த நிலன் ஊருடையான் குளமான கலிய னெரியும் இக்குளந் தான் வேண்டுமாறு கல்லிக் கரை நீளம் அட்டப் பெறுவதாகவும் இ-

10. க்குளங்கரை உசர அட்டப்பெறுவதாகவும் இக்குளத் தினீர் தான் வெண்டு அளவுங் கொக்கப் பெறுவ தாகவு மிக்குளம் இதின் கீழ் நீர் நில ருனிவே-

---

சியல் அதிகாரிகளில் ஒருவனும் மருதூருக்குத் தலைவனுமாகிய அருணிதி கலியன் என்பது. இவன் நரசிங்கப் பெருமாள் கோயிலிலிருந்து சபை யாருக்குச் செலுத்தவேண்டிய பதினெட்டு ஈழக்காசில் 12க்கு, ஒரு தொகையை மூலப் பொருளாக வைத்து அதன் வருவாயாக வந்த வட்டியின் மூலம் அதனைச் செலுத்திக் கோயில் நிலத்தை இறையிலி நிலமாக்கினன் என்பது. இறைகாவலாக வைத்த காசு - இறைப்பொரு ளுக்கு மூலப் பொருளாக வைத்த தொகை.

அக்காலத்தில், ஒரு நிலத்தை வாங்கி அதன் வட்டியாகவோ, விளைச்சலாகவோ வரும் வருவாயைக் கொண்டு மற்றொரு நிலத்திற்கு வரி செலுத்துவது வழக்கம் என்பது இதனால் தெரிகிறது - எனவே, வரி செலுத்துவதற்கு ஏற்படுத்திய மூலப்பொருளை 'இறைகாவல்' என்பர் போலும்.

9. நிலன் - கோயில் நிலம்: அஃது ஊருடையான் குளமான கலியன் ஏரியாகும். ஊருடையான் குளமான கலியனேரி: ஊருடை யான் குளமென்பது, இயற்பெயர்; கோயிலுக்குரிய குளம் என்பது இதன் பொருள். நரசிங்கப்பெருமாள் கோயிலிலிருந்து ஊர்ச்சபையார்க் குச் செலுத்தவேண்டிய 12 ஈழக்காசுக்கும் அருணிதி கலியன் இறை காவலாக வைத்திருந்த காசைக்கொண்டு இந்தக் குளத்தை வாங்கிக், கோயிலுக்குரிய இறையிலி நிலமாக்கினன். அதனால் இஃது அவன் பெய ரால், 'கலியனேரி' என்று பின்னர் அழைக்கப்பட்டதுபோலும். இக் குளம் - இந்தக் குளத்தை; தான் வேண்டுமாறு - தான் விரும்பியபடி, கல்லி - ஆழமாகத் தோண்டி; கரை நீளம் அட்டப் பெறுவதாகவும் - குளத்தின் கரையை நீளமாக்கிக் கொள்ளக்கடவர்.

10. கரை உசர அட்டப்பெறுவதாகவும் - குளத்தின் கரையை உயரமாகச் செய்துகொள்ளவும்; உசர - உயரமாக. கொக்கப் பெறுவ தாகவும் - கொள்ளப் பெறுவதாகவும்; அஃதாவது, நீரை வேண்டிய அளவு எடுத்துக்கொள்ளவும் என்பது. இக்குளம் இதன் கீழ் - இக்குளத் தின் கீழ், இந்தக் குளத்து நீர்ப்பாய்ச்சலில்; 'இந்தக் குளத்திற்குக் கீழ்ப் பக்கம்' என்பாருமுளர். நீர் நிலம் - வயல் நிலம்; இருவேலியும்-இரண்டு வேலி நிலமும்; வேலி என்பது ஒரு நில அளவு: 6·74 ஏக்கர் அல்லது 2000 குழி அளவினை புடையது.

11. லியு மருதூருடையா னருணிதி கலியன் விலைக்குக் கொண்டு இக்குளத்தின்கிழ் நீர்நிலனிரு வேலியி னால் வந்த பொகம் அஞ்ஞாழிக்காலால் நூா கலம்

12. இவையிற்றின் பாதிமாநுய நெல்லுங்கொண்டு இவர்க்கு மூன்று சந்தியு திருவமிர்து செவதாகவும் நின்ற ாநுய நெல்லுங் கொண்டு திருவமிர்து உ-

13. த்தம அக்கிரமாகத் தெவர் அமிர்து செய்யும்பொழுது வெதப் பிராமணர் நிசதம் அய்வர் அமிது செய்வதாக வும் வச்சபடி பத்தெட்டுக் குத்தல் ஒருவனு -

14. க்கு அரிசி இரு நாழியுங் கறி மூன்றும் தயிர் நாழியும் நெயிரு செவிடும் காய்யிலை இரண்டும் தாலமஞ்சும் வட்டி லெஞ்சும் ஒட்டுட்டி ஒன்று -

---

**11. விலைக்குக்கொண்டு** - விலைக்கு வாங்கி; நீர் நிலன் இரு வேலி யினால் வந்த பொகம் - இரண்டு வேலி வயலிடத்தும் வந்த வருவாய் ; போகம் - நிலவருமானம். அஞ்ஞாழிக்காலால் - அந்நாள் வழங்கிய மரக்காலால் ; கால்-மரக்கால். இதற்கு, 'ஐந்து நாழிகொண்ட மரக்கா லால்' என்று பொருள் கொள்வாருமுளர். நெல்லு நூா கலம் - 300 கலம் நெல்; கலமென்பது ஒரு முகத்தலளவை; 12 குறுணி=1 கலம்.

**12. இவையிற்றின் பாதி ாநுய நெல்லும் கொண்டு** - இந்த 300 கலத்தில், 150 கலம் நெல்லையும் வைத்துக்கொண்டு, இவர்க்கு-நரசிங்கப் பெருமாள் கோயில் இறைவற்கு ; மூன்று சந்தியும் - காலை, நண்பகல், மாலை ஆகிய மூன்று பொழுதும்; சந்தி-பொழுது, வேளை; திருவமிர்து - இறைவனுக்குக் கொடுக்கும் நிவேதன உணவு. செவதாவும் - செய்வ தாகவும், செய்து கொள்ளவும். நின்ற ாநுய நெல்லும் கொண்டு-மீதியா யுள்ள 150 கலம் நெல்லையும் கொண்டு; திருவமிர்து உத்தம அக்கிரமாக அந்தணர்க்குக் கொடுக்கப்படும் நான்கு கவளபிச்சை உணவுத் தானம், உணவுத் தானம் பிச்சை, அக்கிரம், அந்தகாரம் என்று மூன்று வகைப் படும். ஒருகவளம் கொடுப்பது பிச்சை ; நான்கு கவளம் கொடுப்பது அக்கிரம் ; எட்டுக் கவளம் கொடுப்பது அந்தகாரம்.

**13. தெவர்** - நரசிங்கப் பெருமாள் கோயில் இறைவர் ; வெதப் பிராமணர்-வேதமோதும் அந்தணர் ; நிசதம்-நாள்தோறும் ; ஐய்வர் - ஐந்துபேர் ; அமிது செய்வதாகவும் - உணவு கொள்ளவும்; வச்சபடி-ஏற் பாடு செய்தபடி ; பத்தெட்டுக் குத்தல்—எட்டு அல்லது பத்துத் தடவை குத்தியது ; அஃதாவது, பல தடவை குத்திய அரிசி என்பது.

**14. அரிசி இரு நாழி**—இரண்டு நாழி (குத்தல்) அரிசி ; நாழி - ஒரு படி ; கறி மூன்று-மூன்று வகைக் காய்கறி ; தயிர் நாழி-ஒருபடி தயிர்; நெயிரு செவிடு - இரண்டு செவிடு நெய் ; செவிடு $\frac{1}{5}$ ஆழக்கு அல்லது

15. ம் சட்டுவம் ஒன்று அடுவான் ஒருவனுக்கு நிசதி நெல்லு அஞ்ஞாழி அறுதிங்க ளொரு புடவை வைச்சு இப்பரிசு இக்கல முட்டுவதாக இவ்—

16. வாட்டை கற்கடக நாயிற்று வெள்ளிக்கிழமை பெற்ற ஆயிலெ யத்தினன்று சூற்றியக் கிரண வெலைக் குரை கிராணம் பற்றின அன்று முதலாக இக்கலம்

17. இப் பரிசெய் ஊட்டுவதாக நின்று சிறிகாறியமா ராய்கின்ற திருவாய்ப்பாடி நாராயணனும் இவ்வூர்ச் சவையாரும் இப்பரிசெய் அக்கிரமுட்டாமெய் சந்திரா-

---

360 தானியம். காய் இலை இரண்டும் - காய் இரண்டும் இலை இரண்டும்; காய்-அடைக் காய், பாக்கு; இலை-வெற்றிலை; தாலம் அஞ்சு-5 உண்கலம்; வட்டில் அஞ்சு - 5 கிண்ணம்; வட்டில் - கிண்ணம்; தட்டு எனினுமாம்; ஒட்டுட்டி ஒன்றும் - ஓர் ஒட்டுட்டியும்; ஒட்டுட்டி - ஒட்டு வட்டில்; தண்ணீர் வைத்தற்குரிய சிறு பாத்திரம் எனினுமாம்.

15. சட்டுவம்-அகப்பை; அடுவான்-சமைப்போன்; நிசதி நெல்லு அஞ்ஞாழி-நாளொன்றுக்கு ஐந்து நாழிநெல்; அறுதிங்க ளொருபுடவை ஆறு மாதத்திற்கு ஓர் ஆடை; திங்கள்-மாதம்; புடவை-ஆடை; வைச்சு கொடுத்து: இதனால் திருவமுது சமைப்பவனுக்கு நாளொன்றுக்கு 5நாழி நெல்லும் ஆறு மாதத்திற்கு ஒரு புடைவையும் கூலியாகக் கொடுக்கப்பட்டது என்பது தெரிகிறது. இப்பரிசு இக் கல முட்டுவதாக- இந்தப்படி இந்த 300 கலம் நெல்லால் நிறைவேற்றுவதாக; இவ்வாட்டை- இந்த ஆண்டு.

16. கற் கடக நாயிறு - கர்க்கடக மாதம்; அஃதாவது, ஆடிமாதம் இந்த மாதத்தில் ஞாயிறு கர்க்கடக ராசியில் நிற்கும்; வெள்ளிக்கிழமை பெற்ற ஆயிலெயத்தி னன்று - வெள்ளிக்கிழமையோடு கூடிய ஆயிலிய நட்சத்திரத் தன்று; ஆயிலியம் - ஆயிலிய நாள், 9வது நாள். சூற்றியக் கிரண வெலை - சூரியக் கிரகண நேரம்; வேலை - வேளை, நேரம்; குரை கிராணம் பற்றின அன்று முதலாக-பூரண கிரகணம் பொருந்திய அந்த நேரமுதல். 'குரை கிராணம்' என்பது, 'நிறை கிராணம்' என்றிருத்தல் வேண்டும். கிராணம் - கிரகணம். இக் கலம் - இந்த 300 கலம் நெல்லால்.

17. இப் பரிசெய் ஊட்டுவதாக நின்று - இந்த முறையே நடத்துவதாக ஏற்று நின்று; பரிசெய் - பரிசு, தன்மை: சிறி காறிய மாராய் கின்ற - கோவில் காரியங்களை மேல்பார்வை செய்கின்ற; சிறி காறியம் - ஸ்ரீ காரியம், கோயில் வைபவங்கள்; திருவாய்ப்பாடி நாராயணன்-திருவாய்ப்பாடி என்னும் ஊரினனாகிய நாராயணன். இவன் நரசிங்கப்

18. த்தவலும் ஊட்டுவிப்பொ மாரெனும் திருவானை மலை நரசிங்கப் பெருமானடிகளுக்கு சிரிகாரிய மாராய் வாரும் சவயொழும் இதிற் றிரம்பினேமைச் சவைய்-

19. யாரும் சிறிகாற்றிய மாராய்வானுந் திறமிளான் நிசதி இறுகாசு அன்ற்றுழ் கொவினுக்குத் தண்டம்பட்டு அக்காசு கொண்டு தெவர்க்குத் திருவிளக்கு எரிவதாக வும் சவையார்—

20 த்திரம்பில் ஆறு காசு தண்டப்படுவதாகவும் ஓட்டிக் குடுத்தொம் சவையொழும் சிறிக் காசிரிய மாராய் வானும் மருதூருடையா னருணிதி கலியனுக்கு இத் தண்டமிறு-

---

பெருமாள் கோயில் காரியங்களை மேற்பார்வை செய்வோன். இவ்வூர்ச் சவையார் - நரசிங்க மங்கலம் ஊர்ச் சபையினர். அக்கிர முட்டாமெய் - உணவுத் தானம் குறைவுபடாமல். அக்கிரம் - உணவுத் தானம்; முன் னரும் 'உத்தம அக்கிரமாக' என வந்திருத்தல் காண்க. சந்திராதித்த லலும் - சந்திராதித்த வரையும், சந்திர சூரியர் உள்ள அளவும்.

**18.** ஊட்டுவிப்பொமாரேனும் - நிறைவேற்றுவோம்; திருவானை மலை நரசிங்கப் பெருமானடிகள் - ஆனைமலை நரசிங்கப் பெருமாள் கோயில் இறைவன். சிரிகாரிய மாராய்வாரும் - ஸ்ரீ காரியம் ஆராய்வாரும், கோயில் காரியங்களை மேல் பார்வை செய்வோருள்ளும்; சவயொழும் - நரசிங்க மங்கலத்து ஊர்ச்சபையா ராகிய எமக்குள்ளும்; இதில் திரம்பி னேமை - இப்பணி செய்வதில் எம்மில் தவறியவர்களை; சவைய்யாரும் - சபையாரிலும்.

**19.** சிறிகாற்றிய மாராய் வானும் - கோயில் காரியத்தை மேற்பார்வை செய்வானிலும். திறமிளான் - செய்யத் தவறியவன்; நிசதி - நாள் தோறும்; இறுகாசு - இரண்டு காசு; காசு - பொற்காசு. அன்ற்றுழ் கொவினுக்கு - அப்பொழுது ஆட்சி புரிகின்ற அரசனுக்கு; தண்டம் பட்டு - அபராதம் கொடுத்து; தண்டம் - அபராதம்; தெவர்க்கு - நரசிங்கப் பெருமாள் கோயில் இறைவனுக்கு; திருவிளக்கு - நந்தா விளக்கு; எரிவதாகவும் - ஏற்றி வைப்போமாகவும்; அருணிதி கலியன் தந்த 300 கலம் நெல்லால் நரசிங்கப் பெருமாள் கோயில் இறைவனுக்கும் வேதப் பிராமணர் ஐவருக்கும் நாள்தோறும் மூன்று வேளை திருவமுது படைக்கத் தவறியவர்களில் ஸ்ரீகாரியம் ஆராய்பவராயினும், சபை உறுப் பினராயினும், அன்று ஆட்சி புரியும் அரசனுக்கு இரண்டு பொற்காசு அபராதம் கொடுக்க வேண்டுமென்பதும், அந்தக் காசைக்கொண்டு கோவிலுக்குத் திருவிளக்கு வைத்தல் வேண்டும் என்பதுமாம்.

**20.** சவையார் திரர்பில் - ஊர்ச் சபையார் செய்யத் தவறினால்; ஆறுகாசு தண்டப்படுவதாகவும் - சபையார் 6 பொற்காசு அபராத

21. த்து மித் தன்மம் முட்டாமெ அவ்வரையும் சந்தி
ராதிச்சர் உள்ளனவும் ஊட்டுவிப் பொமாஞெஞ் சவைய்
யும் சிறி காரியம் ஆராயும் வயிஷ்ணவரும் இதன் -
22 மம் ரக்ஷித்தான்...........*

---

மாகச் செலுத்தக் கடவர்; ஒட்டிக் குடுத்தொம் - உறுதி செய்து கொடுத்தோம். இத்தண்டம் இறுத்து - இந்த அபராதம் கொடுத்து;

**21.** இத்தன்மம் முட்டாமெ - இந்தத் தானம் தடைபடாமல்; தன்மம் - தருமம், தானம்; முட்டுதல் - தடைபடுதல். அவ்வரையும் - வேதப் பிராமணர் ஐந்து பேரையும்; சந்திராதிச்சர் உள்ளனவும்-சந்திர சூரியர் உள்ள காலம் அளவும்; சந்திரன் - திங்கள்; சூரியன் - ஞாயிறு; சந்திர + ஆதிச்சர் - சந்திராதிச்சர்; ஆதிச்சர் - ஆதித்தர், ஞாயிறு. ஊட்டுவிப்பொமாஞெம் - நிறைவேற்றுவோம்; சவைய்யும் - ஊர்ச் சபையினரும்; சிறிகாரியம் ஆராயும் வயிஷ்ணவரும் - கோயில் காரியங்களை மேற்பார்வை செய்யும் திருமால் அடியாரும்.

**22.** இ தன்மம் - இந்தத் தருமத்தை; ரக்ஷித்தான் - காத்தான்; இரட்சித்தல் - பாதுகாத்தல்.

* இதற்கு மேலுள்ள சில சொற்கள் இச் சாசனத்தில் விடப்பட்டுள்ளன.

## பயிற்சி வினாக்கள்

1. நரசிங்க மங்கலத்துச் சபையோர் சாசனம் எக்காலத்தது? அதற்குப் பாட நூலில் வழங்கும் பெயர் யாது?

2. தமிழ் மொழியில் வட்டெழுத்தில் அமைந்த சாசனம் எது? எவ்விடத்தில் காணப்படுகிறது? அதில் கூறப்படும் செய்திகள் யாவை?

3. முதலாம் பராந்தகனுக்குச் சாசனத்தில் வழங்கும் பெயர் யாது? அதன் வரலாறு தருக.

4. பரகேசரி, தேவதானம், பிரமதேயம், சிறிகாரியம், இறை காவல்; கலியனேரி, உத்தம அக்கிரம், வேதப் பிராமணர், பத்தெட்டுக் குத்தல், கற்கடக நாயிறு, அன்றுள்கோ, சந்திராதிச்சர் - இவற்றை விளக்குக.

5. பொருள் தருக:— ஒட்டிக் குடுத்தல், பரிசு, ஆண்டெடுத்து, ஈழக்காசு, பலிசை, புத்தக்கம், இறை, அட்டப்பெறுதல், நீர்நிலம், வேலி, போகம், கலம், சந்தி, நிசதம், கறி, செவிடு, தாலம், ஒட்டுட்டி, சட்டுவம், தண்டம், தன்மம்.

6. நரசிங்கமங்கலம் எங்குள்ளது? அல்லது கீழரணிய முட்டத்துப்படும் பிரமதேயம் என்ன பெயர் பெறும்? அங்கு எழுந்தருளிய இறைவன் பெயர் யாது?

7. மருதூருடையான் அருணிதி கலியன் யார்? அவனுடைய ஊர், நாடு முதலியன எவை?

8. முதலாம் பராந்தகன் சாசனத்தில் கூறப்படும் செய்திகள் யாவை? அல்லது நரசிங்கமங்கலம் சபையோர் அருணிதி கலியனுக்குக் கொடுத்த உறுதி மொழிகள் யாவை?

9. நரசிங்கப் பெருமாள் கோயில் தேவர், சபையாருக்குக் கொடுக்க வேண்டும் 18 ஈழக்காசும் எவ்வாறு கொடுக்கப்பட்டன?

10. அருணிதி கலியன் செய்த தானங்கள் எவை?

11. வேதப் பிராமணர் அமுது செய்வதற்கு ஒருவருக்கு ஒரு நாளைக்கு எது எது கொடுக்கப்பட்டன? அத்தானம் தொடங்கிய நாளும் நேரமும் எங்ஙனம் குறிக்கப்பட்டுள்ளன? திருவமுது சமைப்பவனுக்குக் கொடுக்கப்பட்ட சம்பளம் என்ன?

12. முதலாம் பராந்தகன் சாசனத்தில் குறித்த தானம் முட்டுப் படில் யார் யாருக்கு என்னென்ன தண்டங்கள் கூறப்பட்டுள்ளன? விளக்கி எழுதுக.

13. திருவாய்ப்பாடி நாராயணன் யார்? அல்லது சிரி காரியம் ஆராய்கின்ற வயிஷ்ணவன் பெயர் என்ன?

14. முதலாம் பராந்தகன் சாசனத்திலிருந்து அறியப்படும் அளவைப் பெயர், நாணயங்களின் பெயர், வட்டி வகை, தண்ட வகை முதலியவைகளைக் குறிப்பிடுக.

# 4. பார்த்திவேந்திராதி வர்மன் சாசனம்*

## முன்னுரை

பார்த்திவேந்திராதி வர்மன் சாசனம் என்பது, பார்த்தி வேந்திராதி வர்மன் காலத்துச் சாசனம் என்று பொருள்படும். இது, சுந்தர சோழன் என்னும் இரண்டாவது பராந்தகன் படைத் தலைவனும், அவன் ஆட்சிக்குட்பட்டுத் தொண்டை நாட்டை ஆண்டுவந்த சிற்றரசனுமான பார்த்திவேந்திரவர்மன் காலத்தில், அவன் ஆட்சியின் மூன்றாவது ஆண்டு முப்பத் தொன்பதாம் நாளில் ஏற்பட்டது. இது திருப்பாற்கடல் திருக் கரபுரத்தீசுவரன் கோயில் நடுவிடத்துக் கருப்பக் கிருகத்தின் வடக்குச் சுவரில் காணப்படுகிறது. தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப் பெற்றது. பதினேழு வரிகளை யுடையது. இறுதி மூன்று வரிகள் தெளிவாக வாசிக்கக் கூடாதபடி பெரிதும் சிதைந்து காணப்படுகின்றன.

இச்சாசனத்தில், காவேரிப்பாக்க மென்னும் அவனி நாராயண சதுர்வேதி மங்கலம் ஊர்ச்சபையோரிடத்து, அவ்வூர்க் கோயில் பாதுகாப்பாளரில் ஒருவரான சிவப் பிராமணனை மாகண்ட நன்பெருமாள் என்பார், திருக்கரபுரம் இறைவன் அர்ச்சனா போகத்திற்குரிய தோட்டமும் வயலும் ஆற்றுமணல் நிரம்பிப் பயனற்றுக்கிடக்கின்றன என்று விண்ணப்பஞ் செய்ய, சபையோர் அதனைக் கழனி வாரியத்தாருக்குத் தெரியப்படுத்தி

---

* S. I. I., Vol. III, Part III, No. 156, pp. 327—330.

இவன் அரிஞ்சய சோழன் மகன். முதலாம் பராந்தகன் இவன் பாட்டன். அவன் பெயரே இவனுக்கும் இடப்பட்டதால் இவன் இரண்டாம் பராந்தக சோழன் என்று அழைக்கப்பட்டான். சுந்தர சோழன் என்பது இவனுக்கு உண்டான சிறப்புப் பெயர். முதலாம் பராந்தக னுக்குப் பின், அவனது இரண்டாவது மகனான கண்டராதித்தனும் (கி. பி. 950—957), அவனுக்குப் பின் மூன்றாவது மகனான அரிஞ்சய னும் (கி. பி. 956 – 957) சோழநாட்டை ஆண்டனர். அரிஞ்சயனுக்குப் பின், சுந்தர சோழன் கி. பி. 957 முதல் 970 வரை ஆண்டான்.

இவன் தன் பாட்டன் இழந்த பாண்டி நாட்டை, மீண்டும் கைப் பற்ற எண்ணி இரண்டாம் இராசசிம்ம பாண்டியன் மகனான வீரபாண் டியனோடு போர்செய்து, அவனைச் சுரம் புகச் செய்தான், அதனால் இவன், 'மதுரைகொண்ட இராசகேசரி வர்மன்' என்றும், 'பாண்டியனைச் சுரம் இறக்கின பெருமான்' என்றும் அழைக்கப்பட்டான். ஆயினும் இவன் வீரபாண்டியனுக்கு உதவி புரிந்த இலங்கை வேந்தனாகிய நான்

அந்நிலத்தோடு ஒருவருக்கும் சொந்தமல்லாத புறம்போக்கு நிலம் சிலவற்றையும் சேர்த்து 1400 குழி நிலமாக்கி, கல்நட்டு, சிலாலேகை செய்துகொடுத்து, அந்நிலத்து வருவாயிலிருந்து திருக்கரபுரத்துப் பெருமானடிகளுக்கு நாள்தோறும் இருநாழி அரிசியால் ஒருவேளை திருவமுது படைத்தும், மூன்று வேளையும் ஒரு விளக்கு எடுத்தும் வழிபாடு செய்யுமாறு பணித்தனர் என்ற செய்தி கூறப்படுகிறது. எனவே, இச்சாசனத்தை அவனி நாராயண சதுர்வேதி மங்கலத்துச் சபையார் சாசனம் என்றும் நாம் கூறலாம்.

இச் சாசனத்தில், அக்காலத்தில் கிராம ஆட்சி எங்ஙனம் நடைபெற்ற தென்பதையும், நாட்டிலுள்ள புறம்போக்கு நிலங்களைக் கிராம அதிகாரிகள் எங்ஙனம் பயன்படச் செய்தனர் என்பதையும் அறிந்துகொள்கின்றோம்.

சுந்தர சோழன் சோழநாட்டை கி. பி. 957 முதல் 970 வரை ஆண்டான். அவன் ஆட்சியின் காலமே, அவன் ஆட்சிக் குட்பட்ட பார்த்திவேந்திராதி வர்மன் காலமுமாகும். இச் சாசனம் பார்த்திவேந்திராதி வர்மன் ஆட்சியின் மூன்றாவது ஆண்டில் ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 960ஆம் ஆண்டு என்னலாம்.

---

காம் மகிந்தனோடு போர்செய்து தோல்வியுற்றான். அது கேட்ட வீரபாண்டியன் மீண்டும் மதுரைக்கு வந்து முடி சூடிக்கொண்டான். அதனால் சுந்தரசோழன் தன் முதல் மகனை ஆதித்த கரிகாலனோடு கொடும்பாளூர் வேள் பூதி விக்கிரமகேசரியையும், தன் ஆட்சியின் கீழ்த் தொண்டை நாட்டை ஆண்ட பார்த்திவேந்திராதி வர்மனையும் அனுப்பி வீரபாண்டியனை எதிர்த்தான். அப்போரில் வீரபாண்டியன் தலை துணிக் கப்பட்டது. போருக்குச் சென்ற மூவரும், 'வீரபாண்டியனைத் தலை கொண்ட கோப்பரகேசரி வர்மர்' என்ற பட்டப்பெயரைச் சூடிக்கொண் டனர். ஆயினும் சுந்தர சோழன் காலத்தில், பாண்டிய நாடு இவன் ஆட்சியின் கீழ் வரவில்லை. பிற்காலத்தில் இவன் இராஷ்டிரகூடர் களுடன் போர்செய்து தொண்டை நாட்டையும் திருமுனைப்பாடி நாட் டையும் தன் ஆட்சிக்குட்படுத்தினான்.

சுந்தரசோழன் பழையாறை என்னும் நகரில் இருந்து ஆட்சி புரிந் தான். இவன் சிறந்த சிவபத்தி யுள்ளவன். தமிழ்ப் புலவர்களை ஆதரித் துள்ளமை இவனைப்பற்றிய இரு பாடல்கள் வீரசோழிய வுரையில் காணப்படுவதால் தெரிகிறது. இவனுக்கு இரு மனைவியரும், இரு புதல்வரும், ஒரு புதல்வியும் இருந்தனர். வீரபாண்டியன் தலையைக் கொண்ட ஆதித்த கரிகாலனே இவன் முதல் மகன். இரண்டாவது மகன் பெயர் அருண்மொழித்தேவன். அவனே பிற்காலத்தில் தமிழ்

சாசனம்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோ பார்த்தி வெந்திராதி பந்மர்க்கு யாண்டு மூன்றாவது நாள் முப்பத்தொன்பதாவது படுவூர் கொட்டத்து காவிரி பாக்கமாகிய அமநி காராயண சதுர்வேதி மங்கலத்துள் இவ்வாட்டை ஸம்வத்சர வாரிய -

நாட்டில் புகழ்பெற்ற முதலாம் இராசராசன். இவன் தன் ஒரே மகள் குந்தவையைக் கீழைச் சாளுக்கிய மன்னனான வல்லவரையன் வந்திய தேவனுக்கு மணஞ்செய்து கொடுத்தான்.

சுந்தர சோழன் முதல் மகனான ஆதித்த சோழனைச் சில அரசிய லதிகாரிகள் வஞ்சகமாகக் கொன்றுவிட்டனர். அதன் வருத்தத்தால், இவன் கி. பி. 969இல் காஞ்சிபுரத்திலுள்ள பொன் மாளிகையில் இறந் தான். இவனுடன் இவன் முதல் மனைவியான வானவன் மாதேவி உடன் கட்டை ஏறினாள். இவர்கள் இருவருக்கும் பிற்காலத்தில் குந்தவையார் தஞ்சையில் முதலாம் இராசராசன் கட்டிய இராசராசேச் வரம் என்னும் பெரிய கோயிலில் இரு பிரதிமங்களைச் செய்துவைத்து, அவற்றின் வழிபாட்டிற்கு நிறையச் செல்வமும் அளித்தாள். அன்றியும், சுந்தர சோழன் பெயரால் தஞ்சையில் ஒரு மருத்துவ நிலையத்தை ஏற்படுத்தி, அதற்குப் பல நிலங்களையும் தானம் செய்தாள். சுந்தர சோழனுக்குப் பின், கண்டராதித்தன் மகனான உத்தமசோழன் கி. பி. 970 முதல் 985 வரை சோழநாட்டை ஆண்டான்.

குறிப்புரை

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ** - மங்களம் உண்டாவதாக; 'நலம் வளர்க' எனினு மாம்.

**கோ பார்த்திவெந்திராதி பந்மர்:** பார்த்திவேந்திராதி பன்மர் என்னும் அரசன் என்பது. இவன் சுந்தர சோழன் என்னும் இரண் டாவது பராந்தக சோழன் படைத் தலைவர்களில் ஒருவன். அவன் ஆட்சியின் கீழ்த் தொண்டை நாட்டை ஆண்டுவந்தான். எனவே அவ னுடைய ஆட்சியின் காலமாகிய கி. பி. 957 முதல் 970 வரை, இவனும் ஆட்சி புரிந்தான் என்னலாம். இவனும், சுந்தரசோழன் முதற் புதல்வனான ஆதித்த கரிகாலனும், கொடும்பாளூர் வேள் பூதி விக்கிரம கேசரியும் ஆகிய மூவரும் கி.பி. 969இல், பாண்டிய நாட்டின்மீது படை எடுத்துச் சென்று, வீரபாண்டியனோடு போர் செய்தனர். அப்போரில், ஆதித்த கரிகாலன் வீரபாண்டியன் தலையைக் கொய்து; வீரபாண்டியனைத் தலைகொண்ட கோப்பர சேகரி என்னும் சிறப்பைப், பெற்றான். அவ்வீரச் செயலை அவனுடன் சென்ற பார்த்திவேந்திராதி பன்மனும், வேள் பூதி விக்கிரமகேசரியும் தாங்கள் செய்ததாகத் தங்கள்

2. பெருமக்களும் தொட்டவாரிய பெருமக்களும் எரிவாரிய பெருமக்களும் கழநி வாரிய பெருமக்களும் ஸ்ரீ வட விர நாரண பெருமக்களும் பஞ்சவார வாரிய பெருமக்களும் கணக்கு வாரிய பெருமக்களும் கலிங்கு வாரிய பெருமக் -

---

கல்வெட்டுக்களிலும் கூறிக்கொண்டனர். பார்த்திவேந்திராதி பன்மன் கல்வெட்டுக்கள் தென்னாற்காடு, வடஆற்காடு, செங்கல்பட்டு மாவட்டம் முதலிய இடங்களில் காணப்படுகின்றன.

**யாண்டு மூன்றுவது நாள் முப்பத்தொன்பதாவது :** ஆட்சி ஆண்டு மூன்றில் 39ஆவது நாளில் ; யாண்டு - ஆண்டு ; நாள்-தேதி. இதனால் அக்காலத்தில் நாள் குறித்தற்கு ஆண்டு ஒன்றையே கூறுவதும், ஆண்டும் நாளும் கூறுவதும் முறையே பல்லவர் சாசனங்களாலும், இச் சாசனத் தாலும் காண்கிறோம். திங்கள் முதலியவற்றைக் குறிப்பிடுவதும் சில சாசனங்களில் காணப்படுகிறது.

**படுவூர் கோட்டம் :** இஃது இப்பொழுது செங்கல்பட்டு மாவட்டம் என்று வழங்குகிறது. அக்காலத்தில் தொண்டை மண்டலம் 24 கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவைகளில் படுவூர் கோட்டம் ஒன்று. மீயாறு நாடு, காரை நாடு முதலியவை இக்கோட்டத்தைச் சேர்ந்தவை. படுவூர் கோட்டம், வடஆற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த தென்று கூறுவாருமுளர்.

**காவிரி பாக்கமாகிய அமநி நாராயண சதுர்வேதி மங்கலம் :** காவிரி பாக்கம் என்பது படுவூர் கோட்டத்திலுள்ளதோர் ஊர். இதன் மற்றொரு பெயர் 'அவனி நாராயண சதுர்வேதி மங்கலம்' என்பது. அவனி நாராயணன் என்பது விஜயநந்தி விக்கிரமவர்மனுக்குரிய சிறப்புப் பெயர்களில் ஒன்று. சதுர்வேதி மங்கலம் என்பதால், இஃது அந்தணர் வாழும் ஊர் என்பது வெளிப்படை. இவ்வாட்டை - இந்த ஆண்டிற் குரிய ; **சம் வத்சர வாரிய பெருமக்கள் :** ஆண்டுதோறும் தெரிந்தெடுக் கப்பட்ட கிராம நிர்வாக சபை ; நியாயம் விசாரித்துத் தீர்ப்புக் கூறுவது இச்சபையினர் வேலை. சம்வத்சரம் - ஆண்டு ; வாரிய பெரு மக்கள் - ஊராளும் சபையோர் ; இங்கு வாரியமென்பது ஊர் மகா சபைக்கு உட்பட்ட சிறுசபையைக் குறிக்கும்.

2. **தொட்ட வாரிய பெருமக்கள்** - தோட்டக்கால்களைக் கவனிக்கும் குழுவினர் ; தோட்டவாரி - நிலங்களைப் பற்றிய எல்லாவற்றையும் கண்காணிப்பது - **எரிவாரிய பெருமக்கள்** - ஏரி குளங்களை மேற் பார்வை செய்யும் குழுவினர். எரிவாரியம் - நீர் நிலைகளைப் பாது காத்துப் பயன்படச்செய்வது. **கழநி வாரிய பெருமக்கள்** - வயல் நிலங் களைக் கண்காணிக்கும் குழுவினர்; கழநி-வயல்; **ஸ்ரீவடவிர நாரண பெரு மக்கள்**— புறஞ்சேரியைக் கண்காணிப்போர் ; **பஞ்சவார வாரிய பெரு மக்கள்** - அரசனுக்குக் குடிமக்கள் செலுத்தவேண்டிய நிலவரியையும்

3. களும் தடிவழி வாரிய பெருமக்களும் பட்டர்களும் விஸிட்டர்களும் உள்ளிட்ட மஹாசபையும் ஊராள் கிந்ற பல்லவன் ப்ரஹமாதரயனும் கண்காணி அரும்பா கிழானும் இவூர் பெரிய தளி அபிஷேக மண்டபத்தெ

4. கூடி இருக்க இத் தானம் முடைய சிவப் பிராம்மணன் மாகண்ட நன்பெருமாள் திருக்கரபுரத்து பெருமான்

---

பிற வரிகளையும் வாங்கி அரசாங்கப் பொருளகத்திற்கு அனுப்புவோர். கணக்கு வாரிய பெருமக்கள் - வரவு செலவு கணக்குகளை மேற்பார்வை யிடும் குழுவினர்; கணக்கு - வரவு செலவு கணக்கு; கலிங்குவாரிய பெரு மக்கள் - ஏரியில் கட்டப்படும் மதகு, அணைகள் முதலியவற்றைக் கவனிக்கும் குழுவினர்; கலிங்கு - மதகு, அணை.

தடிவழிவாரிய பெருமக்கள் - வயல்களுக்கிடையே செல்லும் சிறு வழிகளை மேற்பார்வை செய்வோர்; தடிவழி - தடியளவாகவுள்ள வழி, வயல் வரம்பு. பட்டர்கள் - கோயில் பூசகர்; விசிட்டர்கள் - கல்வி முதலியவற்றால் சிறந்த பெரியோர்; உள்ளிட்ட-அடங்கிய; மஹா சபை- ஊர்ச் சபையோர்; ஊராள்கிந்ற பல்லவன் ப்ரஹமாதரயன் - ஊர் அதிகாரியான பல்லவன் பிரமாதரயன்; இவன் காவிரிப் பாக்கமாகிய அவனிநாராயண சதுர்வேதி மங்கலம் என்னும் ஊர் அதிகாரி. கண் காணி அரும்பா கிழான் - பயிர் வகைகளை மேற்பார்வை செய்வோனாகிய அரும்பா கிழான். இவன் காவேரிபாக்கம் கிராமத்தில் விளையும் தானி யங்களை அளந்து கணக்குப் பார்க்கும் ஒரு கிராம அதிகாரி; கண் காணி - மேற் பார்வையாளன்; இவனை இக்காலத்துக் கிராமக் கணக் கருக்கு ஒப்பிடலாம்.

இவூர் - காவிரிப்பாக்கம் என்னும் இந்த ஊரிலுள்ள; பெரிய தளி - பெரிய கோவில்; தளி - கோவில்; அபிஷேக மண்டபம் - விழாக் காலங்களில் கோவில் மூர்த்தியை வைத்துத் திருமஞ்சன மாட்டுதற்கு ஏற்பட்ட ஒரு கட்டடம்; அது கல்லால் கட்டப்பட்டிருக்கும். கூடி இருக்க - ஊர்ச்சபையோர் இதில் கூடியிருந்து பொதுவான காரியங் களைப் பேசி முடிவு செய்வர்.

4 இத்தானம் முடைய - இந்தக் கோவிலிலுள்ள; தானம்-ஸ்தானம், கோவில்; சிவப்பிராம்மணன் மாகண்ட நன் பெருமாள் - சைவ அந்தணனாகிய மாகண்ட நன்பெருமாள் என்போன். மாகண்ட நன் பெருமாள் என்பது, இயற்பெயர். திருக்கரபுரத்து பெருமான் அடிக்கு- திருக்கரபுரம் இறைவனுக்கு; பெருமான் அடிகள் - இறைவன், சுவாமி - அர்ச்சனா பொகம் - கோயில் அர்ச்சகர்களுக்கு விடப்பட்ட மானியம் தொட்டமும் புலமும் - தோட்டமும் வயலும்; புலம் - வயல் நிலம்.

அடிக்கு அர்ச்சனுபொகமான தொட்டமும் புலமும் ஆறு உடைத்து மணல் இட்டு கிடந்திதென்று விண்ணப்பம் செய.

5. ஸபெயாரும் இவ்வாட்டை கழநி வாரிய பெருமக்கள் ளெ இத் திருகாரபுரத்து பெருமானடிகள் அர்ச்சனு பொகம்மான பூமி மணல் இட்டு கெட்டு கிடந்த பூமி யொடு இந் நிலம் கழநி கொல்லால் ஆயிரத்து நாநூறு குழி

6. ஊர் மஞ்சிக்கமாக பூமி நொக்கி கல் நட்டு சிலாலெ கைய் செய்து கொள்க என்று சபெவெ திருமுகமருளி செய்த திருமுகத்தின்படி கழநி வாரிய பெருமக்களொம் திருகாரபுரத்து பெருமான் அடிகளுக்கு அர்ச்சனு-

---

மணல் இட்டு - மணல்மூடி; கிடந்திதென்று - கிடந்ததென்று; விண்ணப்பம் செய - சபையோர்க்குச் சொல்ல.

ஸபெயாரும் - ஊர்ச் சபையாரும்; இவ்வாட்டை - இந்த ஆண்டிற்குரிய; பூமி - நிலம்; மணல் இட்டு - மணல் நிரம்பி; இந்நிலம் - இப்பொழுது தரப்படும் நிலம்; அவை கீழே கூறப்படுகின்றன. கழநி கொல்லால் - கழனிக் கோல் அளவால்; கழனிக் கோல் - வயல் நிலத்தை அளக்கும் அளவுகோல்.

ஆயிரத்து நாநூறு குழி—1400 குழி நிலம்; இவை முன்னர் கோயில் அர்ச்சனு போகமாகக் கொடுக்கப்பட்டு ஆற்று மணலால் நிரம்பிப் பயனற்றுப் போன நிலத்தோடு புதிதாகக் கொடுக்கப்பட்ட நிலத்தையும் குறிக்கும். குழி என்பது, ஒரு நில அளவு; அதனை ஒரு சதுர அடி என்றும், பன்னிரடி சதுரக்குழி என்றும், 144 சதுர அடி முதல் 576 சதுர அடிவரையுமென்றும் வெவ்வேறு விதமாகக் கூறுவர். ஆனால் சாதாரணமாக ஒரு குழி என்பது, 33 அங்குல நீளமுள்ள தச்சுமுழக் கோலால் அளந்த சதுரமான நில அளவைக் குறிக்கும்.

6. ஊர்மஞ்சிக்கமாகபூமி நொக்கி - ஊருக்குப் புறம்போக்காகவுள்ள தரிசு நிலத்தை அளந்து; மஞ்சிக்கம் - ஊர்ப் புறத்தே வரியின்றிப் புறம்போக்காகக் கிடக்கும் தரிசு நிலம். பூமி - நிலம்; நோக்கி - அளந்து பார்த்து; கல் நட்டு - எல்லைக் கற்களை நட்டுவித்து; சிலாலெகைய் செய்து கொள்க - கல்லில் வெட்டிக் கொள்க; சிலா லேகை - கல்வெட்டு; திருமுகமருளி - கட்டளையிட்டு; திருமுகம் - கட்டளை; சாசனம் எனினுமாம்; அர்ச்சனு பொகம் செய்வதாந பூமி - அர்ச்சனு போகமாகச் செய்து கொடுத்த நிலமாவது.

7. பொகம் செய்வதாக பூமி இவ்வூர் பிடாகை ஒச்செரி வடகழனி மஹாத வாய்க்கால் தெற்கு ஊர் மஞ்சிக்கம் ஆய் வரிசிலத்து கிடந்த பூமிக்கு கீழ்பாற் கெல்லை மாங் காட்டுச் சொமாசி பூமிக்கு

8. மெர்கும் தென்பார்க் கெல்லை ஊர் மஞ்சிக்கமாய் கிடந்த மெட்டுக்கு வடக்கும் மென்பார்க் கெல்லை திருபன்றி ஸ்வரத்து திருமுலட்டானத்து பெருமான் னடிகள் உதமாதம்பட்டிக்கு கிழக்கும் வடபாற்கெல்லை மா -

---

7. **இவ்வூர் பிடாகை**-இந்த ஊரிலுள்ள சேரி; அஃது இங்கு ஒச்சேரி என்னும் சிற்றூராகும். பிடாகை - ஓர் ஊரைச் சேர்ந்த மற்றொரு சிற்றூர்; இதனை உட்கிடையூர் என்பர். 'ஒச்சேரி' என்பது, 'உவச்சர் சேரி' என்றிருத்தல் வேண்டும் போலும். **ஒச்சேரி வட கழனி மஹாத வாய்க்கால்** - ஒச்சேரி கிராமத்தைச் சேர்ந்த வடக்குப் புறத்து வயலுக் குரிய மஹாத வாய்க்கால்; **ஊர் மஞ்சிக்கம்ஆய்** - ஊருக்குப் புறத்தே தரிசாக.

**வரிசிலத்து கிடந்த பூமி** - வரியின்றிக் கிடந்த நிலம்; வரி சிலத்து என்பது, வரி செத்து என்று இருத்தல் வேண்டும் போலும்; வரி செத்து - வரியின்றி.

திருக்கரபுரத்துப் பெருமானடிகளுக்கு அர்ச்சனு போகமாகக் கொடுக்கப்பட்ட நிலங்களுள், காவிரிப் பாக்கமாகிய அவனி நாராயண சதுர்வேதிமங்கலத்துப் புறஞ்சேரியாய் இருந்த ஒச்சேரி என்னும் சிற்றூரை யடுத்த வடக்கு வயல்களுக்குரிய மாகத வாய்க்காலுக்குத் தெற்கே தரிசாக, வரியின்றிக் கிடந்த நிலம் ஒன்று. அது 400 குழி அளவுள்ளது. கிழக்கில் மாங்காட்டு சோமாசி நிலமும், தெற்கில் ஊர்ப் புறம்போக்காய்க் கிடந்த மேட்டு நிலமும், மேற்கில் திருப்பன்றீசுவரம் திருமூலட்டானம் இறைவனுக்குரிய உதமாடம் பட்டியும் அதற்கு எல்லைகளாக அமைந்திருந்தன.

**கீழ்பாற்கெல்லை** - கீழ்பால் எல்லை; கிழக்கு எல்லை. **மாங்காட்டு சோமாசி பூமி** - மாங்காடு என்னும் ஊர் சோமாசி என்பவன் நிலம்; **மெர்கும்** - மேற்கும்.

8. **தென்பார்க்கெல்லை** - தென்பால் எல்லை; **ஊர் மஞ்சிக்கமாய்** - ஊருக்குப் புறம்போக்காய்; **மெட்டுக்கு** - மேட்டு நிலத்திற்கு; **மென் பார்க்கெல்லை** - மேற்பால் எல்லை; **திரு பன்றி ஸ்வரத்து திரு முலட்டா னத்து பெருமான் அடிகள் உதமாதம் பட்டி** - திருப்பன்றீசுவரம் கோயில் திருமூலட்டானம் இறைவனுக்குரிய உதமாதம் பட்டி என்னும் நிலம் என்பது. இதனால் பன்றீசுவரம் கோயில் இறைவன் பெயர்,

9. த வாய்க்காலுக்கு தெற்கும் இக்கால்பால்கெல்லையும் உள்ளகப்பட்ட நிலம் கழனிகொலால் நானூறு குழியும் இதன் தெற்கில் ஊர்மஞ்சிகமான மெட்டு சிறு கருகெசுவ கழனி திருநாரண வாய்க்கால் வ -

10. டசிறகு ஊர் மஞ்சிகமாய் வரிசிலத்து கிடந்த பூமி கிழ்பாலற் கெல்லே அங்காரை மாதெவபட்டர் பூமி மெலருகெ பொன நடைகாலுக்கு மெற்கு தென்பால் கெல்லே திருநாரண வாய்க்காலின் வடக்கும் மெல்பால் கெல்லே ஐயன் பெருமாக் பூமிக்கு கிழக்கு வடபார் கெல்லே முடும்பைப் பொற் கூளி பூமிக்கு வடக்கும் தெற்கு. நாற்பாலெல்லே யுள்ளகப்பட்ட நிலம் க -

11. ழனிகொலால் நாநூறு குழியும் இக்கால் தென் சிறகு ஊர் மஞ்சிகமாய் வரிசிலத்து கிடந்த பூமிக்கு கிழ்பார்

---

திரு மூலட்டானத்துப் பெருமான் அடிகள் என்பது அறியப்படும். வடபாற்கெல்லே - வடபால் எல்லே.

**மாத வாய்க்கால்** - மஹாத வாய்க்கால்; இதன் தெற்கில் - அர்ச்சனு போகத்திற்கு விடப்பட்ட இந்த நிலத்திற்குத் தெற்கில்; சிறு கருகெசுவ கழனி திருநாரண வாய்க்கால் - சிறு கருகேசவன் வயலுக்குரிய திருநாரண வாய்க்கால்; வடசிறகு - வடக்குப் பக்கம்.

**10. கிழ் பாலற்கெல்லே** - கிழக்கு எல்லே; முடும்பை பொற் கூளி பூமிக்கு 'வடக்கில்' என்பது, 'தெற்கில்' என்றிருத்தல் வேண்டும். நடைகால் - நடுகால், நடுவிடத்து வாய்க்கால்.

திருக்கரபுரத்துப் பெருமானடிகளுக்கு அர்ச்சனு போகமாகக் கொடுக்கப்பட்ட இரண்டாவது நிலம், முந்திய நிலத்திற்குத் தெற்கில் ஊர் மஞ்சிக்கமாயுள்ள மேட்டு நிலத்தையடுத்த சிறு கருகேசுவ கழனிக்குரிய திருநாரண வாய்க்காலுக்கு வடக்குப் பக்கத்தில் உள்ளது. ஊர்ப் புறம்போக்கு நிலமாய் அமைந்தது; வரியின்றிக் கிடந்தது. 400 குழி அளவுடையது. கிழக்கில், அங்காரை மாதவப்பட்டர் நிலத்தின் மேல் பக்கமாய்ச் சென்ற நடைகாலும், தெற்கில் திருநாரண வாய்க்காலும், மேற்கில் ஐயன் பெருமாள் நிலமும், வடக்கில் முடும்பை பொறிகூளி நிலமும் இந்த நிலத்திற்கு எல்லேகளாகும்.

**11. இக்கால்** - இந்தத் திருநாரண வாய்க்கால்; வரிசிரையாய்கிடந்த பூமி - வரியின்றிக் கிடந்த நிலம்; மொர்கும் - மேற்கும்; காலுக்கு தெற்கும் - திருநாரண வாய்க்காலுக்குத் தெற்கும்.

திருக்கரபுரத்துப் பெருமானடிகளுக்கு அர்ச்சனு போகமாகக் கொடுக்கப்பட்ட மூன்றாவது நிலம், திருநாரண வாய்க்காலுக்குத் தென்

கெல்லை வரிசிரையாய் கிடக்த பூமிக்குமெர்கும் தெக்பார் கெல்லை அவட்டை கிழவங் நிலமாக சொமாசி பூமிக்கு இதன் கிழக்கில் குண்டிலுக்கும் வடக்கும் மெல்பார் கெல்லை எடுக்குப்பட்டிகளும் இகுடிகாளய சொமாசி பூமிக்கு கிழக்கும் காலுக்கு தெற்கும் நால்பால் எல்லை...

12. யும் ஆக மாநிலம் கழநிகொலால் அறுநாறு குழியும் ஆக ஆயிரத்து நாநூறு குழியும் இத் திருகரபுரத்து பெருமான் அடிகளுக்கு நிசதம் இருநாழி அரிசியால் ஒருபொழுது திரு அமுதுக்கும் மூக்று சந்தியும் ஒரு விளக்கு கொளித்திகொண்டு திரு ஆராதினை செய்வதர்குமாக சந்திராதித்த காலமும் இறைஇலி அர்ச்சநா போகமாக வைச்சு சிலாலெகை செய்து கல் நட்டு குடுத்தொம்சபெயார்...கு...

13 இவ்வாட்டெட கழநி வாரிய பெருமக்களோம் இது குறியுள்ளிருந்து பணிகெட்டு சிலாலெகை எழுதினென் இவ்

---

பக்கத்தில் உள்ளது. ஊர்ப் புறம்போக்கு நிலமாய் அமைந்தது. வரியின்றிக் கிடந்தது. 600 குழி அளவுடையது. கிழக்கில், வரியின்றிக் கிடந்த ஒரு நிலமும், தெற்கில் அவட்டைக் கிழவனுக்குச் சொந்தமான சோமாசி நிலமும், அதற்குக் கிழக்கிலுள்ள குண்டிலும், மேற்கில் சோமாசி நிலமும், வடக்கில் திருநாரண வாய்க்காலும் இந்த நிலத்திற்கு எல்லைகளாகும்.

**12.** **மாநிலம்** - பெரிய பூமி ; முன்னைய இரு நிலங்களுக்கும் இது அளவில் பெரியதாதலின் 'மாநிலம்' எனப்பட்டது; இனி, மா என்பதற்கு ஒருமா அளவுள்ள நிலமெனக் கொள்வாரு முளர். 100 குழி=1 மா. குறிக்கப்பட்ட நிலம் 600 குழி நிலமாகையால் அது பொருந்தாது.

**திருகரபுரத்து பெருமான் அடிகள்** - திருக்கரபுரம் கோயில் இறைவன் ; நிசதம் - நாள்தோறும் ; ஒரு பொழுது - ஒரு நேரம் ; முந்று சந்தி - மூன்று வேளை ; அவை காலை, நண்பகல், மாலை என்பன. ஒரு விளக்கு கொளித்தி - ஒரு விளக்கு எரித்து ; திரு ஆராதினை - வழியாடு ; சந்திராதித்த காலமும் - சந்திர சூரியர் உள்ள அளவும். இறைஇலி அர்ச்சநா போகமாக - அர்ச்சனு போகத்திற்குரிய வரியில்லாத நிலமாக; அர்ச்சனு போகம்-கோயில் பூசகர்களுக்கு விடப்படும் நிலம்; இறையிலி-வரியில்லாத நிலம் ; வைச்சு - கொடுத்து ; சிலா லெகை செய்து-கல்லில் வெட்டி ; சிலாலேகை - சாசனம், கல்வெட்டு ; கல்நட்டு - எல்லை குறித்து, எல்லைக் கற்களை நட்டு.

**13.** **ஆட்டை** - ஆண்டு, வருடம் : கழநி வாரிய பெருமக்களோம் - வயல் நிலங்களைக் கவனிக்கும் குழுவினராகிய யாம் ; இது குறியுள்

வாட்டை கழநி வாரிய கணக்கன் மணிமங்கல முடையான் கங்காதரமா -

14. யிலட்டியென் இவை என்னெழுத்து இது குறியுள்ளி ருந்து பணிகெட்டெழுதிநென்........கணக்கங் மத்தியஸ் தன் வாமன ஏழாயிரவன்னென் இது குறியிலிருந்து பணிக்க எழு.

15. ......ட்டி குறி ......கல்........ஆதித்த ஏழாயிரவன்னேன் இது குறியிலிருந்து பணி கெட்டு எழுதிநென்

16. கணவதியெங் இது குறியுள்ளிருந்திவ் வாரிகப் பெரு மக்கள் பணிப்ப எழுதினென் மத்தியஸ்தன் மங்கல ஸேனபதி ஸ்ரீ.......வன் ஏழாயிர நிலையலங்கன் கற்பகா தித்தனென் இது குறியுள்ளிருந்திவ் வாரிகப் பெரு மக்கள் பணிப்ப .......... மத்தியஸ்தங்.......குறியுள்ளிருந் தி வாரிகப் பெருமக்கள் பணிக்க எழுதிநென் மத்தியஸ்த னெட்டி.......

17. க்குறி ஸ்ரீ காவெரி மங்கல தெரனென்.

---

ளிருந்து - இந்த ஊர்ச் சபையிலிருந்து ; குறி - ஊர்ச்சபை. பணிகெட்டு- கட்டளையின்படி ; சிலாலெகை எழுதிநென் - சாசனம் எழுதினேன் ; மணிமங்கல முடையான் கங்காதர மாயிலட்டி : இவன் திருக்கரபுரத்துக் கோயில் இறைவனுக்கு அர்ச்சனை போகமாகக் கொடுக்கப்பட்ட 1400 குழி நிலத்தைப்பற்றிய சாசனத்தைக் கல்லில் எழுதியவன் ; அவ்வாண்டு கழனி வாரியத்தாருக்குரிய கணக்கன்.

**14**. கணக்கங் மத்தியஸ்தன் வாமன ஏழாயிரவன் : ஊர்க்கரணத் தானை வாமன ஏழாயிரவன் என்பது : இவன் திருக்கரபுரத்துச் சபை யார், அவ்வூர்க் கோயில் பெருமானுக்கு அர்ச்சனை போகமாகக்கொடுத்த 1400 குழி நிலம் பற்றிய சாசனத்தை, அவர்கள் கட்டளைப்படி ஓலையில் எழுதியவன். மத்தியஸ்தன் - ஊர்க்கரணத்தான். இவன் சபையார் கட்டளையை ஓலையில் எழுதுபவன். பிற கணக்கரினின்றும் வேறுபடுத் தற்கு, இவன் 'கணக்கன் மத்தியஸ்தன்' என்று அழைக்கப்பட்டான். இச்சாசனத்தைக் கல்லில் எழுதியவன் கழனிவாரிய கணக்கனை மணி மங்கலமுடையான் கங்காதர மாயிலட்டி என்போன். இவர்கள் இரு வரும் ஊர்ச்சபையின் அங்கத்தினரா யிருந்தனர் என்பது நோக்கத் தக்கது. பணிக்க - சபையார் கட்டளையிட.

**15 - 17**. இப்பகுதியில், பார்த்திவேந்திராதி வர்மன் சாசனத்தில் கையெழுத்திட்ட, மணிமங்கலமுடையான் கங்காதர மாயிலட்டி என்னும் கழனிவாரியக் கணக்கனோடு, ஆதித்த ஏழாயிரவன், கணவதி

மத்தியஸ்தன் மங்கல சேனபதி எழாயிர நிலயலங்கன் கற்பகா தித்தன், மத்தியஸ்தன் எட்டி ஸ்ரீகாவெரி மங்கல தொன் என்போர் பெயரும் வேறு இருவர் பெயர்களும் காணப்படுகின்றன. இம் மூன்று வரிகளும் வாசித்தறிய முடியாதபடி பெரிதும் சிதைந்துள்ளன.

## பயிற்சி வினாக்கள்

1. பார்த்திவேந்திராதிவர்மன் யார்? அவன் பெயரால் வந்துள்ள சாசனம் எங்குக் காணப்படுகிறது? அதன் காலம் எது?

2. பார்த்திவேந்திராதி வர்மன் சாசனத்தில் கூறப்படும் செய்திகள் யாவை?

3. பார்த்திவேந்திராதி வர்மன் சாசனத்திற்கு வேறு எப்பெயர் இடலாம்? அதிலிருந்து நாம் அறியக்கூடியன யாவை?

4. அவனி நாராயண சர்வேதிமங்கலம் எங்கு உள்ளது? அதற்குரிய மற்றொரு பெயர் யாது?

5. அவனி நாராயண சதுர்வேதிமங்கலத்துச் சபையோருக்குள் இருந்த குழுப் பெயர்களையும், அவர்கள் வேலைகளையும் குறிப்பிடுக.

6. பொருள் தருக :—வாரியம், கலிங்கு, தடிவழி, பட்டர், விசிட்டர், தளி, தானம், புலம், பூமி, கழனிக்கோல், சிலாலேகை, திருமுகம், பிடாகை, சந்தி, திருவாராதனை, இறையிலி, ஆட்டை, குறி, பணி, சேட்டல்.

7. விளக்குக :—சதுர்வேதிமங்கலம், ஸம்வத்சர வாரியம், அபிஷேக மண்டபம், அர்ச்சனா போகம், ஊர்மஞ்சிக்கம், மத்தியஸ்தன்.

8. அவனி நாராயண சதுர்வேதிமங்கலத்துச் சபையுள்ளிருந்த உறுப்பினருள் நால்வர் பெயர்களைக் குறிப்பிட்டு, அவருள் அரசியலதிகாரிகளா யிருந்தார் இன்னார் என்றும் எழுதுக.

9. திருக்கரபுரத்துக் கோயில் பெருமான் அடிகளுக்கு அர்ச்சனா போகமாகக் கொடுக்கப்பட்ட நிலங்கள் இருக்கும் இடம், எல்லை, அளவு இவற்றைக் குறிப்பிடுக.

10. அவனி நாராயண சதுர்வேதிமங்கலத்துச் சபையார் கழனி வாரியத்தாருக்கு இட்ட பணி யாது? அல்லது திருக்கரபுரத்துப் பெருமான் அடிகளுக்குக் கொடுக்கப்பட்ட நிலம் எவ்வளவு? அதன் வருவாய் எவைகளுக்குப் பயன்பட்டன?

11. திருக்கரபுரத்துக் கோயில் இறைவனுக்குக் கொடுக்கப்பட்ட நிலங்களுக்கு எல்லையாக அமைந்துள்ள நிலங்களில் நான்கன் பெயர்களையும், வாய்க்கால்களில் இரண்டன் பெயர்களையும் குறிப்பிடுக.

12. பார்த்திவேந்திராதி வர்மன் சாசனத்தை எழுதியவன், கல்லில் வெட்டியவன் இன்னார் என்று குறிப்பிடுக.

# முதலாம் இராசராசன் சாசனங்கள்

## 5. பொய்கைநாடு கிழவன் ஆதித்த சூரியன் சாசனம்

### முன்னுரை

முதலாம் இராசராசன் சாசனங்கள் என்பவை, முதலாம் இராசராசனல் ஏற்பட்ட சாசனங்களும், அவன் காலத்தில் பிறரால் ஏற்பட்ட சாசனங்களுமாகும். அவை பொய்கை நாடு கிழவன் ஆதித்த சூரியன் சாசனம், ஸ்ரீ ராஜராஜன் கிணறு, மேற்பாடி என்னும் இராச்ரயபுரத்து நகரத்தார் சாசனம், திருப் பதியம் என்பனவாகும். இவற்றுள் திருப்பதியம் ஒன்றும் முதலாம் இராசராசனல் ஏற்பட்டது. ஏனைய மூன்றும் அவன் காலத்தில் பிறரால் ஏற்பட்டவை.

பொய்கைநாடு கிழவன் ஆதித்த சூரியன் சாசனம், பொய்கை நாட்டுத் தலைவனும், தஞ்சாவூர் பெரிய கோயில் என்னும் இராச ராசேசுவரம்கோயில் மேற்பார்வையாளனுமான ஆதித்த சூரியன் என்னும் தென்னவன் மூவேந்த வேளானல் ஏற்பட்டதாகும். இச் சாசனம், அருண்மொழி தேவர் என்னும் இயற்பெயரை யுடைய 'முதலாம் இராசராசன்'[1] காலத்தில், அவன் ஆட்சியின் 29ஆம் ஆண்டிற்கு முன்னர் ஏற்பட்டது. தஞ்சை இராச ராசேசுவரமுடையார் கோயில் மேற்குப்புற வாயிலிலுள்ள ஒரு மாடத்தில் மூன்றுவது சாசனமாகக் காணப்படுகிறது. தமிழ் மொழியில் எழுதப்பெற்றது. நான்கு பகுதிகளா யமைந்தது. அறுபது வரிகளையுடையது.

---

1. இவன் சுந்தரசோழன் என்னும் இரண்டாம் பராந்தகனுக்கு வானவன் மாதேவியிடம் பிறந்த மகன். அருண்மொழி தேவன் என்பது இவனது இயற்பெயர். இளமையில் இவன் உத்தம சோழன் மனைவியாகிய செம்பியன் மாதேவியாலும், இவன் தமக்கை குந்தவை யாலும் வளர்க்கப்பட்டுச், சைவ சமயத்திலும், சிற்பஓவிய முதலிய கலை களிலும் சிறந்து விளங்கினன். இதனல் பிற்காலத்தில் இவன் ஆட்சித் திறத்திலும், சைவப் பற்றிலும், கோயில் கட்டுவதிலும் புகழ்பெற்ற மன்னனுனன்.

இவன் தன் சிறிய தாதையாகிய உத்தம சோழனுக்குப் பின் கி.பி. 985 முதல் 1014 வரை, 29 ஆண்டுகள் சோழநாட்டை ஆண்டான். தன் ஆட்சியின் மூன்றும் ஆண்டு சேர மன்னனுன பாற்கர ரவி வர்மனை யும் (கி. பி. 978 - 1036), அவனுக்கு உதவியாக வந்த அமரபுயங்கன்

இச் சாசனத்தில் ஆதித்த சூரியன் என்பான், தஞ்சை இராசராசேசுவரம் கோயிலில் சில பிரதிமங்களைச் செய்து வைத்ததும், அவைகளுக்கு அவனும், குருவாணியக் குடியாகிய பரகேசரிபுரத்து நகரத்தாரும், வெண்ணி நகரத்தாரும் பல அணிகலன்களைக் கொடுத்ததுமான செய்திகள் கூறப்படுகின்றன. நம்பியாரூரனார், நங்கைப் பரவையார், திருநாவுக்கரையர், திருஞானசம்பந்தஅடிகள், பெரியபெருமாள், உலோகமர் தேவியார், சந்திரசேகரதேவர் ஆகிய எழுவர் பிரதிமங்களைத் தஞ்சை இராசராசேசுவரர் கோயிலில் ஆதித்த சூரியன் செய்து வைத்தான் என்றும், அவைகளின் உயரம் கோயில் முழத்தாலும், அணிகலன்களிலுள்ள இரத்தினங்கள் தட்சணமேரு விடங்கன் என்னும் கோயில் நிறை கல்லாலும், பொன் ஆடவல்லான் என்னும் நிறை கல்லாலும் அளவிடப்பட்டு, கல்லில் வெட்டப்பட்டன என்றும் இச் சாசனம் கூறுகின்றது.

இப் பிரதிமங்களில், நம்பியாரூரனார், திருநாவுக்கரையர், திருஞானசம்பந்த அடிகள் பிரதிமங்கள் மூன்றும், தேவாரம் பாடிய மூவர்க்கும் உரியவை. நங்கை பரவையார், நம்பியாரூரர் இரு மனைவியருள் முதல் மனைவி. இதனால் தேவாரம் பாடிய மூவர் காலம் முதலாம் இராசராசன் ஆட்சியாண்டு இருபத்தொன்பதுக்கும் முற்பட்டது; அஃதாவது, பத்தாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதென்று நாம் அறிகின்றோம். இவர்கள் பிரதிமங்

---

என்னும் பாண்டியனையும் காந்தளூர்ச்சாலை, உதகை, விழிஞம் என்னும் இடங்களில் வென்று, இராசராசன் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றான். இதனால் சேரநாட்டின் ஒரு பகுதியான கொல்லமும், அதனைச் சேர்ந்த கொடுங்கோளூரும் இவன் வசமாயின. பின்னர்க் குடமலை நாடு, கங்கபாடி, தடிகைபாடி ஆகிய நாடுகளை இவன் வென்றான். சேர பாண்டியர்க்கு உதவியாக வந்த ஐந்தாம் மகிந்தனோடு போர் செய்து ஈழ நாட்டையும் கைப்பற்றினான்.

இதன் பின்னர், மேலைச் சாளுக்கிய மன்னரான சத்திய சிரயனோடும், அவன் மகன் இரண்டாம் தைலபனோடும் போர் செய்து இரட்டபாடி ஏழரை இலக்கத்தை வென்றான். தெலுங்க சோழரை வென்று, அவர்களது சீட்புலி நாட்டையும், பாகு நாட்டையும் கைப்பற்றினான். சக்தி வர்மன் என்னும் வேங்கை நாட்டு மன்னனுக்கு உதவியாகச் சென்று, அவன் பகைவர்களை வென்று, அந்நாட்டையும் தன் ஆட்சிக்குட்படுத்தினான். வேங்கை நாட்டு மன்னனான சக்திவர்மன் மகன் விமலாதித்தனுக்கே தன் ஒரே மகள் குந்தவையை மணஞ் செய்து கொடுத்தான். பின்னர், கலிங்க நாட்டையும், இறுதியாக முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரத்தையும் வென்றான். இப் போர்களிலெல்லாம், இவன் மகன் இராசேந்திரன் இவனுக்கு உதவியாக இருந்தான்.

களுக்கு ஆதித்த சூரியனும், பரகேசரிபுரத்து நகரத்தாரும், வெண்ணி நகரத்தாரும் அணிகலன்கள் கொடுத்துள்ளமை குறிப்பிடத்தக்கது. இனி, பெரிய பெருமாள் என்பது, முதலாம் இராசராசனையும், உலோகமா தேவியார் என்பது, அவன் பட்டத்தரசியையும், சந்திரசேகர தேவர் என்பது, அவர்கள் வழிபட்டு வந்த சிவபெருமானையும் குறிக்கும். இவர்கள் பிரதிமங்களுக்கு ஆதித்த சூரியன் அணிகலன்கள் கொடுத்திருப்பதால், அவன் தேவாரம் பாடிய மூவரிடத்தும், முதலாம் இராசராசனிடத்தும் அதிகப் பற்றுள்ளவன் என்பது தெரிகிறது.

முதலாம் இராசராசன் கி. பி. 985 முதல் 1014 வரை சோழநாட்டை ஆண்டான். இச் சாசனம் அவன் ஆட்சியின் 29 ஆம் ஆண்டிற்கு முற்பட்டதெனவே, இதன் காலம கி. பி. 1014 ஆம் ஆண்டிற்கு முற்பட்டதென்னலாம்.

---

இவன் தன் நாட்டைப் பல மண்டலங்களாகவும், வளநாடுகளாகவும் வகுத்தான். அவைகள் இவனுடைய சிறப்புப்பெயர்களால் அழைக்கப்பட்டன. தொண்டை மண்டலம் சயங்கொண்ட சோழமண்டலமென்றும், ஈழ மண்டலம் மும்முடிச் சோழமண்டலமென்றும், பாண்டி மண்டலம் இராசராச மண்டலம் என்றும், நுளம்பபாடி நிகரிலி சோழ மண்டலமென்றும் பெயர் வழங்கின. தன்னாட்சியின் 16 ஆம் ஆண்டு, நாட்டின் நிலங்களை அளந்து, விளைச்சல் நிலங்களுக்கு வரி விதித்தான். நாட்டில் கிராம ஆட்சி சிறப்பாக நடைபெற்றது. இவனுக்குப் பலம் பொருந்திய தரைப் படைகளும், கப்பல் படைகளும் இருந்தன. இவனாட்சியின் கீழ்ப் பல குறுநில மன்னர்கள் இருந்தனர். பொய்கை நாடு கிழவன் ஆதித்த சூரியனான தென்னவன் மூவேந்த வேளான் போன்ற சிறந்த அரசியல் தலைவர்களும் இருந்தனர். இவன் சைவ சமயப் பற்றுள்ளவன். ஆயினும் பிற சமயங்களை இவன் தன்னாட்டில் ஆதரித்து வந்தான்.

தஞ்சையில் இராசராசேசுவரம் என்னும் பெரிய கோயிலைக் கட்டி, அதன் வழிபாட்டிற்கும், திருவிழாக்களுக்கும் பல நிவந்தங்களைக் கொடுத்தான். இவனுடைய அரசியலதிகாரிகளும், அக் கோயிலுக்குப் பல தானங்கள் செய்தனர். இவன் காலத்தில் வாழ்ந்த கருவூர்த் தேவர் அக் கோயில் இறைவனைப் பாடியுள்ளார். அப் பாடல்கள் சைவத் திருமுறையில் இடம் பெற்றுள்ளன. தஞ்சையிலுள்ள தனிக்குளம் என்னும் பழைய கோயிலையும் இவன் கற்கோயிலாகக் கட்டி, நிவந்தங்கள் கொடுத்துள்ளான். நம்பியாண்டார் நம்பிகளைக் கொண்டு திருமுறை வகுத்தவனும் இவனே என்பர். இறுதிக் காலத்தில் இவன் துலாபார தானமும், இவன் மனைவி உலோகமாதேவி இரணிய கருப்ப தானமும் கொடுத்துள்ளனர்.

### சாசனம்

## முதற்பகுதி

1. ஸ்வஸ்தி ஸ்ரீ உடையார் ஸ்ரீ ராஜ ராஜீஸ்வரம் உ
2. டையார்க்கு ஸ்ரீ கார்யஞ் செய்கின்ற பொய்கை—

---

இவனுக்குப் பல மனைவியர் இருந்தனர். அவர்களில் உலோகமா தேவியே இவன் பட்டத்தரசியாவாள். இவனுக்கு இராசேந்திரன் என்னும் ஒரே புதல்வனும், மாதேவடிகள், குந்தவை என்னும் இரு புதல்வியரும் இருந்தனர். இராசேந்திரன் தாயின் பெயர் வானவன் மாதேவி. அவனே பின்னர், முதலாம் இராசேந்திர சோழன் என்னும் பெயர் பெற்று, வடக்கே கங்கை வரை தன் புகழை நிலைநாட்டியவன். இராசராசன் மகள் குந்தவைக்கும் கீழைச் சாளுக்கிய மன்னனான விமலாதித்தனுக்கும் பிறந்த மகனே இராசநரேந்திர வர்மன். அவனுடைய மகனே பிற்காலச் சோழர்களில் புகழ்பெற்ற முதலாம் குலோத்துங்க சோழனாவான்.

இராசராசன் காலத்தில், இவன் வரலாற்றைக் கூறும் ஸ்ரீ ராசராச விஜயம் என்னும் வடமொழி நூல் ஒன்று இருந்தது. 'ஸ்ரீ ராசராசேசுவ. நாடகம்' என்னும் தமிழ் நூல், இராசராசன் கால முதல் தஞ்சைப் பெரிய கோவிலில் நடிக்கப்பட்டு வந்த ஒரு நாடக நூலாகும். இவனுக்குப்பின் இவன் மகன் இராசேந்திரன் கி. பி. 1012 முதல் 1044 வரை சோழநாட்டை ஆண்டான். அவனே 'கங்கைகொண்ட சோழன்' என்று பெயர் பெற்றவன்.

### குறிப்புரை

**1.** ஸ்வஸ்திஸ்ரீ - மங்களம் உண்டாக; 'நலம் வளர்க' எனினுமாம். உடையார்: இது கடவுளுக்கும் அரசர்க்கும் வழங்கப்படும் பொதுப் பெயர். 'எல்லாம் உடையவர்' என்பது இதன் பொருள். ஸ்ரீ ராஜ ராஜீஸ்வரம் உடையார்க்கு - தஞ்சை இராசராசேசுவரம் கோயில் இறைவனுக்கு ; உடையார் - இறைவன்.

**2.** ஸ்ரீ கார்யஞ் செய்கின்ற - கோயில் காரியங்களை மேற்பார்வை செய்கிற ; ஸ்ரீ காரியம் - கோயில் காரியம்; பொய்கை நாடு கிழவன்- பொய்கை நாட்டிற்குத் தலைவன்; இவன் முதலாம் இராசராசன் அரசியல் அதிகாரிகளில் ஒருவன். இராசராசனால், இராசராசேசுவரம் கோயில் காரியங்களை மேற்பார்வை செய்ய நியமிக்கப்பட்டவன். இவன் சிவபெருமானிடத்திலும், அவர் அடியாரிடத்திலும் சிறந்த பக்தியுடையவன் : இராசராசேசுவரத்தில், திருஞான சம்பந்த அடிகள் முதலிய மூவருக்கும், நங்கை பரவையார், மெய்ப்பொருள் நாயனர், சிறுத் தொண்ட நாயனர் முதலியவர்களுக்கும் செப்புப்படிவங்கள் செய்வித்து, அவைகளுக்குப் பல அணிகலன்களும் அளித்துள்ளான்.

3. நாடுகிழவன் ஆதித்தன் சூரியனான தென்னவ—

4. ன் மூவெந்தவெளான் ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் உ

5. டையார் கொயிலில் யாண்டு இருபத்தொன்பதாவது

6. வரை எழுந்தருளுவித்த செப்பு ப்ரதிமங்கள்

7. உடையார் கொயிலில் முழத்தால் அளந்தும் ரத்நங்கள் சரடு நீ—

8. க்கி தக்ஷிண மெரு விடங்கன் என்னுங் கல்லால் நிறை எடு—

---

3. ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவெந்த வெளான் - ஆதித்த சூரியன் என்பது இவனது இயற்பெயர். தென்னவன் மூவேந்த வெளான் என்பது இவனுக்கு இடப்பட்ட சிறப்புப் பெயர். இதனால் இவன் அரசியலதிகாரி என்பது போதரும். இவன் பொய்கை நாட்டிற்குத் தலைவனாதலால், 'பொய்கை நாடு கிழவன்' என்றும் அழைக்கப்பட்டான். பொய்கை நாடு, சோழ நாட்டில் இராசேந்திர சிங்கவள நாட்டின் உள்நாடுகளுள் ஒன்று.

4. ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் கோயில் - தஞ்சைப் பெரிய கோயில்.

5. யாண்டு இருபத்தொன்பதாவது வரை - முதலாம் இராசராசன் ஆட்சி ஆண்டு 29க்கு முன்; முதலாம் இராசராசன் கி. பி. 985 முதல் 1014 வரை ஆண்டான். எனவே, இவனது ஆட்சியாண்டு 29 என்பது, கி. பி. 1014 ஆகும்.

6. எழுந்தருளுவித்த - செய்து வைத்த; செப்பு ப்ரதிமங்கள் - செம்பினால் செய்த மக்கள் உருவங்கள்; கல்வெட்டுக்களில் இறைவன் திருவுருவங்கள் 'திருமேனி' எனவும் 'மூர்த்தி' எனவும் அழைக்கப்படும். மக்கள் உருவம் 'பிரதிமம்' என்று சொல்லப்படும். இச்சொல் வடமொழி ப்ரதிமா என்னும் சொல்லிலிருந்து வந்தது என்பர்.

7. உடையார் கொயிலில் முழத்தால் - இராசராசேசுவரமுடையார் கோயிலிலுள்ள முழக்கோலால்; 8 தோரை (நெல்)=1 விரல்; 12 விரல்=1 சாண்; 2 சாண்=1 முழம். அளந்தும் - அளந்து கணக்கிட்டும், ரத்நங்கள் - மணிகள்; இவை நவமணிகளையும் சுட்டும். சரடு நீக்கி - இரத்தினங்களைக் கோத்த கயிற்றைத் தள்ளி; சரடு - கயிறு

8. தக்ஷிண மெரு விடங்கன் என்னுங் கல்லால்-தட்சிண மேரு விடங்கன் என்னும் நிறை கல்லால்; இது கோயில் நிறுத்தலளவையின் பெயர். கோயில் படிமங்களுக்குச் சார்த்தப்பட்ட இரத்தினங்களை அளப்பதற்குப் பயன்பட்டது. தட்சிணமேரு என்பது இராசராசேசுவரம் கோயில் விமானத்தின் பெயர்.

9. த்தும் பொன் ஆடவல்லால் என்னும் கல்லால் நிறை எடுத்—

10. துங் கல்லில் வெட்டினபடி [க] பாதாதிகெஸாந்தம் பதினெழு வி—

11. ரலெ இரண்டு தொரை உசரமும் இரண்டு திருக்கையும் உடையராகக் கன—

12. மாக எழுந்தருளுவித்த நம்பி ஆரூரனர் ப்ரதிமம் ஒன்று [உ] இவர் நின்ற இரு வி—

13. ரலரை உசரத்து பத்மம் ஒன்று [ங] இதனொடுங் கூடச் செய்த எண்விரல் ச—

14. மசதுரத்து மூவிரலெ இரண்டு தொரை உசரத்து இவர் எழுந்தருளி நின்ற—

15. பீடம் ஒன்று [ச] பதினறு விரல் நிளத்து இரண்டு திருக்கையுடையராகக் கன—

---

**9. பொன்** - பொன்னை; இரத்தினங்களைப் பொதிவதற்கும் கோப்பதற்கும் பொன் பயன்பட்டது. ஆடவல்லால் - கோயிலிலுள்ள ஒரு நிறை கல்; பொன் முதலியவற்றை நிறுப்பது. ஆடவல்லான் என்பது சிவபெருமானுக்கு வழங்கிய பெயர்களில் ஒன்று. நிறை எடுத்தும் - நிறுத்து அளந்தும்.

**10 - 14. நம்பி ஆருரனர் ப்ரதிமம்** - நம்பியாரூரர் படிவம்; நம்பியாரூரர் சைவ சமயாசாரியர் நால்வருள் ஒருவர். சுந்தரர் என்றும் இவர் அழைக்கப்படுவர். தேவாரம் பாடிய மூவருள்ளும் இவர் ஒருவர். இவருடைய படிவம் இரு கைகளையுடையது. செம்பினல் கட்டியாகச்செய்யப்பட்டது. அடிமுதல் முடிவரை 17 விரல் 2 தோரை உயரமுள்ளது. அப்படிவம் நின்ற தாமரை வடிவமான ஆசனம் 2½ விரல் உயரமும், அதைத் தாங்கிய பீடம் 8 விரல் சமசதுரமும், 3 விரல் 2 தோரை உயரமுமுடையது.

**கல்லில் வெட்டினபடி** - கல்லில் வெட்டின சாசனத்தின்படி; **பாதாதி கெஸாந்தம்** - அடிமுதல் முடிவரை; விரல், தொரை: இவை நீட்டலளவைப் பெயர்கள். விரல் - 8 தோரை (நெல்) நீளம்; தோரை - 1 நெல் அளவு. உசரம் - உயரம்; இரண்டு திருக்கையும் உடையராக - இரண்டு கைகளையும் கொண்டதாக; கனமாக - கட்டியாக; பத்மம் - தாமரை வடிவமாகச் செய்யப்பட்ட ஆசனம்; பீடம் - இருப்பிடம்.

**15 - 18. நங்கை பரவையார் ப்ரதிமம்** - பரவைநங்கையார் படிவம்; பரவையார், நம்பியாரூரர் இரு மனைவியருள் முதல் மனைவி. அவர் படிவம் இரு கைகளையுடையது; செம்பினல் கட்டியாகச் செய்யப்

16. மாக எழுந்தருளுவித்த நங்கை பரவையார் ப்ரதிமம் ஒன்று [௫] இவர் எழுந்த—

17. ருளி நின்ற இரு விரலெ இரண்டு தொரை உசரத்து பத்மம் ஒன்று [௬] இதனொ—

18. டுங் கூடச் செய்த அறுவிரலெ இரண்டு தொரை சம சதுரத்து மூ விரல் உச

19. ரத்து பீடம் ஒன்று [௭] பாதாதிகெஸாந்தம் இருபத்து இரு விரலெ இரண்டு தொ

20. ரை உசரத்து இரண்டு திருக்கைப்புடையராகக் கன மாக எழுந்தருளிவித்த திரு—

21. நாவுக்கரையர் ப்ரதிமம் ஒன்று [௮] இவர் எழுந்தருளி நின்ற இரு விரலெ ஆறு

22 தொரை உசரத்து பத்மம் ஒன்று [௯] இதனொடுங் கூடச் செய்த எண் விரலெ

23. ஆறு தொரைச் சம சதுரத்து நால் விரல் உசரத்து பீடம் ஒன்று [௰] பாதாதிகெ

24. ஸாந்தம் இருபத் திருவிரலெ இரண்டு தொரை உசரத்து இரண்டு திருக் கையுடை—

---

பட்டது. அடிமுதல் முடிவரை 16 விரல் உயரமுடையது. அப்படிவம் நின்ற தாமரை வடிவமான ஆசனம், 2 விரல் 2 தோரை உயரமும், அதைத் தாங்கிய பீடம் 6 விரல் 2 தோரை சம சதுரமும், 3 விரல் உயரமுமுடையது.

பதினறு விரல் நிலத்து என்பது 'பதினறு விரல் உயரத்து' என்றிருத்தல் வேண்டும். பதினறு - பதினறு; நிளம் - நீளம்; இங்கு உயரத்தைச் சுட்டும். நங்கை பரவையார், உலோகமா தேவியார் படிவங்களுக்குக் 'கேசாதி பாதம்' கூறு திருத்தல் குறிப்பிடத்தக்கது.

**19 - 23.** திருநாவுக்கரையர் ப்ரதிமம் - திருநாவுக்கரசர் படிவம்; திருநாவுக்கரசர் சைவ சமயாசாரியர் நால்வருள் ஒருவரும், தேவாரம் பாடிய மூவருள் ஒருவருமாவர், இவருடைய படிவம் இரு கைகளையுடையது. செம்பினல் கட்டியாகச் செய்யப்பட்டது. அடிமுதல் முடிவரை, 22 விரல் 2 தோரை உயரமுடையது. அப் படிவம் நின்ற தாமரை வடிவமான ஆசனம், 2 விரல் 6 தோரை உயரமும், அதைத் தாங்கிய பீடம், 8 விரல், 6 தோரை சம சதுரமும், 4 விரல் உயரமுமுடையது.

**24 - 29.** திருஞானசம்பந்தடிகள் ப்ரதிமம் - திருஞானசம்பந்தர் படிவம்; திருஞானசம்பந்தர் சைவ சமயாசாரியார் நால்வருள் முதல்வரும்

25. யராகக் கனமாக எழுந்தருவித்த திருஞானசம்பந் தடி கள் ப்ரதிமம் ஒன்று [௰௬]

26. இவர் எழுந்தருளி நின்ற இருவிரலே இரண்டு தொரை உசரத்து பத்மம் ஒன்று [௰௨]

27. இதனொடுங் கூடச் செய்த ஒன்பதிற்று

28. விரலெ இரண்டு தொரைச் சம சதுரத்—

29. து நால் விரல் உசரத்து பீடம் ஒன்று [௰௩]

30. பாதாதிகெஸாந்தம் ஒரு முழமெ நால் விர—

31. லரை உசரத்து இரண்டு திருக்கை யுடையரா

## இரண்டாம் பகுதி

32. கக் கனமாக எழுந்தருளுவித்த பெரிய பெருமாள் ப்ர திமம் ஒன்று [௰௪] இவர் எழுந்தருளி நின்ற ஐய் விரலே இரண்டு தொரை உசரத்து பத்மம் ஒன்—

33. று [௰௫] இதனொடுங் கூடச் செய்த பதினொரு விரற் சம சதுரத்து ஐய்விரலெ ஆறுதொரை உசரத்துபீடம் ஒன்று [௰௬] இருபத்து இருவிரலெ இரண்டு தொ—

34. ரை உசரத்து இரண்டு திருக்கையுடையராகக் கனமாக எழுந்தருளுவித்த இவர் நம்பிராட்டியார் ஒலொகமா தெவியார் ப்ரதிமம் ஒன்று [௰௭] இவர் எழுந்தரு—

---

தேவாரம் பாடிய மூவருள் ஒருவருமாவர். இவருடைய படிவம் இரண்டு கைகளையுடையது. செம்பினால் கட்டியாகச் செயப்பட்டது. அடி முதல் முடிவரை 22 விரல் 2 தோரை உயரமுள்ளது. அப் படிவம் நின்ற தாமரை வடிவமான ஆசனம் 2 விரல் 2 தோரை உயரமும், அதைத் தாங்கிய பீடம் 9 விரல் 2 தோரை சம சதுரமும், 4 விரல் உயரமுமுடையது. திருஞானசம்பந்தடிகள் - திருஞானசம்பந்த சுவாமிகள்; அடிகள் - பெரியார், சுவாமிகள்.

**30 - 33.** பெரிய பெருமாள் ப்ரதிமம்-முதலாம் இராசராசன் படிவம். இவன் படிவம், இரண்டு கைகளையுடையது; செம்பினால் கட்டியாகச் செய்யப்பட்டது. அடிமுதல் முடிவரை ஒரு முழம் $4\frac{1}{2}$ விரல் உயர முள்ளது. அப் படிவம் நின்ற தாமரை வடிவமான ஆசனம், 5 விரல் 2 தோரை உயரமும், அதைத் தாங்கிய பீடம் 11 விரல் சம சதுரமும், 5 விரல் 6 தோரை உயரமுமுடையது,

**33 - 35.** ஒலொகமா தெவியார் ப்ரதிமம் - உலோகமாதேவியார் படிவம்; உலோகமா தேவியார், முதலாம் இராசராசன் பட்டத்தரசி - இவரைத்

35. ளி நின்ற ஐய்விரல் உசரத்து பத்மம் ஒன்று [௰அ] இதனொடுங் கூடச் செய்த ஒன்பதிற்று விரற் சம சது ரத்து ஐய்விரலெ இரண்டு தொரை உசரத்து பீடம் ஒன்—

36. று [௰கூ] பெரிய பெருமாளுக்கு தெவார தெவராக எழுந்தருளிவித்த தெவர் பாதாதிகெஸாந்தம் ஐவிரலெ இரண்டு தொரை உசரத்து நாலு ஸ்ரீஹஸ்தமும் உடைய ராகக் க—

37. னமாகப் பித்தளையால் எழுந்தருளுவித்த சந்திரசெகர தெவர் திருமெனி ஒன்று [உ௦] இவரொடுங்கூடச் செய்த ஒரு விரலரை உசரத்து பத்மமும் இருவிரலெ நாலு

38. தொரை சம சதுரத்தும் ஒரு விரல் உசரத்தும் பித்தளை யால் செய்த பீடம் ஒன்று [உக] இவரைக் கவித்த இருபத்து ஒருவிரற்ச் சுற்றிற் கனமாகச் செம்பால் செய்த ப்ரபெ

---

'திரைலோக்கிய மாதேவி', என்றும் அழைப்பர். இத்தேவியார் படிவம் இரண்டு கைகளையுடையது. செம்பினால் கட்டியாகச் செய்யப்பட்டது. அடிமுதல் முடிவரை 22 விரல் 2 தோரை உயரமுடையது. அது நின்ற தாமரை வடிவமான ஆசனம், 5 விரல் உயரமும், அதைத் தாங்கிய பீடம் 9 விரல் சம சதுரமும், 5 விரல் 2 தோரை உயரமுமுடையது. இவர் நம்பிராட்டியார் - பெரிய பெருமாள் என்னும் முதலாம் இராசராசன் பட்டத்தரசியார்.

**36 - 38.** சந்திரசெகர தெவர் திருமெனி - சந்திரனை முடியில் வைத்த சிவபெருமான் திருவுருவம். சந்திரசேகர தேவர், முதலாம் இராசராச னுடைய வழிபடு தெய்வம். அவர் திருவுருவத்தின் முன்னர் இராச ராசன் தேவாரம் பாடி வழிபட்டு வந்தமையால், அவர் 'தெவார தெவர்' எனப்பட்டார். அவர் திருவுருவம் நான்கு கைகளையுடையது; பித்தளை யினால் கட்டியாகச் செய்யப்பட்டது. அடிமுதல் முடிவரை 5 விரல் 2 தோரை உயரமுடையது. அவ்வுருவத்தோடு கூடிய தாமரை வடிவ மான ஆசனம், $1\frac{1}{2}$ விரல் உயரமும், அதைத் தாங்கிய பீடம், 2 விரல் 4 தோரை சம சதுரமும், ஒரு விரல் உயரமுமுடையது. அதன் தலை யில் வளையமாகக் கவிக்கப்பட்ட கலன், 21 விரல் சுற்றளவுடையது.

பெரிய பெருமாள் - முதலாம் இராசராசன்; தெவார தெவர் - முதலாம் இராசராசனது தேவாரப் பாடலின் வழிபாட்டிற்குரிய இறைவன். இவர் பெயர் 'சந்திரசேகர தேவர்' என்பது. ஸ்ரீ ஹஸ்தம் -

39. ஒன்று [உஉ] இவனெ நம்பி ஆரூரானர்க்குக் குடுத்தன [உங] உத்திராக்ஷத் தாழ்வடம் ஒன்றிற் பொன்னின் சுரி ஐம்பத்தாறும் உத்திராக்ஷம் ஐம்பத்தாறும் உட்பட நிறை—

40. எண் கழஞ்செய் ஒன்பது மஞ்சாடிக்கு விலை காசு இருபத்தைஞ்சு [உச] இவனெ நங்கை பரவையார்க்குக் குடுத்தன [உரு] திருக்கைக் காறை ஒன்று பொன் கழ—

41. ஞ்சரையாக இரண்டினாற் பொன் முக்கழஞ்சு [உசு] திருக்காற்க் காறை ஒன்று பொன் கழஞ்சரையாக இரண்டினாற் பொன் முக்கழஞ்சு [உஎ] மொதிரம் ஒன்று பொ—

## மூன்றும் பகுதி

42. ன் அரைக்கழஞ்செய் மஞ்சாடியுங் குன்றி [உஅ] இவனெ திரு நாவுக்கரையர்க்குக் குடுத்தன [உகூ] உத்திராக்ஷச்சுரி பொன்னின் நூலிற்க் கொத்த உத்திராக்ஷம்

---

திருக்கைகள்; சந்திரசெகர தெவர்-முதலாம் இராசராசனால் வழிபடப் பெற்ற சிவபெருமான்; திருமெனி - இறைவன் திருவுருவம்; இதனை 'மூர்த்தி' என்றும் கூறுவர். ஆனால் மக்கள் உருவத்தைப் 'பிரதிமம்' என்று கூறுவர். இவரைக் கவித்த - சந்திரசேகர தேவர் திருமேனியின் தலையில் சூடிய; ப்ரெபெ - திருவுருவங்கள் தலையில் கவிக்கும் ஒரு வகை மாலை (ornamented Arch over the head of the idol) இதனைத் 'திருவாசிகை' என்றும், 'திருவாசி' என்றும் கூறுவர்,

**39 - 40.** இவனெ நம்பி ஆருரானர்க்குக் குடுத்தன - ஆதித்த சூரியன் நம்பியாரூரர் உருவத்திற்குக் கொடுத்தது; அது ஒரு உத்திராக்ஷத் தாழ்வடம்; அதில் பொன்னால் செய்யப்பட்ட திருகாணி 56ம், உருத்திராட்சமணி 56ம் இருந்தன. அது 8 கழஞ்சு, 9 மஞ்சாடி எடையும் 25 காசு மதிப்புமுள்ளது. உத்திராட்ச தாழ்வடம்-உருத்திராட்ச மாலை; பொன்னின் சுரி - பொன்னால் செய்யப்பட்ட திருகாணி ; உத்திராட்சம் உத்திராட்ச மணி; நிறை - எடை; கழஞ்சு - 20 மஞ்சாடி; மஞ்சாடி - குன்றிமணி ; விலை - மதிப்பு; காசு - பொற்காசு

**40 - 42.** இவனெ நங்கை பரவையார்க்குக் குடுத்தன - ஆதித்த சூரியன் பரவையார் உருவத்திற்குக் கொடுத்தவை. அவை திருக்கைக்காறை 2, திருக்காற்க்காறை 2, மொதிரம்; காறை என்பது பெண்களும், குழந்தைகளும் கழுத்தில் அணியும் ஒருவகை அணி. அஃது இங்குக் கைகளிலும்

ஒன்றுட்பட நிறை ஆறு மஞ்சாடியும் இரண்டு மாவுக்கு விலை காசு ஒன்று [௩0] உத்திராக்ஷச்சரி பொன்னின் நூலிற்—

43. கொத்த உத்திராக்ஷம் ஒன்றும் உட்பட நிறை ஆறு மஞ்சாடியும் இரண்டு மாவுக்கு விலை காசு ஒன்று [௩க] கண்டிகை உத்திராக்ஷம் ஒன்றும் சுரி ஒன்றும் உட்பட நிறை ஐய்ங்க........மஞ்சாடியுங் குன்றிக்கு விலை காசு எட்டு [௩உ] திருப் பொற் பூ ஒன்று பொன் முக்காலெ நாலு மஞ்—

44. சாடியுங் குன்றி [௩௩] திருக்கைய்க் காறை ஒன்று இருகழஞ்சு [௩௪] திருக்கைய்க் காறை ஒன்று பொன் கழஞ்செ முக்காலெ நாலு மஞ்சாடி [௩௫] இவனெ திருஞான சம்பந்தடிகளுக்குக் குடுத்தன. [௩௬] உத்தி

---

கால்களிலும் அணிந்து கொள்ளும் அணிவகையைக் குறித்தது. பரவையார் உருவத்திற்கு அணிந்த காறைகள் பொன்னுலானவை. அவைகளில், கையில் அணிந்த காறை ஒன்றின் எடை $1\frac{1}{2}$ கழஞ்சாக, 2 காறைகள் 3 கழஞ்சு எடையுள்ளவை. காலில் அணிந்த காறை ஒன்றின் எடை $1\frac{1}{2}$ கழஞ்சாக, 2 காறைகள் 3 கழஞ்சு எடையுள்ளவை. மோதிரம் $\frac{1}{2}$ கழஞ்சு, 1 மஞ்சாடி, குன்றி எடையுள்ளது.

**42 - 44. இவனெ திருநாவுக்கரையர்க்குக் குடுத்தன** - ஆதித்த சூரியன் திருநாவுக்கரசர் உருவத்திற்குக் கொடுத்தவை. அவை உத்திராக்ஷச் சுரி2, கழுத்தணி மாலே 1 திருப்பொற்பூ, 1, திருக்கைக்ய் காறை 2; உத்திராக்ஷச்சுரி ஒவ்வொன்றும் பொன்னுலான நூலில் கோக்கப்பட்ட ஒவ்வோர் உத்திராட்ச மணியையுடையது. 6 மஞ்சாடி 2 மா எடையும், ஒரு காசு மதிப்புமுடையது. கழுத்தணி மாலே ஓர் உருத்திராட்சமும், திருகாணியுமுடையது; 5 கழஞ்சு...........குன்றி எடையும், 8 காசு மதிப்புமுடையது. திருப்பொற்பூ, பொன்னுலானது; $\frac{3}{4}$ கழஞ்சு 4 மஞ்சாடி 1 குன்றி எடையுள்ளது. திருக்கைக்காறை ஒன்று 2 கழஞ்சு எடையுள்ளது; மற்றொன்று $1\frac{3}{4}$ கழஞ்சு, 4 மஞ்சாடி எடையுள்ளது.

**உத்திராக்ஷச் சுரி** - உத்திராட்ச மாலேயிலுள்ள திருகாணி; மா$=\frac{1}{20}$ ஆறு மஞ்சாடி இரண்டு மா—$6\frac{1}{10}$ மஞ்சாடி; 'மா' என்பதை நிறுத்த லளவைகளில் ஒன்று என்பாருமுளர். ஆங்கிலமொழி பெயர்ப்பாளர் 'உ மா' என்பதை "two tenths" என்று மொழிபெயர்த்திருப்பது ஆராயத்தக்கது. **கண்டிகை உத்திராக்ஷம்** - உருத்திராட்ச மாலே; கண்டிகை - மாலே, தாழ்வடம்; பதக்கம் அல்லது வாகுவலயம் எனினுமாம்.

ராக்ஷச்சுரி பொன்னின் நூலிற் கொத்த உத்ராக்ஷம் ஒன்றுட்பட நிறை

45. அரைக் கழஞ்செ இரண்டு மஞ்சாடிக்கு விலை காசு ஒன்றரை [௩எ] உத்திராச்க்ஷச்சுரி பொன்னின் நூலிற் கொத்த உத்திராக்ஷம் ஒன்றுட் பட நிறை அரைக் கழஞ்செ மஞ்சாடியுங் குன்றிக்கு விலை காசு ஒன்றரை [௩அ] தாழ்வடம் ஒன்றிற் பொன்னின் சுரி ஐம்பத் தாறும் உட்பட நிறை எண் கழஞ்செ—

46. ய் நாலு மஞ்சாடியுங் குன்றிக்கு விலை காசு இருபத் தைஞ்சு [௩௯] திருப்பொற்பூ ஒன்று பொன்கழஞ்செய் குன்றி [௪௰] திருக்கைய்க்காறை ஒன்று பொன் இரு கழஞ்செய் குன்றி [௪௧] திருக்கைய்க்காறை ஒன்று பொன் கழஞ்செ முக்காலெ நாலுமஞ்சாடி [௪௨] திருப் பட்டிகை ஒன்று பொன் இருகழஞ்சு [௪௩] இவனெ

47. பெரிய பெருமாளுக்குக் குடுத்தன [௪௪] திருக்கைய்க் காறை ஒன்று பொன் கழஞ்செய் ஆறு மஞ்சாடியும் மூன்று மாவாக இரண்டிறைற்பொன் இருகழஞ்சரையெ

---

**44 - 48.** இவனெ திருஞானசம்பந்தடிகளுக்குக் குடுத்தன - ஆதித்த சூரியன் திருஞானசம்பந்தர் உருவத்திற்குக் கொடுத்தவை. அவை உருத்திராட்சச் சுரி 2, தாழ்வடம். திருப்பொற்பூ 1. திருக்கைக் காறை 2 திருப்பட்டிகை 1 இவற்றுள் உருத்திராட்சச் சுரிகள் பொன்னு லான நூலில் கோத்த ஒவ்வோர் உருத்திராட்சத்தை உடையது. அவற் றுள் ஒன்று $\frac{1}{2}$ கழஞ்சு 2 மஞ்சாடி எடையும், $1\frac{1}{2}$ காசு மதிப்புமுடையது. மற்றொன்று $\frac{1}{2}$ கழஞ்சு 1 மஞ்சாடி 1 குன்றி எடையும், $1\frac{1}{2}$ காசு மதிப்பு முடையது. தாழ்வடம் 56 திருகாணிகளும் 56 உருத்திராட்ச மணிகளும் கொண்டது. 8 கழஞ்சு 4 மஞ்சாடி 1 குன்றி எடையும், 25 காசு மதிப்பு முடையது. திருக்கைக்காறைகள் இரண்டும் பொன்னுலானவை; ஒன்று 2 கழஞ்சு 1 குன்றி எடையும், மற்றொன்று $1\frac{3}{4}$ கழஞ்சு 4மஞ்சாடி எடையுமுடையன. திருப்பட்டிகை பொன்னுலானது; 2 கழஞ்சு எடையுள்ளது.

சுரி - திருகாணி; உருத்திராக்ஷம்-உருத்திராக்க மாலை; தாழ்வடம்-கழுத்தணி; திருக்கைய்க்காறை - கையில் அணியும் காறை என்னும் அணிவகை; திருப்பட்டிகை - மேகலை; அரைக்கச்சை எனினுமாம்.

**47.** இவனெ பெரிய பெருமாளுக்குக் குடுத்தன - ஆதித்த சூரியன் முதலாம் இராசராசன் உருவத்திற்குக் கொடுத்தவை; அவை திருக்கைக்

இரண்டு மஞ்சாடியும் ஆறு மா [சரு] திருக்குதம்பை ஒன்று பொன் எட்டு மஞ்சாடியும் எழுமாவாக இரண்டிறைப் பொன் முக்காலெ இரண்டு மஞ்சா—

48. டியும் நான்கு மா [சசு] இவனெ இவர் நம்பிராட்டியார் ஓலொகமா தெவியார்க்குக் குடுத்தன [சஎ] திருக்குதம்பை ஒன்று பொன் எழு மஞ்சாடியுங் குன்றியாக இரண்டிறைப் பொன் முக்கால் [சஅ] திருக்கைக் காறை ஒன்று பொன் கழஞ்செய் இரண்டு மஞ்சாடியும் மூன்று மா [சகூ] திருக்கைய்க் காறை ஒன்று பொன் கழஞ்சு—

49. சே எட்டு மா [ருய] இவன் எழுந்தருளுவித்த திருஞான சம்பந்தடிகளுக்கு இராஜெந்திரசிங்க வளநாட்டுத் திருவாலி நாட்டு உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் உடையார்தெவ தானங் குறுவாணியக் குடியாகிய பரகேசரிபுரத்து நகரத்தார் யாண்டு இருபத்தொன்பதாவது

---

காறை 2, திருக்குதம்பை 2; இவை பொன்னாலானவை. இவற்றுள் திருக்கைக்காறை ஒன்று 1 கழஞ்சு 6 மஞ்சாடி 3 மா வீதம் 2 திருக்கைக் காறைகள் $2\frac{1}{2}$ கழஞ்சு 2 மஞ்சாடி 6 மா எடையுடையவை. திருக்குதம்பை ஒன்று 8 மஞ்சாடி 7 மா வீதம், 2 திருக்குதம்பைகள் $\frac{3}{4}$ கழஞ்சு 2 மஞ்சாடி 4 மா எடையுள்ளன.

**48. இவனெ இவர் நம்பிராட்டியார் ஓலொகமா தெவியார்க்குக் குடுத்தன** - ஆதித்த சூரியன் பெரிய பெருமாள் என்னும் முதலாம் இராசராசன் பட்டத்தரசியான உலோகமா தேவியார் உருவத்திற்குக் கொடுத்தவை. அவை திருக்குதம்பை 2, திருக்கைக்காறை 2; இவை பொன்னாலானவை. இவற்றுள் திருக்குதம்பை ஒன்று 7 மஞ்சாடி 1 குன்றியாக, 2 திருக்குதம்பைகள் $\frac{3}{4}$ கழஞ்சு எடையுடையன. திருக்காறை ஒன்று 1 கழஞ்சு 2 மஞ்சாடி 3 மா எடையும், மற்றொன்று 1 கழஞ்சு 8 மா எடையும் உடையன. நம்பிராட்டியார் - தேவியார்; திருக்குதம்பை - காதணி வகை.

**49 - 53. பரகேசரிபுரத்து நகரத்தார்:** பரகேசரிபுரத்து நகரம் தஞ்சை இராசராசேசுவரம் கோயில் இறைவனுக்குத் தேவதானமாயமைந்தது. இது சோழநாட்டில் இராசேந்திர சிங்கவள நாட்டிலுள்ள திருவாலி நாட்டிலுள்ளது. இதன் மற்றொரு பெயர் குறுவாணியர் குடி. இந்நகரத்தார், முதலாம் இராசராசன் ஆட்சியின் 29 ஆம் ஆண்டுவரை, ஆதித்த சூரியன் இராராசேசுவரம் கோயிலில் செய்து வைத்த திருஞானசம்பந்தர் முதலியோர் உருவங்களுக்குக் கொடுத்த அணிகலன்களி

வரை குடுத்த ரத்னங்கள் தக்ஷிண மேருவிடங்கள் என்னுங் கல்லால் நிறை எடுத்தும் பொ—

50. ன் ஆடவல்லான் என்னுங் கல்லால் நிறை எடுத்துங் கல்லில் வெட்டின [ருக] உத்திராக்ஷம் பொன்னின் சுரி கட்டிற்று ஒன்றும் நாண் படு கண்ணுங் கொக்குவாயும உட்பட நிறை கழஞ்செய் எழுமஞ்சாடிக்கு விலை காசு மூன்றெகால் [ருஉ] இவன் எழுந்த—

51. ருளுவித்த திருநாவுக்கரையர்க்குக் குடுத்தன [ருங] உத்திராக்ஷம் பொன்னின் சுரி கட்டிற்று ஒன்றும் நாண் படு கண்ணுங் கொக்குவாயும் உட்பட நிறை கழஞ்செ எழு மஞ்சாடிக்கு விலை காசு மூன்று [ருச] இவன் எழுந் தருளுவித்த நம்பி ஆரூரனார்க்குக் குடுத்தன [ருரு] உத்திராக்ஷம் பொன்னின் சுரி கட்டிற்று ஒன்றும் நாண் படு கண்ணுங் கொ—

நான்காம் பகுதி

52. க்கு வாயும் உட்பட நிறை கழஞ்செ எழுமஞ்சாடிக்கு விலை காசு மூன்று [ருசு] இவன் எழுந்தருளுவித்த நங்கை பரவையார்க்குக் குடுத்தன [ருஎ] திரு—

---

னுள்ள இரத்தினங்கள் தட்சிண மேரு விடங்கன் என்னும் கோயில் நிறைகல்லாலும், அவைகளைப் பொதிந்த பொன், ஆடவல்லான் என்னும் நிறை கல்லாலும் நிறுத்து அளந்து கல்லில் பொறிக்கப்பட்டன.

இவர்கள், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரையர், நம்பியாரூரர் ஆகிய மூவர் உருவங்களுக்கும் ஒவ்வோர் உருத்திராட்ச மாலையும், நங்கை பரவையார் உருவத்திற்குத் தாலி ஒன்றும், பட்டைக்காறை ஒன்றும் கொடுத்தனர். உருத்திராட்சமாலை ஒவ்வொன்றும் ஒவ்வொரு திரு காணியுடையது; உருத்திராட்ச மணியைக் கோத்தது; பொன் நாணில் ஒரு துவாரத்தையும் கொக்கியையும் கொண்டது; 1 கழஞ்சு 7 மஞ்சாடி எடையும், $3\frac{1}{4}$ காசு மதிப்புமுடையது. தாலியும் பட்டைக்காறையும் $\frac{3}{4}$ கழஞ்சு 1 குன்றி எடையுடையது.

**இவன் எழுந்தருளுவித்த** - ஆதித்த சூரியன் செய்து வைத்த ; **திரு ஞான சம்பந்தடிகளுக்கு** - திருஞானசம்பந்த சுவாமி உருவத்திற்கு ; **இராஜெந்திர சிங்க வளநாடு** : இது சோழநாட்டின் பிரிவுகளில் ஒன்று. இங்ஙனம் சோழநாடு முதலாம் இராசராசன் காலத்தில் 9 வளநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இராசேந்திர சிங்கன் என்பது இராச

**53.** வொன்றுட்படப் பட்டைக்காறை ஒன்று பொன் முக்கா லெ குன்றி [ருஅ] இவன் எழுந்தருளுவித்த நம்பி ஆரூர னூர்க்கு நித்தவினெத வளநாட்டு

**54.** வெண்ணிக் கூற்றத்து உடையார் ஸ்ரீராஜ ராஜீசுவரம உடையார் தெவதானம் வெண்ணி நகரத்தார் யாண்டு இருபத்தொன்பதாவது வரை குடுத்த

**55.** பொன் ஆடவல்லான் என்னுங் கல்லால் நிறை எடுத் துக் கல்லில் வெட்டின [ருகூ] திருக்கம்பி ஒன்று பொன் கழஞ்செ மஞ்சாடியுங் குன்றி [சுo] திருக்கம்—

---

ராசன் சிறப்புப் பெயர்களில் ஒன்று. வளநாடுகள் நாடுகளாகவும் கூற்றங் களாகவும் பிரிக்கப்பட்டிருந்தமை "இராசேந்திர சிங்க வளநாட்டு திருவாலி நாட்டு...பரகேசரிபுரத்து நகரத்தார்", "நித்த வினெத வளநாட்டு வெண்ணிக் கூற்றத்து........வெண்ணி நகரத்தார்". "பாண்டியகுலாசனி வளநாட்டுத் தஞ்சாவூர் கூற்றத்துத் தஞ்சாவூர்" என வரும் தொடர்களால் அறியப்படும்.

**யாண்டு இருபத்தொன்பதாவது வரை** - முதலாம் இராசராசன் ஆட்சி 29வது ஆண்டு வரையும்; அஃதாவது, 29வது ஆண்டிற்குமுன் என்பது. தக்ஷிண மேரு விடங்கன்-இரத்தின முதலியவைகளை நிறுக்கும் கோயில் நிறை கல் ; ஆடவல்லான் - பொன் முதலியவற்றை நிறுக்கும் கோயில் நிறை கல். கல்லால் - நிறை கல்லால் ; நிறை எடுத்து - நிறுத்துக் கணக்கிட்டு ; உத்திராட்சம்-உருத்திராக்க மாலை. சுரிகட்டிற்று ஒன்றும் உத்திராக்க மணியோடு பொருத்தப் பெற்ற திருகாணி ஒன்றும் ; சுரி - திருகாணி ; நாண்படு கண்ணும் - கயிற்றை இடுதற்குரிய துவாரமும் ; கண் - துவாரம் ; கொக்குவாயும் - கொக்கியும். (The hock of a clasp in an ornament)

**53 - 60. வெண்ணி நகரத்தார் :** வெண்ணி நகரம் தஞ்சை இராச ராசேசுவரர் கோயில் இறைவனுக்குத் தேவதானமா யமைந்தது. சோழ நாட்டில் நித்த வினோத வளநாட்டிலுள்ள வெண்ணிக் கூற்றத்தில் உள்ளது. முதலாம் இராசராசன் ஆட்சியின் 29ஆம் ஆண்டு வரை இந்நகரத்தார், ஆதித்த சூரியன் இராசராசேசுவரர் கோயிலில் செய்து வைத்த நம்பியாரூரனார், நங்கை பரவையார் உருவங்களுக்குக் கொடுத்த அணிகலன்களிலுள்ள பொன், ஆடவல்லான் என்னும் கோயில் நிறை கல்லால் நிறுக்கப்பட்டு, கல்லில் வெட்டப்பட்டன.

இவர்கள், நம்பியாரூரர் உருவத்திற்குக் கொடுத்தவை திருக்கம்பி 2, திரள் மணி வடம் 1, திருக்கைக் காறை 2, திருக்கால் காறை 2ம், நங்கை பரவையார் உருவத்திற்குக் கொடுத்தவை திருக்கம்பி 2ம் ஆகும். இவைக

56. பி. ஒன்று பொன் கழஞ்செ மஞ்சாடி [சுக] திரள் மணி வடம் ஒன்று பொன் இரு கழஞ்செ மஞ்சாடியுங் குன்றி [சுஉ] திருக்கைய்க் காறை ஒன்று பொன் க—

57. ழஞ்செ மூக்காலெ நாலு மஞ்சாடி [சுங] திருக்கைய்க் காறை ஒன்று பொன் கழஞ்செ முக்காலெ மூன்று மஞ் சாடியுங் குன்றி [சுச] திருக்காற்காறை

58. ஒன்று பொன் கழஞ்செ முக்காலெ நாலு மஞ்சாடியாக இரண்டிநாற் பொன் முக்கழஞ்செ முக்காலெ மூன்று மஞ்சாடி [சுரு] இவன் எழுந்தருளு—

59. வித்த நங்கை பரவையார்க்குக் குடுத்தன [சுசு] திருக் கம்பி ஒன்று பொன் முக்காலெ இரண்டு மஞ்சாடியுங் குன்றி [சுஎ] திருக்கம்பி ஒன்று பொன் முக்—

60. காலெ இரண்டு மஞ்சாடி [சுஅ]

---

ளெல்லாம் பொன்னுலானவை. இவற்றுள் திருக்கம்பி ஒன்று, 1 கழஞ்சு 1 மஞ்சாடி 1 குன்றி எடையும், மற்றொன்று 1 கழஞ்சு 1 மஞ்சாடி எடையுமுள்ளன. திரள்மணி வடம் 2 கழஞ்சு 1 மஞ்சாடி 1 குன்றி எடையுள்ளது. திருக்கைக்காறை ஒன்று $1\frac{3}{4}$ கழஞ்சு 4 மஞ்சாடி எடையும், மற்றொன்று $1\frac{3}{4}$ கழஞ்சு 3 மஞ்சாடி 1 குன்றி எடையும் உள்ளன. திருக்கால் காறை ஒன்று $1\frac{3}{4}$ கழஞ்சு 4 மஞ்சாடியாக, 2 திருக்கால் காறைகளின் எடை $3\frac{3}{4}$ கழஞ்சு 3 மஞ்சாடி ஆகும்.

நங்கை பரவையார் உருவத்திற்குக் கொடுத்த திருக்கம்பிகளில் ஒன்று $2\frac{3}{4}$ மஞ்சாடி 1 குன்றி நிறையுள்ளது ; மற்றொன்று $2\frac{3}{4}$ மஞ்சாடி நிறையுள்ளது. உடையார் - இறைவன் ; தெவதானம் - கோயிலுக்குத் தானமாக விடப்பட்ட இறையிலி நிலம் ; திருக்கம்பி - காதணி வகை ; திரள்மணிவடம் - உருண்டை மணிமாலை, உருத்திராக்க மாலை.

பயிற்சி வினுக்கள்

1. முதலாம் இராசராசன் காலத்துச் சாசனங்களில் பாடமாக வந்துள்ளன யாவை ? அவற்றுள் இராசராசனுல் ஏற்பட்ட சாசனம் எது ?

2. பொய்கை நாடு கிழவன் யார் ? அவன் சாசனம் யார் யார் காலத்தில் காணப்படுகின்றன ? முதலாம் இராசராசன் காலத்து அவனுடைய சாசனம் எங்குக் காணப்படுகிறது ?

3. பொய்கை நாடு கிழவன் ஆதித்த சூரியன் சாசனத்தில் (முதலாம் இராசராசன் காலத்தது) கூறப்படும் செய்திகள் யாவை ? அதனுல் அறியப்படுவன யாவை ?

4. பொருள் தருக :—ஸ்ரீ காரியம், ப்ரதிமங்கள், சாடு, நிறை எடுத்தல், பாதாதிகேஸாந்தம், விரல், தோரை, பத்மம், பீடம், உசரம், சம சதுரம், நம்பிராட்டியார், ஸ்ரீ ஹஸ்தம், தாழ்வடம், சரி, காறை, கண்டிகை, பொற்பூ, பட்டிகை, குதம்பை, தேவார தேவர், திருக்கம்பி, பட்டக்காறை.

5. விளக்கி எழுதுக :-உடையார், ஸ்ரீ ராஜராஜீஸ்வரம், பொய்கை நாடு கிழவன், தென்னவன் மூவேந்த வேளான், தக்ஷிணமேரு விடங்கன், ஆடவல்லான், நம்பியாரூரனார், நங்கை பரவையார், பெரிய பெருமாள், சந்திரசேகர தேவர், ஒலோகமா தெவியார், திருமேனி, ப்ரபை, உத்திராக்ஷச்சரி, நாண்படு கண்ணும் கொக்குவாயும்.

6. ஆதித்த சூரியன் எழுந்தருளுவித்த உருவங்களில் பித்தளையால் செய்யப்பட்ட உருவம் எது? பெண் உருவங்கள் எவை? அவற்றின் அளவினைக் குறிப்பிடுக.

7. பரகேசரி புரத்து நகரம், வெண்ணி நகரம் - இவை எங்கு உள்ளன? பரகேசரிபுரத்து நகரத்திற்கு வழங்கிய வேறு பெயர் யாது?

8. தேவாரம் பாடிய மூவர் யார்? நங்கை பரவையார் யார்? இவர்கள் உருவங்களுக்கு அணிகலன்கள் வழங்கியவர் யாவர்?

9. பரகேசரி புரத்து நகரத்தார் யார் யாருக்கு அணிகலன்கள் அளித்தனர்? வெண்ணி நகரத்தார் யார் யாருக்கு அளித்தனர்? வெண்ணி நகரத்தார் அளித்தன யாவை?

10. பொய்கை நாடு கிழவன் ஆதித்த சூரியன் சாசனத்தில் காணப்படும் அணிகலன்களின் பெயர்களைக் குறிப்பிட்டு விளக்குக.

11. தக்ஷிணமேரு விடங்கன், ஆடவல்லான் - இவை யாவை? கழஞ்சு, மஞ்சாடி, மா, குன்றி - இவற்றை விளக்குக.

# 6. ஸ்ரீ ராஜராஜ கிணறு சாசனம்*

## முன்னுரை

'ஸ்ரீ ராஜராஜ கிணறு சாசனம்' என்பது, முதலாம் இராசராசன் பெயரால் ஏற்பட்ட கிணற்றைப் பற்றிய சாசனமாகும். எனவே இது 'முதலாம் இராசராசன் சாசனம்' என்று பெயர் பெற்றது. இச் சாசனம் முதலாம் இராசராசன் காலத்தில், அவனது ஆட்சியின் 29 ஆம் ஆண்டில் ஏற்பட்டது. இது காஞ்சிபுரத்திலிருந்து வந்தவாசிக்குச் செல்லும் பெரும் பாதையில் மாமண்டூருக்குத் தென்கிழக்கில், ஐந்து கல் தொலைவிலுள்ள உக்கல் என்னும் கிராமத்தில், இப்பொழுது அழிந்த நிலையில் இருக்கும் விஷ்ணு கோயிலின் மேலைப்புறச் சுவரில் காணப்படுகிறது. தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப் பெற்றது. ஒன்பது வரிகளையுடையது.

இச் சாசனத்தின் முற்பகுதியில் முதலாம் இராசராசன் போர்ச் செயல்களைக் கூறும் அவனது மெய்க்கீர்த்தி† அமைந்துள்ளது. பிற்பகுதியில் இராசராசன் வேலையாளான **கண்ணன் ஆரூரன்** என்பவன் உக்கலுக் கருகில் அம்மன்னன் பெயரால் ஒரு கிணற்றையும், தொட்டியையும் அமைத்து, அக் கிணற்றுக் கருகிலுள்ள தண்ணீர்ப் பந்தலிலிருந்து தண்ணீர் வார்த்தல் முதலிய பணிகளைச் செய்பவர்களுக்குக் கூலியாகக் கொடுக்கப் பட்டு வந்த நெல் முதலிய விவரங்கள் கூறப்பட்டுள்ளன.

---

* S. I. I. Vol. III, Part I, No. 4, pp. 6—8.

**ஸ்ரீ ராஜராஜ கிணறு:** இப்பெயர் இராசகேசரி முதலாம் இராசராசனைக் குறிக்கும். இவன் 'சுந்தரசோழன்' என்னும் இரண்டாம் பராந்தகனுக்கும் வானவன் மாதேவிக்கும் பிறந்தவன்; கி. பி. 985 முதல் 1014 வரை சோழநாட்டை ஆண்டான். தஞ்சை 'இராசராசேசுவரம்' என்னும் பெரிய கோயிலை எடுப்பித்தவனும், சைவத் திருமுறைகளைத் தொகுப்பித்தவனுமிவனே யாவன். இவன் வரலாற்றை இதற்கு முந்திய சாசனத்தின் முன்னுரைப் பகுதியில் காண்க.

† **மெய்க்கீர்த்தி:** சீர் நான்காய் இரண்டடித் தொடையால் அரசன் மெய்ப்புகழெல்லாஞ் சொல்லியும், முடிவில் அவன் வரலாறு சொல்லியும் அவன் மனைவியுடன் வாழ்க எனச் சொல்லியும், அவன் இயற்பெயர் முன்னர் 'ஆண்டு சிறக்க' என்று கூறியும் முடிப்பது. இதன் இலக்கணம் பன்னிருபாட்டியல், வச்சணந்தி மாலை முதலிய பாட்டியல் நூல்களில் காணப்படுகிறது. சோழ மன்னர் தங்கள் மெய்க்கீர்த்திகளில் தத்தம் வெற்றிகளையே முறையாகக் கூறுவர். பாண்டிய மன்னரோ, தங்கள்

முதலாம் இராசராசன் கி. பி. 985 முதல் 1014 வரை சோழ நாட்டை ஆண்டான். இச்சாசனம் அவன் ஆட்சியில் 29 ஆம் ஆண்டில் ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1014 என்னலாம்.

### சாசனம்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ—
திருமகள் போலப்[1] பெருநிலச் செல்வியுந்
தனக்கே யுரிமை பூண்டமை மனக்கொளக்[2]

---

வெற்றிகளுடன் தங்கள் முன்னோர்களின் அருஞ்செயல்களையும் உடன் சேர்த்துக் கூறுவர்.

முதலாம் இராசராசன், அவன் மகன் முதலாம் இராசேந்திர சோழன் என்பவர்கள் மெய்க்கீர்த்திகளில் 'அரசனுடன் அவன் தேவியும் வீற்றிருந்தாள்' என்ற செய்தி காணப்படவில்லை.

**1.** ஸ்வஸ்தி ஸ்ரீ - இது சாசனங்களின் துவக்கத்தில் மங்கலமாக வரும் வடமொழித் தொடர். 'ஸ்வஸ்தி' என்றும் சில சாசனங்களில் வரப்பெறும். ஸ்வஸ்தி - சுவஸ்தி; 'மங்கலம் உண்டாகுக' என்பதும், 'நலம் வளர்க' (Hail prosperity) என்பதும் இதன் பொருள் என்பர். ஸ்வஸ்திகா (நல நிறைவு) என்பதும் இதன் திரிபே எனக் கொள்ளக் கிடக்கின்றது.

[1]திருமகள்போலப் பெருநிலச் செல்வியும்: இது முதலாம் இராசராசன் மெய்க்கீர்த்திகளின் துவக்கமாக வரும் தொடர். இவ்வாறு முதலாம் இராசேந்திர சோழன் கல்வெட்டுக்கள் 'திருமன்னி வளர இருநில மடந்தையும்' என்று தொடங்கும். மெய்க்கீர்த்தியைச் சாசனங்களின் துவக்கத்தில் கொள்ளும் இம்முறையை முதல் முதல் அமைத்துக் காட்டியவன் முதலாம் இராசராசனே யாவான்.

திருமகள் - இலக்குமி : செல்வத்திற்குத் தலைவி. இத் தொடர் இங்கு முதலாம் இராசராசன் செல்வப் பெருக்கைக் குறித்தது. பெருநிலச் செல்வி - பூதேவி. பூமியைத் தெய்வமாகக் கூறுதல் மரபாதலின், இத் தொடர் முதலாம் இராசராசன் நாட்டுப் பரப்பைக் குறித்தது. திருமகள் நிலமகள் இருவரும் திருமாலின் தேவிகள்; திருமகளையும் நிலமகளையும் தனக்கேயுரிமை பூண்டவன் என்பதால், முதலாம் இராசராசன் திருமாலின் அமிசம் என்று குறித்தவாறு காண்க.

மனக் கொள - பகைவர் மனம் கொள்ளும்படி; யாவரும் அறியும் படியாக எனினுமாம்.

[2]'மனக் கொள' என்றும் பாடம்.

**காந்தளூர்ச் சாலைக் கலமறுத் தருளி:** இத் தொடருக்குப் பலரும் பலவாறு பொருள் கூறுவர். காந்தளூர் என்பது, திருவனந்தபுரத்தின் ஒரு பகுதியான 'வலியசாலை' என்றும், அச்சாலையில் உண்ணவேண்டி

காந்தளூர்ச் சாலைக்[1] கலமறுத் தருளி
வேங்கை நாடுங் கங்க பாடியும்
2. தடிகை பாடியும் நுளம்ப பாடியும்[2]
குடமலை நாடுங் கொல்லமும் கலிங்கமும்
முரட்டொழிற் சிங்கள ரீழமண் டலமும்

---

யவர்கள் இத்தனை என்று உண்கலம் வரையறுத்த செய்தியே 'கலமறுத்தல்' என்றும் கூறுவர் ஒரு சாரார். சாலை - அறச்சாலை; கல்விச்சாலை என்பாருமுளர். கலம் - உண்கலம்; அறுத்தல் - வரையறுத்தல். இனி மற்றொரு சாரார், காந்தளூர்ச்சாலை திருவனந்தபுரத்தை யடுத்த மேலைக் கடற்கரையிலுள்ள ஒரு துறைமுகமென்றும், அதிலுள்ள சேரன் மரக்கலங்களை அழித்த செய்தியே 'கல மறுத்தல்' என்றும் கூறுவர். கலம் - மரக்கலம்; அறுத்தல்-அழித்தல்.

முதலாம் இராசராசன் காந்தளூர்ச்சாலையில் தன்னை எதிர்த்த சேர மன்னனையும் அவனுக்குத் துணையாக வந்த 'அமரபுஜங்கன்' என்னும் பாண்டியனையும் வென்றான் என்று வரலாறு கூறுவதால், பின்னர்க் கூறிய பொருளே பொருத்தமாகத் தெரிகிறது. இவ்வாறு முதலாம் இராசேந்திரன், முதலாம் இராசாதிராசன், பராந்தகதேவபாண்டியன் என்பவர்களும் காந்தளூர்ச்சாலை கலமறுத்த மன்னர்களாவர்.

[1]'காந்தளூர்ச்சாலை' என்றும் பாடம்.

**வேங்கைநாடு:** இது கீழைச் சாளுக்கிய ராட்சியின் கீழிருந்த கோதாவரி, கிருஷ்ணா சில்லாக்கள் அடங்கிய பிரதேசம். இதனை 'வேங்கி நாடு' என்றும் கூறுவர். முதலாம் இராசராசன் இதற்கு 'வேங்கை மண்டலம்' என்று பெயரிட்டான். கங்கபாடி: இது மைசூர் இராச்சியத்தின் தென்கீழ்பாலுள்ள பகுதியாகும். காவிரிக் கரையிலுள்ள தலைக்காடு இதற்குத் தலைநகர். பல்லவருள் ஒரு பிரிவினரான கங்க அரசர்கள் இதனை ஆண்டு வந்தனர். முதலாம் இராசராசன் 'இதற்கு முடிகொண்ட சோழ மண்டலம்' என்று பெயரிட்டான்.

2 **தடிகைப்பாடி:** இதனைத் 'தடிகை வழி' என்றும் கூறுவர். இது மைசூர் சில்லாவின் பகுதிகளைக் கொண்டது. கங்கபாடிக்கும் நுளம்ப பாடிக்கும் இடையிலுள்ளது. நுளம்ப பாடி: இது கங்கபாடியை யடுத்ததும், மைசூருக்கு வடதிசையின்கண்ணுள்ளதும், நுளம்பர் என்ற பல்லவர் கிளையினரால் ஆளப்பட்டு வந்ததுமான நாடு. முதலாம் இராசராசன் இதற்கு 'நிகரிலி சோழ மண்டலம்' என்று பெயரிட்டான்.

[2]'நுளம் பாடியும் தடிகை பாடியும்' என்றும் பாடம்.

**முரட்டொழில்** - முரண்+தொழில்; வலிய போர்த்தொழிலையுடைய (warlike) என்பது, இனி இதனை 'முரட்டெழில்' என்று பாடங்கொண்டு முரட்டுத் தன்மையும் அழகும் வாய்ந்த' என்றும் பொருள்கொள்வர்.

இரட்ட பாடி ஏழரை யிலக்கமும்
முந்நீர்ப் பழந்தீவு பன்னீரா யிரமுந்

3. திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்டதன்
னெழில்வள ரூழியு ளெல்லா யாண்டுந்
தொழுதக விளங்கும் யாண்டே செழியரைத்

---

ஈழ மண்டலம் இலங்கை நாடு; இது சிங்களவர் நிறைந்த நாடாதலால் 'சிங்கள ரீழ மண்டலம்' என்று சிறப்பிக்கப்பட்டது. இதனை அக் காலத்தில் ஆண்டவன் 'மகிந்தன்' என்னு மரசன். முதலாம் இராச ராசன் அவனை வென்று இந் நாட்டிற்கு 'மும்முடிச் சோழ மண்டலம்' என்று பெயரிட்டான்.

**இரட்ட பாடி:** இஃது இராட்டிரகூடர் என்ற வேந்தர் ஆண்ட பம்பாய் மாகாணத்தின் தென்பகுதியாகும். இதனைத், தக்கண தேசம் (Deccan) என்றுங் கூறுவர். கி. பி. 975 இல் இவர்கள் வலியைத் தொலைத்து மீண்டும் மேலைச்சாளுக்கியர் இங்குத் தங்கள் ஆட்சியை நிலை நிறுத்தினர். அவருள் முதல்வன் 'இரண்டாம் தைலபன்' என்னும் ஆகவ மல்லன் ஆவன்; அவன் முதலாம் இராசராசனை வென்றதாகக் கூறுவர். அதற்கு ஆதாரமில்லை. இரட்ட பாடி ஏழரை இலக்கம் என்பது, இரட்ட பாடி நாட்டின் வருவாய்த் தொகையைக் குறிக்கும் என்பர். இலக்கம் - இலட்சம். இனி, இத்தொகை நில அளவை அல்லது குடிமக்கள் அளவைக் குறிக்குமென்பாரு முளர். இவ்வாறே 'பழந்தீவு பன்னீராயிரம்' என்பதற்கும் பொருள் கொள்க.

**பழந்தீவு:** இலட்சத்தீவு (Laccadives), மாலைத்தீவு (Maldives) முதலிய தீவுகளைக் குறிக்கும். இவை கடல் நடுவண் இருப்பதால் 'முந்நீர்ப் பழந்தீவு' என்று சிறப்பிக்கப்பட்டன. முந்நீர்—மழை நீர், ஊற்று நீர், ஆற்று நீர் ஆகிய முந்நீரை யுடையது; அஃதாவது, கடல்.

**3. திண்டிறல் வென்றி** - வெற்றியைத் தரும் வலிமை மிக்க. **தண்டு** - சேனை (Army).

**தன்னெழில்** - தனது வலிமை; **ஊழியுள் எல்லா யாண்டும்** - ஊழிக் காலத்து எல்லா ஆண்டும்.

**தொழுதக** - தொழுதற்குத் தகுதியான: இனி 'தொழுதகை' (தொழு+உதகை) என்று பாடமோதி, முதலாம் இராசராசன் உதகையைக் கொண்ட வரலாற்றைக் குறிப்பர். அஃதாவது, முதலாம் இராசராசன் சேரநாட்டிற்கு அனுப்பிய தன் தூதுவனை, அப்பொழுது சேரநாட்டை ஆண்ட 'பாற்கர ரவிமர்மன்' என்பான் அவமதித்து உதகை என்னுமிடத்தில் சிறைப்படுத்தினன். அது கேட்டுப் பொறாத இராசராசன் தன் சேனையுடன் சேரநாட்டின்மேல் படை எடுத்துச் சென்று, காந்தளூர் என்னுமிடத்தில் சேரனையும், அவனுக்குத் துணையாக வந்த பாண்டியன் அமரபுயங்கனையும், வென்று அச் சேர

தேசு கொள் கோராச கேசரி வர்மரான[1]
உடையார் ஸ்ரீ ரர்சராச தேவர்க்கு[2] யாண்

னுடைய கப்பற்படைகளையும் அழித்தான். பின் உதகைக்குச் சென்று தன் தூதுவனைச் சிறைமீட்டான் என்பது. இவ் உதகை, திருவாங்கூர் இராச்சியத்திலுள்ள கல்குளம் தாலுகாவில் நாகர்கோயிலுக்கு வடமேற்கே யுள்ள ஒரு நகரமாகும். யாண்டே - எவ்விடத்தும். செழியர்-பாண்டியர்.

தேசுகொள் - வெற்றிகொண்ட; தேசு - ஒளி; இங்கு அது வெற்றியால் கொண்ட புகழைக் குறிக்கும். கோ-பேரரசன்; ராசகேசரி வர்மர்: இது முதலாம் இராசராசனுக்குரிய பட்டப்பெயர். சோழ அரசர்கள் தங்கள் இயற்பெயர்களுக்கு முன் இராசகேசரி, பரகேசரி என்ற பட்டப் பெயர்களை மாறிமாறித் தரித்து வந்தனர். அஃதாவது, இராசகேசரி முதலாம் இராசராசன் மகன், பரகேசரி இராசேந்திர சோழன் என்று அழைக்கப்பட்டான். 'இராசகேசரி' என்பது அரசர்களுக்குள் சிங்கம் போன்றவன் என்றும், 'பரகேசரி' என்பது பகைவர்களுக்குச் சிங்கம் போன்றவன் என்றும் பொருள் கொள்ளப்படும். இவ்வாறே பிற்காலத்துப் பாண்டிய மன்னர்களும் மாறவர்மன், சடையவர்மன் என்னும் பட்டப் பெயர்களை மாறி மாறித் தரித்து வந்தனர். இம்முறைகளினால் இன்ன அரசருக்குப் பின் இன்ன அரசர் பட்டமெய்தினர் என்பதை நாம் எளிதில் அறிந்துகொள்ள முடிகிறது. வர்மன்-அரசன்.

[1] 'ஸ்ரீகோராஜகேசரி வர்மரான' என்றும் பாடம்.

உடையார்: சோழ அரசர்கள், சாசனங்களில் பெரும்பாலும் 'உடையார்' என்றே குறிக்கப்படுவர். இஃது இறைவனுக்குரிய பெயர். அரசரும் தெய்வ அமிசமுடையவராதலின் 'உடையார்' எனப்பட்டனர். இஃது ஆங்கில அரசர்கள் 'மாட்சிமை தங்கிய (His Majesty) என்று அழைக்கப்படுவது போன்றதாகும். சில சாசனங்களில் அவர்கள் சக்கரவர்த்திகள்' என்றும், கோநேர் இன்மை கொண்டான்' என்றும் குறிக்கப்பட்டுள்ளனர். அவர்கள் 'திரிபுவனச் சக்கரவர்த்திகள்' என்று அழைக்கப்பட்டது, முதலாம் இராசேந்திர சோழனுக்குப் பிற்பட்ட காலத்திலாகும். ஸ்ரீ ராசராச தேவர்க்கு யாண்டு - இராசராச தேவர் ஆட்சியின் ஆண்டு; 'ஸ்ரீ' என்பது, சில விசேடித்த பெயர்களுக்கு முன் அதன் சிறப்பைக் குறித்தற்கு வழங்கும் ஒரு வடசொல். 'திரு' என்பது அதற்குரிய நேர் தமிழ் மொழிபெயர்ப்புச் சொல்.

[2] 'ஸ்ரீ ராஜராஜ தேவர்க்கு' என்றும் பாடம்.

இதுவரை சொல்லப்பட்ட செய்யுள் வடிவமான பகுதி முதலாம் இராசராசன் மெய்க்கீர்த்தியாகும். இதில் முதலாம் இராசராசன் காந்தளூர்ச் சாலைக் கல மறுத்தது, வேங்கை நாடு, கங்க பாடி, தடிகைபாடி, நுளம்ப பாடி, குடமலை நாடு, கொல்லம், கலிங்க நாடு, இரட்ட

4\. ரு உயிகூ ஆவது, ஜயங்கொண்ட சோழ[1] மண்டலத்துக்

---

பாடி, பழந்தீவு, பாண்டிய நாடு ஆகியவற்றை வென்றது முதலிய அவன் வெற்றிச் செயல்கள் முறையே குறிக்கப்பட்டுள்ளன.

**4. யாண்டு உயிகூ ஆவது :** இருபத்தொன்பதாவது ஆண்டு ; இது முதலாம் இராசராசன் ஆட்சியின் இறுதி ஆண்டாகும்.

**ஜயங்கொண்ட சோழ மண்டலம் :** 'சயங்கொண்ட சோழன்' என்பது முதலாம் இராசராசனுக்குரிய பட்டப்பெயர்களில் ஒன்று ; தொண்டை நாட்டை வென்ற அவன் இப்பெயரால் அதனைச் 'சயங்கொண்ட சோழ மண்டலம்' என்று அழைத்தான்.

[1] 'சோள' என்றும் பாடம்.

முதலாம் இராசராசன் காலத்திலும், அவன் மகன் இராசேந்திர சோழன் காலத்திலும், சோழ இராச்சியம் ஒன்பது மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவை சோழ மண்டலம், சயங்கொண்ட சோழ மண்டலம் (தொண்டை நாடு), இராசராச சோழ மண்டலம் (பாண்டிய நாடு), மும்முடிச் சோழ மண்டலம் (இலங்கை நாடு), முடிகொண்ட சோழ மண்டலம் (கங்கவாடி), நிகரிலி சோழ மண்டலம் (நுளம்ப பாடி), வேங்கை மண்டலம் (வேங்கி நாடு), மலை மண்டலம் (சேர நாடு) அதிராசராச மண்டலம் (கொங்கு நாடு) என்பன. ஒவ்வொரு மண்டலமும் பல வளநாடுகளாகவும், ஒவ்வொரு வளநாடும் பல நாடுகளாகவும், பிரிக்கப்பட்டிருந்தன. நாடுகளில் சில கூற்றங்கள் எனவும் வழங்கி வந்தன. ஒவ்வொரு நாடும் சில தனியூர்களாகவும், பல சதுர்வேதி மங்கலங்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தன. தொண்டை மண்டலமட்டும் பழைய முறைப்படி இருபத்து நான்கு கோட்டங்களாகவே பிரிக்கப்பட்டிருந்தது.

**காலியூர்க் கோட்டம் :** தொண்டை மண்டலத்து இருபத்துநான்கு கோட்டங்களுள் ஒன்று. 'கோட்ட'மென்பது இக்கால 'மாவட்டம்' (District) போன்றது. தனியூர் உசால் : தன்னாட்சியையுடைய பெருநகர் ; இது பல சிற்றூர்களைக் (A Village forming its own sub-division). கொண்டிருந்தது. அன்றியும் 'உசால்' என்பதை 'உக்கல்' என்பதன் மரூஉ வெனக்கொண்டு, 'தனியூராகிய உக்கல்' என்பாரு முளர்.

**ஸ்ரீ விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலம்:** இஃது ஒரு தனியூர் உசால்; சயங்கொண்ட சோழ மண்டலத்திலுள்ள காலியூர்க் கோட்டத்தைச் சேர்ந்தது. 'சதுர்வேதி மங்கல' மென்றமையின், இஃது அந்தணர் குடியிருக்குமிடமென்பது வெளிப்படை. இவ்வூர் இப்பொழுது 'உக்கல்' என்ற பெயரோடு வடார்க்காட்டுச் சில்லாவிலுள்ள மாமண்டூரை யடுத்துக் காணப்படுகிறது. தனியூர், சதுர்வேதி மங்கலம் என்பனவற்றிற்கு வட்டம் (Circle) எனப் பொருள் கொள்வாருமுளர்.

காலியூர்க் கோட்டத்துத் தனியூர் உசாலாகிய ஸ்ரீ விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலத்தின் மேலை—

5. ப் பெருவழியில் ஸ்ரீ ராஜராஜதேவர் திருநாமத்தால்-கிணறுங் தொட்டியும் சமைப்பித்தான் உடையார் ஸ்ரீ ராஜராஜ தேவர் பணிமகன், சோழ மண்டலத்து தென் கரை நாட்டு நித்தா

6. விநோத வளநாட்டு ஆவூர்க் கூற்றத்து ஆவூருடையான்

---

5. மேலைப் பெருவழியில் : மேற்றிசைக்கண் ணுள்ளதான பெரும் பாதையில். பெருவழி - Road.

திருநாமத்தால் - பெயரால்.

[1] 'திருநாமத்தால்க்' என்றும் பாடம்.

சமைப்பித்தான்-அமைத்தவன்; பணிமகன்-வேலைக்காரன் (Servant)

சோழ மண்டலம் : இது தஞ்சாவூர், திரிச்சிராப்பள்ளிச் சில்லாக்களைத் தன்பால் கொண்டது; சோழ இராச்சியத்தின் ஒன்பது மண்டலங்களில் ஒன்று; இராசேந்திர சிங்க வளநாடு, இராசாச்ரய வளநாடு, நித்தா விநோத வளநாடு, சத்திரிய சிகாமணி வளநாடு, உய்யக் கொண்டான் வளநாடு, அருண்மொழித்தேவ வளநாடு, கோளாந்தக வளநாடு, இராசராச வளநாடு, பாண்டிய குலாசனி வளநாடு என ஒன்பது வளநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இவ் வளநாடுகளின் பெயர்களெல்லாம் இராசராச சோழனின் இயற்பெரும், பட்டப் பெயர்களுமேயாம்.

6. தென்கரை நாடு : இது நித்தா விநோத வளநாட்டின் மற்றொரு பெயர் என்று கருத இடம் தருகிறது; காவிரியின் தென்கரையில் உள்ளதுபோலும். நித்தா விநோத வளநாடு : 'நித்தா விநோதன்' என்ற முதலாம் இராசராசன் பட்டப்பெயரால் பெயர்பெற்ற வளநாடு. இது சோழ மண்டலத்தைச் சேர்ந்தது; தஞ்சைத் தாலூகாவின் கீழ்ப் பகுதியையும், பாவநாசந் தாலூகாவின் மேல் பகுதியையும், மன்னார்குடி தாலூகாவின் வட பகுதியையும் அரிசிலாற்றின் தென் பகுதியையும் இடமாகக் கொண்டது.

ஆவூர்க் கூற்றம் : வளநாட்டின் பிரிவான நாடுகளில் சில 'கூற்றங்கள்' என்றும் அழைக்கப்படுமாதலின், இது நித்தா விநோத வளநாட்டின் ஒரு கூறு எனலாம். வெண்ணிக் கூற்றம், பாம்புணிக் கூற்றம், நல்லூர் நாடு, கரம்பை நாடு, முடிச்சேர் நாடு என்பன அந் நாட்டின் ஏனை உட்பிரிவுகளாகும். எனவே சோழ நாடு மண்டலம், வளநாடு, நாடு அல்லது கூற்றங்களாகப் பிரிக்கப்பட்டிருந்ததென்பது போதரும். ஆவூர்க் கூற்றம் தஞ்சைச் சில்லா பாவநாசந் தாலூகாவில் தேவாரப் பாடல்பெற்ற ஆவூரைத் தலைநகராகக் கொண்ட நிலப்பரப்

கண்ணனாருரான். இவனே ஸ்ரீ ராஜராஜ கிணற்றில்[1] தொட்டிக்கு நீர் இறைப்பார்க்கு அருமொழி தேவன்[2] மரக்காலால் நிசதம் நெல் ஐ உ ரு ஆக

7. திங்கள் சூ க்கு நெல் ஐ ௲ய களம், ஸ்ரீ ராஜராஜன் தண்ணீ ரட்டுவார்க்கு நிசதம் நெல் ஐ உ ரு ஆக திங்கள்

---

பாகும். இரும்புதலை, விளத்தூர் முதலியனவும் இக் கூற்றத்தில் உள்ளனவாகக் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன.

**கண்ணன் ஆரூரன்** : முதலாம் இராசராசனுடைய பணிமகன். இவன் இயற்பெயர் கண்ணன் என்பது. இவனுக்குச் சொந்தவூர் சோழ மண்டலத்துத் தென்கரை நாட்டு நித்தா விநோத வளநாட்டு ஆவூர்க் கூற்றத்திலுள்ள ஆவூராகும். ஆவூர் என்பதே ஆரூர் என்று மருவி, இவன் 'கண்ணன் ஆரூரன்' என்று அழைக்கப்பட்டான் போலும். முதலாம் இராசராசனது ஆட்சியின் இருபத்தொன்பதாவது ஆண்டில் அவன் பெயரால் ஸ்ரீ விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலம் என்னும் பெருநகரின் மேலைப் பெருவழியில் இவன் ஒரு கிணறும் தொட்டியும் அமைத்து, அதிலிருந்து நாள்தோறும் நீர் வார்ப்பதற்கு ஏற்பாடு செய்தான் என்று தெரிகிறது.

[1] 'ஸ்ரீ ராஜராஜ கிணற்றில்த்' என்றும் பாடம்.

[2] **அருமொழி தேவன் மரக்கால்** : முதலாம் இராசராசன் இயற்பெயர் 'அருண்மொழித் தேவன்' என்பது; அப்பெயரால் அவன் அரண்மனை மரக்கால் 'அருண் மொழித் தேவன் மரக்கால்' எனப் பட்டது. அதற்கு மற்றொரு பெயர் 'இராசகேசரி மரக்கால்' என்பது.

7. **தொட்டிக்கு.........ஆக ஐ சூய்சூ கள வத** : தொட்டிக்கு நீர் இறைப்பார்க்கு நாளொன்றுக்கு 2 குறுணியாக 6 திங்களுக்கு 30 கலம் நெல்லும், ஸ்ரீ ராசராசன் பெயரால் நீர் அட்டுவார்க்கு நாளொன்றுக்கு 2 குறுணியாக 6 திங்களுக்கு 30 கலம் நெல்லும், குசக்கலம் இடுவார்க்குத் திங்கள் ஒன்றுக்கு 2 தூணியாக 6 திங்களுக்கு 4 கலம் நெல்லும், ஆண்டுதோறும் புதுக்குவார்க்குப் புறமாக 2 கலம் 2 தூணி நெல்லுமாக மொத்தம் 66 கலம் 2 தூணி நெல் என்பது. நிசதம் - நாள்தோறும் (Daily). ஐ - நெற்கலம்; ரு - குறுணி; திங்கள் - மாதம்; கள - கலம்; அட்டுவார் - வார்ப்பார்; குசக்கலம் இடுவார் - பானை வனைந்துகொடுக்கும் குயவர்; குசக்கலம்-மட்பாண்டம்; வத - 2 தூணி அல்லது 8 குறுணி, குறுணி - மரக்கால். 1 தூணி - 4 மரக்கால். இதனால் ஆண்டில் ஆறு மாதங்களுக்கே தண்ணீர்ப் பந்தல்கள் நடைபெற்றன வென்று தெரிகிறது.

**கிணற்றுக்கும் தொட்டிக்கும் சேதத்துக்கும்**-கிணறு, தொட்டி ஆகியவைகளின் சேதத்துக்கு. **ஆட்டாண்டுதோறும்** - ஆண்டாண்டுதோறும். **புதுக்குப்புறமாக** - பழுது பார்ப்பதற்குரிய பொருளாக, கோயில்

சூக்கு நெல்லு[1] ருயிகளம், இப்பந்தலுக்குகுசக்கலம் இடு

8. வார்க்கு திங்கள் க க்கு நெல்லு 'வத' ஆக திங்கள் சூ க்கு நெல் ச களம், ஸ்ரீராஜராஜன் கிணற்றுக்கும் தொட்டிக்கும் சேதத்துக்கும் ஆட்டாண்டு தோறும் புதுக்குப் புறமாக வைச்ச

9. நெல்லு உ கள வத ஆக ஐ சூயிசூ கள வத இந்நெல் லுக்கு இவன் பக்கம் இவ்வூர் ஸபையோம் இறை திர வியமும் கிரய திரவியமும் கொண்டு இறை இழிய்ச்சி...

---

முதலியவற்றைப் புதுப்பித்ததற்கு வைத்த தருமச் சொத்தாக ; புதுக்குதல் - புதுப்பித்தல், பழுதுபார்த்தல். புறம் - இறையிலி நிலம் ; 'மடப்புறம்' என்பதில் வரும் 'புறம்' என்பதற்கும் இப்பொருளே அமைதல் காண்க. வைச்ச - குறித்த.

[1] 'நெல்' என்றும் பாடம்.

இவன் பக்கம் - கண்ணனூரானிடத்து ; இவ்வூர் ஸபையோம் - ஸ்ரீ விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலமென்னும் பெருநகர்ச் சபையின ராகிய யாம்; இவர்கள் கிராம மக்களால் குடவோலையின் மூலம் ஆண்டு தோறும் தெரிந்தெடுக்கப்பட்ட ஐம்பெரும் குழுவினராவர். கிராமங்களி லுள்ள குளம், தோட்ட முதலிய பொதுவிடங்கள் இவர்கள் மேற் பார்வையில் இருந்துவந்தன. கிராம ஆட்சியே இவர்கள் கையில் இருந்ததெனலாம்.

இறை திரவியம் - வரிப்பொருள் ; கிரய திரவியம் - விலைப்பொருள். இங்குத் 'திரவியம்' என்பதால், விளைபொருளின் ஒரு பகுதியையே வரியாகக் கொடுத்து வந்தன ரென்பது தெரிகின்றது. இறை - வரி, (Revenue); இறை இழிய்ச்சி - வரியின்றி யாக்கி (having exempted from taxes).

## பயிற்சி வினாக்கள்

(1) சாசனங்களின் ஆரம்பத்தில் செய்யுள் வடிவா யமைந்த பாகத் திற்கு என்ன பெயர்? அதன் இலக்கணம் யாது? அவ்விலக்கணம் எங்குக் காணப்படுகிறது? (2) மெய்க்கீர்த்தியை முன்னர் எழுதி அதனை அடுத்துச் சாசனம் தொடங்கும் வழக்கம் யார் காலத்தில் ஏற்பட்டது? (3) கல்வெட்டுக்களில் காணப்படும் மங்கல மொழிகள் யாவை? அவற் றின் பொருள் என்ன? (4) முதலாம் இராசராசன் மெய்க்கீர்த்தியின் முதற்குறிப்பு யாது? (5) ஸ்ரீ ராசராசன் எந்தெந்த நாடுகளை வென்றான்? (6) முதலாம் இராசராசன் காலத்தில் கப்பல்கள் இருந்தன என்பதனைச் சான்றுகள் காட்டி விளக்குக. (7) 'காந்தளூர்ச் சாலைக் கலமறுத் தருளி' காந்தளூர் எவ்விடத்திலுள்ளது? இத்தொடருக்கு என்னென்ன பொருள்கள் கூறப்படுகின்றன? உரிய பொருள் யாது? (8) 'இரட்ட

பாடி ஏழரை யிலக்கம்', 'முன்னீர்ப் பழந்நீவு பன்னீராயிரம்' இங்கு 'ஏழரை யிலக்கம்' 'பன்னீராயிரம்' - என்னும் தொகைகள் எதனைக் குறிக்கும்? (9) ஈழமண்டலம், பழந்நீவு - இவை சாசனங்களில் எவ்வாறு சிறப்பிக்கப்பட்டுள்ளன? (10) 'ஸ்ரீவிக்கிரமாபரணச்சதுர்வேதி மங்கலம்' எங்குள்ளது? 'சதுர்வேதி மங்கலம்' என்பதை விளக்கி எழுதுக. (11) இராசராசன் திருநாமத்தால் கிணறும் தொட்டியும் சமைப்பித்தவன் எவன்? எவ்விடத்து? (12) ஸ்ரீ ராச ராச தேவன் கிணறு காரணமாக ஆரூருடையான் எவர் எவர்க்கு என்னென்ன ஊதியம் ஏற்படுத்தி யிருந்தான்? (13) 'ஊர்ச் சபையோம்'- இவர்கள் யாவர்? இவர்களின் கடமை என்ன? (14) நெற்கலம், குறுணி, கலம், தூணி - இவற்றிற்குச் சாசனங்களில் குறிக்கப்பெற்ற அடையாளங்கள் யாவை? (15) ஸ்ரீ ராசராசன் காலத்து முகத்தலளவைகள் யாவை? அவன் காலத்து மரக்காலுக்குப் பெயர் என்ன? (16) செயங்கொண்ட சோழ மண்டலத்திற்கும், சோழ மண்டலத்திற்கும் உள்ள உட்பிரிவு களின் பெயர் வேற்றுமையைத் தெரிவிக்க. (17) குறிப்பு வரைக :— நித்தா விநோத வளநாடு, கோட்டம், கூற்றம், தனியூர் உசால், கண்ணன் ஆரூரன், அருமொழி தேவன் மரக்கால், (18) பொருள் தருக :—பெரு நிலச் செல்வி, செழியர், பணிமகன், அட்டுவார், நிசதம், குசக்கலம், புதுக்குப் புறம், இறை திரவியம், இறை இழிய்ச்சி, (19) கிணறுந் தொட்டியும் சமைப்பித்தமை பற்றிய கல்வெட்டால் அறியப்படும் சிறப் புச் செய்திகள் யாவை?

# 7. மேற்பாடி யாகிய இராசாச்ரயபுரத்து நகரத்தார் சாசனம்*

## முன்னுரை

இராசாச்ரயபுரத்து நகரத்தார் சாசனம் என்பது, மேற்பாடி[1] என்னும் இராசாச்ரய புரத்து நகரத்தார், அவ்வூர்த் திரு அரிஞ்சயேச்சுவரத்து மகாதேவர் கோவிலுக்குக் கொடுத்த தேவ தானத்தைப் பற்றிய சாசனமாகும். இச்சாசனம், இராசராச கேசரி வர்மர் என்னும் சிறப்புப் பெயரையுடைய முதலாம் இராச ராசன்[2] காலத்தில் அவன் ஆட்சியின் 29 ஆம் ஆண்டில் ஏற்பட்டது. வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள திருவல்லம் என்னும் ஊருக்கு வடக்கே ஆறு கல் தொலைவில் இருக்கும் மேற்பாடி என்னும் ஊரிலுள்ள சோழேச்சுவரர் கோயில் கருப்ப கிருகத்தின் அடிச் சுவரில் காணப்படுகிறது. தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது; மூன்று பத்தி களாக அமைந்தது.

இச் சாசனத்தின் முற்பகுதியில் முதலாம் இராசராசன் வெற்றிகளைக் கூறும் அவனது மெய்க்கீர்த்தி அமைந்துள்ளது. பிற்பகுதியில், முதலாம் இராசராசன் அவன் பாட்டனை

---

* S. I. I., Vol. III. Part I, No. 15, PP, 22—24.

**1. மேற்பாடி:** இவ்வூர் வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள திரு வல்லத்திற்கு வடக்கே ஆறு கல் தொலைவில் உள்ளது. இராஷ்டிர கூட மன்னனான மூன்றாம் கிருஷ்ண தேவன், கி. பி. 959 இல் இந்த வூரில் வந்து பாடி யமைத்து இருந்ததாக வரலாறு கூறுகின்றது. அன்றியும், அருசர் கடவுள் வழிபாடு செய்து வந்த வள்ளிமலை இவ்வூருக்கு மேற்கில் ஒரு கல் தொலைவில் இருக்கிறது. இங்கு இரு சிவன் கோயில்கள் உள்ளன. அவற்றுள் பெரியது சோமநாதீச்சுவரர் கோயில் எனப்படும். அதில் இப்பொழுதும் இறை வழிபாடு நடைபெற்று வருகிறது. அடுத்த கோயில் அளவில் சிறியது. சோழேச்சுவரர்கோயில் என்று வழங்கு கிறது. அதன் பழைய பெயர் 'அரிஞ்சயேச்சுவரம்' என்பது தென் னிந்திய கல்வெட்டுக்களின் மூன்றாம் தொகுதியிலுள்ள 15, 16, 17, 18 ஆம் கல்வெட்டுக்கள் சோழேச்சுவரர் கோயிலிலும், 19 ஆம் கல்வெட்டு சோமநாதீச்சுவரர் கோயிலிலும் உள்ளன. இவற்றுள் 18 ஆம் கல்வெட்டு ஒன்றும் முதலாம் இராசேந்திரன் காலத்தது; ஏனைய நான்கும் முதலாம் இராசராசன் காலத்தவை யாகும்.

**2.** முதலாம் இராசராசன் வரலாற்றை இந்நூலிலுள்ள ஐந்தாம் சாசனத்தின் முன்னுரைப் பகுதியில் காண்க.

அரிஞ்சய சோழன் பெயரால் மேற்பாடியில் கட்டிய திரு அரிஞ்சய சோழேச்சுவரர் கோயிலுக்கும், அதன் திருச்சுற்றாலயம், திரு முற்றம், திருநந்தனவனம், மடவிளாகம் ஆகியவற்றுக்கும் 5136½ குழி நிலத்தை இறையிலி தேவதானமாக அவ்வூர்ச் சபையார் கொடுத்த செய்தி கூறப்படுகிறது.

இச் சாசனத்தால், மேற்பாடியூர், முதலாம் இராசராசன் காலத்தில் அவன் சிறப்புப் பெயரால், இராசாச்ரயபுரத்து நகரம், என்று அழைக்கப் பட்டுள்ளமையும், அவ்வூரிலுள்ள ஒரு வீதியும் ஒரு கோயிலும் அவன் சிறப்புப்பெயர்களால் மும்முடிச் சோழப் பெருந் தெரு என்றும், சோழேந்திர சிம்ம ஈஸ்வரம் என்றும் பெயர்கள் பெற்றுள்ளமையும், முதலாம் இராசராசன் எடுத்த கோயிலுக்கு ஊரார் நிலங்கொடுத்து உதவி, அதனால் கோயில் கட்டுவதற்கு அக்கால அரசரும் குடிகளும் ஒன்று பட்டுள்ளமையும் ஆகிய செய்திகள் அறியப்படுகின்றன.

முதலாம் இராசராசன் கி. பி. 985 முதல் 1014 வரை சோழ நாட்டை ஆண்டான். இச்சாசனம் அவன் ஆட்சியின் 29 ஆம் ஆண்டு ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1014 ஆம் ஆண்டு என்னலாம்.

சாசனம்

ஸ்வஸ்தி ஸ்ரீ
திருமகள் போலப் பெருநிலச் செல்வியுந்
தனக்கே யுரிமை பூண்டமை மனக்கொளக்
காந்தளூர் சாலை கலமறுத் தருளி
வெங்கை நாடுங் கங்க பாடியு
நுளம்ப பாடியும் தடிக பாடியும்

---

குறிப்புரை

**ஸ்வஸ்தி ஸ்ரீ** - மங்களம் உண்டாக; 'நலம் வளர்க' எனினுமாம். **திருமகள்** - செல்வச் சிறப்பு; **பெருநிலச்செல்வி** - நாட்டுச்சிறப்பு; **உரிமை பூண்டமை** - உரிமையாகக் கொண்டமையை; **மனக்கொள்** - மனத்திலே கொண்டு; **காந்தளூர்சாலை கலமறுத்தருளி** - காந்தளூர் என்னும் ஊரிலுள்ள உண்ணும் சாலையின்கண் உண்பார் இத்துணைய ரென வரையறுத்து; காந்தளூர், சேரநாட்டின் கடற்கரையிலுள்ளது. **கலம்** - உண்கலம்.

**வெங்கை நாடு**: இது கீழைச் சாளுக்கியர் ஆண்ட நாடு; **கங்க பாடி**: கங்கர் என்ற பல்லவ வகுப்பினர் ஆண்ட நாடு; **நுளம்பபாடி** - நுளம்பர் என்ற பல்லவ வகுப்பினர் ஆண்ட நாடு. **தடிக பாடி** - தடிகை

குடமலை நாடுங் கொல்லமுங் கலிங்கமு
மெண்டிசை புகழ்தர வீழமண் டலமு
மிரட்ட பாடி யெழரை யிலக்கமுந்
திண்டிறல் வென்றித் தாண்டாற்க் கொண்டதந்
னெழில்வள ரூழி எல்லா ।। ரண்டுந்
தொழுதகை விளங்கும் யாண்டெய் செழியரைத்
தெசுகொள் ஸ்ரீகொவி ராஜராஜ கெஸரிபந்ம
ராநஸ்ரீ ராஜராஜ தெவர்க்கு யாண்டு
உ௰கூ ஆவது ஜயங்கொண்ட சொழ மண்டலத்துப்

---

பாடி ; இது கங்க பாடிக்கும் நுளம்பபாடிக்கும் இடையிலுள்ள ஒரு சிறு நாடு ; 'தடிகை வழி' என்றும் சொல்லப்படும். குடமலை நாடு : கொங்காள்வார் என்னும் மரபினர் ஆண்ட நாடு ; 'கொங்கு நாடு' எனவும் வழங்கும். கொல்லம் : சேரநாட்டின் ஒரு பகுதியாய் மேலைக் கடற்கரையிலுள்ள தொரு சிறு நாடு. கலிங்கம் - கலிங்க நாடு; கோதா வரிக்கும் மகா நதிக்கும் இடையிலுள்ளது ; கீழைச் சாளுக்கியர் ஆட்சிக் குட்பட்டது. ஈழ மண்டலம் - இலங்கை நாடு ; சிங்கள வகுப்பினர் வாழும் நாடு. இரட்டபாடி யெழரை யிலக்கம் : மகாராஷ்டிர வகுப்பின ரான இராஷ்டிர கூடர் ஆண்ட நாடு ; ஏழரை யிலக்கம் வருவாயை யுடையது.

தாண்டு - சேனை ; செழியர் - பாண்டிய மன்னர் ; முதலாம் இராச ராசன் பாண்டியரைப் பல தடவை வென்றானதலின், 'செழியர்' எனப் பன்மையால் கூறப்பட்டனர். தெசு - வெற்றி ; புகழ் எனினுமாம்.

**ராஜராஜகெஸரி பந்மராந ஸ்ரீராஜராஜ தெவர் :** இராசகேசரி, இராச ராசன் என்பன முதலாம் இராசராசனுக்கு வழங்கிய பட்டப் பெயர்கள். 'அருண்மொழிதேவன்' என்பது அவனது இயற்பெயர்.

**ஜயங்கொண்ட சொழ மண்டலம் :** இது தொண்டை மண்டலத் திற்கு முதலாம் இராசராசன் இட்ட பெயர். செயங்கொண்ட சோழன் என்பது அவனுடைய சிறப்புப் பெயர்களுள் ஒன்று. பெரும் பாணப் பாடி: இது தமிழ் நாட்டிற்கும் தெலுங்கு நாட்டிற்கும் இடையிலுள்ளது. இதனைக் கி. பி. நான்காம் நூற்றாண்டு முதல் பெரும்பாணர் என்ற வகுப் பினர் ஆண்டுவந்தனர். பல்லவ மல்லன் காலத்தில் பெரும்பாண பாடிக்கு மகதநாடு என்றும், அதன் தலைநகருக்கு ஆறை நகர் என்றும் பெயர்கள் வழங்கின. அதனால் அதை ஆண்ட மன்னர் 'மகதேவர்' என்றும், 'ஆறைக் காவலர்' என்றும் அழைக்கப்பட்டனர். வாணாதி ராயர் என்றும் அவர்கள் பெயர்பெற்றிருந்தனர். முதலாம் இராசராசன் காலத்தில், இப்பகுதி செயங்கொண்ட சோழ மண்டல மென்னும் தொண்டை நாட்டின் ஒரு பகுதியாய் விளங்கிற்று. இப்பொழுது இது செங்கல்பட்டு மாவட்டத்தில், பாலாற்றின் உபநதியான நூவா நதியின்

பெரும் பாணப் பாடித் தூஞாட்டு மெற்பாடியாகிய ராஜாச்ரய புரத்து நகரத்தொம் ஆற்றூர்த் துஞ்சின தெவர்க்குப் பள்ளிபடையாக உடையார் ஸ்ரீ ராஜராஜ தெவர் எங்கள் நகரத்தி லெடுப்பித் தருளின திரு அறிஞ்சிகை ஈஸ்வரத்து

---

மேல் கரையில் 'திருவல்லம்' என்ற பெயரோடு வழங்குகிறது. இதற்கு வாணபுரம் என்ற மற்ெறாரு பெயருமுண்டு; 'தீக்காலி வல்லம்' என்றும் இதனை அழைப்பர்.

**தூஞாடு** - பெரும்பாணப்பாடி என்னும் நாட்டின் பிரிவுகளில் இஃது ஒன்று. இதனைத் 'தூய் நாடு' என்றும் வழங்குவர். ராஜாச்ரயபுரம். இது மேற்பாடி என்னும் ஊருக்கு முதலாம் இராசராசன் காலத்தில் வழங்கிய பெயர். இராசராசனுக்குரிய இடம் என்பது இதன் பொருள். அருண்மொழி தேவருக்குரிய சிறப்புப் பெயர்களில் இராசராசன் என்பது ஒன்று. இவ்வாறே 'மும்முடிச் சோழன்' என்னும் இவனுடைய சிறப்புப் பெயரால், இவ்வூரிலுள்ள ஒரு பெருந்தெருவும், 'சோழேந்திர சிங்கன்' என்னும் சிறப்புப் பெயரால் ஒரு கோயிலும் அழைக்கப்பட்டுள்ளமையும் இச்சாசனத்தால் அறியப்படுகிறது.

**ஆற்றூர்த் துஞ்சின தேவர்** - ஆற்றூர் என்னும் இடத்தில் இறந்த மன்னன்; இவன் அரிஞ்சய சோழன் என்பது, முதலாம் இராசராசன் இவனை நினைவுகூர்வதற்காக மேற்பாடியில் இவன் பெயரால் ஒரு கோயில் எடுத்துள்ளமையால் தெரிகிறது. இவன் முதற்பராந்தக சோழனுடைய மூன்றும் புதல்வன்; பரகேசரி பட்டம் பெற்றவன். கி. பி. 956 முதல் 957 வரை சோழநாட்டை ஆண்டான்; தன் தந்தையிடமிருந்து இராஷ்டிர கூட மன்னனை மூன்றாம் கிருஷ்ண தேவன் வென்ற தொண்டை நாட்டையும் திருமுனைப்பாடி நாட்டையும் வெல்லக் கருதிப் போருக்குச் சென்று அப்போரில் இவன் இறந்தான் என்று தெரிகிறது. இவன் இறந்த இடம் வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள ஆற்றூர்; எனவே, இவன் 'ஆற்றூர்த்துஞ்சிய தேவர்' என்று அழைக்கப்பட்டான். **பள்ளி படையாக** - ஞாபகார்த்தமாகக் கட்டப்பட்ட கோயிலாய்; பள்ளி படை என்பது, இறந்த அரசரின் ஞாபகார்த்தமாகக் கட்டப்படும் (Temple ereeted in memory of kings) கோயிலாகும்.

**உடையார் ஸ்ரீ ராஜராஜ தெவர்** - முதலாம் இராசராச சோழன்; இவன் தன் பாட்டனை அரிஞ்சய சோழனது ஞாபகார்த்தமாக, மேற்பாடி என்னும் இராசாச்ரய புரத்தில் ஒரு கோயிலைக் கட்டி, பல நிவந்தங்களும் வழங்கினன். அது அரிஞ்சய சோழன் பெயரால் 'அரிஞ்சயேச்சுரம்' என்றுவழங்கிற்று. இக்காலத்தில் அது 'சோழேச்சுரம்' என்று வழங்குகிறது: மிகவும் அழிந்த நிலையில் உள்ளது.

**எடுப்பித் தருளின** - கட்டிய; திரு அறிஞ்சிகை ஈஸ்வரத்து மஹாதெவர் ஸ்ரீ கொயில்: அரிஞ்சயேச்சுரம் என்பது கோயில் பெயர்;

மஹாதெவா ஸ்ரீ கொயிலுக்குந் திருச்சுற்ருலைக்குந் திரு முற்றத்துக்குந் திருநந்தன வனத்துக்கும்

**2.** மடவிளாகத்துக்குமாக நாங்களித் தெவற்குக் குடுத்த நிலத்துக் கெல்லை நுகாவென்னு மாற்றுக்கு மெற்கும் இவ்வூர் மும்மடி சொழப் பெருந்தெருவில் வியாபாரி ஆச்செருமான் வயிரமெகன் தொட்டப் பாழான நிலத்தின் வடவருகெய் நுகாவாற்றி னின்று மிருகொ லகலத்தால் மெற்கு

---

மகாதேவர் என்பது அக்கோயில் இறைவன் பெயர். திருச்சுற்ருலை - திருச்சுற்ருலயம்; அஃதாவது, பெரிய கோயிலைச் சுற்றியிருக்கும் காப்புக் கடவுளர்க் குரிய சிறு கோயில்களாகும். இதனைத் 'திருச்சுற்று மாளிகை' என்றும், 'பரிவார ஆலயம்' என்றும் வழங்குவர். திருமுற்றம் கோயில் முன்னிடம். சுவாமி சன்னிதி (Court-yard in front of the chief idol of a temple): திருநந்தன வனம் - கோயில் நந்தவனம்.

**2.** **மடவிளாகம்** - மடவளாகம், கோயிலைச் சூழ்ந்துள்ள வீதி; இத்தெவற்குக் குடுத்த நிலத்துக் கெல்லை-இராசாச்ரயபுரத்து அரிஞ்சயேச்ரம் கோயில் இறைவனுகிய மகாதேவற்குத் தேவதானமாகக் கொடுத்த நிலத்திற்கு எல்லையாவன: அவை வருமாறு:—

**கிழக்கே** நூவா நதியும், தெற்கே நூவா நதியினின்றும் இரண்டு கோல் அகலத்தில் மேற்கு நோக்கிச் செல்லும் பெரும் பாதையும் (அது 37 கோல் நீளமுடையது; மேற்பாடி ஊரிலுள்ள மும்முடிச் சோழப் பெருந்தெருவில் குடியிருந்த வியாபாரியான ஆச்செருமான் வயிர மேகன் தோட்டத்தைச் சேர்ந்த பாழான நிலத்திற்கு வடக்கிலுள்ளது), மேற்கே கிழக்கு மேற்காகச்செல்லும் பெருவழியின் மேற்கு முடிவிடத்திலிருந்து வடக்கு நோக்கிச் செல்லும் பெரும் வழியும் (அப்பெருவழி வடக்கே சோழேந்திர சிம்ம ஈசுவரர் கோயிலில் நாட்டியமாடும் மகளிர் தங்கும் இடமாகிய மத்தவாணச்சேரி வரையும் சென்றது). வடக்கே மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி நூவாநதி வரை 4 கோல் அகலத்தில் செல்லும் பெரு வழியும் (அது சோழேந்திரசிம்ம ஈஸ்வரர் கோயிலுக்குத் தெற்கேயுள்ள அதன் நந்தவனத்திற்குத் தெற்குக் கரை ஓரமாகவுள்ளது) எல்லைகளாகும்.

**இவ்வூர் மும்மடி சொழப் பெருந்தெரு:** மேற்பாடி என்னும் இராசாச்ரயபுரத்து நகரத்திலுள்ள ஒரு தெரு. இந்தத் தெருவில்தான் ஆச்செருமான் வயிர மெகன் என்னும் வியாபாரி குடியிருந்தான். இதனுல் இக்காலத்தில் போல அக்காலத்திலும் அரசன் போன்ற பெரியார் பெயர்களை ஊர்களுக்கும், ஊர்த் தெருக்களுக்கும் இட்டு வழங்குதல் வழக்கமாயிருந்ததென்றும் தெரிகிறது.

**வடவருகெய்** - வடக்குக் கரையோரமாக; **நுகாவாற்றின்** - நூவா நதியின்; இது 'நீவா' என்றும் 'பொன்னை' என்றும் வழங்கும். இதன்

நொக்கிப் பொன பெருவழி எண்பத்தெழு கொலாசறுதிக்கு வடக்கு மிவ்வாசறுதியெய் வடக்கு நொக்கிச் சொளெந்ர ஸிம்ம ஈஸ்வரமுடைய தெவர் தெவரடியார் மத்தவாணச் செரியெ யெறப்பொன செருவுக்குக் கிழக்குஞ் சொளெந்ர ஸிம்ம ஈஸ்வரமுடையார் கொயிலின் தெற்கில் திருநந்தன வனத்தின் தென்னருகெய் நுகரவென்னு மாற்றுக்கெய் கிழக்கு நொக்கி நாற்கொ லகலத்தாற் பொன பெருவழிக்குத் தெற்கு மிந்நாற் பெரெல்லையுள்ளு மகப்பட்ட நிலம் எங்களூர ளந்து கூறிட்ட பதினெண் சாண் கொல்லாற் குழி ஐய்யா யிரத் தொருநூற்று முப்பத்தா றரையு மித்தெவற்குத் தெவதான இறையிலியாகக் குடுத்தொம் இந்நிலத்தாறெய் நுகரவென்னு மாற்றினின்றும் இத்தெ—

---

மேற்குக் கரையில்தான் மேற்பாடியூர் உள்ளது. இரு கொலகலத்தால் : இரண்டு கோல் அகலத்தில் ; இங்கு ஒரு 'கோல்' பதினெட்டுச் சாண் நீளமுடையதென்பது. பின்னர் ''எங்களூரளந்து கூறிட்ட பதினெண் சாண் கொல்லால்'' என வரும் தொடரால் அறியப்படும். ஆசறுதி - கடைசி ; இவ் வாசறுதியெய் - இந்தக் கடைசி இடத்திலிருந்து.

**சொளெந்ர ஸிம்ம ஈஸ்வர முடைய தெவர்** : மேற்பாடி யூரிலுள்ள சிவன் கோயில்கள் இரண்டனுள் பெரிய கோயில் 'சோழேந்திர சிம்ம ஈஸ்வரர் கோயில்' என்று பெயர் பெறும். இஃது இப்பொழுது 'சோம நாதீச்சுவரர் கோயில்' என்று வழங்குகிறது. இந்தக் கோயில் தேவ தாசிகள்தான் மத்தவாணச்சேரி என்னும் இடத்தில் வசித்தனர். தெவ ரடியார் - தேவதாசிகள், கோயிலில் நாட்டியமாடும் மகளிர்.

**மத்தவாணச்செரியெ யெறப் பொன செருவுக்குக் கிழக்கு** - மத்தவாணச் சேரி என்னும் இடத்திற்கு நேராகச் சென்ற தெருவுக்கும் கிழக்கு ; மத்தவாணச் சேரி என்றது, சோழேந்திர சிம்ம ஈசுவரர் கோயில் தேவரடியார் குடியிருந்த இடம் ; செரு - தெரு ; தென்னருகெய்- தெற்குக் கரையோரமாக ; எங்களூரளந்து கூறிட்ட - எங்களூரை அளந்து பங்கிட்ட ; பதினெண்சாண் கொல்லால் - பதினெட்டுச் சாண் அளவுள்ள கோலால் ; கோல் - அளவு கோல்.

**தெவதானம்** - கோயிலுக்குத் தானமாக விடப்பட்ட நிலம் ; இறை யிலி - வரியின்றி விடப்பட்ட நிலம் ; இந்நிலத்தாறெய் - இந்த நிலத்து வழியாக ; இத்தெவர் இந்நிலத்துக்கும் - அரிஞ்சயேச்சுரம் கோயில் இறைவருக்குத் தேவதானமாக வரியின்றி விடப்பட்ட இந்த 5136½ குழி நிலத்திற்கும்.

3. வரிக்கிலத்துக்கு மிலுப்பைக் கழனிக்கு நீர் பாய்ந்த வாய்க்கால் காற் கொலகலத்தால் இத்தெவரிக் கிலத்துக்கு மிலுப்பைக் கழனிக்கு நீர் பாயப் பெறவு மிப்பரிசு தெவ தான இறையிலியாகச் சிலாலெகை செய்து குடுத்தொ மெற் பாடியான ராஜாச்ர புரத்து நகரத்தொம் இந் நகரத்தார் சொல்ல எழுதினென் இந் நகரக் கரணத்தான் நாராயண னடைக்கலவனென் இவை யென்னெழுத்து இது பன்மா ஹெஸ்வர ரக்ஷெ—

---

3. இலுப்பைக் கழனிக்கு - இலுப்பை மரத்தையுடைய வயல் நிலத் திற்கும்; நீர் பாய்ந்த வாய்க்கால் - நீரைப் பாய்ச்சிய வாய்க்கால்; அது கால் கோல் அல்லது 4½ சாண் அகலமுடையது. தூவா நதியினின்றும் மேற்பாடியூர் நடுவே செல்வது; மேற் கூறிய தேவதான நிலத்திற்கும், இலுப்பைக் கழனிக்கும் தண்ணீர் பாய்ச்சுவது. காற்கோலளவாக - 4½ சாண் அளவில்; நீர்பாயப் பெறவும் - தண்ணீர் பாய்வதற்கும்; இப்பரிசு- இந்தப் படியே; தெவதான இறையிலி யாக - தேவதானமாகவும் இறை யிலியாகவும்; சிலாலெகை செய்து குடுத்தொம் - கல்லில் வெட்டிக் கொடுத்தோம்; சிலாலெகை - கல்வெட்டு; நகரத்தார் - நகரத்துச் சபையார், ஊர்ச் சபையார்.

கரணத்தான் - ஊர்ச்சபைக் கணக்கன்; இராசாச்ரயபுரத்து நகரத் தார் சாசனத்தைச் சபையார் சொல்ல எழுதியவன், அவ்வூர்க் கரணத் தானான நாராயணன் அடைக்கலவன் என்பவனுவான், பன்மா ஹெஸ்வர ரக்ஷெ - அடியார் கூட்டம் காக்க. பன்மா ஹேஸ்வரர் - சிவனடியார்கள்.

## பயிற்சி வினாக்கள்

1. மேற்பாடியூர் எங்கு உளது? முதலாம் இராசராசன் காலத்தில் அதற்கு வழங்கிய பெயர் யாது? அக்காலத்தில் அஃது இருந்த இடம் எங்ஙனம் கூறப்பட்டுள்ளது?

2. இராசாச்ரய புரத்து நகரத்தார் சாசனம் எங்குக் காணப்படு கிறது? அதில் கூறப்படும் செய்திகள் யாவை?

3. முதலாம் இராசராசன் அடைந்த வெற்றிகள் யாவை? அவன் மேற்பாடியூரில் கட்டிய கோயில் எது? எது பற்றிக் கட்டினன் என்பதைச் சான்று காட்டி விளக்குக.

4. குறிப்பு வரைக:—காந்தளூர்ச்சாலை கலமறுத்தது, இரட்டபாடி ஏழரை யிலக்கம், பெரும்பாணப்பாடி, ஆற்றூர்த் துஞ்சினதேவர், திருச் சுற்றாலை, ஆச்செருமான், வயிரமேகன், மத்தவாணச்சேரி, இலுப்பைக் கழனி, சிலாலேகை செய்து கொடுத்தல், பன்மா ஹேஸ்வர ரக்ஷை.

5. பொருள் தருக:—தண்டு, செழியர், பள்ளிபடை, திருமுற்றம், திருநந்தனவனம், மடவிளாகம், கோல், ஆசறு, தேவரடியார், செரு, தேவதானம், இறையிலி, கழனி, இப்பரிசு, ஊர்க்கரணத்தான், பன்மாஹேஸ்வரர்.

6. மேற்பாடி யூரில் காணப்படும் இரு சிவன் கோயில்களின் முற்கால இக்காலப் பெயர்களைக் குறிப்பிட்டு விளக்குக.

7. ஆற்றூர்த் துஞ்சின தேவர் யார்? அவருக்குப் பள்ளிபடையாக யார் எவ்விடத்தில் கோயில் எடுத்தனர்? அதன் முற்காலப் பிற்காலப் பெயர்கள் எவை?

8. இராசாச்ரய புரத்து நகரத்தார் அவ்வூர்ச் சோமேச்சுவரர் கோயிலுக்கு இறையிலி தேவதானமாகக் கொடுத்த நிலம் எவ்வளவு? அதன் எல்லைகளைக் குறிப்பிடுக.

9. முதலாம் இராசராசன் பெயரால் மேற்பாடியூருக்கும் அவ்வூரிலுள்ள ஒரு தெருவுக்கும், ஒரு கோயிலுக்கும் வழங்கிய பெயர்களைக் குறிப்பிடுக.

10. இராசாச்ரயபுரத்து நகரத்தார் சாசனத்தை எழுதியவன் யாவன்? அச்சாசனத்தின் தொடக்க முடிவுகளைக் குறிப்பிடுக.

# 8. திருப்பதியம் விண்ணப்ப சாசனம்*

போர்ச்செயல்.

## முன்னுரை

திருப்பதியம்—திருப்பதிகம்; அஃதாவது தேவாரம், திருப்பதியம் விண்ணப்ப சாசனம் என்பது, முதலாம் இராசராசன் தஞ்சை இராசராசேசுவரம் என்னும் பெரிய கோயிலில் தேவாரம் பாடுவதற்குச் செய்த ஏற்பாட்டைக் கூறும் சாசனமாகும். இச் சாசனம் முதலாம் இராசராசன் ஆட்சியின் 29 ஆம் ஆண்டிற்கு முன்னர் ஏற்பட்டது. தஞ்சாவூர் இராசராசேசுவரர் கோயில் வடக்குச் சுற்றுப்புறச் சுவரின் வெளிப்பக்கத்தில் காணப்படுகிறது. தமிழ் மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது; பதினொந்து பத்திகளை யுடையது.

இச் சாசனத்தில் முதலாம் இராசராசன் தஞ்சைப் பெரிய கோயிலில் திருப்பதியம் பாடுவதற்கு ஏற்படுத்திய 48 பேர்களுக்கும், அப்பொழுது உடுக்கை, கொட்டி மத்தளம் பாடும் இருவருக்குமாக ஐம்பது பேர்களுக்கு நாள்தோறும் கொடுக்கப்பட்டு வந்த நெல் முதலிய விபரங்கள் கூறப்பட்டுள்ளன. முதலாம் இராசராசன் தேவாரப் பாடல்களைத் தொகுத்தான் என்பது வரலாறு கூறும் செய்தியாகும். எனவே, அவன் தேவாரப் பாடல்களைத் தொகுத்தது மன்றி, அப்பாடல்களைக் கோயில்களில் பாடுவதற்கு ஏற்பாடுகளும் செய்தான் என்பது இச் சாசனத்தால் அறியப்படுகிறது. அவன் வழிபட்டு வந்த இறைவன் தேவாரத் தேவர் என்று முன்னர் ஆதித்த சூரியன் சாசனத்தில் குறிக்கப்பட்டிருப்பதும் இதனைப் புலப்படுத்தும்.

இனி, இச் சாசனத்தில் குறிக்கப்பட்டுள்ள ஐம்பது பேர்களின் பெயர்கள் மூலம் நாம் சில உண்மைகளை அறியமுடிகிறது. தேவாரம் பாடிய மூவர்களில் திருஞானசம்பந்தன் பெயர், 'திருஞானசம்பந்தன்' என ஓரிடத்தில் (எ), 'சம்பந்தன்' என நான்கு இடங்களிலும் (ய, உஉ, ௩௪, ௩அ) காணப்படுகின்றன. திருநாவுக்கரசன் பெயர், 'திருநாவுக்கரையன்' என ஏழு இடங்களில் (சு, யஉ, யச, யகூ, உஅ, சந, சரு) உள்ளது. நம்பியாரூரன் பெயர் 'நம்பியாரூரன்' என இரண்டு இடங்களிலும் (சக, சச) 'ஆரூரன்' என இரண்டு இடங்களிலும் (யகூ, உஉ) காணப்படுகிறது. சிவனடியார்களில் சீராளதேவர் பெயர், 'சீராளன்' என இரு இடங்களில் (யந, யரு) வந்துள்ளது.

---

* S. I. I., Vol, II., Part III, No. 65, pp. 2—259.

1. ஒவ்வொருவருக்கும் நாள்தோறும் மூன்று குறுணி நெல் கொடுக்கப்பட்டது.

மேலும் இச் சாசனத்தில் குறிக்கப்பட்டுள்ள பெயர்களால் பெரிய புராணத்தில் கூறப்பட்டுள்ள திருவாஞ்சியம், திருவாரூர், திருவாமூர், திருமறைக்காடு முதலிய சிவத்தலங்களின் பெயர்களும் அறியப்படுகின்றன. அன்றியும், சிதம்பரத்திலுள்ள இறைவன் பெயர்களாக அம்பலவன் (௰க), அம்பலத்தாடி (௪, ௪௯) அம்பலக் கூத்தன் (௰அ), கூத்தன் (௨௰, ௨௬, ௨௬, ௩௧, ௪௬), தில்லைக் கூத்தன் (௪௬), தில்லைக்கரசு (௩௩), எடுத்த கோலம் (௬, ௨௪, ௩௨) முதலிய பெயர்களும் இச் சாசனத்தில் காணப்படுகின்றன. இவைகளால், தேவாரம் பாடிய மூவர் காலம் முதலாம் இராசராசன் காலத்திற்கு முந்திய தென்றும், அந் காலத்தில் சைவ சமயம் தமிழ் நாட்டில் சிறப்புற் றிருந்த தென்றும் நாம் அறிகிறோம்.

முதலாம் இராசராசன் கி. பி. 985 முதல் 1014 வரை சோழ நாட்டை ஆண்டான். இச்சாசனம் அவனது ஆட்சியின் 29ஆம் ஆண்டிற்கு முன்னர் ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1014க்கு முந்திய தென்னலாம்.

சாசனம்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ
திருமகள் போலப் பெருநிலச் செல்வியுந்
தனக்கே யுரிமை பூண்டமை மனக்கொள்க்[1]
காந்தளூர்ச் சாலை[2] கலமறுத் தருளி
வெங்கை நாடுங் கங்க பாடியுங்

1. ஸ்வஸ்திஸ்ரீ: இது சாசனங்களின் தொடக்கத்தில் மங்கலம் குறித்து வரும் வடமொழித் தொடர். இதற்கு விளக்கம் முதலாம் சாசனக் குறிப்பில் காண்க.

திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்: முதலாம் இராசராசன் சாசனத்தில் வரும் மெய்க்கீர்த்தியின் தொடக்கம் இது.

[1] 'மனக்கொள்' என்றும் பாடம்.

காந்தளூர்ச்சாலைக் கலமறுத்து: இதற்குக் 'கடற்றுறைக் கண்ணதாகிய காந்தளூரில் உண்ணும் சாலைக்கண் நாடோறும் உண்பார் இத்துணையரென உண்கலங்களை வரையறுத்து' எனப் பொருள் கொள்வர் ஆராய்ச்சியாளர். அவர் 'காந்தளூர்ச்சாலை கலமறுத்து' என்ற பாடம் தகுதியுடையதன்று என்பர். இதன் விளக்கங்களை முந்திய சாசனக் குறிப்பில் காண்க.

[2] 'காந்தளூர் சாலைக்' என்றும் பாடம்.

வெங்கை நாடு: இது கீழைச் சாளுக்கிய நாட்டிற்குத் தலைநகர் என்று கூறுவர் திரு. L உலகநாத பிள்ளை யவர்கள். கங்கபாடி: கங்கர்

தடிகை பாடியும் நுளம்ப பாடியுங்
குடமலை நாடுங் கொல்லமுங் கலிங்கமும்
முரட்டெழில் சிங்களர் ஈழமண் டலமும்
இரட்ட பாடி எழுரை இலக்கமும்
முன்னீர்ப்[1] பழந்தீவு பன்னீரா யிரமுந்
திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்டதன்—
னெழில்வள ருழியு ளெல்லா யாண்டுந்
தொழுதக விளங்கும் யாண்டே செழியரைத்
தெசுகொள் கொராஜ கேஸரி வன்மரான
ஸ்ரீராஜராஜ தெவர்க்கு| யாண்டு—

2. இருபத்தொன்பதாவது வரை உடையார் ஸ்ரீ ராஜ ராஜீஸ்வரம் உடையார்க்குத் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்ய உடையார் ஸ்ரீராஜராஜ தெவர் குடுத்த பிடாரர்கள் நாற்பத்தெண்மரும், இவர்களிலெ நிலையாய் உடுக்கை வாசிப்பா—

---

என்ற பல்லவ வகுப்பினர் ஆண்ட இடமாதல் பற்றி இஃது இப்பெயர் பெற்றதென்பர்.

**தடிகை பாடி**: இது கங்கபாடிக்கும் நுளம்பபாடிக்கும்இடையிலுள்ள தொரு நாடு; இதனைத் 'தடிகை வழி' என்றும் கூறுவர்.

**குடமலை நாடு**: இதனைக் கொங்காள்வார் என்னும் மரபினர் ஆண்டனர். **கொல்லம்**: இக்காலத்தில் கொயிலான் (Quilon) என்று அழைக்கப்படுகிறது. இது சேர நாட்டின் ஒரு பகுதியான மேலைக் கடற்கரையிலுள்ள பிரதேசமாகும். **கலிங்கம்**: கோதாவரி யாற்றுக்கும் மகாநதிக்கும் இடையிலுள்ள நாடு; கீழைச் சாளுக்கியருக்கு வாழ்விடம்; இப்பொழுது வட சர்க்காரி லிருப்பது.

**இரட்டபாடி எழுரை இலக்கம்**: மகாராட்டிய வகுப்பினரான இராஷ்டிரகூடர் ஆண்ட இடம் என்பர். ஏழரையிலக்கம் என்றது, அந்நாட்டின் ஆண்டு வருவாயை: இவ்வாறு நாட்டின் வருவாயையும் அந்நாட்டுப் பெயருடன் சேர்த்துச் சொல்லுதல் பண்டை வழக்குப்போலும்.

[1]'முன்னீர்' என்றும் பாடம்.

2. **செழியர்** - பாண்டிய மன்னர்; முதலாம் இராசராசன் பாண்டிய நாட்டின்மீது பல தடவை போர் செய்து வென்றானதலின் 'செழியர்' என்று பன்மையால் கூறினர் போலும்.

**ராஜகேஸரி வன்மன் ராஜராஜன்**: இவை முதலாம் இராசராசனுக்குரிய பட்டப் பெயர்கள்; இவனது இயற்பெயர் 'அருண்மொழி தேவன்', 'கொராஜகேஸரி'. 'ஸ்ரீராஜராஜ தேவர்க்கு', என்றும் பாடம்.

3. ன் ஒருவனும், இவர்களிலெ நிலையாய்க் கொட்டி மத்தளம் வாசிப்பான் ஒருவனும் ஆக ஐம்பதின்மர்க்குப் பெரால் நிசதம் நெல்லு முக்குறுணி நிவந்தமாய் ராஜகெஸரி யொடொக்கும் ஆடவல்லானென்னும் மரக்காலால் உடையார் உள்ளூர்ப் பண்டாரத் தெய் பெறவும் இவர்களில் செத்தார்க்கும் அனுதெசம் போனார்க்குந் தலைமாறு அவ்வவர்க்கு அடுத்தமுறை கடவார் அந்நெல்லுப் பெற்றுத் திருப்பதியம் விண்—

---

இருபத்தொன்பதாவது வரை - இருபத்தொன்பதற்கு முன்னர்; ஸ்ரீராஜராஜீஸ்வரம் உடையார்க்கு - தஞ்சை இராசராசேசுவரம் கோயில் சுவாமிக்கு 'இராசராசேசுவரம்' என்பது, தஞ்சைப் பெரிய கோயிலைக் குறிக்கும்.

திருப்பதியம் - திருப்பதிகம், தேவாரம். பதியம் - பதிகம், பத்துப் பாடல்களின் தொகுதி. விண்ணப்பஞ் செய்ய - பாட; உடையார் ஸ்ரீ ராஜ ராஜ தெவர் - இராசராச சோழன்; குடுத்த - ஏற்படுத்திய; குடுத்த, வைச்ச என்பன சாசன வழக்குச் சொற்களாகும். பிடாரர் - இசை வல்லார் (musicians); பிடாரர் என்பது, இந்நாளில் பாம்பு பிடிப்பாரைக் குறிக்கும் பெயராக வழங்குதலின், அது பட்டாரகர் என்பதின் மரூஉப் பெயராகிய 'படாரர்' போலும் என்று கருதுவர் திரு. L. உலகநாத பிள்ளையவர்கள்.

உடுக்கை, கொட்டி மத்தளம்: இவை இரண்டும் அக்கால இசைக் கருவிகள்; இவை தஞ்சை இராசராசேசுவர ராலயத்தில் தேவாரம் பாடும்போது இசைக்கப்பட்டன; உடுக்கை என்பது வடமொழியில், 'குடுக்கா' எனவும், மத்தளம் என்பது மர்த்தலா எனவும் வழங்கும். 'கொட்டி மத்தளம்' என்பதற்குப் 'பெரிய மத்தளம்' என்று பொருள் கொள்வர் திரு. டாக்டர் உல்ஷ் துரையவர்கள். அதனைக் கோலால் இயக்கும் மத்தளம் என்பாருமுளர். வாசிப்பான் - இசைப்பான்.

3. பெரால் - பேர் பேராக (Per person): நிசதம்-நாள் ஒன்றுக்கு (Per day); முக்குறுணி - மூன்று குறுணி; நிவந்தம் - வேலைக் கூலி.

ராஜகெஸரியொடொக்கும் ஆடவல்லான் என்னும் மரக்கால்; இராசகேசரி, ஆடவல்லான் இரண்டும் முதலாம் இராசராசன் காலத்து முகத்தலளவைகள்; இராசகேசரி, அரண்மனை அளவை; இதற்கு 'அருண்மொழி தேவன் மரக்கால்' என்றும் பெயர் உண்டு. ஆடவல்லான், இராசராசேசுவர ராலயத்து அளவை. அக்காலத்தில் கோயிலுக்கும், நாட்டிற்கும், அரசாங்கத்திற்கும் தனித்தனி அளவைகள் இருந்தன என்று தெரிகிறது. இங்கு அரண்மனை அளவை அரசன் பெயராலும் கோயில் அளவை அக்கோயில் இறைவன் பெயராலும் வழங்கியமை நோக்கத்

4. ணப்பஞ் செய்யவும் அவ்வவர்க்கு அடுத்த முறை கடவார் தாந்தாம் யொக்யர் அல்லாதுவிடில் யோக்ராயிருப் பாரை ஆளிட்டுத் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்வித்து அந்நெல்லுப் பெறவும் அவ்வவர்க்கு அடுத்த முறை கடவா ரின்றி யொழியில் அந்த நியாயத்தாரெ யொக்கியரா யிருப் பாரைத் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்ய இட்டு இட்ட அவனெ அவ்வவர் பெறும்படி நெல்லுப் பெறவும் ஆக இப்படி உடையார் ஸ்ரீரா

5. ஜ ராஜ தெவர் திருவாய் மொழிந்தருளினபடி கல்லில்

---

தக்கது. ஒக்கும் - ஒத்ததான (which is equal to); உடையார் உள்ளூர்ப் பண்டாரம்; அரசன் நகரத்துக் களஞ்சிய சாலை (city treasury); உடையார் - முதலாம் இராசராசன்.

அநுதேசம் போனார் - ஊர்விட்டுப் போனவர்; அநுதேசம் - அயல் நாடு. தலைமாறு - பதிலாக (instead of); அடுத்த முறை கடவார் - அடுத்து நெருங்கிய இனத்தவர் (the nearest relation).

4. விண்ணப்பஞ் செய்யவும் - முறையாகப் பாடவும்; ஓதவும் எனி னுமாம்; யொக்யர் - ஒழுக்க முதலியவற்றால் தகுதியுடையவர்; ஆளிட்டு- தெரிந்தெடுத்து; ஒழியில் - நீங்கினால்.

அந்த நியாயத்தாரே - நியமனம் செய்பவர் (Incumbents of such appointments); அத்தொழில் செய்வார் என்பாருமுளர். இட்டு - ஏற் படுத்தி; அவ்வவர் பெறும் படி நெல்லு - அவரவர் பெறுதற்கான அளவு நெல்.

உடையார் ஸ்ரீ ஸ்ரீராஜராஜதெவர் திருவாய் மொழிந்தருளினபடி: முதலாம் இராசராசதேவன் கட்டளைப்படி; அஃதாவது, தஞ்சை இராசரா சேசுவரர் கோயிலில் திருப்பதியம் படிக்கும் நாற்பத்தெட்டுப் பேர்களும் நிலையாய் உடுக்கை, கொட்டி மத்தளம் வாசிப்போர் இருவரும் ஆக ஐம்ப தின்மரும் நாள் ஒன்றுக்குத் தனித்தனி முக்குறுணி நெல் கூலியாக உள்ளூர்ப் பண்டாரத்திலே ஆடவல்லான் என்னும் மரக்காலால் பெற வேண்டுமென்பதும், அவர்களில் செத்தார்க்கும் அநுதேசம் போனார்க் கும் பதிலாக அடுத்தமுறை கடவார் அந்நெல்லைப் பெற்றுத் திருப்பதியம் பாட வேண்டுமென்பதும், அடுத்தமுறை கடவார் தகுதியில்லாவிடில் தகுதியுடையாரைத் தெரிந்தெடுத்துத் திருப்பதியம் பாடி அந் நெல்லைப் பெறச் செய்யவேண்டுமென்பதும், அடுத்தமுறை கடவார் இல்லையாயின் நியாயத்தாரே தகுதியுடைய வேற்றவரை நியமித்துத் திருப்பதியம் பாடி அந்நெல்லைப் பெறச் செய்யவேண்டு மென்பதுமாகும்.

5. கல்லில் வெட்டியது: அரசன் சொல்லக் கல்லில் வெட்டியது என்பதால், அக்காலத்தில் அரசன் கட்டளை கல்லில் வெட்டப்பட்டு

வெட்டியது [க] பாலன் திருவாஞ்சியத் தடிகளான ராஜ ராஜப் பிச்சனான சதாசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [உ] திருவெணாவல் செம்பொற் சோதியான தக்ஷிண மெரு விடங்கப் பிச்சனான ஞாநசிவனுக்கு நிசதம் நெல்லு முக் குறுணி. [ந] பட்டாலகன் அம்பலத்தாடியான மநோத்ம சிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [ச] பட்டாலகன் சீரு டைக் கழலான

**6.** பூர்வ்வசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [ரு] பொற்சுவரன் திருநாவுக்கரையனான பூர்வ்வசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [சா] மாதெவன் திருநானசம் சம்பந்தனான

---

யாவரும் அறியும்படி இருந்ததென்பது தெரிகிறது. அதுவே பிற்காலத் தில் 'கல்வெட்டு' எனப்பட்டது போலும்.

**பாலன் திருவாஞ்சியத் தடிகள்:** இவன் பெயர் இராஜராஜ பிச்சனான சதாசிவன் என்பது. இராஜராஜ பிச்சன் என்பது, இவனது பட்டப் பெயர். பிச்சன் - பித்தன், சிவன். சதாசிவன் என்பது, இவனது இயற் பெயர்; இஃது இவன் தீட்சை பெற்றபோது இவனுக்கு இடப்பட்ட பெயரென்பர். திருப்பதியம் பாடிய நாற்பத்தெண்மரில் இவன் ஒருவன். இவனைத் திருவாஞ்சியத் தடிகள் என்பதால், இவன் திருவாஞ்சியம் என்னும் தலத்துச் சிவன் கோயிலிடத்துள்ளவன் என்று தெரிகிறது. திருவாஞ்சியம் தஞ்சாவூர்ச் சில்லா நன்னிலம் தாலூகாவிலுள்ளது; தேவாரப் பாடல் பெற்ற சிவத்தலங்களில் இஃது ஒன்றாகும்.

**திருவெணாவல் செம்பொற் சோதி** - திருவெண்ணாவல் செம்பொற் சோதி; இவன் இயற்பெயர் ஞானசிவன்; பட்டப் பெயர் தக்ஷிணமேரு விடங்கப் பிச்சன். திருவெண்ணாவல் என்பது, திருச்சியை அடுத்த திருவரங்கத்தி லுள்ள சிவன்கோயில் நாவல்மரத்தைச் சுட்டும். அக்கோயில் இப்பொழுது சம்புகேஸ்வர திருவானைக்கா என்று வழங்குகிறது.

**பட்டாலகன் அம்பலத்தாடி:** இவன் இயற்பெயர் மநோத்ம சிவன். பட்டாலகன் என்பது பட்டாரகன் என்றிருத்தல் வேண்டுமென்பர். பட்டாரகன் - கடவுள்; ஞானகுரு எனினுமாம். அம்பலத்தாடி என்பது, தில்லை நடராசப் பெருமானுக்குரிய பெயர்களில் ஒன்று. 'மநோத்ம சிவன்' என்பதில் 'மனோத்ம' என்பது, பார்வதிக்குரிய 'மனோன்மணி' என்றிருத்தல் வேண்டுமென்று கருதப்படுகிறது. பட்டாலகன் சீருடைக் கழல்: இது பூர்வசிவனுக்குரிய சிறப்புப் பெயர்.

**6. பொற்சுவரன் திருநாவுக்கரையன்:** இவன் இயற்பெயர் பூர்வ சிவன். மாதெவன் திருஞானசம்பந்தன்: இவன் இயற்பெயர் ஞான சிவன்; மாதெவன் என்பது, 'மகாதேவன்' அல்லது 'மாதேவன்' என் றிருத்தல் வேண்டுமென்பர். கயிலாயன் ஆரூரான: இவன் இயற்பெயர்

ஞாநசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [எ] கயிலாயன் ஆரூரான தர்மசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [அ] செட்டி எடுத்த பாதமான கவசசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [கூ] இராமன் சம்பந்தனான ஸதாசிவனுக்கு நிசதம் நெல்—

**7.** லு முக்குறுணி [ய] அம்பலவன் பத்தர்கள் .... ...டனான வாமசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [யக] கம்பன் திருநாவுக்கரையனான சதாசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [யஉ] நக்கன் சீராளனான வாமசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [யங] அப்பி திருநாவுக்கரையனான நெத்ரசிவனுக்கு நிசதம் நெல்லு [யச] முக்குறுணி சிவக்கொழுந்து சீராளனான தர்மசிவனுக்—

**8.** கு நிசதம் நெல்லு முக்குறுணி [யரு] ஐஞ்நூற்றுவன் வெண்காடனான சத்யசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [யசா] அரையன் அணுக்கனான திருமறைக்கா............னான தர்மசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [யஎ] அரையன்

---

தர்மசிவன். இப்பகுதியில் தேவாரம் பாடிய மூவர் பெயர்களும் வழங்கியிருத்தல் குறிப்பிடத்தக்கது. செட்டி எடுத்த பாதம்: இது கவசசிவனுக்குரிய சிறப்புப்பெயர்; செட்டி என்பது, சுப்பிரமணியக் கடவுளுக்கு வழங்கிய ஒரு பெயர். இராமன் சம்பந்தன்: இவன் இயற்பெயர் சதாசிவன்.

**7.** **அம்பலவன் பத்தர்கள்:** இவன் இயற்பெயர் வாமசிவன். அம்பலவன் - தில்லை நடராசப் பெருமான்; பத்தர்கள் - அடியார்கள். கம்பன் திருநாவுக்கரையன்: இவன் இயற்பெயர் சதாசிவன்; நக்கன் சீராளன்: இவன் இயற்பெயர் வாமசிவன்; சீராளன் - சீராளதேவன்; இவன் சிவனடியாரான சிறுத்தொண்டர் மகன்; அப்பி திருநாவுக்கரையன் - இவன் இயற்பெயர் நேத்ரசிவன். அப்பி - அப்பன்; அப்பர் என்பது திருநாவுக்கரசருக்கு வழங்கிய மற்றொரு பெயர். சிவக்கொழுந்து சீராளன்: இவன் இயற்பெயர் தர்மசிவன்.

**8.** **ஐஞ்நூற்றுவன் வெண்காடன்:** வெண்காடன் ஐஞ்நூற்றுவன் என்றிருத்தல் வேண்டும். இவன் இயற்பெயர் சத்யசிவன். வெண்காடு - திருவெண்காடு; இது சிதம்பரத்திற்குத் தெற்கிலுள்ள ஒரு சிவத்தலம். அரையன் அணுக்கன்: இவன் இயற்பெயர் தர்மசிவன்; இவனுக்குத் திருமறைக்கா......என்ற பெயருமுண்டு. திருமறைக்காடு என்பது வடமொழியில் வேதாரண்யம் எனப்படும். அரையன் அம்பலக் கூத்தன். இவன் இயற்பெயர் ஓங்கார சிவன்; அம்பலக் கூத்தன் என்பது, தில்லை

அம்பலக் கூத்தனான ஓங்கார சிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [மஅ] ஆரூரன் திருநாவுக்கரையனான ஞாநசிவனுக்கு நிசதம் நெ—

**9.** நெல்லு முக்குறுணி [மகூ] கூத்தன் மழலைச் சிலம்பான பூர்வ்வசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [உம] ஐஞ்நூற்றுவன் சீயாரூரான தத்புருஷ சிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [உக] சம்பந்தன் ஆருரானான வாமசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [உஉ] அரையன் பிச்சனான தர்ம்ம சிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [உங] காச்சிபன் எடுத்தபாதப் பிச்சனான உருத்ரசிவனுக்கு நிசதம்

**10.** நெல்லு முக்குறுணி [உச] ஸுப்ரமணியம் ஆச்சனான தர்ம சிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [உரு] கூத்தன் அமரபுஜம்ங்கனான ஸத்ய சிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [உசா] ...... வெண்காடனான அசிகார சிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [உஎ] மாதெவன் திருநாவுக்கரையனான விஜ்ஞான சிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [உஅ] கூத்தன் வெண்காடனான ருத்ரசிவனுக்கு நிசதம்.

---

நடராசப் பெருமானுக்குரிய ஒரு பெயர். ஆரூரன் திருநாவுக்கரையன்: இது ஞான சிவனுக்குரிய சிறப்புப் பெயர். இங்கு ஆரூரன் என்பது, திருவாரூரில் எழுந்தருளிய சிவபெருமானைச் சுட்டும்.

**9.** கூத்தன் மழலைச் சிலம்பு : இவன் இயற்பெயர் பூர்வசிவன். கூத்தன் - அம்பலக்கூத்தன், நடராசப் பெருமான். ஐஞ்நூற்றுவன் சீயாரூர் - சீயாரூர் ஐஞ்நூற்றுவன் : தத்புருட சிவன் என்பது இவன் இயற்பெயர். சீயாரூர் ஸ்ரீ - ஆரூர், திருவாரூர்; இஃது முன்னர் 'ஆரூர்' (8) என வந்திருத்தல் காண்க. திருவாரூர், தஞ்சை மாவட்டம் நாகப்பட்டினம் தாலூகாவிலுள்ளது. சம்பந்தன் ஆரூரன் - ஆரூரன் சம்பந்தன் ; இவன் இயற்பெயர் வாமசிவன். ஆரூரன் - திருவாரூர் இறைவன். அரையன் பிச்சன் : இவன் இயற்பெயர் தர்மசிவன் ; காச்சிபன் எடுத்த பாதம் : இவன் இயற்பெயர் உருத்ர சிவன். எடுத்த பாதம் - எடுத்த பாதன், நடராசப் பெருமான்.

**10.** ஸுப்ரமணியம் ஆச்சன் : இவன் இயற்பெயர் தர்மசிவன் ; ஆச்சன் - ஆசான். கூத்தன் அமரபுஜம்கன்: இவன் இயற்பெயர் சத்ய சிவன் ; கூத்தன் - நடராசப் பெருமான்.........வெண்காடன் : இவன் இயற்பெயர் அகோர சிவன் ; வெண்காடு - திருவெண்காடு, மாதெவன் திருநாவுக்கரையன்: இவன் இயற்பெயர் விக்ஞான சிவன். மாதெவன்

**11.** நெல்லு முக்குறுணி [உகூ] ஐஞ்ஞூற்றுவன் திருவாய்மூரான அகோர சிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [௩௰] திருமலைக் கூத்தனான வாமசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [௩௧] ஐஞ்ஞூற்றுவன் எடுத்த பாதமான தர்மசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [௩௨] அரையன் தில்லைக் கரைசான பூர்வசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [௩௩] காளி சம்மந்தனான தர்மசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [௩௪] காபா—

**12.** லிக வாலியான ஞாந சிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [௩௫] வெண்காடன் நமசிவாயமான ருத்ரசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [௩௬] சிவனனந்தனான யோகசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [௩௭] சிவக்கொழுந்து சம்பந்தனான அகோர சிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [௩௮] இராமன் கணவதியான ஞாந சிவனுக்கு நிசதம் நெலு முக்குறுணி [௩௯] பிச்சன் வெண் காடனான அகோரசி—

---

மகா தேவன், இறைவன். முன்னர் மாதெவன் திருஞான சம்பந்தன் என வந்திருத்தல் இங்கு அறியற்பாலது. கூத்தன் வெண்காடன்: இவன் இயற்பெயர் உருத்ரசிவன்.

**11. ஐந்நூற்றுவன் திருவாய்மூர்**-திருவாய்மூர் ஐஞ்நூற்றுவன். இவன் இயற்பெயர் அகோரசிவன். திருவாய்மூர், தஞ்சை மாவட்டம் நாகப்பட்டினம் தாலுகாவில் உள்ளது. அப்பருக்கு வருமாறு இறைவன் கட்டளையிட அவர் சென்று வழிபட்ட இடம். திருமலை கூத்தன்: இவன் இயற்பெயர் வாமசிவன். ஐஞ்ஞூற்றுவன் எடுத்த பாதம்-எடுத்த பாதம் ஐஞ்ஞூற்றுவன்; இவன் இயற்பெயர் தர்மசிவன். அரையன் தில்லைக் கரைசு: இவன் இயற்பெயர் பூர்வ சிவன்; தில்லைக்கரசு-தில்லை நடராசப் பெருமான்; தில்லை - சிதம்பரம். காளி சம்மந்தன்: இவன் இயற்பெயர் தர்மசிவன்; காளி என்பது சீகாழி என்னும் தலத்தைக் குறிக்கும்போலும். காபாலிகவாலி: இவன் இயற்பெயர் ஞானசிவன். காபாலிகன் - பிரம கபாலத்தைக் கையிலேந்திய சிவன்.

**12. வெண்காடன் நமசிவாயம்:** இவன் இயற்பெயர் உருத்ரசிவன்; வெண்காடு - திருவெண்காடு. சிவனனந்தன்: இவன் இயற்பெயர் யோக சிவன்; சிவக்கொழுந்து சம்மந்தன்: இவன் இயற்பெயர் அகோர சிவன். இராமன் கணவதி: இவன் இயற்பெயர் ஞான சிவன்: பிச்சன் வெண்காடன்: இவன் இயற்பெயர் அகோர சிவன்.

**13.** வனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [சய] மறைக்காடன் நம்பி ஆரூரனை ஞாநசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [சஉ] சத்தி திருநாவுக்கரையனை ஈசான சிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [சஙு] பொற்சுவரன் நம்பியாரூரனை தர்மசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [சச] ஆச்சன் திருநாவுக் கரையனை நெத்ரசிவனுக்கு நிசதம்.

**14.** நெல்லு முக்குறுணி [சரு] ஐயாறன் பெண்ணொர் பாகனை இருதய சிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [சகூ] ராஜாதித்தன் அம்பலத்தாடியான சிகாசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [சஎ] செல்வன் கணவதி தெம்பனை தர்மசிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [சஅ] கூத்தன் தில்லைக் கூத்தனை ஞாநசிவனுக்கு நிசதம் நெல்லு

---

**13. மறைக்காடன் நம்பி ஆரூரன்** : இவன் இயற்பெயர் ஞானசிவன். மறைக்காடு - திருமறைக்காடு ; இங்குள்ள கோயில் கதவினை அப்பர் திறக்கவும் சம்பந்தர் மூடவும் பாடினர். சத்தி திருநாவுக்கரையன் : இவன் இயற்பெயர் ஈசான சிவன். சத்தி - உமாதேவி. பொற் சுவரன் நம்பியாரூரன் : இவன் இயற்பெயர் தர்மசிவன். ஆச்சன் திருநாவுக் கரையன் : இவன் இயற்பெயர் நேத்ர சிவன். ஆச்சன் - ஆச்சாரியன் ; நாவுக்கரசர் சைவ சமயாச்சாரியர்களில் ஒருவர் என்பது வெளிப்படை.

**14. ஐயாறன் பெண்ணொர் பாகன்** : இவன் இயற்பெயர் இருதய சிவன். ஐயாறு-திருவையாறு ; இதனைத் திருவாடி என்றும் கூறுவர். ஐந்து ஆறுகள் சந்திக்கும் இடத்தில் இவ்வூர் உள்ளமையால் இப்பெயர் பெற்றது. இங்குள்ள சிவன் பெயர் 'பஞ்ச நதி ஈசுவரர்' எனப் பெயர் பெற்றிருப்பதும் இதனை வலியுறுத்தும். இவ்வூர் தஞ்சாவூருக்கு வடக்கே ஏழு கல் தொலைவில் காவிரி நதியின் வடகரையில் உள்ளது. பெண்ணொர் பாகன்-அர்த்த நாரீச்சுரன், சிவன் ராஜாதித்தன் அம்பலத்தாடி; இவன் இயற்பெயர் சிகாசிவன். செல்வன் கணவதி தெம்பன் : இவன் இயற்பெயர் தர்மசிவன். கணவதி என்னும் பெயர் பத்தாம் நூற்றாண்டிற்கு முன்னரே வழக்கில் இருந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. கூத்தன் தில்லைக் கூத்தன் : சிவன் இயற்பெயர், ஞானசிவன்; தில்லைக்கூத்தன்-சிதம்பரம் நடராசப் பெருமான்.

**உடுக்கை வாசிக்கும்** - உடுக்கை கொட்டும்; உடுக்கை-சிறிய மத்தளம் : மத்வெதை கொமபுறம் : இஃது ஓர் ஊர் ; இப்பெயர் பெரிய இலெயிடன் சாசனத்தின் 158, 421ஆம் பக்கங்களிலும் காணப்படுகிறது. **தத்தய க்ரம வித்தன் :** இவன் திருப்பதிய விண்ணப்ப சாசனத்தில் உடுக்கை வாசிப்பவனாகக் குறிக்கப்படும் சோமசிவன் என்பானுக்குத்

முக்குறுணி [௬௯] உடுக்கை வாசிக்கும் மத்வெதை கொம புறத்து தத்தய க்ரமவி—

**15.** த்தன் மகன் சுர்யதெவ க்ரமவித்தனை ஆ...லவிடங்க உடுக்கை விஜ்ஜாதிரனை சொம சிவனுக்கு நிசதம் நெல்லு முக்குறுணி [௫௰] கொட்டிமத்தளம் வாசிக்குங் குணப் புகழ் மருதனை சிகாசிவனுக்கு நிசதம் நெல்லு முக் குறுணி [௫௧]

---

தகப்பன். கிரமவித்தன் என்பது, வேதத்தின் கிரம பாடத்தில் வல்ல பார்ப்பனரது பழைய பட்டப் பெயர்.

**15. சொம சிவன்:** இது திருப்பதிய விண்ணப்ப சாசனத்தில் குறிக்கப்படும் உடுக்கை வாசிப்போன் பெயர். இவனுக்குச் சுர்யதெவ க்ரம வித்தன், ஆ...லவிடங்க உடுக்கை விஜ்ஜாதிரன் என வேறு பெயர்களும் உண்டு. இவன் தந்தை மத்வெதைக் கொம புறம் என்னும் ஊரிலுள்ள தத்தய க்ரமவித்தன் என்பவனாவான்.

**சிகா சிவன்:** இது திருப்பதிய விண்ணப்ப சாசனத்தில் குறிக்கப் படும் கொட்டி மத்தளம் வாசிப்போன் பெயர்; கொட்டி மத்தளம் - பெரிய மத்தளம். குணப் புகழ் மருதன் என்பது, இவனுக்கு வழங்கிய மற்றொரு பெயர். மருதன் என்பது மருதூரான் என்று கருதப்படுகிறது. மருதூர் கும்பகோணம் தாலூகாவிலுள்ள திருவிடைமருதூர்.

**குறிப்பு:** இச்சாசனத்தில் குறிக்கப்படும் இயற்பெயர்கள் அவரவர் தீட்சைப் பெயர்களாகும். மற்றவை அவர்கள் தொழில் பற்றியும் வாழ்ந்த இடம் பற்றியும் ஏற்பட்டன வாகும்.

## பயிற்சி வினாக்கள்

1. 'திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி எந்த அரசனுக்குரியது? அஃது அமைந்த சாசனங்களின் பெயர்களைக் குறிப்பிடுக.

2. மெய்க்கீர்த்தியின் இலக்கணம் யாது? முதலாம் இராசராசன் மெய்க்கீர்த்தியில் அஃது அமைந்த தன்மையை விளக்குக.

3. வேங்கைநாடு, கங்கபாடி, நுளம்பபாடி, குடமலைநாடு—இவற்றைப் பற்றிக் குறிப்பு வரைக.

4. சாசனம் தோன்றிய காலத்தைக் குறிப்பிடுவதில் 'இவ்வரசர்க்கு இத்தனையாவது யாண்டு' என்று கூறும் முறைக்கு வேறாகவும் கூறப்பட்டுள்ள முறை யாது?

5. முதலாம் இராசராசனுக்கும் தேவாரத்திற்குமுள்ள தொடர்பு யாது?

6. திருப்பதியம் விண்ணப்பம் செய்தல் என்பது என்ன? இதன் நடைமுறை யாரால் எங்கு எவ்வாறு அமைந்தது?

7. கோயில்களில் தேவாரம் பாடும் வழக்கம் யார் காலத்தில் ஏற்பட்டது? அஃது எந்தச் சாசனத்தால் தெரிகிறது? அதில் கூறப் பெற்றுள்ள செய்திகளை விளக்குக.

8. இராச ராச சோழன் நியமித்த பிடாரர்களுக்கு அமைந்திருந்த ஏற்பாடுகள் எவை? விளக்கமாக வரைக.

9. திருப்பதியம் விண்ணப்பஞ் செய்யும்போது வாசிக்கப் பெற்ற வாத்தியங்கள் எவை? அவற்றை வாசிப்போர் பெயர்களைச் சாசனத்தில் உள்ளபடி குறிப்பிடுக.

10. திருப்பதியம் விண்ணப்பஞ் செய்வார்க்கு நியமிக்கப்பட்ட நிபந்தனைகள் யாவை?

11. உடையார், திருப்பதியம், பிடாரர், கொட்டி மத்தளம், நிவந்தம், உள்ளூர்ப் பண்டாரம், அனுதேசம் போனார், தலைமாறு, அடுத்த முறை கடவார், ஆளிட்டு, அந்த நியாயத்தார், திருவாய் மொழிந்தபடி, அரையன், கிரமவித்தன்—இவற்றிற்குப் பொருள் தருக.

12. சாசனம் எழுது முறை முதலாம் இராசராசன் சாசனத்தில் எங்ஙனம் கூறப்பெற்றுள்ளது?

13. ராஜகேசரியோ டொக்கும் ஆடவல்லான், திருவாய் மொழிந்தருளினபடி கல்லில் வெட்டியது—விளக்குக.

14. சாசனங்களில் மரக்கால்கள் எவ்வெப் பெயரால் வழங்கின? வழங்கப்பட்ட இடங்கள் யாவை?

15. திருவாஞ்சியம், திருவெண்ணாவல், வெண்காடு, ஐயாறு-இவை எங்கு உள்ளன? குறிப்பு எழுதுக.

16. திருவாஞ்சியத் தடிகள் என்றது யாரை? குறிப்பு வரைக.

17. திருப்பதியம் பாடுதற்கு முதலாம் இராசராசன் செய்த ஏற்பாடுகள் எவை?

# முதலாம் இராசேந்திரசோழ தேவன் சாசனங்கள்

## 9. ஆழ்வார் பராந்தகன் குந்தவையார் சாசனம்*

### முன்னுரை

முதலாம் இராசேந்திர சோழ தேவன் சாசனங்கள்[1] என்பவை, முதலாம் இராசேந்திர சோழனால் ஏற்பட்ட சாசனங்களும், அவன் காலத்தில் பிறரால் ஏற்பட்ட சாசனங்களுமாகும். அவை ஆழ்வார் பராந்தகன் குந்தவையார் சாசனம், போய்கை நாடு கிழவன் ஆதித்த சூரியன் சாசனங்கள் 1, 2, 3, ஸ்ரீ இராசேந்திர சோழதேவன் சாசனம் என்பனவாகும். இவற்றுள், ஸ்ரீ இராசேந்திர சோழ தேவர் சாசனம் ஒன்றும், முதலாம் இராசேந்திர சோழனால் ஏற்பட்டது; ஏனைய நான்கும் அவன் காலத்தில் பிறரால் ஏற்பட்டவை.

ஆழ்வார் பராந்தகன் குந்தவையார் சாசனம் என்பது, முதலாம் இராசராசன் தமக்கையாரும், கீழைச்சாளுக்கிய மன்ன

---

* S. I. I., Vol· II, Part I, No. 7, pp. 77—84.

1. முதலாம் இராசேந்திர சோழ தேவன் முதலாம் இராசராசனுக்கு வானவன் மகாதேவியிடம் பிறந்த மகன். மதுராந்தகன் என்பது இவனது இயற்பெயர். இவன் கி. பி. 1012இல் இராசேந்திரன் என்னும் பெயரோடு இளவரசனானான். அது முதல் இவன் இராசேந்திர சோழ தேவன் என்று அழைக்கப்பட்டான். கி. பி. 1012 முதல் 1044 வரை 33 ஆண்டுகள் சோழ நாட்டை ஆண்டான்.

இவன் 'கோப்பரகேசரி வர்மன்' என்னும் சிறப்புப் பெயர் பெற்றவன். இவன் ஆட்சியின் மூன்றாம் ஆண்டு முதல் இவனுடைய மெய்க்கீர்த்தி காணப்படுகிறது. அது 'திருமன்னி வளர இருநில மடந்தையும்' என்று தொடங்கும். மெய்க்கீர்த்திகள் பெரும்பாலும் அரசருடைய வெற்றிகளையே கூறுவன வாதலால், அவை ஆண்டுதோறும் விரிந்து கொண்டே போகும். எடுத்துக்காட்டாக இங்குப் பாடமாக வந்துள்ள சாசனங்களில் இவன் மெய்க்கீர்த்தி ஒன்றைவிட மற்றொன்று விரிவாகக் காணப்படுவதைக் கூறலாம்.

இராசேந்திர சோழ தேவன் அடைந்த வெற்றிகள் பலவாகும் முதலாவது, இவன் மேலைச்சாளுக்கிய ராட்சிக் குட்பட்டிருந்த இடைதுறை நாடு, வனவாசி, கொள்ளிப்பாக்கம், மண்ணைக் கடகம் ஆகியவற்றை வென்றான். பின், இலங்கை மன்னனான ஐந்தாம் மகிந்தனை

ஞனை வல்லவரையன் வந்திய தேவனுக்கு மனைவியாருமான குந்தவையார் தஞ்சைப் பெரிய கோயிலில் எழுந்தருளுவித்த திருமேனிகளுக்குக் கொடுத்த அணிகலன்களைப் பற்றிக் கூறும் சாசனமாகும். இச்சாசனம் கங்கை கொண்ட சோழன் என்னும் முதலாம் இராசேந்திர சோழதேவன் காலத்தில், அவன் ஆட்சியின் மூன்ருவது ஆண்டிற்கு முன்னர் ஏற்பட்டது. தஞ்சை இராசராசேசுவரமுடையார் கோயில் இரண்டாவது அடுக்குத் தெற்குச் சுவரில் காணப்படுகிறது. தமிழ் மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப் பெற்றது ; ஒன்பது பத்திகளை யுடையது.

இச் சாசனத்தில் முதலாம் இராசேந்திர சோழ தேவன் 'ஸ்ரீ கோப்பரகேசரி வர்மர்' என்றும், குந்தவையார் ஸ்ரீராஜ ராஜ தேவர் திருத் தமக்கையார், வல்லவரையர் வந்தியதேவர் மகா

---

வென்று ஈழநாட்டைக் கைப்பற்றினான். சேரநாட்டின் மீது படை எடுத்துச் சேர மன்னர்க்குரிய முடியையும் மாலையையும் எடுத்துக் கொண்டதோடு பழந்தீவை வென்று, சாந்திமத்தீவில் பரசுராமனால் பாதுகாக்கப்பட்ட செம்பொன் முடியையும் கவர்ந்தான். முயங்கி என்னும் ஊரில் மேலைச் சாளுக்கிய மன்னனான சயசிங்கனை எதிர்த்து வென்று இரட்டபாடி எழரை இலக்கத்தையும் தன் கீழ்ப்படுத்தினான்.

இதன் பின் இவன் தான் புதிதாக அமைத்த கங்கை கொண்ட சோழபுரம் என்னும் நகரையும், அந்நகரத்தில் கட்டிய கங்கை கொண்ட சோழேச்சுரம் என்னும் கோயிலையும் கங்கை நீரால் புனிதப்படுத்துவதற்காக, அதைக் கொண்டுவர வடநாடு சென்ருன். செல்லும் வழியில் சக்கரக் கோட்டம், மாசுனி தேசம், மதுரை மண்டலம், நாமணைக் கோணம், பஞ்சப்பள்ளி, இந்திரரதன் ஆண்ட ஒட்ட விசயம், கோசல நாடு, தன்ம பாலன் ஆண்ட தண்டபுத்தி, இரணசூரன் ஆண்ட தக்கண லாடம், கோவிந்த சந்தன் ஆண்ட வங்காள தேசம், மகிபாலன் ஆண்ட உத்தர லாடம் ஆகிய நாடுகளை வென்று, கங்கை நீரையும் திரண்ட திறைப்பொருள்களையும் சோழ நாட்டிற்குக் கொண்டு வந்தான். இதனை இவனுடைய 'வடநாட்டுப் போர்' என்பர். இப்போரில் தமிழர் நாகரிகம் வடநாட்டில் பரவிற்று என்றும், அந் நாட்டுச் சைவாச்சாரியர்கள் பலர் தமிழ் நாட்டிற்கு அழைத்து வரப்பெற்றனரென்றும் கூறுவர்.

இவன், கடலில் செலுத்தும் பல கப்பற் படைகளை யுடையவனுயிருந்தான் என்பது இவனது கடாரம் கொண்ட போர்ச் செயலால் அறியப்படுகிறது. இந்தப் போரில் இராசேந்திரசோழன் கடாரத்தரசனாகிய சங்கிராமவிசயோத்தமனை வென்று, அவன் பட்டத்து யானையையும், பெரும் பொருளையும், வித்தியாதரத் தோரணத்தையும் கவர்ந்து கொண்டதுமன்றி, ஸ்ரீவிசயம் (சுமத்ரா), பண்ணை, மலையூர், மாயிருடிங்கம், இலங்கா சோகம், பப்பாளம் இலிம்பங்கம், வளைபந்தூர், தக்கோலம்,

தேவியார், ஆழ்வார் பராந்தகன் குந்தவையார், என்றும் அழைக்கப்பட்டுள்ளனர். குந்தவையார் உமா பரமேசுவரியார் திருமேனிக்கு மகுடம் 1, வாளி 2, உழுத்து 2, மாலை 1, வாகுவலயம் 2, சந்தம் 1, கைப்போட்டு 2, சூடகம் 2 ஆகிய அணிகலன்களைக் கொடுத்துள்ளமையும், அவற்றின் பொன் ஆடவல்லான் என்னும் நிறைகல்லாலும், இரத்தினங்கள் (வைரம், மாணிக்கம், முத்து) தட்சிண மேருவிடங்கன் என்னும் நிறைகல்லாலும் நிறுக்கப்பட்டும் மதிப்பிடப்பட்டும் கல்லில் வெட்டப்பட்டுள்ளமையும் இதில் கூறப்பட்டுள்ளன. வைரம், மாணிக்கம் முதலியவற்றின் வகைகளும், அவற்றின் ஏற்றத் தாழ்வுகளும் இச் சாசனத்தால் அறியப்படுகின்றன. கழஞ்சு,

---

தமாலிங்கம், இலாமுரிதேசம், நக்கவாரம் முதலியவற்றையும் வென்றான். இப்போர், வாணிகம் காரணமாக இந் நாடுகளில் தங்கி யிருந்த தமிழர்களின் உரிமைகளைக் காப்பாற்றும் பொருட்டு ஏற்பட்ட தென்பர்.

இவனுடைய ஆட்சியின் பிற்காலத்தில் இவன் மலைநாடு, ஈழநாடு மேலைச் சாளுக்கிய நாடு முதலியவற்றில் மீண்டும் போர் நிகழ்த்த வேண்டியதாயிற்று. ஆயினும் அப் போர்களை யெல்லாம் இராசேந்திரன் மகனான இராசாதிராசன் நடத்தி வெற்றி பெற்றான். இராசேந்திர னுக்கு உத்தமசோழன், சோழேந்திர சிம்மன், விக்கிரம சோழன், முடி கொண்ட சோழன், பண்டித சோழன், கடாரங் கொண்டோன், கங்கை கொண்ட சோழன் முதலிய சிறப்புப் பெயர்கள் இருந்தன. இவனே முதல் முதல் பல நாடுகளையும் செயித்து, அவைகளில் தன் மக்களை இருந்து ஆளும்படி செய்தவன். இவன் காலத்தில் பழையாறை என்னும் சோழர் தலைநகர் இவன் பெயரால் முடிகொண்ட சோழபுரம் என்று அழைக்கப்பட்டது. இவன் புதிதாக அமைத்த தலைநகர், இவன் சிறப்புப் பெயரால் கங்கைகொண்ட சோழபுரம் என்று பெயர் பெற்றது. கங்கைகொண்ட சோழேச்சுரம் என்பது அந்நகரத்தில் இவன் கட்டிய சிவன் கோயிலாகும். நாட்டில் பல ஏரிகளையும் குளங்களையும் இவன் வெட்டினான்; பல கோயில்களுக்கு நிவந்தங்கள் கொடுத்தான். புலவர் களை ஆதரித்துப் பண்டிதசோழன் என்று பெயர்பெற்றான். இவனுக்குச் சைவாச்சாரியராக விளங்கியவர் சர்வ்வ சிவ பண்டிதர் ஆவர். அவருக்கு இவன் ஆசாரிய போகமாக ஆண்டுதோறும் 2000 கல நெல் கொடுத் தான் என்று இவன் சாசனம் கூறுகின்றது.

இராசேந்திரனுக்கு ஐந்து மனைவியரும், இராசாதிராசன், இராசேந் திரன், வீர ராசேந்திரன் முதலிய பல புதல்வர்களும், அருண்மொழி நங்கை, அம்மங்கை தேவி என இரு புதல்வியரும் இருந்தனர். இவனுக் குப் பின் இவன் மக்களில் இராசாதிராசன், இராசேந்திரன், வீரராசேந் திரன் மூவரும் ஒருவர்பின் ஒருவராகச் சோழநாட்டை ஆண்டனர்.

மஞ்சாடி, மா, குன்றி ஆகியவை இச் சாசனத்தில் காணப்படும் நிறுத்தலளவைகளாகும்.

முதலாம் இராசேந்திர சோழ தேவன் கி. பி. 1012 முதல் 1044 வரை முப்பத்து மூன்று ஆண்டுகள் சோழநாட்டை ஆண்டான். இச் சாசனம் அவன் ஆட்சியின் மூன்ருவது ஆண்டிற்கு முன்னர் ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1015 ஆம் ஆண்டிற்கு முற்பட்டதென்னலாம்.

சாசனம்

1. ஸ்வஸ்திஸ்ரீ கொப்பர கெஸரி வன்மரான உடையார் ஸ்ரீ ராஜெந்த்ர சொழ தெவர்க்கு யாண்டு மூன்ருவது வரை உடையார் ஸ்ரீ ராஜராஜதெவர் திருத் தமக்கையார் வல்ல வரையர் வந்தியதெவர் மஹாதெவியார் ஆழ்வார் பராந்தகன் குந்தவையார் தாம் எழுந்தருளுவித்த திருமெனிகளுக்குக்

---

இவன் தன் மகள் அம்மங்கை தேவியைக் கீழைச் சாளுக்கிய மன்னனாகிய விமலாதித்தனுக்கும் முதலாம் இராசராசன் புதல்வியாகிய குந்தவைக்கும் பிறந்த இராசராச நரேந்திரனுக்கு மணமுடித்து வைத்தான். அவர்கள் இருவருக்கும் பிறந்த மகனே பிற்காலத்தில் புகழ்பெற்று விளங்கிய முதலாம் குலோத்துங்க சோழன் ஆவான். முதலாம் இராசராசன் அரசியல் அதிகாரிகளில் ஒருவனை பொய்கை நாடு கிழவன் ஆதித்த சூரியன் இவன் காலத்திலும் இருந்து பல தருமங்களைச் செய்தான். இவனுக்கு உதவியாகப் பல அரசியல் அதிகாரிகள் இருந்தனர். இவன் தொண்டை மண்டலத்திலுள்ள பிரமதேசம் என்னும் இடத்தில் இறந்தான்.

குறிப்புரை

1. ஸ்வஸ்திஸ்ரீ - மங்களம் உண்டாக ; 'நலம் வளர்க' எனினுமாம். கொப்பர கெஸரி வன்மர் : இது முதலாம் இராசேந்திர சோழனுக்குரிய பட்டப்பெயர். இவன் தந்தையான முதலாம் இராசராசன் 'இராசகேசரி' என்று அழைக்கப்பட்டதால், இவன் 'பரகேசரி' என்று அழைக்கப் பட்டான். வன்மர் - வர்மர், அரசர். உடையார் : இது கடவுள், அரசர், பெரியார் முதலியோர்க்கு வழங்கும் ஒரு சிறப்புப் பெயர். யாண்டு மூன்ருவது வரை - ஆட்சியின் ஆண்டு மூன்ருவது வரைக்கும் : ஸ்ரீராஜ ராஜ தெவர் - முதலாம் இராசராச சோழன் ; இவன் குந்தவையார்க்கு உடன் பிறந்த தம்பி. வல்லவரையர் வந்திய தெவர் : இவன் கீழைச் சாளுக்கிய மன்னன் ; குந்தவையாரின் கணவன். ஆழ்வார் பராந்தகன் குந்தவையார் : ஆழ்வார் பராந்தகன் என்னும் குந்தவையார் ; குந்தவை யாரின் சிறப்புப் பெயர் 'ஆழ்வார் பராந்தகன்' என்பதாகும். எழுந்தருளு

குடுத்த பொன் ஆடவல்லான் என்னுங் குடிஞைக் கல்லால் நிறை எடுத்தும் ரத்நங்கள் சரடுஞ் சட்டமும் செப்பாணிகளும் அரக்கும் பிஞ்சும் நீக்கி நிறையுள்ளன நிறை எடுத்தும் அரக்கும் பிஞ்சுங்கூட ரத்நங் கட்டி வெறு நிறை அறிய உண்ணுதன அரக்கும் பிஞ்சும் உட்பட தக்ஷிண மேரு விடங்கன் என்னுங் காசுகல்லால் நிறை

---

வித்த - செய்துவைத்த ; குந்தவையார் தஞ்சைப் பெரிய கோயிலில் பல பிரதிமங்களையும் திருமேனிகளையும் செய்துவைத்து, அவைகளுக்குப் பல அணிகலன்களைத் தானமாகக் கொடுத்தாள். திருமெனிகள் - கடவுள் திருவுருவங்கள் ; குடுத்த - கொடுத்த ; ஆடவல்லான் என்னும் குடிஞைக்கல் : ஆடவல்லான் என்பது, சிவபெருமானுக்குரிய ஒரு பெயர் ; அப்பெயரால் பொன் முதலியவற்றை நிறுக்க உதவும் கோயில் நிறைகல் 'ஆடவல்லான்' என்று பெயர் பெற்றது. குடிஞைக்கல் என்பது, சோழர் காலத்தில் நாட்டில் பொன் முதலியவற்றை நிறுக்க உதவிய ஒரு நிறைகல். நிறை எடுத்தும் - நிறுத்துக் கணக்கிட்டும்.

ரத்நங்கள் - பொன் ஆபரணங்களில் பதித்த வைரம், மாணிக்கம், முத்து என்பவை. சரடு - கோக்கும் கயிறு ; சட்டம் - நகையின் உம்மச்சு (Socket in a jewel for insetting gems) : செப்பாணி - செம்பினால் செய்யப்பட்ட ஆணி; இஃது இரத்தினங்களைப் பதித்து முறுக்குவதற்கு உதவும். அரக்கு - மெழுகு ; இஃது இரத்தினங்களை ஆபரணங்களில் ஒட்ட வைப்பதற்கு உதவும். பிஞ்சு-அரும்புக் கட்டிடம் ; இஃது இரத் தினங்களைக் கட்டியாய்ப் பிடித்துக்கொள்வதற்கு உதவும். நிறை யுள்ளன நிறை எடுத்தும் - இரத்தினங்களை ஆபரணங்களில் ஒட்ட வைப்பதற்குப் பயன்படும் சரடு, சட்டம்,செப்பாணி,அரக்கு, பிஞ்சு ஆகிய வைகளை நீக்கி நிறுத்தக்கூடிய இரத்தினங்களை நிறுத்துக் கணக்கிட்டும். அரக்கும் பிஞ்சுங்கூட ரத்நங் கட்டி - அரக்கு, பிஞ்சு இவைகளால் இரத்தினங்களை ஒட்டவைத்து : வெறு நிறைய் அறிய உண்ணுதன - அரக்கு, பிஞ்சு முதலியவை வேறு, இரத்தினம் வேறு எனப் பிரித்து நிறுத்து அறிய முடியாதவை ; உண்ணுதன - ஒண்ணுதன, கூடாதவை ; உட்பட - சேர்த்து. தக்ஷிணமெரு விடங்கன் என்னும் காசு கல்லால். தக்ஷிணமேரு விடங்கன் என்பது தஞ்சைப் பெரிய கோயிலிலுள்ள விமானத்திற்குரிய பெயர். அப்பெயரால் இரத்தினங்களை நிறுக்கும் கோயில் நிறை கல் 'தட்சணமேருவிடங்கன்' என்று அழைக்கப்பட்டது: காசுகல் என்பது, இரத்தின முதலிய ஆபரணங்களை நிறுக்கும் நிறை கல்லுக்கு வழங்கும் பொதுப் பெயராகும்.

குந்தவையார் தஞ்சைப் பெரிய கோயிலில் எழுந்தருளுவித்த திரு மேனிகளுக்குக் கொடுத்த அணிகலன்களின் பொன், ஆடவல்லான் என், னும் கோயில் நிறைகல்லாலும், இரத்தினம் முதலியன தக்ஷிண மேரு

எடுத்துங் கல்லில் வெட்டின [க] தக்ஷிண மெரு விடங்கர் நம் பிராட்டியார் உமா பரமேசுவரியார்க்குக் குடுத்தன [உ] திருமகுடம் ஒன்று பொன் முன்னூற்று நாற்பத்து எண் கழஞ்சரையே மூன்று மாவும் கட்டின வயிரம் மட்டதாரை அறுநூற்று முப்பத்தாறும் மட்டதாரைச் சவக்கம் நூற்று அறுபத்தொன்பதும் மட்டதாரைச் சப்படி முப்பத்திர........

2. ஆக வயிரம் பொறிவும் முறிவும் ரத்தபிந்துவும் காகபிந்துவும் வெந்தனவும் உடையன உட்பட எண்ணூற்றைம்

---

விடங்கன் என்னும் கோயில் நிறைகல்லாலும் நிறுத்துக் கணக்கிடப் பட்டுக் கல்லில் எழுதப்பட்டது என்பது.

**தக்ஷிணமெரு விடங்கர் நம் பிராட்டியார்** : தக்ஷிண மேரு என்பது தஞ்சைப் பெரிய கோயில் விமானத்திற்கு உரிய பெயர்; அவ் விமானத்தின் கீழ் எழுந்தருளிய இறைவன் 'தக்ஷிணமேருவிடங்கர்' எனப் பட்டார். அவ் விறைவன் தேவியார் 'தக்ஷிணமேருவிடங்கர் நம்பிராட்டியார்' எனப் பட்டார். அத்தேவியாருக்கு உமா பரமேசுவரியார் என்று பெயர். குந்தவையார் அப்பிராட்டியார் திருவுருவத்தை எழுந்தருளச் செய்து, அதற்குத் திருமகுடம் 1, திருவாளி 2, திருவுழுத்து 2, திருமாலை 1, திருப்பாகுவலயம் 2, திருச்சந்தம் 1, திருக்கைப் பொட்டு 2, திருச்சூடகம் 2, ஆகிய அணிகலன்களைக் கொடுத்தார்.

**திருமகுடம் 1** : இது தலையில் சூடும் ஓர் அணிகலன்; பொன்னாலானது; வயிரம் 859ம், மாணிக்கம் 309ம், முத்து 669ம் கொண்டது. இதிலுள்ள பொன் நிறை $348\frac{1}{2}$ கழஞ்சு, $\frac{3}{10}$ மஞ்சாடி, வயிரங்களில் மட்டதாரை 636, மட்டதாரைச் சவக்கம் 169, மட்டதாரைச் சப்படி 32.. ... மொத்த நிறை $7\frac{3}{4}$ கழஞ்சு, $4\frac{2}{5}$ மஞ்சாடி. மாணிக்கங்களில் ஹளஹளம் குணவியன் 125, ஹளஹளம் 122, கோமளம் 41, நீலகந்தி 11, தளம் 10; மொத்த நிறை $11\frac{3}{4}$ கழஞ்சு, $2\frac{4}{5}$ மஞ்சாடி. முத்துக்களின் மொத்த நிறை 36 கழஞ்சு, 1 மஞ்சாடி, 1 குன்றி; ஆகத் திருமகுடத்தின் பொன், வயிரம், மாணிக்கம், முத்து இவற்றின் மொத்த நிறை 407 கழஞ்சு, 9 மஞ்சாடியும், 5,000 காசு விலை மதிப்புமாகும்.

**கழஞ்சரை** - அரைக் கழஞ்சு; 1 கழஞ்சு=20 மஞ்சாடி; மா=$\frac{1}{20}$ குன்றி அல்லது $\frac{1}{10}$ மஞ்சாடி. கட்டின வயிரம் - திருமகுடத்தில் பதித்த வயிரம்; மட்டதாரை, மட்டதாரைச் சவக்கம், மட்டதாரைச் சப்படி, என வயிரம் பலதிறப்படும்; வைரம் - இரத்தினங்களின் ஒரு வகை; மட்டதாரை - மெல்லிய கரைக் கம்பியை யுடையது; சவக்கம் - சமசதுரமுடையது; சப்படி - தட்டையாக இருப்பது.

**2. பொறிவு, முறிவு, இரத்தபிந்து, காக பிந்து, வெந்தன** முதலியவை வைரத்தில் காணப்படும் குற்றங்களாகும். பொறிவு - புள்ளிகொண்டது;

பத்தொன்பதினால் நிறை எழு கழஞ்செய் முக்காலெ காலு மஞ்சாடியும் காலுமாவும் மாணிக்கம் ஹளஹளம் குணவியன் நூற்றிருபத்தைஞ்சும் ஹளஹளம் நூற்றிருபத்திரண்டும் கொமளம் நாற்பத்தொன்றும் நீலகந்தி பதினொன்றும் தளம் பத்தும் ஆக மாணிக்கம் குழிவும் ப்ரஹாரமும் வெஜ்ஜமும் லஸுநியும் த்ராஸமும் கற்பற்றும் உடையன உட்படப் பரியனவும் நெரியனவும் ஆக முன்னூற்றொன்பதினால் நிறை பதினாற்க் கழஞ்செ முக்காலெ இரண்டு மஞ்சாடியும் எட்டு மாவும் கட்டினவும் கொத்தனவும் ஆக முத்து வட்டமும் அனு வட்டமும் ஒப்பு முத்தும் குறுமுத்தும் நிம்பொளமும் பயிட்டமும் பழமுத்தும் இப்பிபற்று அராவினவும் சிவந்த நீரும் குளிர்ந்த நீரும் வரையுங் கறையுங் குருவும் சுப்பிரமும் உடையன உட்படப் பரியனவும் நெரியனவும் ஆக முத்து அறுநூற்று அறுபத்

---

முறிவு - ஒடிந்து போனவை; ரத்தபிந்து - செந்நிறங் கொண்டது; பிந்து - நிறம்; காகபிந்து - கருநிறங் கொண்டது; -வெந்தன - வெந்து போனவை.

நிறை - எடை; எழுகழஞ்செய் முக்காலெ -$7\frac{3}{4}$ கழஞ்சு; மாணிக்கம்-சிவப்புக்கல்; அது ஹளஹளம் குணவியன், ஹளஹளம், கோமளம், நீலகந்தி, தளம் எனப் பல திறப்படும். ஹளஹளம் - ஒலியுடையது. குணவியன் - தூய்மை, முதன்மை; தூய்மையான ஹளஹளம், 'ஹளஹளம் குணவியன்' எனப்பட்டது, கொமளம் - குறைந்த விளைச்சலுள்ளது; மென்மையுடையது எனினுமாம். நீலகந்தி - நீலநிறமுடையது; இதனை 'நீல கந்திகா' என்றும் கூறுவர். தளம்-செம்மையாக்கப்படாதது; சாணை பிடிக்காதது,

குழிவு, ப்ரஹாரம், வெஜ்ஜம், லஸுநி, த்ராஸம், கற்பற்று, முதலியவை மாணிக்கத்தில் காணப்படும் குற்றங்களாகும். குழிவு - குழிந்திருப்பது; ப்ரஹாரம் (பிரகாரம்) - கோட்ட முடையது; வெஜ்ஜம் - வெந்திருப்பது; லஸுநி (இலசுனம்) - வெண்ணிறமான புள்ளியுடையது; த்ராஸம் (திராசம்) - பிளவுபட்டிருப்பது; கற்பற்று - கல்லையுடையதா யிருப்பது (unpolished Rubies adhering to the ore).

பரியன - பெரியவை; நெரியன - இது 'சிறியன' என்றிருத்தல் வேண்டும்; கட்டின - கட்டப்பட்டவை; கொத்தன - கோக்கப்பட்டவை,

முத்துக்கள் வட்டம், அனுவட்டம், ஒப்பு முத்து, குறுமுத்து, நிம்பொளம், பயிட்டம், பழமுத்து, இப்பி பற்று. அராவின, குளிர்ந்த நீர், சிவந்த நீர் எனப் பல திறப்படும். வரை, கறை, குரு, சுப்பிரம் என்பன

தொன்பதினல் நிறை முப்பத்தறு கழஞ்செ மஞ்சாடியுங் குன்றியும் ஆக நிறை நானூற்றெழுகழஞ்செ ஒன்பது மஞ்சாடிக்கு விலை காசு ஐய்யாயிரம் [௫] வாளி ஒன்று பொன் கழஞ்செ எட்டு மஞ்சாடியும் எட்டு மாவும் தைத்த முத்து வட்டமும் ஒப்புமுத்தும் நிம்பொளமும் குளிர்ந்த வரையுங்க ............

3. ஆும் உடையன உட்பட முத்து ஒன்பதினல் நிறை கழஞ்செய் ஒன்பது மாவும் ஆக நிறை இருகழஞ்செய் ஒன்பது மஞ்சாடியும் எழு மாவுக்கு விலைகாசு பதினைஞ்சு [௪] வாளி ஒன்று பொன் கழஞ்செய் எட்டு மஞ்சாடியும்

---

அவற்றின் குற்றங்களாகும். இவற்றை முத்தின் வகை என்பாருமுளர்.

வட்டம் - வட்ட வடிவமுடையது; அனு வட்டம் - உருண்டை வடிவமுடையது; ஒப்புமுத்து - சாணைபிடித்த முத்து; குறுமுத்து - சிறிய முத்து; பழமுத்து - பழுத்த அல்லது முற்றிய முத்து; இப்பி பற்று - இப்பியோடு கூடிய முத்து; அராவின - செம்மையாக்கப் பட்டவை; குளிர்ந்த நீர் - தெளிந்த நீரோட்ட முடையது; சிவந்த நீர் - சிவந்த நீரோட்டமுடையது; குரு - சிவந்த புள்ளியுடையது; சுப்பிரம் - வெண்ணிறப் புள்ளியுடையது.

3. வாளி 2: இவை காதணிகள்; பொன்னாலானவை. ஒவ்வொன்றும் 9 முத்துக்களையுடையது. ஒவ்வொன்றிலும் பொன் நிறை 1 கழஞ்சு, $8\frac{4}{5}$ மஞ்சாடி; முத்துக்களின் நிறை 1 கழஞ்சு. $\frac{9}{10}$ மஞ்சாடி, ஆகப் பொன்னும் முத்தும் சேர்ந்து 2 கழஞ்சு, $9\frac{7}{10}$ மஞ்சாடியும், 15 காசு மதிப்பு முடையது.

வாளியில் அமைந்த முத்து வகை வட்டம், ஒப்புமுத்து, நிம்பொளம், குளிர்ந்த நீர் என்பனவும், அவற்றின் குற்றவகை வரை, கறை, குரு, சுப்பிரம், திரங்கல் என்பனவும் ஆகும். தைத்த முத்து - வாளியில் வைத்துத் தைக்கப்பட்ட முத்து; திரங்கல் - சுருண்டிருப்பது.

உழுத்து 2: இவை பழங்கால அணிகல வகைகள்; பொன்னாலானவை. ஒவ்வொன்றும் 2 கழஞ்சு 1 குன்றி நிறை பொன்னும், வயிரம் 6-ம், மாணிக்கம் 2-ம், முத்து 2-ம் கொண்டது; இதனிலமைந்த வயிரம், பளிங்கு வகையைச் சேர்ந்தது; மாணிக்கம், கோமள வகையைச் சேர்ந்தது; முத்து, அம்புமுது வரை, அம்பு முது பாடன், குரு என்னும் வகையினவாகும்.

இவற்றுள் ஓர் உழுத்திலுள்ள 6 பளிங்கு வயிரம் நிறை $\frac{9}{10}$ மஞ்சாடியும், மாணிக்கக் கோமளம் 2ன் நிறை $\frac{3}{5}$ மஞ்சாடியும், அம்புமுது வரை, அம்புமுது பாடன் ஆகிய 2 முத்துக்களின் நிறை $9\frac{7}{10}$ மஞ்சாடியும்

எட்டு மாவும் தைத்த முத்து வட்டமும் ஒப்புமுத்தும் நிம்பொளமும் குளிர்ந்த நீரும் வரையும் கறையும் குருவும் சுப்பிரமும் திரங்கலும் உடையன உட்பட முத்து ஒன்பதினால் நிறை கழஞ்செ ஒன்பது மாவும் ஆக நிறை இரு கழஞ்செய் ஒன்பது மஞ்சாடியும் எழு மாவுக்கு விலை காசு பதினைஞ்சு [ரு] உழுந்து ஒன்று பொன் இரு கழஞ்செய் குன்றியும் பளிக்கு வயிரம் ஆறினால் நிறை ஒன்பது மாவும் மாணிக்கம் கொமளம் இரண்டினால் நிறை ஆறு மாவும் தைய்த்த முத்து அம்புமுதும் வரையும் அம்புமுது பாடலும் ஆக இரண்டினால் நிறை ஒன்பது மஞ்சாடியும் எழு மாவும் ஆக நிறை இரு கழஞ்சரையெ மஞ்சாடியும் எழுமாவுக்கு விலை காசு பதினைஞ்சு [சு] உழுந்து ஒன்று பொன் இரு கழஞ்செய் குன்றியும் கட்டின பளிக்கு வயிரம் ஆறினால் நிறை ஒன்பது மாவும் மாணிக்கம் கொமளம் இரண்டினால் நிறை குன்றியும் தைய்த்த முத்து அம்புமுது பாடனும் குருவும் உடையன இரண்டினால் நிறை ஒன்பது மஞ்சாடியும் ஒன்பதுமாவும் ஆக நிறை இரு கழஞ்சரையெ மஞ்சாடியும் எட்டு மாவுக்கு வி............[எ]

4. திருமாலை ஒன்று பொன் எண்பத்தறு கழஞ்சரையெ காலு மஞ்சாடியும் அரை மாவும் கட்டின வயிரந் தூயன

---

ஆகப் பொன், வயிரம், மாணிக்கம், முத்து இவற்றின் மொத்த நிறை $2\frac{1}{2}$ கழஞ்சு $1\frac{7}{10}$ மஞ்சாடியும், 15 காசு மதிப்புமுடையது. மற்றோர் உழுத்திலுள்ள பளிங்கு வயிரம் 6ன் நிறை $\frac{9}{10}$ மஞ்சாடியும், 2 மாணிக்கம், கோமளத்தின் நிறை 1 குன்றியும், அம்புமுது பாடன், குரு ஆகிய 2 முத்துக்களின் நிறை $9\frac{9}{10}$ மஞ்சாடியும், ஆகப்பொன், வயிரம், மாணிக்கம், முத்து இவற்றின் மொத்த நிறை $2\frac{1}{2}$ கழஞ்சு, $1\frac{4}{5}$ மஞ்சாடியும், 15 காசு விலை மதிப்புமுடையது.

பளிக்கு வயிரம் - வயிர வகையில் ஒன்று; மாணிக்கம் கொமளம் - மாணிக்க வகையில் ஒன்று; அம்புமுதும் வரையும் - முத்து வகையில் கோடுள்ளது. அம்புமுது - முத்து வகையில் ஒன்று; வரை - கோடு; அம்புமுது பாடன் - முத்து வகையில் ஒளியுடையது; பாடன் - ஒளி; குரு - முத்து வகையில் செந்நிறப் புள்ளியுடையது.

4. திருமாலை ஒன்று: இது கழுத்தில் அணியும் ஓர் அணிகலன்; பொன்னாலானது. இதில் உள்ள வயிரம் 505; மாணிக்கம் 110; முத்துக்கள் 94; பொன் நிறை $83\frac{1}{2}$ கழஞ்சு, $4\frac{1}{20}$ மஞ்சாடியும், வயிரங்களில், தூயன 80, மட்டதாரை 290, மட்டதாரைச் சப்படி 53, பந்தசாரம் 4,

எண்பதும் மட்டதாரை இருநூற்றுத் தொண்ணூறும் மட்டதாரைச் சப்படி ஐம்பத்துமூன்றும் பந்தஸாரம் நாலும் சப்படி ஐஞ்சும் சவக்கம் பதினைஞ்சும் உருளை ஐம்பத்தெட்டும் ஆக வயிரம் பொறிவும் முறிவும் ரத்தபிந்துவும் காகபிந்துவும் வெந்தனவும் உடையன உட்பட ஐஞ்ஞூற்றைஞ்சிநால் நிறை இருகழஞ்செ மூன்று மஞ்சாடியும் ஒன்பது மாவரையும் மாணிக்கம் ஹளாஹளம் குணவியன் இருபதும் ஹளாஹளம் முப்பதும் நீலகந்தி ஆறும் கொமளம் முப்பத்து மூன்றும் தளம் இருபதும் சட்டம் ஒன்றும் ஆக மாணிக்கம் குழிவும் ப்ரஹாரமும் வெஜ்ஜமும் லஸுநியும் த்ராஸமும் கற்பற்றும் உடையனவும் உட்படப் பரியனவும் நெரியனவும் ஆக நூற்றொருபதினால் நிறை ஐங்கழஞ்சரையெய் அரைக்காலும் கொத்த முத்து ஒப்பு முத்துங் குறு முத்தும் நிம்பொளமும் பயிட்டமும் அம்புமுதும் குளிர்ந்த நீரும் சிவந்த நீரும் இப்பிபற்று அராவினவும் வரையும் கறையும் குருவும் சுப்பிரமும் உட்பட முத்துத் தொண்ணூற்று நாலினால் நிறை ஒன்பதின் கழஞ்செய் குன்றியும் ஆக நிறை நூற்று முக்கழஞ்சரையெ மஞ்சாடிக்கு விலை காசு ஆயிரம் [அ] ஸ்ரீவாஹு வலயம் ஒன்று பொன் எண்பத்தொன்பதின்.

**5.** கழஞ்செய் மஞ்சாடியும் மாகாணியும் கட்டின வயிரந் தூயன இருபதும் மட்டதாரை நானூற்று ஆறும் மட்டதாரைச் சப்படி ஐஞ்சும் மட்டதாரைச் சவக்கம் பத்தும் ஆக வயிரம் பொறிவும் முறிவும் ரத்தபிந்துவும் காகபிந்துவும் வெந்தனவும் உடையன உட்பட நானூற்று நாற்பத்தொன்

சப்படி 5, சவக்கம் 15, உருளை 58, இவைகளின் நிறை 2 கழஞ்சு, $3\frac{19}{20}$ மஞ்சாடியும், மாணிக்கங்களில் ஹளஹள குணவியன் 20, ஹளஹளம் 30, நீலகந்தி 6, கோமளம் 33, தளம் 20, சட்டம் 1; இவைகளின் நிறை $5\frac{5}{8}$ கழஞ்சு. முத்துக்களில் ஒப்புமுத்து, குறுமுத்து, நிம்பொளம்; பயிட்டம், அம்புமுது, குளிர்ந்த நீர், இப்பிபற்று அராவின முதலியவை இருந்தன. இவற்றின் நிறை 9 கழஞ்சு, 1 குன்றியும் ஆக திருமாலையிலுள்ள, பொன், வயிரம், மாணிக்கம், முத்து இவைகளின் மொத்த நிறை $103\frac{1}{2}$ கழஞ்சு மஞ்சாடியும் விலை மதிப்பு 1000 காசுமாகும்.

**5. ஸ்ரீபாஹுவலயம் 2:** இவை தோளில் அணியும் அணிகலன்கள்; 'பாஹுவலயம்' என்பதை 'வாகுவலயம்' என்றும் கூறுவர், ஸ்ரீ - திரு; பாஹு - வாகு, தோள்; இவை பொன்னாலானவை. இவைகளில் ஒரு

றினால் நிறை முக்கழஞ்செ இரண்டு மஞ்சாடியும் முக்காணியும் மாணிக்கம் ஹளஹளம் குணவியன் எட்டும் ஹளஹளம் பதினெழும் கொமளம் பத்தொன்பதும் நீலகந்தி இரண்டும் தளம் எட்டும் ஆக மாணிக்கம் குழிவும் ப்ரஹாரமும் வெஜ்ஜமும் லஸுநியும் தராஸமும் கற்பற்றும் உடையன உட்படப் பரியனவும் செரியனவும் ஆக ஐம்பத்துநாலினால் நிறை அறுகழஞ்சரையெ இரண்டு மஞ்சாடியும் மூன்றுமாவும், கொத்த முத்து வட்டமும் அனுவட்டமும் ஒப்பு முத்துங் குறுமுத்தும் பயிட்டமும் குளிர்ந்த நீரும் சிவந்த நீரும் இப்பிபற்றும் அராவினவும் வரையுங் கறையும் குருவும் சப்பிரமும் உட்பட முத்து அறுபத்தெட்டினால் நிறை ஐங்கழஞ்செ முக்காலெ மூன்று மஞ்சாடியும் குன்றியும் ஆக நிறை நூற்று நாற்கழஞ்சரையே நாலு மஞ்சாடிக்கு விலை காசு, ஆயிரத் திருநூற்றைம்பது [௬] ஸ்ரீ வாஹுவலயம் ஒன்று பொன் எண்பத்தொன்பதின் கழஞ்செய் எட்டு மஞ்சாடியும் நான் மாவரையும்.

**6.** கட்டின வயிரந் தூயன இருபதும் மட்டதாரை நானூற்று ஒருபத்துமூன்றும் மட்டதாரைச் சப்படி ஐஞ்சும்

---

பாஹுவலயம் 89 கழஞ்சு, $1\frac{1}{8}$ மஞ்சாடி நிறை பொன்னும், 3 கழஞ்சு $2\frac{3}{40}$ மஞ்சாடி நிறையுள்ள 441 வயிரங்களும், $6\frac{1}{2}$ கழஞ்சு $2\frac{3}{10}$ மஞ்சாடி நிறையுள்ள 54 மாணிக்கங்களும், $2\frac{3}{4}$ கழஞ்சு 3 மஞ்சாடி 1 குன்றி நிறையுள்ள 68 முத்துக்களும் உடையது, வயிரங்களில் தூயன 20, மட்டதாரை 406, மட்டதாரைச் சப்படி 5, மட்டதாரைச் சவக்கம் 10ம், அவற்றுள் பொறிவு, முறிவு முதலிய குற்றமுடையனவும் இருந்தன. மாணிக்கங்களில் ஹளஹளம் குணவியன் 8, ஹளஹளம் 17, கோமளம் 19, நீலகந்தி 2, தளம் 8ம் அவற்றுள் குழிவு, பிரகாரம் முதலிய குற்றமுடையனவும் இருந்தன. முத்துக்களில் வட்டம், அனுவட்டம் முதலியனவும் அவற்றுள் வரை, கறை முதலிய குற்றமுடையனவும் இருந்தன.

ஆக இதிலுள்ள பொன், வயிரம், மாணிக்கம், முத்து இவை $104\frac{1}{2}$ கழஞ்சு, 4 மஞ்சாடி நிறையும் 1250 காசு விலை மதிப்புமுடையது.

**மாகாணி** — மாவும் காணியும் ; மா $= \frac{1}{20}$; காணி $= \frac{1}{80}$; இங்கு, $\frac{1}{10}$ மஞ்சாடி ஒரு மா எனவும், $\frac{1}{40}$ மஞ்சாடி ஒரு காணி எனவும் கொள்ளப்படும்.

6. மற்றொரு பாஹுவலயம், 89 கழஞ்சு $\frac{9}{20}$ மஞ்சாடி நிறை பொன்னும், 3 கழஞ்சு $2\frac{7}{20}$ மஞ்சாடி நிறையுள்ள 448 வயிரங்களும் $6\frac{1}{2}$ கழஞ்சு, $2\frac{2}{5}$ மஞ்சாடி நிறையுள்ள 58 மாணிக்கங்களும், $5\frac{1}{2}$ கழஞ்சு

மட்டதாரைச் சவக்கம் பத்தும் ஆக வயிரம் பொறிவும் முறிவும் ரத்தபிந்துவும் காகபிந்துவும் வெந்தனவும் உட்பட நானூற்று நாற்பத்தெட்டினால் நிறை முக்கழஞ்செயிரண்டு மஞ்சாடியும் மும்மாவரையும் மாணிக்கம் ஹளஹளம் குணவியன் எட்டும் ஹளஹளம் பதினைஞ்சும் கொமளம் இருபதும் நீலகந்தி இரண்டும் தளம் எட்டும் ஆக மாணிக்கம் குழிவும் ப்ரஹாரமும் வெஜ்ஜமும் லஸுநியும் த்ராஸமு கற்பற்றும் உடையனவும் உட்படப் பரியனவும் நெரியனவும் ஆக ஐம்பத்து மூன்றினால் நிறை அறு கழஞ்சரையெ இரண்டு மஞ்சாடியும் நான்கு மாவும், கொத்த முத்து வட்டமும் அனு வட்டமும் ஒப்பு முத்துங் குறு முத்தும் பயிட்டமும் குளிர்ந்த நீரும் சிவந்த நீரும் இப்பிபற்று அராவினவும் வரையும் கறையும் குருவும் சுப்பிரமும் உட்பட அறுபத்திரண்டினால் நிறை ஐங்கழஞ்சரையெ குன்றியும் ஆக நிறை நூற்றுநாற்க் கழஞ்சரையெ மூன்று மஞ்சாடியும் எழுமாவுக்கு விலை காசு ஆயிரத்து இருநூற்றைம்பது [ம] ஸ்ரீ சந்தம் ஒன்று பொன் அறுபத்தொன்பதின் கழஞ்செ முக்காலெ இரண்டு மஞ்சாடியும் ஐஞ்சு மாக் காணியும் கட்டின வயிரம் மட்டதாரை முன்னூற்றைம்பதும் மட்டதாரைச் சவக்கம்.

7. நாற்பதும் ஆக வயிரம் பொறிவும் முறிவும் ரத்தபிந்துவும் காகபிந்துவும் வெந்தனவும் உடையன உட்பட முன்னூற்றுத் தொண்ணூறினால் நிறை கழஞ்சரையெ நாலு

1 குன்றி நிறையுள்ள 62 முத்துக்களும் உடையது. வயிரங்களில் தூயன 20, மட்டதாரை 413, மட்டதாரைச் சப்படி 5, மட்டதாரைச் சவக்கம் 10ம், அவற்றுள் பொறிவு, முறிவு முதலிய குற்றமுடையனவும் இருந்தன. மாணிக்கங்களில், ஹளஹளம் குணவியன் 8, ஹளஹளன் 15, கோமளம் 20, நீலகந்தி 2, தளம் 8ம், அவற்றுள் குழிவு, பிரகரம் முதலிய குற்றமுடையனவும் இருந்தன. முத்துக்களில் வட்டம், அனுவட்டம் முதலியனவும் அவற்றுள் வரை, கறை முதலிய குற்றமுடையனவும் இருந்தன.

ஆக இதிலுள்ள பொன், வயிரம், மாணிக்கம், முத்து இவை $101\frac{1}{2}$ கழஞ்சு $3\frac{7}{10}$ மஞ்சாடி நிறையும் 1250 காசு விலைமதிப்பு முடையது.

7. ஸ்ரீ சந்தம் 1 : இது மார்பில் அணியும் மற்றோர் அணிகலன்; பொன்னாலானது. இதில் $69\frac{3}{4}$ கழஞ்சு $2\frac{1}{20}$ மஞ்சாடி பொன்னும், $1\frac{1}{2}$

மஞ்சாடியும் ஆறுமாவும், மாணிக்கம் ஹளஹளம் குணவியன் ஐஞ்சும் ஹளஹளம் இருபதும் கொமளம் முப்பதும் நீல கந்தி நாலும் சட்டம் இரண்டும் தளம் பத்தொன்பதும் ஆக மாணிக்கம் குழிவும் ப்ரஹாரமும் வெஜ்ஜமும் லஸுநியும் த்ராசமும் கற்பற்றும் உடையனவும் பரியனவும் நெரியனவும் ஆக எண்பதினால் நிறை அறு கழஞ்செ எழு மஞ்சாடியும் எட்டுமா முக்காணியும், கொத்தனவும் தைய்த்தனவும் ஆக முத்து வட்டமும் அநுவட்டமும் ஒப்பு முத்துங் குறுமுத்தும் பயிட்டமும் நிம்பொளமும் குளிர்ந்த நீரும் சிவந்த நீரும் இப்பிபற்று அராவினவும் வரையும் கறையும் குருவும் சுப்பிரமும் உட்பட முத்து ஆயிரத்து நானூற்று அறுபத் திரண்டினால் நிறை தொண்ணூற்று அறு கழஞ்செய் காலும் ஆக நிறை நூற்று எழுபத்து நாற்கழஞ்சேய் காலுக்கு விலை காசு ஆயிரத்தைஞ்ஞூறு [௰க] திருக்கைப் பொட்டு ஒன்று பொன் பதிநெண் கழஞ்செய் முக்காலெழுன்று மஞ்சாடியும் எட்டு மாவும் மாணிக்கம் கொமளம் ஒன்று நிறை மஞ்சாடியுங் குன்றியும் கொத்த முத்து வட்டமும் அநு வட்டமும் ஒப்பு முத்துங் குறுமுத்தும் நிம்பொளமும் பயிட்டமும் குளிர்ந்த நீரும்

8. சிவந்த நீரும் வரையும் கறையும் குருவும் சுப்பிரமும் உட்பட முத்து நூற்றுமுப்பத்தெழினால நிறை எழு கழஞ் செய் முக்காலெ நாலு மஞ்சாடியுங் குன்றியும் ஆக நிறை

---

கழஞ்சு $4\frac{3}{5}$ மஞ்சாடி நிறையுள்ள 396 வயிரங்களும், 6 கழஞ்சு $3\frac{4}{5}$ மஞ் சாடி நிறையுள்ள 80 மாணிக்கங்களும், $96\frac{1}{4}$ கழஞ்சு நிறையுள்ள 1462 முத்துக்களும் கொண்டது. வயிரங்களில் மட்டதாரை 350; மட்ட தாரைச் சவக்கம் 40ம் இருந்தன. மாணிக்கங்களில் ஹளஹளம் குண வியன் 5, ஹளஹளம் 20, கோமளம் 30, நீலகந்தி 4, சட்டம் 2, தளம் 19ம், அவற்றுள் குழிவு, பிரஹாரம் முதலிய குற்றமுடையனவும் இருந் தன. முத்துக்களில் வட்டம், அநுவட்டம் முதலியனவும், அவற்றுள் வரை, கறை முதலிய குற்றமுடையனவும் இருந்தன.

ஆக இதிலுள்ள பொன், வயிரம், மாணிக்கம், முத்து இவை $174\frac{1}{4}$ கழஞ்சு நிறையும், 1000 காசு விலை மதிப்பும் உள்ளது.

8. திருக்கைப்பொட்டு 2: இவை கைகளில் அணியும் அணிகலன் கள்; பொன்னாலானவை. இவற்றில் ஒன்று $18\frac{3}{4}$ கழஞ்சு $3\frac{4}{5}$ மஞ்சாடி நிறை பொன்னும், மாணிக்க வகையில் 1 மஞ்சாடி 1 குன்றி நிறையுள்ள

இருபத்தறு கழஞ்செய் முக்காலெ நாலு மஞ்சாடியும் எட்டு மாவுக்கு விலை காசு எண்பது [௰௨] திருக்கைப் பொட்டு ஒன்று பொன் பதினெண் கழஞ்செய் ஆறு மஞ்சாடியும் மாணிக்கம் கொமளம் ஒன்று நிறை மஞ்சாடியும் மூன்று மாவும் கொத்த முத்து வட்டமும் அனுவட்டமும் ஒப்புமுத்துங் குறுமுத்தும் நிம்பொளமும் பயிட்டமும் குளிர்ந்த நீரும் சிவந்த நீரும் வரையுங் கறையும் குருவும் சுப்பிரமும் உட்பட முத்து நூற்று நாற்ப்பத்து மூன்றினால் நிறை எண் கழஞ்செய் ஆறு மஞ்சாடியும் ஆக நிறை இருபத்தறு கழஞ்சரையெ மூன்று மஞ்சாடியும் மூன்று மாவுக்கு விலை காசு எண்பது [௰௩] தூடகம் ஒன்று பொன் எண்பதின் கழஞ்செய் நாலுமஞ்சாடியும் அறுமாவரையும் கட்டின வயிரந் தூயன முப்பதும் மட்டதாரை நானூற்று மூன்றும், மட்டதாரைச் சவக்கம் எழுபதும் மட்டதாரைச் சப்படி முப்பத்தைஞ்சும் உருளை எண்பத்திரண்டும ஆக வயிரம் பொறிவும் முறிவும் ரத்தபிந்துவும் காகபிந்துவும் வெந்தனவும் உட்பட அறுநூற்று இருபதினால் நிறைநாற்க் கழஞ்செய் எழுமாவும் மாணிக்கம் ஹளஹளம் குணவியன் பத்தும் ஹளஹளம் இருபத்துநாலும் கொமளம் பதினெழும் நீலகந்தி.

9. நாலும் ஆக மாணிக்கம் குழிவும் ப்ராஹாரமும் வெஜ்ஜமும் லஸுநியும் த்ராஸமும் கற்பற்றும் உடையன

---

கோமளம் ஒன்றும், $7\frac{3}{4}$ கழஞ்சு 4 மஞ்சாடி 1 குன்றி நிறையுள்ள 137 முத்துக்களும் கொண்டது. முத்துக்களில் வட்டம், அனுவட்டம் முதலியனவும், அவற்றுள் வரை, கறை முதலிய குற்றமுடையனவும் இருந்தன.

ஆக இதிலுள்ள பொன், மாணிக்கம், முத்து இவை $26\frac{3}{4}$ கழஞ்சு $4\frac{4}{5}$ மஞ்சாடி நிறையும், 80 காசு விலை மதிப்பு முடையது.

மற்றொரு திருக்கைப்பொட்டு 18 கழஞ்சு 6 மஞ்சாடி பொன்னும், மாணிக்க வகையில் $1\frac{3}{40}$ மஞ்சாடி நிறையுள்ள கோமளம் ஒன்றும், 8 கழஞ்சு 6 மஞ்சாடி நிறையுள்ள 143 முத்துக்களும் கொண்டது முத்துக்களில் வட்டம், அனுவட்டம் முதலிய குற்றமுடையனவும் இருந்தன.

ஆக, இதிலுள்ள பொன், மாணிக்கம், முத்து இவை $26\frac{1}{2}$ கழஞ்சு $3\frac{3}{10}$ மஞ்சாடி நிறையும், 80 காசு விலை மதிப்புமுடையது. திருக்கைப் பொட்டுக்களில் வயிரம் இல்லாமை குறிப்பிடத்தக்கது.

**9. தூடகம் 2:** இவை கைகளில் அணியும் அணிகலன்கள்; பொன்னாலானவை. இவற்றுள் ஒன்று 80 கழஞ்சு $4\frac{7}{50}$ மஞ்சாடி நிறை பொன்

வும் உட்படப் பரியனவும் நெரியனவும் ஆக ஐம்பத்தைஞ்சினுல் நிறை கழஞ்சரையெ மஞ்சாடியும் ஒரு மாவரையும் ஆக நிறை எண்பத்தைங் கழஞ்செய் முக்காலெ மஞ்சாடியும் குன்றிக்கு விலை காசு எண்ணூறு [மச] சூடகம் ஒன்று பொன் எண்பத்துநாற் கழஞ்செய் முக்காலே மூன்று மஞ்சாடியும் கட்டின வயிரந் தூயன முப்பதும் மட்டதாரை நானூற்றைம்பத்தாறும் மட்டதாரைச் சவக்கம் எழுபதும் மட்டதாரைச் சப்படி முப்பத்தாறும் உருளை எண்பத்து மூன்றும் ஆக வயிரம் பொறிவும் முறிவும் ரத்தபிந்துவும் காக பிந்துவும் வெந்தனவும் உட்பட அறுநூற்று எழுபத்தைஞ்சினுல் நிறை நாற்கழஞ்செய் நாலு மஞ்சாடியுங் குன்றியும் மாணிக்கம் ஹளஹளம் குணவியன் பத்தும் ஹளஹளம் முப்பத்தொன்றும் கொமளம் பதினாறும் நீலகந்தி மூன்றும் ஆக மாணிக்கம் குழிவும் ப்ரஹாரமும் வெஜ்ஜமும் லஸு

---

னும் 4 கழஞ்சு $\frac{7}{10}$ மஞ்சாடி நிறையுள்ள 620 வயிரங்களும், $1\frac{1}{2}$ கழஞ்சு $1\frac{3}{20}$ மஞ்சாடி நிறையுள்ள 55 மாணிக்கங்களும் உள்ளன. வயிரங்களில் தூயன 30, மட்டதாரை 403, மட்டதாரைச் சவக்கம் 70, மட்டதாரைச் சப்படி 35, உருளை 82ம், அவற்றுள் பொறிவு, முறிவு முதலியனவும் இருந்தன. மாணிக்கங்களில் ஹளஹளம் குணவியன் 10, ஹளஹளம் 24, கோமளம் 17, நீலகந்தி 4ம் அவற்றுள் குழிவு, பிரகரம் முதலிய குற்ற, முடையனவும் இருந்தன.

ஆக இதிலுள்ள பொன், வயிரம், மாணிக்கம் இவை $85\frac{3}{4}$ கழஞ்சு 1 மஞ்சாடி, 1 குன்றி நிறையும், 800 காசு விலை மதிப்புமுடையது.

மற்றொரு சூடகம் $84\frac{3}{4}$ கழஞ்சு, 3 மஞ்சாடி பொன்னும், 4 கழஞ்சு 4 மஞ்சாடி 1 குன்றி நிறையுள்ள 675 வயிரங்களும், $1\frac{1}{2}$ கழஞ்சு 3 மஞ்சாடி 1 குன்றி நிறையுள்ள 60 மாணிக்கங்களும் கொண்டது. வயிரங்களில் தூயன 30, மட்டதாரை 456, மட்டதாரைச் சவக்கம் 70 மட்டதாரைச் சப்படி 36, உருளை 83ம், அவற்றுள் பொறிவு, முறிவு முதலிய குற்றமுடையனவும் இருந்தன. மாணிக்கங்களில் ஹளஹளம் குணவியன் 10, ஹளஹளம் 31, கோமளம் 16, நீலகந்தி 3ம் அவற்றுள் குழிவு, பிரகரம் முதலிய குற்றமுடையனவும் இருந்தன.

ஆக இதிலுள்ள பொன், வயிரம், மாணிக்கம், இவை $90\frac{3}{4}$ கழஞ்சு 1 மஞ்சாடி நிறையும் 800 காசு விலை மதிப்புமுடையது. சூடகங்களில் முத்துக்கள் இல்லாமை குறிப்பிடத்தக்கது.

இச்சாசனத்திலுள்ள அணிகலன்கள் : மகுடம், வாளி, உழுத்து, மாலை, வாகுவலயம், கைப்பொட்டு, சூடகம் ; இரத்தினங்கள் - வயிரம், மாணிக்கம், முத்து.

நியும் த்ராஸமும் கற்பற்றும் உடையனவும் உட்படப் பரி யனவும் செரியனவும் ஆக அறுபதினுல் நிறை கழஞ்சரை யெ மூன்று மஞ்சாடியுங் குன்றியும் ஆக நிறை தொண் ணூற்றுக் கழஞ்செய் முக்காலெ மஞ்சாடிக்கு விலை காசு எண்ணூறு [ஸ்ரீ]

---

**வயிரங்கள்** - தூயன, மட்டதாரை, மட்டதாரைச் சவக்கம், மட்ட தாரைச் சப்படி, பளிங்கு, பந்தஸாரம், சப்படி, சவக்கம், உருளை, குற்றங் கள் - பொறிவு, முறிவு, இரத்தபிந்து, காகபிந்து, வெந்தன.

**மாணிக்கங்கள்** - ஹளஹளம் குணவியன், ஹளஹளம், கோமளம், நீலகந்தி, தளம், சட்டம். குற்றங்கள் - குழிவு, பிரஹாரம், வெஜ்ஜம், லஸூநி, திராசம், கற்பற்று, பரியன, சிறியன.

**முத்துக்கள்** - வட்டம், அனுவட்டம், ஒப்புமுத்து, குறுமுத்து, நிம்பொளம், பயிட்டம், பழமுத்து, இப்பிபற்று, அராவின, சிவந்த நீர், குளிர்ந்த நீர், அம்புமுதுவரை, அம்புமுதுபாடன், குரு, அம்புமுது. குற்றங்கள் - வரை, கறை, குரு, சுப்பிரம், திரங்கல்.

**இரத்தினங்களை அணிகலத்தோடு பொருத்துவதற்கு உதவுவன** - சரடு, சட்டம், செப்பாணி, அரக்கு, பிஞ்சு முதலியன.

பயிற்சி வினாக்கள்

1. முதலாம் இராசேந்திரன் யார்? அவன் சாசனங்களாகக் குறிக் கப்படுவன யாவை?

2. குந்தவையாருக்கும் முதலாம் இராசேந்திர சோழதேவனுக்கும் உள்ள தொடர்பு யாது? குந்தவையாரைப்பற்றிக் குறிப்பு வரைக.

3. குந்தவையார் சாசனம் எங்குக் காணப்படுகிறது? எக்காலத் தில் ஏற்பட்டது? அதில் கூறப்படும் செய்திகள் யாவை?

4. குந்தவையார் சாசனத்தால் அறியப்படும் பண்டைச் செய்திகள் யாவை?

5. குந்தவையார் உமா பரமேசுவரியார் திருமேனிக்கு வழங்கிய அணிகலன்களைக் குறிப்பிட்டு, அவற்றுள் ஒன்றின் நிறை, விலை ஆகிய வற்றைச் சாசனத்தில் கண்டபடி குறிப்பிடுக.

6. விளக்குக : கோப்பரகேசரி வன்மர், ஆடவல்லான் என்னும் குடிஞைக்கல், தக்ஷிணமேரு விடங்கன் என்னும் காசுகல்.

7. குறிப்பு வரைக : வல்லவரையர் வந்திய தேவர், உமா பரமேசு வரியார்.

8. பொருள் தருக : திருமேனி, சரடு, சட்டம், செப்பாணி அரக்கு, பிஞ்சு, மட்டதாரை, சவக்கம், சப்படி, பொறிவு, முறிவு, இரத்த

பிந்து, காகபிந்து, ஹளஹளம், வாளி, விலை, காசு, உழுத்து, பாடன் குரு, குணவியன், திரங்கல், பாகுவலயம், சூடகம், மா, காணி, கற்பற்று.

9. ஆழ்வார் பராந்தகன் குந்தவையார் சாசனத்தில் கூறப்படும் இரத்தினங்கள், அவற்றின் வகைகள், குற்றங்கள் ஆகியவற்றைக் குறிப்பிட்டு விளக்குக.

10. அணிகலன்களில் வயிரம், மாணிக்கம், முத்து இவைகளை அமைத்தற்குப் பயன்படுவன யாவை?

11. கட்டின வயிரம், கட்டினவும் கொத்தனவும், தைத்தமுத்து, பரியனவும் நெரியனவும் - இத்தொடர்களால் அறியப்படுவன யாவை?

12. ஆழ்வார் பராந்தகன் குந்தவையார் சாசனத்தில் வரும் நிறுத்த லளவைகள் யாவை? அவற்றின் அளவு வகை யாது? மா, காணி என்பன எவ்வாறு கணக்கிடப்படுகின்றன?

# 10. பொய்கைநாடு கிழவன் ஆதித்த சூரியன் சாசனம் II*

## முன்னுரை

பொய்கைநாடு கிழவன் ஆதித்த சூரியன்[1] சாசனம் என்பது, பொய்கை நாட்டுக்குத் தலைவனும் ஆதித்த சூரியன் என்னும் இயற்பெயரையுடையவனுமான பொய்கை நாடு ஆதித்த சூரியன் என்பவனால் ஏற்பட்ட சாசனம் என்று பொருள்படும்.

---

* S. I. I, Vol. II, Part II, No. 41, p. 169.

1. இவனைப்பற்றி உயர்திரு T. V. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் தமது "பிற்காலச் சோழர் சரித்திரம்" என்னும் நூலில் முதல் இராசராச சோழன் வரலாற்றில் பின்வருமாறு எழுதியுள்ளார்கள்: "இவன் சோழமண்டலத்தில் இராசேந்திர சிங்க வளநாட்டில் உள் நாடுகளுள் ஒன்றாகிய பொய்கை நாட்டின் தலைவன்; இராசராச சோழன் தஞ்சைமாநகரில் எடுப்பித்த பெரிய கோயிலில் இவ்வேந்தன் ஆணையின் படி ஸ்ரீ காரியம் செய்து வந்தவன்; சிவபெருமானிடத்தில் சிறந்த பக்தியுடையவன்; இவன் இராசராசேச்சரத்தில் திருஞானசம்பந்த அடிகள், திருநாவுக்கரையதேவர், நம்பியாரூரர், நங்கை பரவையார், மெய்ப்பொருள் நாயனார், சிறுத்தொண்ட நாயனார் என்போர்க்குச் செப்புப் படிமங்கள் எழுந்தருளுவித்து அவற்றிற்கு அணிகலன்களும் அளித்துள்ளனன். இச்செயல், இவன் சமயக்குரவர்களிடத்தும் சிவனடியார்களிடத்தும் வைத்திருந்த பேரன்பினை நன்கு புலப்படுத்துவதாகும். அன்றியும் சிவனடியார்களுள் மெய்ப்பொருள் நாயனார்க்கும், சிறுத்தொண்ட நாயனார்க்கும் இவன் பெரிய கோயிலில் படிமங்கள் எழுந்தருளுவித்தமைக்குக் காரணம் அவ்விருவரும் செய்த செயற்கரும் செயல்கள் இவன் உள்ளத்தைப் பிணித்தமையேயாம். மெய்ப்பொருள் நாயனாரது படிமத்தை வைத்த செய்தியைக் கூறும் கல்வெட்டில் அவ்வடியார் பெயரைக் கூறாமல் 'தத்தா நமர்காண் என்ற மலாடுடையார்' என்று இவன் குறிப்பிட்டிருப்பது அவர்பால் இவனது உள்ளத்தில் கிளர்ந்தெழுந்த அன்பின் முதிர்ச்சியை இனிது உணர்த்துவதாகும். இவன் தன் அரசனிடத்தும் பேரன்புடையவன் என்பது தஞ்சைப் பெரிய கோயிலில் இராசராச சோழன், உலோகமாதேவி ஆகிய இருவர் படிமங்களும் எழுந்தருளுவித்து அவற்றிற்கு அணிகலன்களும் கொடுத்திருப்பதினால் நன்கு விளங்கும். இவன் கி. பி. 675ஆம் ஆண்டில் திருச்சோற்றுத்துறைக் கோயிலில் நாள்தோறும் தேவாரப் பதிகம் பாடுவோர்க்கு நிவந்தமாகப் பொன் அளித்துள்ளனன். ஆகவே, இவன் தன் வாழ்நாளில் சிவனடியார்களிடத்தும், அரசனிடத்தும் ஒப்பற்ற அன்பு பூண்டொழுகியவன் என்பது ஒருதலை. இராசராசன் இவனது சிறந்த பண்புகளை உணர்ந்துதான் இராசராசேச்சுரத்தில் ஸ்ரீ காரியம் செய்யும் வேலையில் இவனை அமர்த்தினன் போலும்."

இவன் சாசனம் ஒன்று, முன்னர் முதலாம் இராசராசன்[1] காலத்துச் சாசனங்களில் ஒன்றாக அமைந்துள்ளது. இவன் முதலாம் இராசராசனுடைய அரசியல் தலைவர்களில் ஒருவனாய்த் தென்னவன் மூவேந்த வேளான் என்னும் சிறப்புப் பெயர் பெற்றவன். இராசராசன் உத்தரவின்படி, தஞ்சை இராசராசேச்சுரம் கோயில் காரியங்களைக் கவனிக்கும் பணியையும் இவன் ஏற்றுச் செய்து வந்தான். முதலாம் இராசேந்திரசோழ தேவன்[2] காலத்தில் இவனால் ஏற்பட்டனவாக மூன்று சாசனங்கள் பாடமாக வந்துள்ளன. அவற்றுள் முதலாவதான இச்சாசனம், இராசேந்திரசோழன் ஆட்சியின் மூன்றாம் ஆண்டிற்கு முன் ஏற்பட்டது. தஞ்சைப் பெரிய கோயில் மதிலின் மேற்கு மூலையிலுள்ள ஒரு மாடத்தில் காணப்படுகிறது; தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது. பதின்மூன்று வரிகளையுடையது.

இச் சாசனத்தில் ஆதித்த சூரியன் என்பான் தஞ்சை இராசராசேச்சுரர் கோயிலில் தான் எழுந்தருளுவித்த நம்பியாரூரர், திருஞானசம்பந்தடிகள், திருநாவுக்கரையர் ஆகியோர் பிரதிமங்களுக்கு (உருவச் சிலைகளுக்கு) $41\frac{1}{2}$ பல நிறையுள்ள நிலை விளக்கு ஒன்றும், இருப்பு நாராசம் ஒன்றும் கொடுத்ததோடு பெரிய பெருமாள் பிரதிமத்திற்கு 120 பல நிறையுள்ள நிலை விளக்கு ஒன்றும், இருப்பு நாராசமொன்றும் தானமாகக் கொடுத்த செய்தி கூறப்படுகிறது. இவன் இவ்வுருவங்களைக் கோயிலில் எழுந்தருளுவித்ததும், அவற்றின் உயரம் முதலியன கோயில் முழத்தால் அளந்தும், அவைகளுக்கு இவன் கொடுத்த அணிகலன்களிலுள்ள பொன் ஆடவல்லான் என்னும் கோயில் நிறை கல்லாலும், இரத்தினங்கள் தட்சணமேருவிடங்கன் என்னும் கோயில் நிறைகல்லாலும் நிறுக்கப்பட்டும் கல்லில் வெட்டப்பட்ட செய்தி, முதலாம் இராசராசன் காலத்திலேற்பட்ட இவனுடைய முந்திய சாசனத்தால் அறியப்படுகிறது.

முதலாம் இராசேந்திரசோழன் கி. பி. 1012 முதல் 1044 வரை முப்பத்துமூன்று ஆண்டுகள் சோழநாட்டை ஆண்டான். இச்சாசனம் அவன் ஆட்சியின் மூன்றாவது ஆண்டிற்கு முன்னர் ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1015 ஆம் ஆண்டிற்கு முற்பட்டதென்னலாம்.

---

1. இவன் வரலாற்றை இந்நூலிலுள்ள ஐந்தாம் சாசனத்தின் முன்னுரைக் குறிப்பில் காண்க. (பக்கம் 34-35)

2. இவன் வரலாற்றை இந்நூலிலுள்ள ஒன்பதாம் சாசனத்தின் முன்னுரைக் குறிப்பில் காண்க. (பக்கம் 79-82)

**சாசனம்**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரம்
2. உடையார்க்கு ஸ்ரீ கார்யஞ் செய்கின்ற பொ—
3. ய்கை நாடு கிழவன் ஆதித்தன் ஸூர்யனு—
4. ன தென்னவன் மூவெந்த வெளான்
5. தான் எழுந்தருளுவித்த நம்பியாரூர—
6. நார்க்கும் திருநான சம்பந்தடிகளுக்கும் திரு—
7. நாவுக்கரையதெவர்க்கும் உடையார் ஸ்ரீ ரா—
8. ஜெந்திர சொழ தெவர்க்கு யாண்டு மூன்றுவது வரை
9. குடுத்த தரா நிலைவிளக்கு ஒன்று இருப்பு நாராசம் உட்பட நி—

குறிப்புரை

1. **ஸ்வஸ்தி ஸ்ரீ உடையார்:** இவைகளுக்குரிய விளக்கத்தை முந்திய சாசனங்களின் குறிப்புரைகளில் காண்க. ஸ்ரீராஜ ராஜீஸ்வரம் உடையார் - தஞ்சைப் பெரிய கோயில் இறைவர்; அவர் 'தட்சணமேரு விடங்கர்' என்று அழைக்கப்படுவர்.

2. **ஸ்ரீ கார்யம்** - கோயில் காரியங்கள்; கோயில் காரியங்களை மேற்பார்வை செய்பவர் 'ஸ்ரீ காரியம் செய்பவர் அல்லது ஆராய்கிறவர்' என்று அழைக்கப்படுவர்.

3—4. **பொய்கை நாடு கிழவன்** - பொய்கை நாட்டுக்குத் தலைவன்; பொய்கை நாடு, சோழ மண்டலத்தில் இராசேந்திர சிங்க வளநாட்டிலுள்ள உள்நாடுகளில் ஒன்று. இவன் இயற்பெயர், 'ஆதித்த சூரியன்'; சிறப்புப்பெயர் 'தென்னவன் மூவேந்த வேளான்' என்பது.

5—6. **எழுந்தருளுவித்த** - செய்துவைத்த: நம்பியாரூரநார், திருஞானசம்பந்தடிகள், திருநாவுக்கரையதெவர்: இவர்கள் மூவரும் சைவ சமயாச்சாரியர் நால்வருள் தேவாரம் பாடிய மூவராவர்.

7. **உடையார் ஸ்ரீ ராஜேந்திர சொழதெவர்:** 'உடையார்' என்பது அரசர்க்கு மரியாதைபற்றி வழங்கும் சொல் என்பது இத்தொடராலும், கோயில் இறைவனுக்கு வழங்கும் சொல் என்பது 'உடையார் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரம் உடையார்' என வழங்கும் தொடராலும் புலப்படும்.

8. **யாண்டு மூன்றுவது வரை** - ஆட்சி ஆண்டு மூன்றுவதற்கு முன்னர். யாண்டு - ஆட்சி ஆண்டு.

9. **தராநிலை விளக்கு** - தரா என்னும் உலோகத்தால் செய்த குத்து விளக்கு; தரா-செம்பும் காரீயமும் சேர்ந்த ஓர் உலோகம்; நிலைவிளக்கு -

10. றை நாற்பத்தொரு பலவரை [க] இவனெதாஞ் எழுந்தருளுவி—

11. த்த பெரியபெருமாளுக்குக் குடுத்த தரா நிலைவிளக்கு ஒன்று

12. இருப்பு நாராசம் உள்பட நிறை நூற்றிருபதின் பலம் [உ] வெண்க—

13. ல மடல் ஒன்று நிறை நாற்பலம். [ரூ]

---

குத்து விளக்கு; இருப்பு நாராசம் - இரும்பினால் செய்யப்பட்ட சலாகை; அது விளக்கைத் தூண்டுவதற்கும் அவிப்பதற்கும் பயன்படுவது போலும்.

**10. நாற்பத்தொரு பலவரை** : $41\frac{1}{2}$ பலம்; பலவரை - அரைப்பலம்; ஆதித்த சூரியன் நம்பியாரூரர் முதலிய மூவர் திருமேனிகளுக்கும் கொடுத்த குத்து விளக்கும், அதைத் தூண்டுவதற்குரிய நாராசமும் சேர்ந்து $41\frac{1}{2}$ பலம் நிறை இருந்தது. பலம் - நிறைவகை.

**11. பெரிய பெருமாள்** - முதலாம் இராசராசன்; இதனை ஐந்தாம் சாசனக் குறிப்பாலும் அறியலாம்.

12. ஆதித்த சூரியன் தான் செய்து வைத்த முதலாம் இராசராசன் படிமத்திற்கு 120 பல நிறையில் ஒரு குத்துவிளக்கும் இருப்புச் சலாகையும் கொடுத்தான். அந்தக் குத்துவிளக்கு தரா என்னும் உலோகத்தால் செய்தது. அத்துடன் அவன் அதற்கு ஒரு வெண்கல மடலும் தானமாகக் கொடுத்தான்.

**13. வெண்கல மடல்** : வெண்கலம் என்னும் உலோகத்தால் செய்யப்பட்ட மடல் என்னும் கலம்; மடல் - திருநீறும் சந்தனமும் வைக்கும் கலம். அது 40 பலம் நிறையுள்ளதா யிருந்தது.

பயிற்சி வினாக்கள்

1. ஆதித்த சூரியன் யார்? அவனைப் பற்றிக் குறிப்பு வரைக.

2. தஞ்சைப் பெரிய கோயில் மேலைச்சுற்று மதிலிலுள்ள மாடத்தில் காணப்பட்ட ஆதித்த சூரியன் சாசனத்தில் கூறப்படும் செய்தி யாது?

3. முதலாம் இராசேந்திர சோழதேவன் காலத்தில் தேவாரம் பாடிய மூவர் பெயர்கள் வழங்கிய முறையைச் சான்று காட்டி விளக்குக.

4. குறிப்பு வரைக: இராஜராஜேஸ்வரம், பொய்கை நாடு கிழவன், தராநிலை விளக்கு, பெரிய பெருமாள்.

5. பொருள் தருக,—ஸ்வஸ்திஸ்ரீ, உடையார், ஸ்ரீகாரியம், மூன்றுவது வரை, நிலைவிளக்கு, நாராசம், மடல், நிறை.

# 11. பொய்கைநாடு கிழவன் ஆதித்த சூரியன் சாசனம் III*

## முன்னுரை

பொய்கைநாடு கிழவன் ஆதித்த சூரியனை தென்னவன் மூவேந்த வேளான்[1] முதலாம் இராசேந்திரசோழ தேவன்[2] ஆட்சிக் காலத்தில் ஏற்படுத்திய சாசனங்களில் இச் சாசனம் ஒன்று. இஃது அவனது ஆட்சியின் மூன்ருவது ஆண்டிற்கு முன்னர் ஏற்பட்டது. தஞ்சைப் பெரிய கோயில் நடுவிடத்துக் கருப்ப கிருகத்தின் மேலைப்புறச் சுற்றுச்சுவரின் அடிப்பாகத்தில் காணப்படுகிறது. தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது; எட்டுப் பத்திகளை யுடையது.

இச்சாசனத்தில் பொய்கை நாடு கிழவன் ஆதித்த சூரியன் என்பான் தஞ்சைப் பெரிய கோயிலில் சேத்திரபால தேவர், வைரவ மூர்த்திகள் ஆகியோருக்குத் திருமேனிகளையும், சிறுத்தொண்ட நம்பி, திருவெண்காட்டு நங்கை, சீராள தேவர் ஆகியோர்க்குப் பிரதிமங்களையும், அவை நிற்றற்குரிய பீடங்களோடும் செய்து வைத்து, அவைகளின் உயரமும், அவைகளுக்குக் கொடுக்கப்பட்ட அணிகலன் முதலியனவும் இவை எனக் கல்லில் செதுக்கிய செய்தி இதில் கூறப்பட்டுள்ளது. படிமங்களின் உயரத்தைக் கோயில் முழத்தால் அளந்தும், அவைகளுக்குக் கொடுக்கப்பட்ட அணிகலன்களிலுள்ள பொன்னை, ஆடவல்லான் என்னும் கோயில் நிறைகல்லாலும், இரத்தினங்களைத் தட்சணமேரு விடங்கன் என்னும் கோயில் நிறை கல்லாலும் நிறுத்தும் கல்லில் செதுக்கப்பட்ட செய்தியும் இதனுல் அறியப்படுகிறது.

முதலாம் இராசேந்திர சோழ தேவன் கி. பி. 1012 முதல் 1044 வரை முப்பத்து மூன்று ஆண்டுகள் சோழநாட்டை ஆண்டான். இச்சாசனம் அவன் ஆட்சியின் மூன்ரும் ஆண்டிற்கு முற்பட்டதென இச்சாசனத்தின் ஆங்கில முன்னுரைக் குறிப்பால் தெரிகிறது. எனவே இதன் காலம் கி. பி. 1015 ஆம் ஆண்டிற்கு முற்பட்ட தென்னலாம்.

---

*S. I. I. Vol, II, Part II No. 43. PP. 172—174.

1. இவனைப்பற்றிய குறிப்பினை ஐந்தாம், பத்தாம் சாசனங்களின் குறிப்புரைப் பகுதிகளில் காண்க.

2. இவன் வரலாற்றினை ஒன்பதாம் சாசனத்தின் அடிக்குறிப்பில் காண்க.

1. .... ... ... .... ன் மூவெந்த வெளான் யாண்டு மூன்று வது வரை எழுந்தருளுவித்த செப்புத் திருமெனிகளும் ப்ரதிமங்களும் உடையார் கொயிலில்

2. முழத்தால் அளக்தும் பொன் ஆடவல்லான் என்னுங் கல்லால் நிறை எடுத்தும் ரத்நங்கள் சரடு நீக்கி தக்ஷிணமேரு விடங்கன் என்னுங் கல்லால் நிறை எடுத்துங் கல்லில் வெட்டின [க] பாதாதிகெஸாந்தம் முக்காலெ அரைக்கால் முழ உசரத்து எட்டு ஸ்ரீஹஸ்த்தம் உடையராகக் கனமாக எழுந்தருளுவித்த க்ஷெத்ரபால தெவர் ஒருவர் [உ] இ—

3. வர் எழுந்தருளி நின்ற ஒன்பதிற்று விரல் உசரத்து ஒன்பதிற்று விரல் சமை சதுரத்து பத்மத் தொடுங்கூடச் செய்த பீடம் ஒன்று [ங] இவர்க்கெ இவன் குடுத்த திரள் மணிவடம் ஒன்று பொன் கால் [ச] சுருக்கின வீர பட்டம் ஒன்று பொன் எழு மஞ்சாடி [ரு] திருக்குதம்பைத் தகடு இரண்டு பொன் முன்று மஞ்சாடி [சு] பாதாதிகெஸாந்தம் பதினெ—

---

குறிப்புரை

1. **மூவெந்த வெளான்** - பொய்கைநாடு கிழவன் ஆதித்த சூரியனை தென்னவன் மூவேந்த வேளான்; **யாண்டு மூன்றுவது வரை** - முதலாம் இராசேந்திர சோழதேவன் ஆட்சியின் மூன்றுவது ஆண்டிற்கு முன்னர்; **எழுந்தருளுவித்த** - செய்துவைத்த: **செப்புத் திருமெனிகளும் ப்ரதிமங்களும்** - செம்பினால் செய்யப்பட்ட கடவுள் திருவுருவங்களும், மக்கள் படிமங்களும்; திருமெனி-கடவுள் திருவுருவம்; பிரதிமம்-மக்கள் படிமம்; **உடையார் கொயில்** - தஞ்சை இராசராசேசுவரம் உடையார் கோயில்.

2. **கொயிலில் முழத்தால்** - கோயில் முழக்கோலால்; முழம்-2 சாண்; **பொன்** - அணிகலன்களிலுள்ள பொன்; **ஆடவல்லான் என்னும் கல்**; இது தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ளது; பொன் முதலியவற்றை நிறுப்பது. பொன்னிலும் விலையுயர்ந்த இரத்தினங்கள் இக்கோயிலி லுள்ள 'தட்சணமேரு விடங்கன்' என்னும் நிறைகல்லால் நிறுக்கப் பட்டது. இதனால் அக்காலத்தில் கோயில்தோறும் வேறுபட்ட முழக் கோல்களும், நிறை கற்களும் இருந்தன என்று தெரிகிறது. **சரடு** - இரத்தினங்களைக் கோக்க உதவும் கயிறு; **நிறை எடுத்தும்** - நிறுத்தும்; **கல்லில் வெட்டின** - அவற்றவற்றின் அளவுகள் கல்லில் வெட்டப் பட்டவை.

2—3. **க்ஷெத்ரபாலதெவர் (திருமேனி)** - அந்த இடத்திற்குரிய கடவுள் திருவுருவம்: **க்ஷேத்ரம்** - இடம், தலம்; **பாலதெவர்**-காக்கும் கடவுள்.

4. ண் விரல் உசரத்து இரண்டு ஸ்ரீஹஸ்த்தம் உடையராய் ஆடுகிறாராகக் கனமாக எழுந்தருளுவித்த ஸ்ரீபைரவ மூர்த்திகள் ஒருவர் [எ] இவர் எழுந்தருளி நின்ற ஒன்பதிற்று விரல் உசரத்து எண் விரல் அகலத்து பத்மத்தொடுங்கூடச் செய்த பீடம் ஒன்று [அ] இவர்க்கு இவன் குடுத்த திரள் மணி வடம் ஒன்று பொன் நாலு மஞ்சாடி [கூ] வடம் ஒன்றிற் கொத்த முத்துக் கறடும் இரட்டையுஞ் சப்பத்தியும் ஆக முத்து முப்—

---

இக்கடவுள் திருவுருவம் அடிமுதல் முடிவரை $\frac{7}{8}$ முழம் உயரமுடையது ; எட்டுத் திருக்கரங்களைக் கொண்டது. செம்பினால் கட்டியாகச் செய்து வைக்கப்பட்டது. 9 விரல் உயரமும் 9 விரல் நீள அகலமுமுடைய தாமரை வடிவமான ஆசனத்தோடு கூடிய பீடத்தையு முடையது. ஆதித்த சூரியன் இத்திருவுருவத்திற்கு $\frac{1}{4}$ மஞ்சாடி பொன் நிறையுள்ள ஒரு திரள்மணிவடத்தையும், 7 மஞ்சாடி பொன் நிறையுள்ள ஒரு வீர பட்டத்தையும் தானமாகக் கொடுத்தார்.

ஸ்ரீஹஸ்த்தம் - திருக்கைகள்; கனமாக-கட்டியாக; விரல்-8 தோரை ; தோரை 1 நெல் அளவு ; சமை சதுரம் - நீள அகலம் சமமாகவுள்ளது; பத்மம் - தாமரை வடிவமாகச் செய்த ஆசனம் ; பீடம் - ஆசனத்தைத் தாங்கும் இருப்பு ; திரள்மணி வடம் - கழுத்தில் அணியும் ஒருவகை மாலை ; இதனை 'அக்கு மணி மாலை' என்பர். சுருக்கின வீர பட்டம் - தலையைச் சுற்றிக் கட்டிய வீரபட்டம்; வீரபட்டம் வெற்றிச்கு அறிகுறியாக வீரர் நெற்றியிலணியும் ஒருவகைப் பொற்றகடு ; இதனை 'வீர பட்டிகை' என்றும் கூறுவர்; திருக்குதம்பைத்தகடு - தகடாகச்செய்த காதணி வகை; குதம்பை - காதணி.

4. பைரவ மூர்த்திகள் (திருமேனி) - பைரவ வடிவத்தில் செய்யப் பெற்ற சிவபெருமான் திருவுருவம். இவர் சிவ மூர்த்திகளுள் ஒருவரான வைரவக் கடவுள்; பைரவம் - பயங்கரம்; மூர்த்தி - திருவுருவம். இஃது அடி முதல் முடிவரை 18 விரல் உயரமுடையது. இரண்டு திருக்கைகளையும் உயர்த்தி ஆடுகின்ற நிலையில் அமைந்தது. செம்பினால் கட்டியாகச் செய்து வைக்கப்பட்டது. 9 விரல் உயரமும், 8 விரல் அகலமும் உடையதாய்த் தாமரை வடிவமுள்ள ஆசனத்தோடு கூடிய பீடத்தையுடையது. இத் திருவுருவத்திற்கு ஆதித்த சூரியன் 4 மஞ்சாடி பொன் நிறையுள்ள ஒரு திரள்மணி வடமும், கறடு, இரட்டை, சப்பத்தி என்னும் முத்து வகைகளில் 33 முத்துக்கள் கோத்ததும், $\frac{1}{2}$ கழஞ்சு 4 மஞ்சாடி 1 குன்றி நிறையுள்ளதும், $\frac{1}{4}$ காசு விலை மதிப்புள்ளதுமான ஒரு வடமும். கறடு, இரட்டை, சப்பத்தி என்னும் முத்து வகைகளில் 37 முத்துக்கள் கோக்கப்பட்டதும், 8 மஞ்சாடி நிறையுள்ளதும், $\frac{1}{4}$ காசு விலை மதிப்புள்ளதுமான மற்றொரு வடமும் கொடுத்தான். வடம்-மாலை; கொத்த

**5.** பத்து மூன்றிநால் நிறை அரைக் கழஞ்சே நாலு மஞ்சாடியுங் குன்றிக்குக் காசு கால் [௰] வடம் ஒன்றிற் கொத்த முத்துக் கறடும் இரட்டையுஞ் சப்பத்தியும் ஆக முத்து முப்பத்தெழினால் நிறை எட்டு மஞ்சாடிக்கு காசுகால் [௰க] பாதாதிகேஸாந்தம் பதினெழு விரல் உசரத்து இரண்டு கை உடையராகக் கனமாகச் செய்த சிறுத்தொண்ட நம்பி ஒருவர் [௰உ] இவர்க்கெ இவன் குடுத்தன [௰௩] திரள்மணி வ—

**6.** டம் ஒன்று பொன் மூன்று மஞ்சாடியுங் குன்றி [௰ச] ருத்ராக்ஷக் காறை ருத்ராக்ஷம் நீக்கி பொன் அரைக்

---

முத்து - கோக்கப்பட்ட முத்துக்கள்; கறடு, இரட்டை சப்பத்தி, இவை முத்து வகைகள். கறடு-செப்பமாக்கப்படாதது; இரட்டை-இரட்டையாக வுள்ளது; சப்பத்தி - தட்டையாக வுள்ளது; இதனைச் 'சப்படி' என்றும் சொல்லுவர்.

**5.** சிறுத்தொண்ட நம்பி (பிரதிமம்) - சிறுத்தொண்ட நாயனார் படிமம்: சிறுத்தொண்டருடைய இயற்பெயர் பரஞ்சோதியார். திருச்செங்காட்டங்குடி இவருடைய ஊர். இவர் முதலாம் நரசிம்ம பல்லவனுக்குப் படைத்தலைவனாய் இருந்தார். சாளுக்கியர் தலைநகரான வாதாபி மேல் படை எடுத்துச்சென்று, அதை அழித்துத், திரண்ட பொருட்களைக் கவர்ந்துகொண்டு வந்தார். பிற்காலத்தில் இவரிடத்தில் காணப்பட்ட சிவபக்தியின் காரணமாக, நரசிம்ம பல்லவன் இவருக்குத்திரளான பொருள் கொடுத்து, இவரை ஓய்வெடுத்துக்கொள்ளும்படி செய்தார் அன்றுமுதல் இவர் தம் ஊரில்குடியிருந்த அடியார்களுக்குத்திருவமுது செய்விக்கும் பணியில் ஈடுபட்டார். இவருடைய மனைவியாரின் பெயர் திருவெண்காட்டு நங்கை; மகன் பெயர் சீராளன். அடியாராகத் திருவமுது செய்யவந்த சிவபெருமானுக்கு அவர் விரும்பியபடி இவர் தம் ஒரே மகனான சீராளனைக் கொன்று கறி சமைத்து உணவு கொடுக்க முன்வந்தார் என்று புராணங்கள் கூறும்.

ஆதித்த சூரியன் சமைத்துவைத்த இவருடைய படிமம் அடி முதல் முடிவரை 17 விரல் உயரமுடையது; இரண்டு கைகளைக் கொண்டது. செம்பினால் கட்டியாகச் செய்யப்பட்டது. இதற்கு ஆதித்த சூரியன் 3 மஞ்சாடி 1 குன்றி பொன் நிறையுள்ள திரள்மணி வடம் ஒன்றும், உத்திராக்கம் நீக்கி $\frac{1}{2}$ கழஞ்சு 1 மஞ்சாடி பொன் நிறையுள்ள உத்திராக்கக் காறை ஒன்றும் தானமாகக் கொடுத்தான். ருத்ராக்ஷ காறை - கழுத்திலணியும் உத்திராக்க மாலை; காறை - கழுத்தணி.

**6.** திருவெண்காட்டு நங்கை (பிரதிமம்)—சிறுத்தொண்டர் மனைவியாரான திருவெண்காட்டு நங்கை என்பார் படிமம். இஃது அடி முதல்

கழஞ்செ மஞ்சாடி [௰௫] பாதாதிகெஸாந்தம் பதினை விரல் உசரத்துக் கனமாகச் செய்த திருவெண்காட்டு நங்கை ஒருவர் [௰௬] இவர்க்கெ இவன் குடுத்தந [௰௭] பட்டைக் காறையிற் கொத்த தாலி உட்பட பொன் ஒன்பது மஞ்சாடியுங் குன்றி [௰௮] பாதாதிகெஸாந்தம் பன்னிரு விரல் உசரத்து இரண்டு கை உடை—

7. யாராகக் கனமாகச் செய்த சீராள தெவர் ஒருவர் [௰௯] இவர்க்கெ இவன் குடுத்தன [௨௰] சுருக்கின வீர பட்டம் ஒன்று பொன் நாலு மஞ்சாடி [௨௧] திருக்குதம்பைத் தகடு இரண்டு பொன் மஞ்சாடியுங் குன்றி [௨௨] பட்டைக்காறையுஞ் சூலமும் பொன் அரைக்கழஞ்செ நாலு மஞ்சாடியுங் குன்றி [௨௩] ப்ரதிமங்கள் மூவரும் நின்ற இருபத்துமூ விரல் நீளத்து எழு விரல் அகலத்து பத்மத் தொடுங் கூட எண் விரல்

8. உசரத்து பத்மத்தொடுங்கூடச் செய்த பீடம் ஒன்று [௨௪]

---

முடிவரை 15 விரல் உயரமுடையது; செம்பினால் கட்டியாகச் செய்யப் பட்டது. ஆதித்த சூரியன் இதற்குத் தாலி கோத்ததும், 9 மஞ்சாடி 1 குன்றிப் பொன் நிறையுள்ளதுமான ஒரு பட்டைக் காறையைத் தான மாகக் கொடுத்தான். பட்டைக்காறை என்பது, சிறப்புக்கு அறிகுறியாக நெற்றியிலணியும் ஒரு வகைப் பொற்றகடு; தாலி - மணஞ் செய்யப்பட்ட தற்கு அடையாளமாக மனைவி கழுத்தில் அணிந்துகொள்ளும் ஒரு சின்னம்.

7. **சீராளதெவர் (பிரதிமம்)**—சிறுத்தொண்டர் மகனான சீராள னுடைய படிமம். இது அடி முதல் முடி வரை 12 விரல் உயரமுடையது. இரண்டு கைகளைக் கொண்டது; செம்பினால் கட்டியாகச் செய்யப்பட்டது. 4 மஞ்சாடி பொன் நிறையுள்ள வீரபட்டம் ஒன்றும் 1 மஞ்சாடி 1 குன்றி பொன் நிறையுள்ள இரண்டு திருக்குதம்பைத் தகடுகளும் ½ கழஞ்சு 4 மஞ்சாடி 1 குன்றி பொன் நிறையுள்ள ஒரு பட்டைக்காறையும், சூலமும் ஆதித்த சூரியன் இதற்குக் கொடுத்தான். சூலம் என்பது, சூலக் குறியிட்ட ஓர் அணிகலன் போலும்.

8. **சிறுத்தொண்ட நம்பி, திருவெண்காட்டு நங்கை, சீராளதெவர்** : இம் மூவர் பிரதிமங்களும் ஒரு பீடத்தில் நிறுத்தப்பட்டிருந்தன. அந்தப் பீடம் 23 விரல் நீளமும், 7 விரல் அகலமும் உள்ளது; தாமரை வடிவ மாகச் செய்த ஆசனத்தைக் கொண்டது.

# 12. பொய்கை நாடு கிழவன் ஆதித்த சூரியன் சாசனம் IV.*

## முன்னுரை

பொய்கைநாடு கிழவன் ஆதித்த சூரியனுன தென்னவன் மூவேந்தவேளான் முதலாம் இராசேந்திரசோழ தேவன் ஆட்சிக் காலத்தில் ஏற்படுத்திய சாசனங்களில் இச்சாசனம் ஒன்று. இஃது அவனது ஆட்சியின் மூன்ருவது ஆண்டில் ஏற்பட்டது. தஞ்சைப் பெரிய கோயில் நடுவிடத்துக் கருப்ப கிருகத்தின் மேற்குச் சுற்றுப்பிரகாரத்திலுள்ள இரு தூண்களில் காணப் படுகிறது. தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது; நாற்பத்தேழு வரிகளை யுடையது.

---

பயிற்சி விஞக்கள்

1. முதலாம் இராசேந்திர சோழதேவர் ஆட்சியின் மூன்ரும் ஆண்டிற்கு முன்னர் ஏற்பட்ட ஆதித்த சூரியன் சாசனங்கள் எவை? அவை எங்கெங்குக் காணப்படுகின்றன?

2. ஆடவல்லான், தட்சணமேரு விடங்கன் - இவை யாவை? இச் சாசனத்தில் இவை எதெதற்குப் பயன்பட்டன?

3. க்ஷேத்ரபாலதெவர், பைரவ மூர்த்திகள் - இவர்கள் யாவர்? இவர்களுக்கு எடுத்த திருவுருவங்களோடு, வேறு யார் யாருக்குப் படிமங்கள் எடுக்கப்பட்டன? ஒவ்வொன்றிற்கும் கொடுக்கப்பட்ட அணிகலன்கள் யாவை?

4. திருமேனிகள், பிரதிமங்கள் - இவைகளை விளக்கி, இவைகள் சமைக்கப்பட்ட முறையையும், கோயிலில் எழுந்தருளுவித்த முறையையும் குறிப்பிடுக.

5. குறிப்பு வரைக:—க்ஷேத்ரபாலதேவர் பைரவ மூர்த்திகள், சிறுத்தொண்ட நம்பி, திரள் மணி வடம், பாதாதிகேஸாந்தம்.

6. பொருள் தருக:—முழம், சரடு, க்ஷேத்ரம், பைரவம், விரல், சமைசதுரம், உசரம், பத்மம், பீடம், காசு, மஞ்சாடி, குதம்பை, கறடு, இரட்டை, சப்பத்தி, வடம், சூலம், வீரபட்டம், பட்டைக்காறை

7. ஆதித்த சூரியனின் கடவுள் பத்தியும் அடியார் பத்தியும் இச் சாசனத்தால் எங்ஙனம் அறியப்படுகின்றன?

8. இச்சாசனத்தில் வரும் அணிகலன்கள், இரத்தினங்கள், நிறைகற்கள், நிறுத்தலளவைப் பெயர்கள், அடியார்கள், தெய்வங்கள் இவற்றைக் குறிப்பிடுக.

---

* S. I. I. Vol. II. Part II, No. 40, 166—169.

இச்சாசனத்தில் பொய்கை நாடு கிழவன் ஆதித்த சூரியன் என்பான் தஞ்சைப் பெரிய கோயிலில் மெய்ப்பொருள் நாயனார்க்கு ஒரு பிரதிமம் செய்து வைத்து, அதற்கு ஓர் அக்குமணியைத் தானமாகக் கொடுத்த செய்தி கூறப்படுகிறது. இதில் மெய்ப் பொருள் நாயனார் பெயர், "தத்தா நமரேகாண் என்ற மிலாடுடையார்; எனக் குறிப்பிட்டிருப்பது, ஆதித்த சூரியன் அவ்வடியாரிடத்துக் கொண்ட பத்திமையையும், அவரது வரலாற்றுண்மையில் அவனுக்குள்ள ஈடுபாட்டையும் புலப்படுத்தும்.

முதலாம் இராசேந்திர சோழ தேவன் கி. பி. 1012 முதல் 1044 வரை சோழ நாட்டை ஆண்டான். இச்சாசனம், அவன் ஆட்சியின், மூன்றும் ஆண்டில், ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1015 ஆம் ஆண்டு என்னலாம்.

சாசனம்

முதலாவது தூணில் கிழக்கு முகத்தில் வெட்டப்பட்டவை

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கொ—
2. ப்பரகெஸரி பன்ப
3. ரானஸ்ரீ ராஜெந்ர
4. சொழ தெவர்க்கு
5. யாண்டு மூன்றுவ—
6. து உடையார் ஸ்ரீ ரா
7. ஜராஜீஸ்வரம்உடை—
8. யார்க்கு ஸ்ரீ கார்யஞ்—

---

1—5. ஸ்வஸ்திஸ்ரீ, கொரப்பரகெஸரி: இவற்றின் விளக்கத்தை முந்திய சாசனக் குறிப்புகளில் காண்க. கொப்பரகெஸரி பன்மர் - கோப்பரகேசரி என்னும் சிறப்புப்பெயருடைய அரசர்: ஸ்ரீ ராஜேந்திரசொழ தெவர் - முதலாம் இராசேந்திரசோழ தேவர்; தேவர் - மன்னர்; யாண்டு மூன்றுவநு - ஆட்சியின் மூன்றுவது ஆண்டு; இவ்வாண்டு முதலேதான் கல்வெட்டுக்களில் முதலாம் இராசேந்திர சோழதேவன் மெய்க்கீர்த்தி 'திருமன்னி வளர இருநில மடந்தையும்' என்ற தொடக்கத்துடன் காணப்படுகிறது. ஆயினும் இவ்வாண்டில் அவன் மெய்க்கீர்த்தி இல்லாத சாசனங்களும் காணப்படுகின்றன. அவற்றுள் இச்சாசனமும் ஒன்று. எனவே, இஃது அவனது வெற்றிகளுக்கு முன்னர் ஏற்பட்டதென்று தெரிகிறது.

6—13. உடையார் ஸ்ரீ ராஜ ராஜீஸ்வரம் உடையார்க்கு—தஞ்சைப் பெரிய கோயில் இறைவர்க்கு; இராசராசேசுவரம் - தஞ்சைப் பெரிய கோயில்; ஸ்ரீகார்யம் செய்கிற - கோயில் காரியங்களைக் கவனித்து வருகிற; ஸ்ரீகாரியம் - கோயில் காரியம். பொய்கைநாடு கிழவன் - பொய்கை நாட்டுக்குத் தலைவன்; இவன் இயற்பெயர் ஆதித்த சூரியன்; சிறப்புப் பெயர், தென்னவன் மூவேந்த வேளான்.

| | | | |
|---|---|---|---|
| 9. | செய்கின்ற பொய் — | 20. | ணமெரு விடங்கநெ — |
| 10. | கை நாடு கிழவன் ஆ — | 21. | ன்னுங் கல்லால் நி — |
| 11. | தித்தன் ஸூர்யன்ன — | 22. | றை எடுத்துங் கல் — |
| 12. | ன தென்னவக் மூவெ | 23. | லில் வெட்டின [க]பா — |
| 13. | ந்தவெளான் யாண் — | 24. | தாதிகேஸாந்தம் இ — |
| 14. | டு மூன்றுவது வரை | 25. | ருபதிற்று விரல் உசா — |
| 15. | செய்வித்த செப்பு | 26. | த்து இரண்டு கைய்யு — |
| 16. | ப்ரதிமங்கள் உடை — | 27. | டையாராகக் கனமா — |
| 17. | யார் கொயிலில் மு — | 28. | கச் செய்த தத்தா ந — |
| 18. | முத்தால் அளந்து — | 29. | மரெகாண் என்ற மி — |
| 19. | ம் ரத்நங்கள் தக்ஷி — | 30. | லாடுடையார் ஒருவர்[உ] |

31. இவர் நின்ற பதிற்று

---

**14—23. யாண்டு மூன்றுவது வரை செய்வித்த**-முதலாம் இராசேந்திர சோழதேவன் ஆட்சியின் மூன்றுவது ஆண்டு வரைக்கும் செய்துவைத்த; செப்பு ப்ரதிமங்கள் - செம்பினால் செய்த மக்கட் படிமங்கள்; ப்ரதிமங் கள்-மக்கள் படிமம் ; உடையார் கொயிலில் முழம் - இராசராசேசுவரம் கோயில் முழக்கோல்; தக்ஷிணமெரு விடங்கநென்னுங் கல் - இராச ராசேசுவரம் கோயிலுக்குரிய நிறை கல்; இது இரத்தின முதலியன நிறுத்தற்குரியது. நிறை எடுத்து - நிறுத்தும்; கல்லில் வெட்டின - கல்லில் வெட்டியவை.

**24—30. தத்தா நமரெ காண் என்ற மிலாடுடையார் ஒருவர் (ப்ரதிமம்)**- தத்தா நமரே என்றவர் மெய்ப்பொருள் நாயனர். இவர் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர். குறுநில மன்னருள் மலையமான் மரபினைச் சேர்ந்தவர். சோழநாடு, சோணாடு என்றாயதுபோல் மலைய மான் நாடு, மலாடு என்றாகி, இவர் 'மலாடர்கோமான்' என்றும், 'மலாடுடையார்' என்றும் அழைக்கப்பட்டார். இவருடைய பகைவனான முத்தநாதன் இவரை வெல்ல வேண்டிப், பொய்த்தவ வேடங்கொண்டு இவரிடம் வந்து, ஆகமநூலை இவருக்கு ஓதுவதாகக் கூறித், தான் மறைத்து வைத்திருந்த படையால் இவரைத் தாக்கினான். அதைக் கண்ணுற்ற வாயிற் காவலனான தத்தன் என்பான், தன் உடைவாளை உருவி அவனை வெட்ட முற்பட்டபோது, நாயனார், "தத்தா நமர்" என்று கூறி அவனைத் தடுத்தார் என்பது வரலாறு.

இவருடைய படிவம் அடிமுதல் முடிவரை 20 விரல் உயரமுடையது; இரண்டு கைகளைக் கொண்டது. செம்பினால் கட்டியாகச் செய்யப் பட்டது.

**பாதாதிகேஸாந்தம்** - அடிமுதல் முடிவரை ; விரல் - 8 தோரை (நெல்); உசரம் - உயரம்; கனமாக - கட்டியாக ; மெய்ப்பொருள்

### இரண்டாவது தூணில் கிழக்கு முகத்தில் வெட்டப்பட்டவை

| | | | |
|---|---|---|---|
| 32. | விரல் நீளத்து எ— | 40. | க்ஷம் ஒன்றிற்கட் — |
| 33. | ண்விரல் அகலத் — | 41. | டின பொன் எழும — |
| 34. | து எண்விரலுசர — | 42. | ஞ்சாடி உட்பட உத்ரா |
| 35. | த்து பத்மத்தொடு — | 43. | க்ஷம் ஒன்று நிறை அ — |
| 36. | ங் கூடச் செய்த பீ — | 44. | ரைக் கழஞ்செ நர — |
| 37. | டம் ஒன்று [ங] இவ— | 45. | லு மஞ்சாடியுங் கு — |
| 38. | னெ இவர்க்குக் — | 46. | ன் றிக்கு விலை காசு |
| 39. | குடுத்தன [ச] உத்ரா— | 47. | ஒன்று [ரு] |

நாயனர் இடத்துக் கொண்ட பத்தியாலும், பயத்தாலும் அவர் பெயரைக் கூறாது, 'தத்தா நமரே காண் என்ற மிலாடுடையார்' என்று இங்குக் கூறியிருப்பது அறியத்தக்கது.

**31—37 இவர் நின்ற** - இந்த அடியார் படிவம் நின்ற (பீடம்); இவர் நின்ற பீடம் தாமரை வடிவமான ஆசனத்தோடு கூடியது; 10 விரல் நீளமும்; 8 விரல் அகலமும், 8 விரல் உயரமு முடையது. பத்மம் - தாமரை: இங்குத் தாமரை வடிவமாகச் செய்த ஆசனத்தைக் குறித்தது.

**38—47. இவன்** - ஆதித்த சூரியன்; இவர்க்கு - மெய்ப்பொருள் நாயனர் படிமத்திற்கு; குடுத்தன - தானமாகக் கொடுத்தவை; ஆதித்த சூரியன் மெய்ப்பொருள் நாயனர் படிமத்திற்கு ஓர் உத்ராக்கத்தை (அக்கு மணியை)த் தானமாகக் கொடுத்தான். அதில் கட்டின பொன் 7 மஞ்சாடி நிறையுள்ளது; பொன்னும் உத்ராக்கமும் சேர்ந்து $\frac{1}{2}$ கழஞ்சு 4 மஞ்சாடி 1 குன்றி நிறையும், ஒரு காசு விலை மதிப்புமுள்ளது. உத்திராக்ஷம் - அக்குமணி; காசு - பொற்காசு.

### பயிற்சி வினாக்கள்

1. மெய்ப்பொருள் நாயனர் யார்? அவருக்குச் சாசனத்தில் வழங்கிய பெயர் யாது?

2. மெய்ப்பொருள் நாயனர்க்குப் படிமம் எடுத்த சாசனம் எப்பொழுது ஏற்பட்டது? எங்குக் காணப்படுகிறது?

3. மெய்ப்பொருள் நாயனர் படிமத்தின் உயரம், அது நின்ற பீடத்தின் அமைப்பு ஆகியவை எங்ஙனம் கூறப்பட்டுள்ளன?

4. மெய்ப்பொருள் நாயனர் படிமத்திற்குக் கொடுக்கப்பட்ட அணிகலன் யாது? அதன் நிறையும் விலையும் குறிப்பிடுக.

5. 'தத்தா நமர் காண் என்ற மிலாடுடையார்' - வரலாறு யாது? இத்தொடரால் அறியப்படுவது யாது?

6. முழம், விரல், கழஞ்சு, மஞ்சாடி, காசு-இவைகளால் அறியப் படும் அளவை முறைகளைக் குறிப்பிடுக.

# 13. சாமுண்டப்பை வைத்த திருநுந்தா விளக்குச் சாசனம்*

## முன்னுரை

சாமுண்டப்பை என்பாள், பெரும்பாணப்பாடி என்னும் கரைவழிமல்லியூர் வியாபாரியான நன்னப்பயனுக்கு மனையாள்; அவள் வைகாவூர் ஸ்ரீ குந்தவை சினலயத்திற்குத் தானமாகக் கொடுத்த திருநுந்தா விளக்கைப்பற்றிய சாசனம், 'சாமுண்டப்பை வைத்த திரு நந்தாவிளக்குச் சாசனம்' என்று பெயர் பெற்றது. இச்சாசனம் முதலாம் இராசேந்திரசோழ தேவன் ஆட்சியின் 12ஆம் ஆண்டில் ஏற்பட்டது. இது போளூரை அடுத்த திருமலை என்னும் மலையின் உச்சியின் ஒரு துண்டுப் பாறையின் மேல் காணப்படுகிறது. தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது. பதினன்கு பத்திகளையுடையது.

இச்சாசனத்தின் முற்பகுதியில் முதலாம் இராசேந்திரசோழ தேவன் அவன் ஆட்சியின் 12ஆம் ஆண்டு வரை செய்த வெற்றிகளைக் கூறும் மெய்க்கீர்த்தி காணப்படுகிறது. பிற்பகுதியில் வைகாவூர் ஸ்ரீகுந்தவை சினலயம் என்னும் சமணப்பள்ளிக்குச் சாமுண்டப்பை என்பாள் ஒரு நந்தா விளக்கு வைத்து, அதன் செலவுக்கு இருபது காசும், அக்கோயில் தேவர் திருவமுதுக்குப் பத்துக் காசும் தானமாகக் கொடுத்த செய்தி கூறப்படுகிறது. இதனல் சோழமன்னர்கள் சமயப் பொதுநோக்குடையவர்களாய்க், குடிகள் சமய உரிமை பெற்று வாழ இடமளித்துள்ளனர் என்று தெரிகிறது.

முதலாம் இராசேந்திரசோழ தேவன் கி. பி. 1012 முதல் 1044 வரை 33 ஆண்டுகள் சோழ நாட்டை ஆண்டான். இச்சாசனம் அவன் ஆட்சியின் 12ஆம் ஆண்டில் ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1024ஆம் ஆண்டு என்னலாம்.

### சாசனம்

ஸ்வஸ்தி ஸ்ரீ
திருமன்னி வளர விருகில மடக்கையும்

* S. I. I Vol. I, No. 67, pp. 95—99.

### குறிப்புரை

**ஸ்வஸ்தி ஸ்ரீ :** இது சாசனங்களில் மங்கலம் குறித்து வரும் வடமொழித் தொடர்; விளக்கம் முதலாம் சாசனக் குறிப்பில் காண்க.

**திருமன்னி வளர :** இது முதலாம் இராசேந்திர சோழனது மெய்க்கீர்த்தியின் தொடக்கமாக வரும் தொடர்; இலக்குமி அமர்ந்து விளங்க என்பது இதன் பொருள்; அஃதாவது, செல்வம் நிரம்பி வளர என்பது.

பொர்ச்சயப் பாவையுஞ் சீர்த்தனிச் செல்வியுந்
தன்பெருந் தெவிய ராகி இன்புற
நெடிதியல் ஊழியுள் இடைதுறை நாடுந்
துடர்வன வெலிப் படர்வன வாசியுஞ்
சுள்ளிச் சூழ்மதிட் கொள்ளிப் பாக்கையு

---

இரு நில மடந்தையும்—பூதேவியும் (goddess of the great earth) : 'பெருநிலச் செல்வியும்' என முதலாம் இராசராசன் மெய்க்கீர்த்தியில் வந்திருத்தல் காண்க.

'பொர்ச்சயப் பாவையும்—போரில் வெற்றியைத் தரும் தேவதையும் (goddess of victory in battles). சீர்த்தனிச் செல்வியும் - கீர்த்தியில் ஒப்பற்ற தேவதையும் (the matchless goddess of fame) ; சீர் - சீர்த்தி, கீர்த்தி ; தனி - ஒப்பற்ற.

தன்பெருந் தெவிய ராகி இன்புற : நாடு, வெற்றி, புகழ் இவைகளைத் தனக்குரிய தேவியராகக்கொண்டு இன்பமடைய.

### ஆரம்பகாலப் போர்—வரி : 4—7.

இடைதுறைநாடு, வனவாசி, கொள்ளிப்பாக்கை, மண்ணைக் கடக்கம் இவைகளைக் கொண்ட செய்தி முதலாம் இராசேந்திரனுடைய மூன்றும் ஆண்டுச் சாசன முதலே காணப்படுகின்றது. ஆதலின் இவை முதலாம் இராசேந்திரன் ஆட்சியின் ஆரம்ப காலப்போர் எனப்பட்டன.

இடை துறை நாடு : இதனை 'இடை துறை நாடு இரண்டாயிரம்' என்றும் கூறுவர். இது வடக்கே கிருஷ்ணா நதிக்கும், தெற்கே துங்கப் பத்திரா நதிக்கும் இடைப்பட்ட சமவெளியாகும். தற்கால இரேய்ச்சூர்ச் சில்லாவை இப்பகுதியாகக் கூறலாம். நெடிதியல் ஊழியுள் - ஊழிக் காலம் வரை நிலையாகவுள்ள.

வனவாசி : இது தொடர்ந்த காடுகளை அரணாகக் கொண்டது. தக்கணத்தின் தென்மேற்குக் கோடியிலுள்ள குந்தளநாட்டின் தலைநகர்; இப்பொழுதுள்ள கன்னடநாடே பண்டைக் குந்தள நாடாகும். துடர்வன வெலிப்படர் - தொடர்ச்சியாகவுள்ள காட்டரணையுடைய.

கொள்ளிப் பாக்கை : இதனைக் 'கொள்ளிப் பாக்கை ஏழாயிரம்' என்றும் கூறுவர். இஃது ஐதரபாத்துக்கு நாற்பத்தைந்து கல் வடக்கிலுள்ள 'கூல்பாக்' (kolpick) என்னும் இடமாகும். சுள்ளி சூழ் மதில்- சுற்றிலும் சுள்ளிமரங்களை மதிலாகவுடைய ; சுள்ளி - ஆச்சா மரம் ; ஞாழல் மரம் எனினுமாம்.

மண்ணைக் கடக்கம் ; இஃது ஆதியில் இராஷ்டிர கூட வேந்தர்களுக்கும், பின் மேலைச் சாளுக்கிய மன்னர்களுக்கும் தலைநகரமாயிருந்த 'மான்ய கேடம்' என்னும் நகரமாகும். நண்ணற் கரு முரண் - நெருங்குதற்கு அரிய வலிய மதிலினையுடைய.

கண்ணாற் கருமுரண் மண்ணைக் கடக்கமும்
பொருகடல் ஈழத் தரசர்த முடியும்
ஆங்க/வர் தேவிய ரோங்கெழின் முடியு
முன்னவர் பக்கல் தென்னவர் வைத்த
சுந்தர முடியும் இந்திர நாரமுந்
தெண்டிரை ஈழ மண்டல முழுவதும்
எறிபடைக் கேரளர் / முறைமையிற் சூடுங்
குலதன மாகிய பலர்புகழ் முடியுஞ்
செங்கதிர் மாலையும் சங்கதிர் வேலைத்

---

ஈழப்போர்—வரி : 8 - 12.

ஈழமென்பது, இலங்கை நாடு ; இது கடல் நடுவ ணுள்ளது. முதலாம் இராசேந்திரன் காலத்தில் ஈழநாட்டை ஆண்ட மன்னன் ஐந்தாம் மகிந்தன். அவன் முதலாம் இராசேந்திரனை எதிர்த்துப் போரில் தோற்றனன். அவனுடையதும், அவன் தேவியருடையது மாகிய முடிகளையும், ஆடை ஆபரணங்களையும், பொன்மணிகளையும் முதலாம் இராசேந்திரன் கைப்பற்றினன் ; அன்றியும், சுமார் ஒரு நூற்றாண்டுக்கு முன் பாண்டியமன்னர் ஈழமன்னரிடம் கொடுத்துவைத் திருந்த சுந்தர முடியையும், பாண்டியர் குலத்திலே நெடுங்காலமாக இருந்துவந்த இந்திரன் ஆரத்தையும் அவனிடமிருந்து எடுத்துக்கொண்டான். இறுதியில், ஈழ மண்டல முழுவதும் சோழர் வசமாயிற்று.

பொருகடல் ஈழம்—இலங்கைத் தீவு ; எழில் - அழகு ; முடியும் - கிரீடமும் ; சுந்தர முடியும் - அழகிய கிரீடமும் ; இந்திரநாரம் - இந்திரன் பாண்டியனுக்குக் கொடுத்த முத்தாரம். தெண்டிரை - தெளிந்த அலைகளையுடைய கடல். முன்னவர்-ஈழத்தரசர்; தென்னவர் பாண்டியர்.

மலைநாட்டுப் போர்—வரி : 13 - 20.

மலை நாடு என்பது, மலையும் கடலும் சூழ்தரப் பரசுராமனால் ஆதியில் அமைக்கப்பட்ட இடமென்பர்; இதனைச் ‘ சாந்திமத்திவு ’ என்றும் கூறுவர். பழந்தீவும் இதனுள் ளடங்கும். காந்தளூர்ச் சாலை, இதன் கடற்றுறைப் பட்டினங்களில் ஒன்று. முதலாம் இராசராசனால் செயிக்கப்பட்ட இந்நாட்டில், அமைதியை நிலைநாட்டுதற்கு அவன் மகன் முதலாம் இராசேந்திரன் படை எடுத்துச் சென்றான். போரில் சேரனை வென்று, அவனது முடியையும் மாலையையும் கவர்ந்தான்.

எறிபடைக் கேரளர்—சேரமன்னர் ; எறிபடை - எறிஈட்டி போன்ற படைகள் ; முறைமையிற் சூடும் - பரம்பரையாக அணியும் ; குலதனம்-குலத்திற்குரிய செல்வம் ; அஃதாவது கிரீடம். செங்கதிர் மாலை - செங்கதிர்போல் ஒளி விடும் முத்துமாலை ; செங்கதிர் - சூரியன்.

*தொல்பெரும் காவற் பலபழந் திவுஞ்*
*செருவிற் சினவி | இருபத் தொருகா*
*லரைசுகளை கட்ட பரசு ராமன்*
*மெவருஞ் சாந்திமத் திவவரண் கருதி*
*இருத்திய செம்பொற் றிருத்தகு முடியும்*
*பயங்கொடு பழிமிக முசங்கியில் மு | துகிட்*
*டொளித்த சயசிங்கன் அளப்பரும் புகழொடும்*
*பீடியல் இரட்ட பாடி ஏழரை*
*இலக்கமு நவநெதிக் குலப்பெரு மலைகளும்*

---

**சங்கதிர் வேலைந் தொல்பெருங் காவல்**—சங்கினங்கள் அதிருகின்ற கடலாகிய பழம்பெருங் காவலையுடைய ; அஃதாவது, கடலைத் தனக்கு அரணாகவுடைய என்பது. பல பழந்திவு ; இவை மேலைக் கடலில் உள்ள 'பழந்திவு பன்னீராயிரம்' என்பது.

**செருவிற் சினவி.................சாந்திமத் திவு :** போரில் கோபித்து இருபத்தொரு தலைமுறையாக அரசகுலத்தை அழிப்பதையே விரதமாகக்கொண்ட பரசுராமன் இருந்து வந்த சாந்திமத்தீவு என்பது. இது மேலைக்கடலில் உள்ளதென்பர். பரசுராமன் தந்தையான சமதக்கினி முனியைக் கார்த்த வீரியார்ச்சுனன் என்னும் அரசன் கொன்று விட்டமையின், பரசுராமன் இருபத்தொரு தலைமுறைகளாக அரசகுலத்தவரைக் கொன்றுவந்தான்.

செரு - போர் ; கால்-தலைமுறை ; கட்டுதல்-பிணித்தல்; மெவரும் - வீற்றிருந்த ; அரண் கருதி யிருத்திய - பாதுகாப்பு என்று கருதி வைத்த.

## மேலைச் சாளுக்கியப் போர்—வரி : 21 - 24.

மேலைச் சாளுக்கிய நாடு என்பது, இரட்டபாடி ஏழரையிலக்கத்தைக் குறிக்கும் ; இந்நாட்டை ஆண்டுவந்த ஐந்தாம் விக்கிரமாதித்தனுடைய தம்பியான செயசிங்கன் தான் முன்னர் இழந்த நாடுகளைச் சோழர் வசமிருந்து மீட்க முயன்றான். இதனால் முதலாம் இராசேந்திரன் இவனை 'முயங்கி' என்னுமிடத்தில் எதிர்த்துப் போரிட்டான். போரில் தோல்வியுற்ற இவன், பயமும் பழியுமுண்டாகப் புறங்காட்டி ஓடி ஒளிந்தான். இவன் நாடும், நவநிதிக் குவியல்களும் முதலாம் இராசேந்திரன் வசமாயின.

**பயங்கொடு பழிமிக** - பயத்தோடு பழியுமுண்டாக. முசங்கியில் முதுகிட்டு - முயங்கி என்னுமிடத்தில் புறங்காட்டி ; முயங்கி என்பதை, பல்லாரி சில்லாவிலுள்ள 'உச்சங்கி துர்க்கம்' என்பர் ; ஐதராபாத்து சமத்தானத்திலுள்ள 'மாஸ்கி' என்பாருமுளர். முயங்கி முசங்கி என்றும் வழங்கும்.

விக்கிரம வீரர் சக்கர கோட்டமு/
முதிரபட வல்லை மதுரை மண்டலமும்
காமிடை வளைய நாமணைக் கோணமும்
வெஞ்சிலை வீரர் பஞ்சப் பள்ளியும்
பாசுடைப் பழநன் மாசுணி தேசமும்
அயர்வி/ல்வண் கிர்த்தி யாதிநக ரகவையிற்

---

செயசிங்கன்: இவன் கி. பி. 1015 முதல் 1042 வரை மேலைச் சாளுக்கிய வேந்தனாக இருந்தான். பீடியல் - பெருமை மிகுந்த; நவநெதிக் குலப்பெரு மலைகளும் - நவநிதிக்குவியல்களாகிய மிகப் பெரு மலைகளும்.

கங்கை கொண்டது—வரி : 25 - 46.

கங்கை கொண்ட தென்றது, கங்கை நீரைக் கொண்டு வந்ததைக் குறிக்கும். முதலாம் இராசேந்திரன் தான் புதிதாக அமைத்த நகரையும், கோயிலையும், ஏரியையும் புனிதப்படுத்துவதற்கென்று கங்கை நீரைக் கொண்டு வர வடநாடு சென்றான்.

சக்கர கோட்டம் : இது விசாகப்பட்டினம் சில்லாவுக்கு மேற்கில் மத்திய மாகாணங்களிலுள்ள பஸ்தர் (Bastar) சமத்தானத்தின் தலைநகரான இராசபுரத்திற்கு எட்டுக் கல் தூரத்திலுள்ள 'சித்திர கோடா' - என்னும் ஊராகும். இதில் பலம் பொருந்திய வீரர் பலர் இருந்தனர் போலும். விக்கிரமம் - வலிமை.

மதுரை மண்டலம் : இஃது ஒரிசாவிலுள்ள மதுபன் என்னும் சமத்தானத்தை யொட்டிய பகுதியாகும். இதில் பழம்பெருங் கோட்டைகள் இருந்ததாகத் தெரிகிறது. முதிரபட-முதிர்ந்த பழைமையான ; வல்லை - கோட்டை.

நாமணைக்கோணம் : இது சிறு கிராமங்கள் இடையிடையே மலிந்த பெருநகர். காம் - கிராமம்; இனி 'காமிடை' என்பதற்குச் 'சோலைகள் மிடைந்த' எனப் பொருள் கொள்ளினுமாம். இடை வளைய - இடையிடை மலிந்த.

பஞ்சப்பள்ளி : பஞ்சவர் பள்ளி கொண்ட இடமென்பர். இங்குப் போர் வீரர் பலர் இருந்தனர். சிலைவீரர் - போர்வீரர்.

மாசுணிதேசம் : மாசுணி ; பாம்பு ; நாக வமிசத்தவர் ஆண்ட தேசமாதல் பற்றி இஃது இப் பெயர் பெற்றது போலும். இது வயல்கள் நிறைந்த இடம். பாசுடை - பசுமையான இலை: பழநம் - வயல் ; மதுரமண்டலம், நாமணைக்கோணம், பஞ்சப்பள்ளி, மாசுணிதேசம் : இவை நான்கும் வேங்கிநாட்டை யடுத்துள்ள பகுதிகளாகும்.

ஆதிநகரகவையில்—ஆதி நகரில் நடந்த போரில்; இஃது இந்திரதன் ஆண்டு வந்த கோசல நாட்டிற்குத் தலைநகர் ; அயர்வில்-சோர்வில்லாத; வண் - சிறந்த அகவை - இடம்.

சந்திரன் றொல்குலத்தி ரதனை
விளையமர்க் களத்துக் கிளையொடும் பிடித்துப்
பலதனத் தொடுநிறை குலதனக் குவை/யுங்
கிட்டருஞ் செறிமிளை யொட்ட விஷெயமும்
பூசுரர் சேர்நல் கோசலை நாடுந்
தன் பாலனை வெம்முனை யழித்து
வண்டுறை சோலைத் தண்ட புத்தியு
மிரண / சூரனை முரணுறத் தாக்கித்
திக்கணை கிர்த்தித் தக்கண லாடமுங்
கோவிந்த சந்தன் மாவிழிந் தோடத்

---

சந்திரன் தொல்குலத்துநிரதன் — பழங்காலமாயுள்ள சந்திரகுலத்தில் தோன்றிய இந்திர ரதன் என்பது. இவனை முதலாம் இராசேந்திரன் ஆதிநகர் என்னுமிடத்தில் எதிர்த்து, இவன் இனத்தவரோடு தப்ப விடாது பிடித்தான்; இவனது பல தனக்குவியல்களைக் கொள்ளை கொண்டான். முடிவில் இவன் ஆண்ட ஒட்டவிசயமும், கோசலநாடும் சோழர் வசமாயிற்று.

களம் - போர்க்களம்; கிளை-மனைவிமக்கள் முதலியோர். பலதனம்-பலவகைச் செல்வம். நிறைகுலதனக் குவையும் - நிறைந்த பெருத்த பொருட் குவியலும்.

கிட்டருஞ் செறிமிளை - நெருங்குவதற்கரிய செறிந்த காவற்காடு. ஒட்ட விஷெயம் - ஒட்டரதேசம்.

பூசுரர் - அந்தணர்; கொசல நாடு - இஃது ஒட்டர தேசத்துக்குப் பக்கத்திலுள்ள தென்கோசலம் அல்லது மகாகோசலம் என்று கூறப்படும் பூமியாகும். ஒட்டரதேசம் - ஒரிசா நாடு; வெம்முனை - கொடிய போர் முனை.

வண்டுறை சோலை - வண்டுகள் தங்கும் பூஞ்சோலை; தண்ட புத்தி: இதனைப் பீரார் என்று சிலரும், பீஹார் என்று வேறு சிலரும் கருதுகின்றனர். இஃது ஒட்டரதேசத்திற்கும் வங்காளத்திற்கும் மத்தியில், சுவர்ண ரேகை நதிக்கு இருகரையிலுமுள்ள நாடாக இருத்தல் வேண்டும்; தண்டநாயகன் ஒருவனுக்குச் சொந்தமானதுபற்றித் 'தண்ட புத்தி' எனப்பட்டது போலும். முதலாம் இராசேந்திரன் காலத்தில் இதனைத் தன்மபாலன் என்பவன் ஆண்டான்; அவன் பால வமிஷத்தைச் சேர்ந்தவன் என்பர். முரண் உற - வலிமை கெட. திக்கணை கிர்த்தி - நான்கு திசையிலும் பொருந்திய கீர்த்தி.

தக்கண லாடம்: வங்காளத்தின் ஒரு பாகம்; இஃது அக்காலத்தில் 'ராடா' (Radhas) என்று பெயர் பெற்றிருந்தது. இரண சூரன் இதனை ஆண்டான். மா இழிந்து ஓட - குதிரையினின்றும் இறங்கி ஓட.

தங்காத சாரல் வங்காள தெசமுந்
தொடுகடற் சங்கு கொட்டன் மஹீபாலனை /
வெஞ்சமர் வளாகத் தஞ்சுவித் தருளி
ஒண்டிறல் யானையும் பெண்டிர்பண் டாரமும்
நித்தில நெடுங்கட லுத்திர லாடமும்
வெறிமணற் திர்த்தத் தெறிபுனற் கங்கை / மாப்

12. பொருதண்டாற் கொண்டாற் கொண்ட கொப்பர
கெசரி பன்ம ரான உடையார் ஸ்ரீ
ராஜெந்ர சொழதெ வற்கு| யாண்டு
௰௨ ஆவது ஜயங் கொண்ட சொழ மண்டலத்து பங்கள
நாட்டு நடுவில்

---

**தங்காத சாரல்** - தடைபடாது பெய்யும் மழை. வங்காள தெசம்: இது கிழக்கு வங்காளத்தைக் குறிக்கும். இதனைக் கோவிந்த சந்தன் என்பவன் ஆண்டான்.

**தொடுகடல் சங்கு கொட்டன் மஹீபாலன் :** இவன் பதினோராம் நூற்றாண்டின் துவக்கத்தில் உத்திரலாடத்தை ஆண்டுவந்த பால வமிசத்து அரசனுவான். தண்டபுத்தியை யாண்ட தன்மபாலனும், தக்கண லாடத்தை யாண்ட இரணசூரனும், வங்காளத்தை யாண்ட கோவிந்த சந்தனும் இவனுட்சிக்குட்பட்டு ஆண்டு வந்தனர். போர்க் களத்தில் முதலாம் இராசேந்திரனுடைய சேனையின் ஆரவாரத்தைக் கேட்ட இவன் எல்லாவற்றையும் விட்டு ஓடினன். இராசேந்திரன் இவனுடைய யானைகளையும், பெண்டிர் பண்டாரத்தையும் எடுத்துக்கொண்டு கங்கைக் கரையை அடைந்தான். தொடுகடல் சங்கு கொட்டன் - வீரக்கழலையும் சங்காதத்தையும் உடைய; இனி, 'வீரக்கழலையும், சங்குமணியையும் காதணியையுமுடைய' என்பாரு முளர். சங்கு - சங்காரம்: கொட்டன்- காதணி.

**வெஞ்சமர் வளாகத்து** - போர்க்களத்து, 'விளாகத்து' என்றும் பாடம்; ஒண்டிறல் - ஒண்திறல், மிக்க வலிமையுடைய: பெண்டிர் பண்டாரம் - பெண்களின் ஆபரணங்கள்; நித்தில நெடுங்கடல் - முத்துக்களையுடைய பெரிய கடல்; அழகிய கடல் எனினுமாம்.

**வெறிமணற் திர்த்தந் தெறிபுனற் கங்கையும் :** வெறிமலர் - வாசனை மிக்க தாமரை முதலிய மலர்கள்; தீர்த்தம் - புனித நீர்; அலையாக மோதி வீசப்படும் நீர் தாமரை மலர்களுக்கிடையில் தனித்தனியே தீர்த்தங்களாயின என்பது. எறிபுனற் கங்கை - மோதி வீசப்படும் நீரையுடைய கங்கை யாறு. இத்தொடரால் கங்கை புண்ணிய நதிகளில் ஒன்று என்பது போதரும்.

**12. பொரு தண்டாற்கொண்ட** - போர்செய்து தன் சேனையால் வெற்றிபெற்ற: கொப் பரகெசரி பன்மரான உடையார் ஸ்ரீராஜெந்திர

13. வகை முகை நாட்டுப் பள்ளிச் சந்தம் வைகவூர்த் திரு மலை ஸ்ரீ குந்தவை ஜிநாலயத்து தெவற்குப் பெரும் பாணப் பாடிக்கரை வழிமல்லியூர் இருக்கும் வ்யா

14. பாரி நந்நப்பயன் மணவாட்டி சாமுண்டப்பை வைத்த

---

சொழ தெவற்கு - கோப்பர கேசரி என்னும் சிறப்புப் பெயரையுடைய மன்னரான திரு. இராசேந்திரசோழ தெவற்கு ; இராஜெந்திர சொழ தெவர் - முதலாம் இராசேந்திரசோழ தேவர் ; யாண்டு ١௨ ஆவது - ஆட்சி ஆண்டு பன்னிரண்டாவது ; ஜயங்கொண்ட சொழமண்டலம் : இது முதலாம் இராசராசன் காலமுதல் தொண்டை நாட்டிற்கு வழங்கிய பெயராகும் ; இது பல நாடுகளாகவும் கூற்றங்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தது. பங்கள நாடு இதன் உட்பிரிவுகளில் ஒன்று.

13. வகைமுகை நாடு - வைகிய முகைநாடு : இது ஜயங்கொண்ட சோழமண்டலத்திலுள்ள பங்களநாட்டின் நடுவில் உள்ளது. பள்ளிச் சந்தம் - சைன பௌத்த கோயில்களுக்கு விடப்பட்ட கிராமம் ; வைகவூர் : முகைநாட்டிலுள்ளது ; ஒரு பள்ளிச் சந்தமாக அமைந்தது. இங்குள்ள திருமலையில் ஸ்ரீகுந்தவை சினாலயம் உள்ளது ; ஜிநாலயம் - சைனப்பள்ளி. குந்தவை என்னும் பெயருடையார் இருவர் உள்ளனர்; ஒருவர் முதலாம் இராசராசன் உடன் பிறந்தவள் ; மற்றொருவர் முதலாம் இராசராசன் மகளாராவர். இவர்களில் குறிக்கப் பெற்றவர் முதலாம் குந்தவையாராவர். இவரைப்பற்றிய செய்தியை 4, 5ஆம் சாசனக் குறிப்புக்களில் காண்க.

பெரும் பாணப் பாடிக்கரை வழி மல்லியூர் : பெரும்பாணப்பாடி, ஆதியில் வாணர் என்னும் ஒரு வகுப்பார் ஆண்ட ஒரு சிறு நாடாக இருந்தது. அப்பொழுது அது வாணகப்பாடி என்றும், அதன் தலைநகரம் வல்லம், வாணபுரம் என்றும் அழைக்கப்பட்டன. வடுக வழிமேற்கு என்பதும் அதனையே குறிக்கும். பின்னர்த் தொண்டை மண்டலம் பல்லவர், சோழர் ஆட்சிகளுக் குட்பட்டதும் அதன் ஒரு பகுதியாகிய இந்த நாடும் சிதைவுற்றுச் சிற்றூர்களாக மாறிவிட்டது. எனவே 'பெரும்பாணப் பாடிக்கரை வழி மல்லியூர்' என்பதற்குப் 'பெரும்பாணப் பாடியைச் சேர்ந்த கரைவழி மல்லியூர்' என்று பொருள் கோடல் தகும். இந்த ஊரில் இருந்த வியாபாரியான நன்னப்பயன் மனைவியாகிய சாமுண்டப்பை ஸ்ரீ குந்தவை சினாலயத்திற்கு ஒரு நுந்தா விளக்கைத் தானமாகக் கொடுத்து அதன் செலவுக்கு 20 காசும், அக்கோயில் தேவர் திருவமுதுக்கு 10 காசும் கொடுத்தாள்.

14. வ்யாபாரி நந்நப்பயன் - நன்னப்பயன் என்னும் வியாபாரி ; இவன் பெரும்பாணப்பாடியைச்சேர்ந்த கரைவழி மல்லியூரினன்; இவன் மனைவி பெயர் சாமுண்டப்பை. மணவாட்டி - மனைவி; வைத்த - தானமாகக் கொடுத்த ; திரு நந்தா விளக்கு-கோயிலுக்குத் தானமாகக் கொடுத்த நந்தா விளக்கு ; இதனைத் 'தூண்டா விளக்கு' என்றும்

திருநந்தா விளக்கு ஒன்றிநுக்குக் காசு இருபதும் திரு வமுதுக்கு வைத்த காசு பத்தும்.

---

கூறுவர். காசு - ஒரு வகைப்பொன் நாணயம்; திருவமுது - நிவேதன உணவு (Boiled rice offered to an idol or great person).

### பயிற்சி விஞக்கள்

1. 'சாமுண்டப்பை வைத்த திருநந்தா விளக்குச் சாசனம்' எங்குக் காணப்படுகிறது? அதன் காலம், அதில் சொல்லப்பட்ட செய்திகள் யாவை?

2. 'திருமன்னி வளர இருநில மடந்தையும்' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி யாருக் குரியது? எங்கெங்குக் காணப்படுகிறது?

3. 'தொடர்வன வேலிப் படர்வன வாசி,' 'வேலைந் தொல்பெருங் காவல்,' 'வாகையம், பொருகடல் கும்பக் கரியொடு மகப்படுத், துரிமையிற் பிறங்கிய பருநிதிப் பிறக்கமும்'—இவற்றை விளக்குக.

4. சயசிங்கன், விக்கிரமவீரர், இந்திரதன், தன்மபாலன், இரண சூரன், கோவிந்தசந்தன், மகிபாலன் — இவர்களைப் பற்றிக் குறிப்பு வரைக.

5. முயங்கி, ஆதிநகர் — இவ்விடங்களில் உண்டான வெற்றிகளை எழுதுக.

6. முதலாம் இராசேந்திர சோழனின் வீரச் செயல்களைப்பற்றி இரு பக்கங்களுக்குக் குறையாமல் எழுதுக.

7. பொருள் கூறுக:—மடந்தை, பாவை, தென்னவர், சேரளர், பீடு, சுள்ளி, காம அகவை, தீர்த்தம், தண்டு, சிஞலயம், மணவாட்டி, நந்தா விளக்கு, திருவமுது, காசு.

8. "தொடர்வன வேலி.........திருத்தகு முடியும்" — என்ற தொடர்களால் அறியப்படும் செய்திகள் யாவை?

9. இடைதுறைநாடு, மண்ணைக்கடக்கம், பழந்தீவு — இவற்றின் சிறப்புக்கள் யாவை?

10. தொடர் வனவேலி, சுள்ளிச் சூழ் மதில் - இவை எதெதற்கு அடைமொழி யாகும்?

11. இராசேந்திரனுடைய ஈழப்போரைக் குறிப்பிடுக.

12. 'முன்னவர் பக்கல் தென்னவர் வைத்த, சுந்தர முடியும் இந்திரனாரமும்'—கொண்ட வெற்றி எம் மன்னருக்கு எவ்வாறாகியது? இவ்வடியின் பொருள் யாது?

13. பரசுராமன் என்ற பெயர் எந்தச் சாசனத்தில் வருகின்றது? அச்சாசனத்தில் அவனைப்பற்றி நீங்கள் தெரிந்துகொள்வதென்ன?

14. இராசேந்திர சோழ தேவன் கங்கைகொண்ட செய்தியை விளக்கி எழுதுக.

## 14. ஸ்ரீராஜேந்திரசோழதேவர் சாசனம்*

### முன்னுரை

ஸ்ரீராஜேந்திர சோழ தேவர் என்பான், முதலாம் இராஜேந்திர சோழதேவனுவன்; அவன் பெயரால் செய்யப்பட்ட தானத்தைக் குறிக்கும் சாசனம், 'ஸ்ரீ இராஜேந்திர சோழதேவர் சாசனம்' என்றுபெயர் பெற்றது. இச்சாசனம் அவனது ஆட்சியின் 19ஆம் ஆண்டு 242ஆம் நாள் ஏற்பட்டது. இது தஞ்சைப் பெரிய கோயில் நடுவிடத்துக் கருப்ப கிருகத்துத் தெற்குச் சுவரில் முதல் இரண்டு அடுக்குகளில் காணப்படுகிறது. தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது; பதினுறு பத்திகளை யுடையது.

இச்சாசனத்தின் முற்பகுதியில் முதலாம் இராசேந்திர சோழ தேவன் ஆட்சியின் பத்தொன்பதாம் ஆண்டு வரை ஏற்பட்ட அவனது வெற்றிகளைக் கூறும் மெய்க்கீர்த்தி அமைந்துள்ளது. பிற்பகுதியில் அவன் தனக்குச் சைவாசாரியராக விளங்கிய சர்வ சிவ பண்டிதற்கும் அவருடைய சீடர்களுக்கும் ஆசாரிய போகமாக ஆண்டுதோறும் இரண்டாயிரம் கலம் நெல் தானமாகக் கொடுத்த செய்தி கூறப்படுகிறது. இதற்கு முந்திய சாசனத்தில் அவனது ஆட்சியின் 12ஆம் ஆண்டு வரையுள்ள இவன் வெற்றிகள் கூறப்பட்டன. இதில் அவனது ஆட்சியின் 12ஆம் ஆண்டுக்கும் 19ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் அவன் கடாரங் கொண்ட வெற்றியும் உடன் சேர்த்துக் கூறப்பட்டுள்ளது. மெய்க்கீர்த்திகள் அரசரது ஆண்டு நிகழ்ச்சிகளைக் கூறுவனவாதலால், அவை ஆண்டுதோறும் வளர்ந்து கொண்டே போகும் என்பதற்கு இச்சாசனம் சிறந்த சான்ருகும்.

முதலாம் இராசேந்திர சோழ தேவன் கி. பி. 1012 முதல் 1044 வரை சோழநாட்டை ஆண்டான். இச்சாசனம் அவனது ஆட்சியின் 19ஆம் ஆண்டு ஏற்பட்ட தெனவே, இதன் காலம் கி. பி. 1031ஆம் ஆண்டு என்னலாம்.

---

15. ஜெயங்கொண்ட சோழமண்டலம், பள்ளிச்சந்தம், ஸ்ரீகுந்தவை சினலயம், பெரும்பாணப்பாடி, திருநந்தாவிளக்கு, திருவமுது-இவற்றை விளக்கி எழுதுக.

16. ஸ்ரீ குந்தவை சினலயம் எங்கு உள்ளது? அதற்கு திருநந்தா விளக்குத் தானமாகக் கொடுத்தது யார்? வேறு யாது கொடுத்தனர்?

17. நந்நப்பயன், சாமுண்டப்பை - குறிப்பு வரைக.

* S. I. I., Vol. II, Part I, No. 20., pp. 105-109.

ஸ்வஸ்தி ஶ்ரீ
[1]திருமன்னி வளர விருநில மடந்தையும்
பொர்ச்சயப் பாவையுஞ் சீர்த்தனிச் செல்வியுந்
தன்பெருந் தெவிய ராகி இன்புற
நெடிதியல் ஊழியுள் (இடைதுறை நாடுந்
துடர்வன வெலிப் படர்வன வாசியுஞ்
சுள்ளிச் சூழ்மதிள் கொள்ளிப் பாக்கையு
நண்ணற் கருமுரண் மண்ணைக் கடக்கமும்)
பொருகடல் [2]ஈழத் தரசர்த முடியும்
ஆங்கவர் தெவிய ரோங்கெழின் முடியு
முன்னவர் பக்கல் தென்னவர் வைத்த
சுந்தர முடியும் இந்திர நாரமுந்
தெண்டிரை ஈழ மண்டல முழுவதும்
எறிபடைக் [3]கெரளர் முறைமையிற் சூடுங்
குலதன மாகிய பலர்புகழ் முடியுஞ்
செங்கதிர் மாலையும் சங்கதிர் வேலைத்
தொல்பெருங் காவற் பலபழந் திவுஞ்
செருவிற் சினவி இருபத் தொருகா
லரைசுகளை கட்ட [4]பரசு ராமன்

---

1. 'திருமன்னி வளர விருநில மடந்தையும்': இது முதலாம் இராசேந்திர சோழதேவன் மெய்க்கீர்த்தியின் தொடக்கம்; நிலமடந்தை - நாடுகள்; தன்பெருந் தெவியராகி - செல்வம், நாடு, வெற்றி, புகழ் இவற்றைத் தனக்குத் தேவியராகக் கொண்டு; தேவி-பட்டத்தரசி.

இடை துறை நாடு, வனவாசி, கொள்ளிப் பாக்கை, மண்ணைக்கடக்கம்; இவை முதலாம் இராசேந்திரன், அவன் ஆட்சியின் துவக்க காலத்தில் வெற்றி பெற்றவை. விளக்கம், முந்திய சாசனக் குறிப்புரையில் காண்க.

2. ஈழத்தரசர், ஈழமண்டலம்: முதலாம் இராசேந்திரன் ஈழநாட்டுப் போரில், ஈழத்தரசர் முடி, அவர் தேவியர் முடி, அவர் பக்கல் பாண்டியர் அடைக்கலமாக வைத்த சுந்தரமுடி, இந்திரன் ஆரம் ஆகியவற்றைக் கவர்ந்து, ஈழமண்டலத்தையும் தன் ஆட்சிக்குட்படுத்தினான்.

3. கெரளர் - சேரமன்னர்: இராசேந்திரன் மலைநாட்டுப் போரில் சேரமன்னரை வென்று, அவர்கள் முடி, மாலை ஆகியவற்றைக் கவர்ந்து, மேலைக்கடல் நடுவிலுள்ள பல தீவுகளையும் வென்றான்.

4. பரசுராமன், சாந்திமத் தீவு: மேலைக்கடலிலுள்ள சாந்திமத்தீவு, ஆதியில் இருபத்தொரு தலைமுறையாக அரசகுலத்தவரை அழித்து

மெவருஞ் சாந்திமத் திவவரண் கருதி
இருத்திய செம்பொற் றிருத்தகு முடியும்
பயங்கொடு பழிமிக முசங்கியில் முதுகிட்
டொளித்த சயசிங்கன் அளப்பரும் புகழொடும்
பீடியல் இரட்ட பாடி ஏழரை
இலக்கமு நவநெதிக் குலப்பெரு மலைகளும்
விக்கிரம வீரர் [5] சக்கர கொட்டமு
முதிரபட வல்லை மதுரை மண்டலமும்
காமிடை வளைய நாமணைக் கோணமும்
வெஞ்சிலை வீரர் பஞ்சப் பள்ளியும்
பாசுடைப் பழநன் மாசுணி தேசமும்
அயர்வில்வன் கிர்த்தி [6] யாதிநக ரகவையிற்
சந்திரன் றொல்கு லத்தி ரதனை
விளையமர்க் களத்துக் கிளையொடும் பிடித்துப்
பலதனத் தொடுநிறை குலதனக் குவையுஞ்
கிட்டருஞ் செறிமிளை யொட்ட விஷயமும்
பூசுரர் சேர்நல்க் கோசலை நாடுந்
தன் பாலனை வெம்முனை யழித்து

---

வந்த பரசுராமனால் ஆட்சி செய்யப்பட்ட தீவு; முதலாம் இராசேந்திரன் அதன்மீது படையெடுத்துச் சென்று, வென்று அங்குள்ள செல்வங்களை யெல்லாம் கவர்ந்தான்.

**இரட்டபாடி ஏழரை இலக்கம்** : இதனை 'மேலைச் சாளுக்கியர் நாடு' என்றும் கூறுவர். ஐந்தாம் மகிந்தன் என்பவன் ஆண்டுவந்தான். அவன் தம்பி செயசிங்கன் முதலாம் இராசேந்திரனை முயங்கி என்னுமிடத்தில் எதிர்த்தான். இராசேந்திரன் போரில் அவனைப் புறமிடச் செய்து, அவன் நாட்டிலுள்ள விலையுயர்ந்த பல பொருட்களையும் கவர்ந்து கொண்டான்.

**5. சக்கர கொட்டம், மதுரை மண்டலம், நாமணைக்கோணம், பஞ்சப் பள்ளி, மாசுணி தேசம்** : இவை வேங்கிநாட்டை அடுத்துள்ள பகுதிகளாகும். முதலாம் இராசேந்திரன் தன் வடநாட்டுப் போரில் இவைகளை வென்றான்.

**6. ஆதிநகர், இந்திரதன்** : ஆதிநகர் கோசல நாட்டிற்குத் தலைநகர்; இந்திரதன் அதனை ஆண்டான். ஒட்டவிசயம், தென் கோசல நாடு முதலியவை அவனாட்சிக்குட்பட்டு இருந்தன. முதலாம் இராசேந்திரன் இவனை ஆதிநகரில் எதிர்த்து வென்று, இவன் நாடுகளிலுள்ள செல்வங்களையும் கவர்ந்தான்.

வண்டுறை சோலைத் [7]தண்ட புத்தியு
மிரண/சூரனை முரணுறத் தாக்கித்
திக்கணை கிர்த்தித் தக்கண லாடமுங்
கோவிந்த சந்தன் மாவிழிந் தோடத்
தங்காத சாரல் வங்காள தேசமுந்
தொடுகடற் சங்கு கொட்டன் மஹீபாலனை
வெஞ்சமர் வளாகத் தஞ்சுவித் தருளி
ஒண்டிறல் யானையும் பெண்டிர்பண் டாரமும்
நித்தில நெடுங்கட லுத்திர லாடமும்
[8]வெறிமணற் றிர்த்தத் தெறிபுனற் கங்கையும்

---

**7. தண்டபுத்தி, தக்கணலாடம், வங்காளதேசம் :** இவற்றுள் தண்ட புத்தியைத் தன்மபாலனும், தக்கணலாடத்தை இரணசூரனும், வங்காளத்தைக் கோவிந்த சந்தனும் ஆட்சிபுரிந்து வந்தனர். இவர்களுக்குப் பேரரசன் மஹிபாலன். இவன் உத்திரலாடத்தை ஆண்டுவந்தான். இராசேந்திரன் இவர்களைப் புறமிட்டு ஓடச்செய்து, இவர்கள் நாட்டுச் செல்வங்களையும், பெண்டிர் பண்டாரத்தையும் கவர்ந்துகொண்டான்.

**8. வெறிமணற்றிர்த்தத் தெறிபுனற் கங்கை** முதலாம் இராசேந்திரன் தான் புதிதாக அமைத்த சோழபுரம் என்னும் தலைநகரையும், அந்நகரில் எடுத்த சோழீச்சுரம் என்னும் கோயிலையும், ஏரியையும் புனிதப்படுத்துவதற்குக் கங்கை நீரைக் கொண்டுவர வடநாட்டின்மீது படை எடுத்துச் சென்றான்; கங்கைக்கரை வரையும் உள்ள மன்னர்களை வென்றான்; அவர்கள் செல்வங்களை யெல்லாம் கவர்ந்துகொண்டான்; இறுதியில் கங்கை நீரையும் எடுத்துவந்தான். கங்கை நீரின் புனிதத் தன்மை, 'தீர்த்தத் தெறிபுனல் கங்கை' என்பதால் விளங்கும்.

கடாரம் கொண்டது—வரி : 47 - 67.

கடாரம் என்பது, மலேயாத் தீபகற்பத்தின் தென்பகுதியில் மேலைக் கடற்கரையின்கண் உள்ள 'கெடா' என்று வழங்கப்பட்டுவரும் இடமே யாகும். இது வடமொழியில் 'கடாஹம்' என்றும், தமிழ்மொழியில் 'காழகம், கடாரம்' என்றும் வழங்கும். இதனை ஆண்டவன் 'விசயோத் துங்க வர்மன்' என்பவன்.

முதலாம் இராசேந்திரன் கடலில் பல கலம் செலுத்திக் கடாரம் சென்று, முதலில் விசயோத்துங்க வர்மனை வாகை சூடி, அவனது யானையையும், வித்யாதரத் தோரணம் முதலியவற்றையும் கவர்ந்தான், அதன் பின்னர் ஸ்ரீவிசயம், பன்னை, மலையூர், மாயிருடிங்கம், இலங்கா சோகம், மாப்பப்பாளம், மேவிலிம்பங்கம், வளைப்பந்தூரு, தலைத்தக் கோலம், மாதமர் லிங்கம், இலாமுரிதேசம், மாநக்கவாரம் முதலிய

அலைகடல் நடுவுட் பலகலஞ் செலுத்திச்
சங்கிராம விசையொத் துங்க வந்ம
னாகிய கடாரத் தரைசனை வாகயம்
பொரு[9]கடல் கும்பக் கரியொடு மகப்படுத்
துரிமையிற் பிறக்கிய பெருநெதிப் பிறக்கமும்
ஆர்த்தவ னகனகர் பொர்த்தொழில் வாசலில்
விச்சா தித்தொ ரணமும் மொய்த்தொளிர்
புனைமணிப் புதவமும் கனமணிக் கதவமும்
நிறைசீர் விசையமுந் துறை[10]நீர்ப் பன்னையும்

ஊர்களைப் பிடித்தான். இறுதியில் கடாரம் முழுவதும் அவன் வசமாயிற்று.

**கலம்** - மரக்கலம்; 'அலைகடல் நடுவுட் பல கலஞ் செலுத்தி' என வரும் தொடரால் சோழ மன்னர்கள் கப்பல் படைகளையுடையவர்களாயிருந்தனர் என்பது புலப்படும். அலைகடல் - அலைகளையுடைய கடல்.

**சங்கிராம விசையொத்துங்க வந்மன்** : இது போரில் வல்ல கடாரத்தரசன் பெயர்; சங்கிராமம் - போர்; வாகயம் - வெற்றி.

**9. பொருகடல் கும்பக் கரி** - பொருகின்ற கடல்போல் முழங்கும் மத்தகக் கரி; பொருகடல் என்பதற்குப், 'போர்க்களம்' என்று பொருள் கொள்வாருமுளர். கும்பம் - மத்தகம்.

**உரிமையிற் பிறக்கிய பெருநெதி** - உரிமையோடு சேர்த்த பெருஞ் செல்வம். பிறக்கம் - குவியல் (hēap).

**ஆர்த்து** - எழுந்து; அகனகர் - தலைநகர்; பொர்த் தொழில் வாசலில் - போர் செய்யும் வழியிடத்து.

**விச்சாதித் தொரணம்** - போர்த்தொழில் செய்யும் வாயில் வளைவின் பெயர்; மொய்த்து - செறிந்து; ஒளிர்புனை - பிரகாசம் பொருந்திய; புதவம் - கதவு; கதவம் - கதவு. 'புதவக்கதவம் புடைத்தனன் ஓர் நாள்' என்பது சிலப்பதிகாரம்.

**சீர் விசையம்** : சுமத்திரா தீவிலுள்ள 'பாலம்பாங்' என்னும் இராசதானியாகும். சீர் - திரு; விசையம் - நாடு; அஃதாவது திருநாடு என்பது; 'விச்சாதிரத் தோரணம், புனைமணிப்புதவம், கனமணிக் கதவம் இவைகளையுடைய ஸ்ரீ விஷயம்' என்று கொள்க.

**10. துறைநீர்ப்பன்னை** : நீர்த்துறைகளையுடைய பன்னை என்பது; இது சுமத்திரா தீவின் கீழ்கரையிலுள்ள பனி (Pani) அல்லது பனை (Panie) என்னு மூராகும்.

**வன்மலை யூரெயிற் றொன்மலையூர்** : வலிய 'மலையூ' என்னும் நதியை அரணாகக்கொண்ட பழைமையான மலையூர் என்பது. இது சுமத்திரா

வன்மலை யூரெயிற் றொன்மலை யூரும்
ஆழ்கட லகழ்சூழ் மாயிரு டிங்கமும்
கலங்கா வல்வினை இலங்கா சொகமும்
காப்புறு நிறைபுனல் மாப்பப் பாளமும்
காவலம் புரிசை [11]மெவிலிம் பங்கமும்
விளைப்பந் தூறுடை வளைப்பந் தூறும்
கலைத்தக் கொர்புகழ் தலைத்தக் கொலமும்

---

தீவின் கீழ்கரையிலிருந்தது என்று சிலரும், மேல் கரையிலிருந்தது என்று வேறு சிலரும், மலேயா தீபகற்பத்தின் தென் பகுதியில் இருந்தது என்று மற்றொரு சாராரும் கூறுகின்றனர். ஜம்பி (Jambi) என்னும் நாடே இஃது என்று டச்சு ஆராய்ச்சியாளர் கூறுவர். எனவே, ஸ்ரீ விசயம், பன்னை, மலையூர் முதலியன சுமத்திரா தீவிலுள்ள ஊர்கள் என்பது போதரும்.

**மாயிருடிங்கம் :** மலேயா தீபகற்பத்தின் மத்திய பாகத்தில் கடலையடுத்துள்ளது. ஆழ்கட லகழ் - ஆழமான கடலாகிய அகழி.

**இலங்கா சொகம் :** மலேயா தீபகற்பத்தில், 'கெடா' என்னுமிடத்திற்குத் தெற்கேயுள்ளது. கலங்கா வல்வினை - நிலைகலங்காத வன்மையுடைய.

**காப்புறு** - ஒன்றாகத் தொடர்ந்த ; மாப்பப்பாளம் : இது மகா வமிசத்தில் 'பப்பாளமா' என்று குறிக்கப்பட்டுள்ளது ; 'க்ரா' பூசந்திக்குப் பக்கத்தில் இருந்தது.

**11. மெவிலிம்பங்கம், விளைப்பந்தூறு :** இவை இருந்த இடம் இப்பொழுது தெரியவில்லை. காவலம் புரிசை - காவல் நிறைந்த கோட்டையையுடைய ; வளைப்பந்தூறு - விளைப்பந்தூரை யடுத்த ஒரு சிற்றூர் போலும்.

**தலைத்தக்கொலம் :** கிரேக்க ஆசிரியரான தாலமி என்பவர் இதனைத் 'தகோலா' என்று குறித்துள்ளார். இது 'க்ரா' பூசந்திக்குத் தெற்கே, மலேயா தீபகற்பத்தின் மேல்புறமாக இருந்தது, இப்போது 'தகோபா' (Takopa) என்று வழங்கப்படுவது இதன் தலைநகராகும். கலைத்தக் கொர் - கலை வல்லார்.

**மாதமா லிங்கம் :** மலேயாவின் கீழ்ப்பிரதேசத்தில் 'க்வாண்டன் நதியின் முகத்துவாரத்திலுள்ள தெமிலிங் (Temiling) அல்லது தெம்பலிங் (Tembeling) என்று சொல்லப்படும் இடமாகும். திமர் வல்வினை தீமை நிறைந்த கொடிய வினை.

**இலாமுரி தேசம் :** இது சுமத்திரா தீவின் வட பகுதியில் உள்ள நாடாகும். இதனை 'லாமுரி' என்றும், லம்பரி (Lambri) என்றும் கூறுவர். கலாமுதிர் - கலை நிரம்பிய ; கடுந்திறல் - மிக்க திறமை.

திமர் வல்வினை மாதமா லிங்கமும்
கலாமுதிர் கடுந்திறல் இலாமுரி தேசமும்
தெனக்க வார்பொழில் மானக்க வாரமும்
தொடுகடல்க் காவல்க் கடுமுரட் கடாரமும்
மா[12]ப்பொரு தண்டாற் கொண்ட கொப்பர
கெஸரி வன்ம ரான உடையார்
ஸ்ரீராஜெந் ரசொழ தெவற்கு யாண்டு

௰௯ ஆவது நாள் இருநூற்று நாற்பத்திரண்டினால் உடையார் ஸ்ரீ ராசேந்திர சோழதேவர் கங்கைகொண்ட

13 சொழபுரத்துக் கொயிலினுள்ளால் முடிகொண்ட சோழன் திருமாளிகையில் வடபக்கத்து தேவாரத்துச் சுற்றுக் கல்லூரியில் தாகஞ் செய்தருளா இருந்து, உடையார்

---

**மானக்கவாரம்:** இஃது இப்பொழுது 'நித்கோபார் தீவு' என்று வழங்குகிறது. தெனக்க வார் பொழில் - தேனிறைந்த நீண்ட சோலை.

**தொடுகடல்க் காவல்** - ஆழமான கடலாகிய காவலையுடைய; **கடுமுரண்** - கடிய முரட்டுக் குணமுடைய; எனவே மாயிருடிங்கம், இலங்காசொகம், மாப்பப்பாளம், மெவிலிம்பங்கம், விளைப்பந்தூறு, தலைத் தக்கொலம், மாதமாலிங்கம் முதலியன மலேயா தீபகற்பத்திலுள்ள ஊர்களாகும்.

12 **மா பொரு தண்டால்** - பெரும்போரைச் செய்யும் சேனையால்.

**யாண்டு ௰௯ ஆவது நாள் இருநூற்று நாற்பத்திரண்டினால்:** 19 ஆம் ஆண்டு 242 ஆம் நாள் என்பது. சாசனங்களில் நாள் குறிக்கும்போது பெரும்பாலும் அக்காலப் பேரரசரது ஆட்சியின் ஆண்டினைக் குறிப்பது வழக்கம். சில சாசனங்களில் ஆட்சியின் ஆண்டோடு நாளும் உடன் குறிக்கப்பட்டிருக்கும். அப்படிப்பட்ட சாசனங்களில் இதுவும் ஒன்று.

**கங்கை கொண்ட சொழபுரம்:** முதலாம் இராசேந்திர சோழன் அமைத்த பெரிய நகரம். இதைப் புனிதப்படுத்துதற்குக் கங்கை நீர் கொண்டு வருவதற்கே அவன் வடநாட்டு யாத்திரை செய்து பல நாடுகளையும் செயித்தான். இஃது, இப்பொழுது திருச்சிராப்பள்ளி சில்லாவிலுள்ள உடையார்பாளையம் தாலூகாவில் ஒரு சிறு ஊராகக் காணப்படுகிறது.

13. **கொயிலினுள்ளால்** - அரண்மனையினுள்; அரண்மனையின் ஒரு பகுதிக்குப் பெயர் என்பாருமுளர். முடிகொண்ட சோழன் திருமாளிகை முதலாம் இராசேந்திரன் பட்டப்பெயர்களில் 'முடிகொண்ட சோழன்' என்பது ஒன்று. அப்பெயரால் கட்டிய அரண்மனை இதுவாகும்.

ஸ்ரீ ராஜராஜ ஈஸ்வரமுடையார் கோயிலில் ஆசார்ய்ய போகம் கம் உடையார் ஸர்வ்வ சிவ பண்டித

**14.** சைவ்வாசார்ய்யர்க்கும் இவ்வுடையார் சிஷ்யரும் பிர சிஷ்யரும்ஆய் ஆர்ய்ய தேசத்தும், மத்திய தேசத்துத் தான் கௌடதெசத்துத்தான் உள்ளாராய் யொக்யரா யிருப்பார்க்கெ ஆட்டாண்டுதொறும் இத்தேவர் கொயிலில் ஆடவல்லானெ

**15.** ன்னும் மரக்காலால் உள்ளூர்ப் பண்டாரத்தெ நிறைச்சளவாக இரண்டாயிரக் கல நெல்லு ஆட்டாண்டு தொறும் சந்திராதித்தவல் பெறத் திருவாய் மொழிந்தருளத் திருமந்த்ரி ஓலெ செம்பியன் விழுப்பரையன் எழுத்தினு

---

**தேவராத்துச் சுற்றுக் கல்லூரி:** முதலாம் இராசேந்திர சோழன் அரண்மனைப் பூங்காவனத்தைச் சுற்றியிருந்த கல்லூரி (That College which surrounds the King's flower garden); பூசிக்கப்படும் இட மென்பாரு முளர்.

**தாநம் செய்தருளா இருந்து** - தருமம் செய்து ; ஆசாரிய போகம் - ஆசாரியராகவிருந்து அநுபவிக்கும் செல்வம்.

**14. உடையார் ஸர்வ்வ சிவ பண்டிதர் :** 'உடையார்' என்ற பெயர் கடவுளுக்கும், கடவுளையொத்த அரசர்க்கும், கடவுளடியார்க்கும் வழங்கும் பெயராகக் காணப்படுகிறது. ஸர்வ்வ சிவ பண்டிதர் தஞ்சைப் பெரிய கோயிலில் பூசைசெய்து வந்தவர். முதலாம் இராசேந்திரனுக்கு ஆசாரியராய் இருந்தார். இவரும், இவருடைய சீடர்களும் எந்த நாட்டி லிருந்தாலும் அவர்களுக்கு ஆசாரிய போகமாய்க் கொடுக்கும்படியாக ஆண்டுதோறும் இரண்டாயிரம் கலம் நெல் அளப்பதற்கு முதலாம் இராசேந்திரன் தன் அரண்மனையில் இருந்தபடியே ஆணை பிறப்பித் தான்.

**இவ்வுடையார் சிஷ்யரும்** - சர்வசிவ பண்டிதருடைய சீடரும். பிர சிஷ்யரும் - சர்வசிவ பண்டிதர் சீடர்களின் சீடர்களுமாய்.

**ஆர்ய்ய தேசத்தும், மத்திய தேசத்துத்தான், கௌட தெசத்துத்தான் :** ஆரியதேசம்; மத்திய தேசம், கௌட தேசம் என்பது. இவைகளில் சர்வசிவபண்டிதருடைய சீடர்களிருந்தனர். கௌடதெசம் - வங்காள தேசம். இத்தேவர் கொயிலில் - முதலாம் இராசேந்திரசோழ தேவர் அரண்மனையில்.

**15. நிறைச்சளவாக** - நிரம்பிய அளவில்; சந்திராதித்தவல் - சந்தி ரன் ஆதித்தன் உள்ள காலமளவும்; ஆதித்தன் - சூரியன். திருவாய் மொழிந்தருள - கட்டளையிட; திருமந்திரி ஓலை - திருமந்திர ஓலை' அரசனது ஆணையை எழுதுபவன். ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவன்

16. ல்....த் திருவாய்க் கெழ்விப்படி கல்லில் வெட்டித்து இது இவ்வம்சத்துள்ள சைய்வ்வ ஆசார்ய்யர்களே இத் தன்மம் ரக்ஷிக்க உ.

---

கட்டளையை ஓலையில் எழுதி வாசித்தவன் செம்பியன் விழுப்பரைய ளுவான்.

16. **திருவாய்க் கெழ்விப்படி கல்லில் வெட்டித்து : திருவாய்க் கெழ்வி** - திருவாய்க் கேள்வி ; அஃதாவது அரசனது ஆணை என்பது. இதனால் அரசன் தான் செய்யக் கருதும் தானத்தைத் தன் அரண்மனையிலிருந்த படியே சொல்ல, திருமந்திரவோலை அதை எழுதுவான் என்றும், பின் அஃது ஊர்ச்சபை முன் வாசிக்கப்பட்டு அம்முறையே கல்லில் வெட்டப்படும் என்றும் தெரிகிறது.

**இவ்வம்சத்துள்ள சைய்வ்வ ஆசார்ய்யர்களே** - இந்தப் பரம்பரையில் தோன்றிய சிவாச்சாரியர்களே என்பது ; இத்தன்மம் - இந்தத் தருமம்; ரக்ஷிக்க - காக்கக் கடவர்.

பயிற்சி விஞக்கள்

1. **ஸ்ரீராஜேந்திர சோழ தேவர் சாசனம்.** எதைப் பற்றியது ? அஃது எங்குக் காணப்படுகிறது ? அதன் காலத்தைக் குறிப்பிடுக.

2. இராசேந்திர சோழன் அவனுடைய ஆட்சியின் 12 ஆம் ஆண்டுக்கும் 17 ஆம் ஆண்டுக்கும் இடையில் அடைந்த வெற்றிகள் யாவை ? அவ்வெற்றிகளில் அவன் கைக்கொண்ட இடங்கள் பலவற்றுள் ஆறு இடங்களின் பெயர்களையும், தனித்தனியே அவைகளுக்குரிய சிறப்புக்களையும் வரைக.

3. இராசேந்திர சோழன் கடாரத்தரசனை வென்று அவன்பால் கைக்கொண்ட மூன்று சிறந்த பொருள்கள் எவை ?

4. **தேவாரத்துச் சுற்றுக் கல்லூரி, ஆசாரியபோகம், சர்வசிவ பண்டிதர், திருமந்திரவோலை, செம்பியன் விழுப்பரையன், திருவாய்க் கேள்வி** - குறிப்பு வரைக.

5. முதல் இராசேந்திர சோழனுக்கு ஆசாரியராய் இருந்தார் யாவர் ? அவர்சீடர்கள் எந்தெந்தத் தேசத்தவராய் அறியப்படுகின்றனர்?

6. இராசராசேசுவரத்தில் ஆசாரிய போகம் பெற்றிருந்தார் எத் தேசத்தார் ? எதனை ஊதியமாகப் பெற்றனர் ?

7. அரசன் ஆணையிடும் அறங்கள் அரசியல் தலைவர்களால் எம் முறைப்படி உறுதிப்படுத்தப் பெற்று வந்தன? ஆதாரம் காட்டி எழுதுக.

8. முதலாம் இராசேந்திர சோழன் ஏகாதிபத்தியத்தில் அடங்கி யிருந்த நாடுகளைப் புலப்படுத்துக.

# 15. மணிமங்கலம் சபையோர் சாசனம்*

## முன்னுரை

மணிமங்கலம் என்பது ஓர் ஊர்; அவ்வூர்ச் சபையினரால் ஏற்பட்ட சாசனம் 'மணிமங்கலம் சபையோர் சாசனம்' எனப் பட்டது. இச்சாசனம் இராசகேசரிவர்மன் என்னும் முதலாம் இராசாதிராச சோழன்† காலத்தில், அவன் ஆட்சியின் 29 ஆம் ஆண்டு ஏற்பட்டது. அதனால் இது முதலாம் இராசாதிராச தேவன் சாசனம் என்றும் பெயர் பெறும். இது செங்கல்பட்டு மாவட்டம், காஞ்சீவரம் தாலூகாவிலுள்ள மணிமங்கலம் என்னும் ஊரிலுள்ள இராச கோபாலப்பெருமாள் கோயில் கருப்ப கிருகத்தின் வடக்குச் சுவரிலும், கிழக்குச்சுவரிலும் காணப்படுகிறது. தமிழ் மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது. பன்னிரண்டு பத்திகளை யுடையது.

இச்சாசனத்தின் முற்பகுதியில் முதலாம் இராசாதிராச தேவன், அவன் ஆட்சிக்குட்பட்ட சேரநாடு, சாளுக்கிய நாடு, பாண்டிய நாடு, கங்க நாடு, கன்னியாகுப்ஜம் ஆகியவற்றை ஆளுவதற்கு அவன் இனத்தவரை நியமித்த செய்தியும், பல்லாரிச் சில்லாவிலுள்ள காம்பிலி என்னுமிடத்திலிருந்தசாளுக்கிய மன்னர் மாளிகையை அழித்த செய்தியும் கூறும் அவனது

---

* S. I. I., Vol. II, Part I, No. 23, pp. 57—58.

† இவன் முதலாம் இராசேந்திர சோழனுக்கு முதல் மகனாவான்; இராசேந்திரன் இவனைக் கி.பி. 1018 இல் இளவரசனாக்கினான். எனவே, இவனது ஆட்சி கி. பி. 1018 முதல் எண்ணப்பட்டது. இவன் கி. பி. 1053 வரை ஆண்டான் என்பர். இதன் தன் சிறிய தந்தை முதலிய உறவினர்களுக்கும் நாடு கொடுத்து ஆட்சிபுரியச் செய்தான். பாண்டியர், சேரர், மேலைச் சாளுக்கியர், இலங்கை மன்னர் முதலியவர்களோடு போர் செய்து வெற்றி பெற்றான். ஆகையால் இவன் 'செயங்கொண்ட சோழன்' என்றும் அழைக்கப்பட்டான். இவன் மேலைச் சாளுக்கியரோடு காம்பிலி என்னுமிடத்தில் நடத்திய போர் பிரசித்தமானது. இவன் மனுநெறி தவறாது ஆட்சிபுரிந்தான்; அசுவமேதயாகம் செய்து பெயர் பெற்றான். வில்லவர், மீனவர், வேள்குலர், சாளுக்கியர், வல்லவர், கௌசலர், வங்கணர், கொங்கணர், சிந்துரர், ஐயணர், சிங்களர், பங்களர், ஆந்திரர் முதலியோர் இவனுக்குத் திறை செலுத்தி வந்தனர். இவன் குடிகளிடத்தில் ஆறிலொரு கடமை வாங்கி வந்தானென்பது இச் சாசனத்தால் தெரிகிறது.

மெய்க்கீர்த்தி அமைந்துள்ளது. பிற்பகுதியில் மணிமங்கலம் சபையோர், கோயில் பணத்திலிருந்து நூறு காசு கடன் வாங்கி அக்கடனுக்கு வட்டியாக அவ்வூரிலுள்ள சில நிலங்களை ஈடாகக் கொடுத்த செய்தி கூறப்படுகிறது. அஃது இராசாதிராச தேவன் ஆட்சியின் 29 ஆம் ஆண்டு தனுஞாயிற்று (in the month of Dhanus) பூர்வபட்சத்து (bright fort-night) துவிதையும் (The Second Tithi) புதன்கிழமையும் கூடிய திருவோண நாளில் (The day of Sravana) நடைபெற்றதென்பது குறிப்பிடத்தக்கது.

முதலாம் இராசாதிராச தேவன் கி. பி. 1018 ஆம் ஆண்டு முதல் 1054 வரை சோழ நாட்டை ஆண்டான். இச்சாசனம் அவன் ஆட்சியின் 29 ஆம் அண்டு ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1046 ஆம் ஆண்டு என்னலாம்.

சாசனம்

1. ஸ்வஸ்திஶ்ரீ
திங்களேர் தருதன் றொங்கல்வெண் குடைக்கீழ்
நிலமக ணிலவ மலர்மகட் புணர்ந்து
செங்கோ லொச்சிக் கருங்கலி கடிந்து
தன்[1]சிறிய தாதை யுந்திருத் தமைய னுங்[2]

---

1. ஸ்வஸ்தி ஶ்ரீ: இது சாசனங்களில் மங்கலமாக வரும் வடமொழித் தொடர்.

திங்களேர்தரு—திங்களையொத்த ; இவன் சாசனம் 'திங்களேர் தரு' 'திங்களேர் பெறவளர்' என்ற தொடக்கம் உடையன. தன் தொங்கல் வெண்குடை தனது மாலை தொங்கவிடப் பெற்ற வெண்கொற்றக் குடை. 'திங்களைப் போற்றுதும் திங்களைப்போற்றுதும், கொங்கலர் தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ், வங்கண் உலகளித்த லான்' என்ற சிலப்பதிகார அடிகள் இங்கு நினைக்கற்பாலன.

நிலமகள் நிலவ - பூதேவதை தங்க ; மலர்மகள் புணர்ந்து - இலக்குமி கூடியிருந்து ; செங்கோலொச்சி-ஆட்சிபுரிந்து; கருங்கலி கடிந்து - துன்பம் நீக்கி; தன் சிறிய தாதை: இவன் பெயர் இங்குக் குறிக்கப்படவில்லை; இரண்டாம் இராசேந்திரன் மெய்க்கீர்த்தியில் 'தன் சிறியதாதை யாகிய எறிவலி கங்கைகொண்ட சோழனை' என்று காணப்படுகிறது. [1]'சிறிய தாதையையும்' என்றும் பாடம். திருத்தமையன்: இவன்பெயர் இரண்டாம் இராசேந்திரன் மெய்க்கீர்த்தியில் 'அரும்பெறற் றமயனை முன் வந்தான் யிரும்புவி புகழ் இராசராசனென் றொளிர்மணி முடி 'சூட்டி' என்று குறிக்கப்பட்டுள்ளது. இவன் பெயர் 'ஆளவந்தான்' என்பாருமுளர். [2]'தமையனையும்' என்றும் பாடம்.

குறிகொள் தன் னிளங்கோக்[3] களையும் நெறியுணர்
தன்றிருப் புதல்வர் தம்மையுந் துன்றெழில்[4]
வானவன் வல்லவன்[5] மீனவன் கங்க
னிலங்கையர்க்[6] கிறைவன் பொலங்கழற்[7] பல்லவன்
கன்னகுச் சியர்கா வலனெனப்[8] பொன்னணிச்
சுடர்மணி மகுடஞ் சூட்டிப் படர்புக[9]
ழாங்கவர்க் கவர்நா டருளிப் பாங்குற[10]
மன்னுபல் லூழியுட் டென்னவர் மூவருள்
மானா பரணன் பொன்முடி யானைப்[11]
பருமணிப்(2)பசுந்தலை பொருகளத் தரிந்து

---

குறிகொள் - பெயர்பெற்ற, நிளங்கொக்கள் - தம்பியர்; இவர்கள் பெயர் இரண்டாம் இராசேந்திரன் மெய்க்கீர்த்தியில் மும்முடிச்சோழன் வீரசோழன், மதுராந்தகன், பராந்தகன் என்று குறிக்கப்பட்டுள்ளன. [3] 'தன்நிளங் கோக்களையும்' என்றும் பாடம்.

நெறியுணர் தன் திருப்புதல்வர் - அரசியல் நெறியுணர்ந்த தன் மக்கள்; துன்று எழில் - அழகமைந்த. [4] 'துன்றிய தெறுசில்' என்றும் பாடம். வானவன் - சேரமன்னன்; வல்லவன்-சாளுக்கிய மன்னன்; [5] 'வில்லவன்' என்றும் பாடம். மீனவன் - பாண்டிய மன்னன்; கங்கன் - கங்கபாடி மன்னன்.

இலங்கையர்க் கிறைவன் - இலங்கை மன்னன்; பொலங்கழல் - பொன்னாலான வீரக்கழல். [6] 'கங்கநிலங்கையற் கிறைவன்', [7] 'புலங்கழல்' என்றும் பாடம். கன்னகுச்சியர் - கன்னியாகுப்ஜம் என்னும் இடத்தவர்; காவலன் - அரசன். [8] 'காவலநெனா' என்றும் பாடம்; பொன்னணிச் சுடர்மணி மகுடம் சூட்டி - பொன்னா லழகு செய்த மணிகள் பதித்த மகுடம் சூட்டி என்பது. படர்புகழ் - புகழ்பெற்ற. [9] 'பலர்புகழ்' என்றும் பாடம்.

ஆங்கவர்க்கு அவர் நாடருளி: தன் சிறிய தாதை, தமையன், புதல்வர் ஆகியவர்களுக்குச் சேரர், சாளுக்கியர், பாண்டியர், கங்கர், இலங்கையர், பல்லவர், கன்னகுச்சியர் என்பவர்களின் நாட்டை ஆளும்படி கொடுத்து என்பது. பாங்கு உற - சிறப்பாக; பக்கத்தில் பொருந்திய என்பாருமுளர். [10] 'பாங்குறு' என்றும் பாடம்.

மன்னுபல் ஊழி - நிரம்பிய பல ஆண்டில்; [11] 'ஆநாப்' என்றும் பாடம். தென்னவர் மூவர் - இலங்கையர், சேரர், பாண்டியர் ஆகிய மூவர், பாண்டியர் மூவர் என்பாருமுளர்.

**2. மானாபரணன்..............அரிந்து:** மானாபரணன் - மானத்தை ஆபரணமாக வுடையவன். இது பாண்டியர்களுக்கும், இலங்கை மன்னர்க்கும் பொதுவாக வழங்கப்பட்ட பெயர். இப்பெயரையுடைய இலங்கை

வாரள வியகழல் வீரகே ரளனை
முனைவயிற் பிடித்துத் தனது வாரணக்[12]
கதக்க ளிற்றி[13] லுதைப்பித் தருளி
அந்தமில் பெரும்புகழ்ச் சுந்தர பாண்டியன்
கொற்றவெண் குடையும் கற்றைவெண் கவரியும்
சிங்கா தனமும் வெங்கழத் திழந்துதன்
முடிவிழத் தலைவிரித் தடிதளர்க் தோடத்
தொல்லை[14] முல்லையூர்த் துரத்தி யொல்கலில்
வேணாட் டரசைச் சேணாட் டொதுக்கி

---

மன்னன் ஒருவன் முதலாம் இராசாதிராசனால் தலை கொய்யப்பட்ட செய்தி இதுவாகும்.

வாரளவிய கழல் - நீண்டு அகன்ற கழல்; வாரால் இறுக்கிக் கட்டப் பட்ட கழல் எனினுமாம். வீரகேரளன் - இவன் சேரநாட்டை ஆண்ட மன்னன்.

முனைவயில் - போர்முனையிடத்து. வாரணக் கதக் களிறு - 'அத் திவாரணம்' என்னும் பெயரையுடைய கோப மிகுந்த யானை என்பது. இது சோழ மன்னனுக் குரியது. உதைப்பித்தருளி - யானையின் காலால் தலையை இடறச் செய்து; இவ்வாறு தலை இடறப்பட்டவன் வீரகேரளனாவான். [12] 'தனத் திவாரணக்', [13] 'கதக் களிற்று' என்றும் பாடம்.

அந்தமில் - முடிவில்லாத; சுந்தரபாண்டியன்: இவன் முதலாம் இராசாதிராசனுக்குத் தோற்றுத் தன் வெண்கொற்றக் குடை, வெண் கவரி, சிங்காதனம் முதலியவற்றை இழந்தான். சோழன் இவனைப் பின் தொடர்ந்து துரத்த, இவன் தலைவிரி கோலமாய் முல்லையூர் வரையோடி ஒளிந்தான். வெங்களம் - போர்க்களம். முடிவிழ - கிரீடம் கீழே விழ.

தொல்லை முல்லையூர்-பழைமை தாங்கிய முல்லையூர்; [14] 'தொல்லைய்' என்றும் பாடம். ஒல்கல் - பின் வாங்குதல்; குறைவு எனினுமாம்.

வேணாட் டரசைச் சேணாட் டொதுக்கி: இக்காலத்தில் மலைநாடு பல பகுதிகளாகப் பிரிந்து ஒவ்வொரு பிரிவும் தனித்தனி அரசர்களால் ஆளப்பட்டு வந்தது. அவ்வாறு பிரிந்த பகுதிகளில் வேணாடும் ஒன்று. இதனைத் திருவாங்கூர் என்பர். முதலாம் இராசாதிராசன் தன் மலை நாட்டுப் போரின் தொடக்கத்தில் வேணாட்டைத் தாக்கி, அதன் அரசனை விண்ணகத் தேற்றினன். சேணாடு - சுவர்க்கம்.

இராமகுட மூவர் கெட முனிந்து: இராமகுட மென்பது, எலிமலைக் குப் பக்கத்திலே யிருந்த ஒரு சிறு இராச்சியமாகும். அவ்விடத்தில் ஆண்டுவந்த அரசர்கள் மூஷிக வம்சத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களில்

மேவுபுக ழிராமகுட மூவர்கெட முனிந்து
மிடல்கெழு[15] வில்லவன் குடர்மடிக் கொண்டுதன்
நா 3)டுவிட் டோடிக் காடுபுக் கொளிப்ப
வஞ்சியம் புதுமலர் மலைத்தாங் கெஞ்சலில்
வேலைகெழு||காந்தளூர்ச் சாலை[16] கலமறுத்[17]
தாகவ மல்லனு மஞ்ச கேவுதந்[18]
தாங்கரும் படையா லாங்கவன் சேனையுட்[19]
கண்டப் பயனும் கங்கா தரனும்
வண்டமர் களிற்றொடு மடியத் திண்டிறல்

---

கண்டார் கார்வர்மன் ஒருவன்; அவனுக்கு மற்றொரு பெயர், 'இராமகுட மூவர் திருவடி' என்பது. அவனுடன் முதலாம் இராசாதிராசன் போர் செய்து, அவனை அழித்தான். இனி, இத் தொடரை 'இராம-மகுடம்' எனப் பிரித்து 'மகுடமிழந்த இலங்கையரசன், வீரகேரளன், சுந்தரபாண்டியன்' ஆகிய மூவர் என்று பொருள் கொள்வாருமுளர்-முன்னர்க் கூறியவாற்றால் அது பொருந்தாமை காண்க.

மிடல்கெழு வில்லவன் - வல்லமை மிக்க சேரன்; வில்லவன் - வில்லைக் கொடியாக வுடையவன். [15] 'விடல்கெழு' என்றும் பாடம். குடர்மடிக் கொண்டு - வயிற்றை மடித்துக்கொண்டு; முதலாம் இராசாதிராசன், சேரன் ஒருவனை வயிறு மடித்துக்கொண்டு ஓடும்படி செய்தான் என்றபடி.

3. வஞ்சியம் புதுமலர் மலைத்து - வஞ்சிமாலை சூடி; எஞ்சலில் - ஓய்வில்லாத வேலை கெழு - கடல் மோதும்; காந்தளூர்ச்சாலை கலமறுத்து-காந்தளூர் அறச்சாலையில் உண்ணவேண்டியவர்கள் இத்தனை பேர் என உண்கலம் வரையறுத்து என்றும், பிறவாறும் இதற்குப் பொருள் கூறுவர். இதன் விளக்கத்தை 'ஸ்ரீ இராஜராஜ கிணறு' என்னும் சாசனக் குறிப்பில் காண்க. [16] 'சாலைக்' [17] 'கலமறுப்பித்' என்றும் பாடம்.

ஆகவமல்லனு மஞ்ச - ஆகவமல்லனும் அஞ்ச; கேவுதந் - கேவுதன் இவன் ஆகவமல்லன் படைத்தலைவர்களில் ஒருவன் போலும். [18] 'மஞ்சகேதுவுந்,' 'மஞ்சகேதுவுந்தன்' என்றும் பாடம்.

தாங்கரும் படையால் - சோழனது எதிர்ப்பதற்கரிய படைவலியால். அவன் சேனை - ஆகவமல்லன் படை. [19] 'சேனையிற்' என்றும் பாடம்.

கண்டப்பயனும் கங்காதரனும்: இவர்கள் இருவரும் ஆகவமல்லன் படைத்தலைவர்கள்: வண்டமர் களிற்றொடு மடிய : போரில் கண்டப்பயனும் கங்காதரனும் தங்கள் களிறுகளோடும் மடிய என்பது. வண்டமர் களிறு - மதக்களிறு; வண்டுகள் மொய்க்கும்படியான மதப்பெருக்கினையுடைய களிறு என்றபடி.

விருதர்[20] விக்கியும் விசயா தித்தனுங்
கருமுரட் சாங்க மய்யனு[21] முதலினர்
சமர பீருவொத் துடைய||விரிசுடர்
பொன்னே டைக்கரி[22] புரவியொடும் பிடித்துத்[23]
தன்னு டையிற் சயங்கொ (4)ண் டொன்னர்
கொள்ளிப் பாக்கை யுள்ளெரி மடுப்பித்
தொருதனித் தண்டாற் பொருகட லிலங்கையர்[24]
கோமான் விக்கிரம பாகுவின் மகுடமும்
முன்றனக் குடைந்த[25] தென்றமிழ் மண்டல
முழுவ தும்மிழக் தெழுகட[26] லீழம்

---

**விருதர்விக்கியும் விசயாதித்தனும் :** ஆகவமல்லன் மக்களான விக்கிரமாதித்தனும், விசயாதித்தனும் என்பது ; விருதர் - வீர மிக்கவர் ; விக்கி - விக்கிரமாதித்தன். [20] 'விருதரை' என்றும் பாடம்.

**கருமுரட் சாங்கமய்யனும் -** மிக்க வலிமையுடைய சாங்கமையன் ; இவனும் ஆகவமல்லன் படைத் தலைவர்களில் ஒருவன். [21] 'சாங்கமயனும்' என்றும் பாடம். முதலினர் - விக்கிரமாதித்தன், விசயாதித்தன், சாங்கமய்யன் முதலியோர்.

**சமரபீரு ஒத்து உடைய -** சமரில் அச்சங்கொண்டு உடைந்தோட ; சமரபீரு - சமரில் கொள்ளும் அச்சம் (Coward) ; சமர் - போர்.

**பொன்னேடைக்கரி -** அழகிய நெற்றிப் பட்ட முடைய யானை ; [22] 'பொன்னே டயங்கரி' என்றும் பாடம். புரவி - குதிரை. [23] 'பிடித்து' என்றும் பாடம். தன்னுடையில் - தன் முயற்சியில்.

**4 ஒன்னர் -** பகைவர் ; கொள்ளிப்பாக்கை : இது நிஜாம் இராச்சியத்துச் சிக்கந்தராபாத்துக்கு நாற்பத்திரண்டு கல் தூரத்திலுள்ளது ; அக்காலத்தில் இது சாளுக்கிய ராட்சியின் கீழ் இருந்தது.

**ஒரு தனித் தண்டு -** ஒப்பற்ற பெரும்படை ; இலங்கையர் கோமான் விக்கிரமபாகு : இவன் இயற்பெயர் காசிபன் என்பது ; மகிந்தனுக்கு மகன். முதலாம் இராசேந்திரன் கி. பி. 1017 ஆம் ஆண்டு ஈழமண்டல முழுவதையும் கொண்டு, மகிந்தனைச் சோழநாட்டில் சிறைப்படுத்தி வைத்திருந்தான். அவன் மகன் காசிபனைச் சிங்களவர்கள் இரகசியமாக வளர்த்து, ஏற்ற காலத்தில் இலங்கையின் ஒரு பகுதியான உரோகண நாட்டிற்கு அரசனாக்கி 'விக்கிரமபாகு' என்ற பெயரோடு கி. பி. 1029 ஆம் ஆண்டு முடிசூட்டி வைத்தனர். அவன் முதலாம் இராசாதிராசன் படைகளால் வெல்லப்பட்டு, முடியிழந்தான். [24] 'இலங்கையார்' என்றும் பாடம்.

**முன் தனக்குடைந்த -** முன்பு தனக்குத் தோற்ற ; [25] 'உடைத்து' என்றும் பாடம். தென் தமிழ் மண்டலம் - பாண்டிய மண்டலம்; எழு

புக்கவிலங் கேச னாகிய [27] விக்கிரம
பாண்டியன் பருமணி மகுடமும் காண்டகு
தன்ன வாக்கித்தன் [28] கன்னகுச் சியினும்[29]
ஆர்கலி யீழஞ் சீரிதென் றெண்ணி
உளங்கொளந் நாடு[30] தன் னுறவொடும்[31] புகுந்து
விளங்குமுடி கவித்த வீரசலா மெகன்

---

கடலீழம் - அலையெழும் கடல் நடுவணதாகிய ஈழநாடு. [26] 'ஏழ்கடல்' என்றும் பாடம்.

**ஈழம் புக்க இலங்கேசனாகிய விக்கிரமபாண்டியன்:** விக்கிரம பாண்டியன் தமிழ் நாட்டின் தென்பாகத்தை ஆண்டு வந்தவன். இவன் தன் நாட்டை இழந்து பகைவருக்குப் பயந்து இலங்கை நாட்டுக்கு ஓடி, அதை ஆண்டு வந்தான்; ஆதலால் 'ஈழம்புக்க இலங்கேசன்' என்று அழைக்கப்பட்டான் என்று தெரிகிறது. மகாவம்சத்தில் கூறப்படும் விக்கிரம பாண்டும், இவனும் ஒருவர் என்பர். அவன் தன் பகைவருக்குப் பயந்து இலங்கையை விட்டுத் துளுவ நாட்டில் வந்து சிலகாலம் இருந்தான் என்றும், பின் தன் தந்தை மகாலானசித்தி என்பவன் இறந்த செய்தி கேட்டு மீண்டும் இலங்கை புக்கு, தந்தை ஆண்ட உரோகண நாட்டை ஆண்டு வந்தானென்றும் மகாவம்சம் கூறும். [27] 'விலங்கேசுரநாகிய' என்றும் பாடம்.

இதனால் இக்காலத்தில் பாண்டிய கேரள மன்னர்களும், இலங்கையரசர்களும் தங்களுக்குள் மணவினை செய்துகொண்டு உறவு பெற்றிருந்தனர் என்றும், அவர்கள் தங்கள் மூவருக்கும் பொதுவான எதிரியாயிருந்த சோழர்களை வெல்லப் பெரிதும் முயன்றனர் என்றும் தெரிகிறது. காண்டகு - காணத் தக்கதாக, வெளிப்படையாக.

**தன் கன்னகுச்சியினும்** - தன்னுட்சிக் குட்பட்ட கன்யாகுப்ஜம் என்னும் நாட்டை விட. [28] 'தன்னதாயகிய,' [29] 'கன்னக்குச்சியினும்' என்றும் பாடம். ஆர்கலி - கடல்; ஈழம் - ஈழநாடு; சீரிதென்று - சிறப்புடையதென்று.

**உளங்கொளந்நாடு** - உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அந்த இலங்கை நாடு; [30] 'உளங்கொ டன்னாடு' என்றும் பாடம். தன் உறவொடும் - தன் இனத்தவரோடும்; [31] 'உறவோடும்' என்றும் பாடம்.

**விளங்கு முடி கவித்த வீரசலாமெகன்:** இவன் கன்யாகுப்ஜத்தினின்றும் இலங்கைக்குச் சென்று, அதைப்பிடித்து ஆண்டவன்; இலங்கையரசனாகிய விக்கிரமபாண்டு என்பவன் இவனோடு பொருது இவனால் தலை துணிக்கப்பட்டான். மகாவமிசத்தில் ஜகதீபாலன் என்று கூறப்படுபவன் இவனே என்பர். இவன் போரில் முதலாம் இராசாதிராசனுக்குப் பயந்து, தன் யானையினின்றும் இழிந்து பலர் பழிக்கப் புறங்காட்டி ஓடினனென்றும், சோழர்கள் இவன் தேவி, தமக்கை இருவரையும்

பொ(5)ர்க்களத்[32] தஞ்சித்தன் கார்க்களி றிழிந்து
கவ்வையுற் றோடக்[33] காதலி யொடுந்தன்
றவ்வையைப் பிடித்து[34] தாயைமூக் கரிய
ஆங்கவ மானம் நீங்குதற் காக
மீட்டும்[35] வந்து வாட்டொழில்[36] புரிந்து
வெங்களத் துலந்த[37] வச் சிங்கலத் தரசன்[38]
பொன்னணி முடியும் கன்னரன் வழிவந்
துரைகொ ளீழத் தரசனு கிய[39]சீ
வல்லவ மதன ராசன்[40] மெல்லொளித்
தடமணி முடியுங் கொண்டு வடபுலத்
திருகா லாவதும் பொருபடை நடாத்திக்[41]
கண்டரன்[42] தினகரன் நாரணன் கணவதி

---

சிறைப்படுத்தி, தாயை மூக்கரிந்து அவமானப் படுத்தினர் என்றும், அவ்வவமானம் தாங்கமாட்டாத இவன், மீண்டும் வந்து வாட்போர் செய்து போர்க்களத்தே மாண்டான் என்றும் தெரிகிறது. [32] 'பொரு களத்' என்றும் பாடம்.

**5.** கார்க்களிறு - கரியயானை; கவ்வை - பழிச்சொல்; [33] 'கவ்வை-யிறனடி' என்றும் பாடம். காதலி - தேவி; தவ்வை - தமக்கை, [34] 'பிடித்துத்' என்றும் பாடம். அவமானம் - இழிவு.

வாட்டொழில் புரிந்து - வாட்போர் செய்து. [35] 'மீண்டும்' [36] 'விட்டெழில்' என்றும் பாடம்.

வெங்களத் துலந்தவச் சிங்களத் தரசன்: போர்க்களத்தே மடிந்த சிங்களத் தரசனாகிய வீரசலாமேகன் என்பது. [37]'உலர்ந்த' [38]'சிங்களத் தரைசன்' என்றும் பாடம்.

கன்னரன் வழிவந்து: கிருஷ்ணன் வம்சத்தில் தோன்றி என்பது; கன்னரன் - கன்னரதேவன், கிருஷ்ணன்.

உரைகொள் - புகழ்பெற்ற; 'உறைகொள்' என்று பாடமோதின் 'தங்கிய' என்று பொருள் கொள்க. ஈழத் தரசனாகிய சீவல்லவ மதன ராசன்: இவன் கன்னரன் வழிவந்து ஈழத்திருந்து ஆட்சி புரிந்தவன்; சீவல்லவ மதனராசன் என்பது இவனது இயற்பெயர். முதலாம் இராசாதிராசன் ஆட்சியில், இலங்கையர் கோமானாகிய முதலாம் விக்கிரமபாகு, இலங்கேசனாகிய விக்கிரமபாண்டியன், வீரசலாமேகன், ஈழத் தரசனாகிய சீவல்லவ மதனராசன் ஆகிய இலங்கை மன்னர் நால்வர் முடிகளும் கொள்ளப்பட்டன என்று தெரிகிறது.

வடபுலம் - வடநாடு; அஃதாவது, மேலைச் சாளுக்கிய நாடும் அதனைச் சார்ந்தனவு மாகும்.

(6)வண்டலர் தெரியன் மதுசூ தனனென்[43]
றெனைப்பல வரைசரை [44]முனைவயிற் றுரத்தி[45]
வம்பலர் தருபொழிற் கம்பிலி நகருட்
சளுக்கியர் மாளிகை தகர்ப்பித் திளக்கமில்[46]
வில்லவர் மீனவர் வேள்குலச் சளுக்கியர்[47]
வல்லவர் கௌசலர் வங்கணர் கொங்கணர்
சிந்துர ரையணர் சிங்களர் பங்களர்
அந்திரர் முதலிய வரைசரிடு திறைகளும்
ஆறிலொன் றவனியுட் கூறுகொள் பொருள்களும்

---

**இருகாலாவதும்** - இரண்டாவது தடவையும்; பொருபடை - போர் செய்யும் படை; [41] 'நடாத்தி' என்றும் பாடம்.

**6. கண்டரன்............றெனைப் பல வரைசரை :** கண்டரன் முதலியோர் வடபுலத்தின் பகுதிகளை யாண்ட சிற்றரசர்கள். வண்டலர் தெரியல் - வண்டுகள் மொய்க்கப் பெற்ற மலர் மாலை. முனைவயின் - போர்க்களத்து ; [42] 'கண்டர்' [43] 'வண்டலர் தெரியல் மதிசூதன றெனைப்' [44] 'அரையரை' [45] 'பிடித்து' என்றும் பாடம்.

**வம்பலர் தருபொழில் கம்பிலி நகர் :** புதிய மலர்களைத் தருகின்ற சோலைகள் நிறைந்த கம்பிலி நகர் என்பது. இது பல்லாரிச் சில்லா, ஹொஸ்பெட் தாலூகாவிலுள்ளது. இப்பொழுது இதனைக் கம்பிலித தோட்டம்' என்பர். இதில் சாளுக்கியர் மாளிகை யொன்றிருந்தது.

**தகர்ப்பித்து** - அழித்து ; இளக்கமில் - இரக்கமில்லாத ; பணியாதவனினுமாம் [46] 'தகப்பித்திகள தமில்' என்றும் பாடம்.

**வில்லவர்** - சேரர்; மீனவா - பாண்டியர் ; வேள்குலச் சளுக்கியர் - கங்கர் குலத்துச் சாளுக்கியர் ;[47] 'வேளகுலர் சளுக்கியர்' என்றும் பாடம். வல்லவர் பல்லவர் குலத்துச் சளுக்கியர் ; கௌசலர் - கோசல நாட்டவர் ; வங்கணர்-வங்காளத்தவர் ; கொங்கணர் - கொங்கு நாட்டவர் ; சன்னர தேசத்தவர் என்பாருமுளர் ; சிந்துரர் - சிந்து நாட்டவர் ; சிங்களர் - சிங்கள நாட்டவர் ; பங்களர் - பங்காள தேசத்தவர்.

**அந்திரர்** - ஆந்திரர் ; அரைசரிடு திறைகளும் - சேரர் முதலிய அரசர்கள் தரும் திறைப்பணங்களும் என்பது. இதனல் முதலாம் இராசாதிராசன் ஆட்சியின்கீழ் சேரர், பாண்டியர், வேள்குலச் சாளுக்கியர், வல்லவர், கோசலர், வங்கணர், கொங்கணர், சிந்துரர், சிங்களர் பங்களர், ஆந்திரர் முதலியோர் சிற்றசராயிருந்து திறை செலுத்தினர் என்று தெரிகிறது.

**ஆறிலொன்றவனியுட் கூறுகொள் பொருள்களும் :** முதலாம் இராசாதிராசன் தன் குடிகளிடத்து ஆறிலொரு கடமை கொண்டான் என்பது

உகந்து[48] நான் மறையவர் முகந்துகொளக் கொடுத்து[49]
விசுவலோ கத்தும் விள(7)ங்கமனு நெறிநின்
றசுவமே தஞ்செய் [51] தரைசுவீற் றிருந்த
சயங்கொண்ட சோழ னுயர்ந்த பெரும்புகழ்க்[52]
கோவிரா சகேசரி வர்ம ரான [53]
உடையார் ஸ்ரீராசாதிராச தேவர்க்கு யாண்டு—
உ௰கூ ஆவது ஜயங்கொண்ட சோழமண்டலத்து செங்
காட்டுக் கோட்டத்து மாகணூர் நாட்டு மணிமங்கலமான

---

இதனால் போதரும். அவனி - இராச்சியம்; கூறுகொள் - பங்காகக் கொண்ட.

உகந்து - பெற்றுக்கொண்ட; [49]'முகந்து' என்றும் பாடம்கொள்வர். முகந்துகொள - பெற; [49]'குடுத்து' என்றும் பாடம். விசுவலோகம் - தேவலோகம்; எல்லா உலகமும் என்பாருமுளர் [50]'விஸ்வலோகத்து' என்றும் பாடம். விளங்க - புகழுண்டாக.

7. மனுநெறி நின்று - மனுவென்னு மரசன் வகுத்த வழியே நின்று; அசுவமேதம் செய்து - அசுவமேதம் என்னும் யாகத்தைச் செய்து; அசுவமேதம் என்பது, உத்தமமான ஒரு குதிரையின் நெற்றியில் அரசனது வீரம் முதலியவைகளை வரைந்த பட்டத்தைக் கட்டி, அதைப் பூமி பிரதட்சணம் செய்வித்து, பின் யாக கிரியை செய்வது. இங்கு அசுவம் தெய்வயாகக் கருதப்படும். இதனால் அரசன் 'ஏகசக்கிராதிபதி' என்ற பெயர் பெறுவான். [51]'அஸ்வமெதஞ்செய்' என்றும் பாடம்.

**சயங்கொண்ட..................ராச கேசரிவர்மன்:** சயங்கொண்ட சோழன், இராசகேசரி வர்மன் என்பன முதலாம் இராசாதிராசனுக்குரிய சிறப்புப் பெயர்கள். [52]'பெரும்புகழ்,' [53]'கொவிராஜகேஸரி வர்மரானு' என்றும் பாடம்.

**ஜயங்கொண்ட சோழமண்டலம்** - சோழ இராச்சியத்தின் ஒன்பது மண்டலங்களில் ஒன்றான தொண்டை நாடு.

**செங்காட்டுக் கோட்டத்து மாகணூர் நாட்டு:** தொண்டை நாடு, சோழராட்சியின் கீழ் சயங்கொண்ட சோழமண்டலமென்று பெயர் பெற்றுப் பல கோட்டங்களாகவும், ஒவ்வொரு கோட்டமும் பல நாடுகளாகவும் பிரிக்கப்பட்டிருந்தது. மாகணூர் நாடு, செங்காட்டுக் கோட்டத்தைச் சேர்ந்தது.

**மணிமங்கலம்:** இதன் மற்றொரு பெயர் 'இராஜ சூளாமணிச் சதுர்வேதி மங்கலம்' என்பது. மகாசபையோம் - ஊர்ச் சபையினராகிய யாம். இவ்வாறு ஊர்ச் சபையினர் செய்தி 3, 4, 7 ஆம் சாசனங்களிலும் வந்திருத்தல் காண்க.

ராஜசூளாமணிச் சதுர்வ்வெதி மங்கலத்து மஹா ஸபையோம் எம்மூர் ப்ரஹ்ம ஸ்தானத்தே தனுநாயற்று பூர்வ்வபக்ஷத்து த்விதியையும் புதன்கிழமையும் பெற்ற திரு

8. வொணத்தி நாள்க் கூட்டக் குறைவறக் கூடியிருந்து பணிப்பணியால் பணித்த இவ்வூர் ஸ்ரீமத் த்வாராபதியான ஸ்ரீகாமக் கோடி விண்ணகர் ஆழ்வார்க்கு திருவமுதுக்கும் அர்ச்சனை போகத்துக்கும் இத் தேவர் பண்டாரத்தே நாறுகாசு பொலிசைக்கு கொண்டு, இக்காசு நூற்றுஆம் வந்த பொலிசைக்கு இறைகரத்தூட்டாக இறையிழிச்சிக் குடுத்த நிலமாவது பெருநல்வதிக்கு வடக்கு பாதிரிக்கழனி மெ

---

**ப்ரஹ்ம ஸ்தானம்** - வேதம் கற்பிக்கும் இடம்; எனவே, அக்காலத்தில் மாணவர் கல்வி கற்குமிடத்திலும் ஊர்ச் சபைகூடும் வழக்கமிருந்ததென்று தெரிகிறது. இதற்குப் 'பஞ்சாயத்துக் கூடும் இடம்' என்று பொருள் கூறுவாருமுளர்.

**தனு நாயறு** - தனுர் மாதம், மார்கழி மாதம் (Month of Markali : December—January). இங்கு 'ஞாயிறு' என்பதற்கு 'மாதம்' என்ற பொருள் வந்திருத்தல் நோக்கத் தக்கது. பூர்வ்வபக்ஷம் - வளர்பிறை காலம்; த்விதியை - இரண்டாவது திதி.

8. **திருவோணம்** : இருபத்திரண்டாவது நாள்; கூட்டக் குறைவறக் கூடியிருந்து - சபைகூட்ட எல்லாரும் கூடியிருந்து; பணிப்பணியால் பணித்த - முறையாய்த் திருத்தொண்டு செய்யப் பெற்ற.

**ஸ்ரீமத்** : ஸ்ரீமதி என்பதன் ஆண்பாற் பெயர்; இஃது இறைவன் பெயருக்கும், இறைவனருள் பெற்றார் பெயருக்கும் முன் வழங்கும் ஒரு மரியாதைச் சொல். த்வாராபதி : துவாரகைக்கு அதிபதி; கிருஷ்ணன் என்பது.

**ஸ்ரீ காமக்கோடி விண்ணகர் ஆழ்வார்** : இது மணிமங்கலத்துக்கோயில் திருமாலின் பெயர். திருவமுது - நிவேதன வுணவு (Boiled rice offered to an idol or great person). அர்ச்சனாபோகம் - கோயில் அர்ச்சகர்களுக்கு விடப்படும் மானிபம்; 'அருச்சனைப் பொருள்' என்பாருமுளர்.

**இத்தேவர் பண்டாரம்** - இக்கோயில் பணம்; பொலிசைக்கு கொண்டு-வட்டிக்கு வாங்கி; பொலிசை-வட்டி (Interest); இறைகரத்தூட்டாக-நிலவரி, குடி வரிகளை அநுபவிக்கும்படியாக (with the enjoyment of Revenue and Taxes); இறை - நிலவரி (Revenue); கரம்-குடிவரி (Taxes); இறை யிழிச்சி - வரி நீக்கி.

**பெருநல் வதிக்கு வடக்கு** : சாசனங்களில் நிலங்களுக்கு எல்லை கூறுங்கால் பெரும்பாலும் பெரும் பாதைகளையும், வாய்க்கால்களையுமே

9. லைக் காலுக்கு கிழக்கு விளைநிலங் குழி முன்னூறும், பாதிரிக் கழனி நடுவிற்காலுக்கு மேற்கு விளைநிலங் குழி இருனூறும், பெருநல்வதிக்கு தெற்கு ஆலை

10. மேட்டில் மனையறுதி வாய்க்காலுக்கு கிழக்கு விளை நிலம் குழி நானூறும், இக்காலுக்கு கிழக்கு விளைநிலம் குழி இருனூறும், தெந்த்ரிய மரத்தின் மேலைக்காலுக்கு மேற்கு நிலம் குழி முன்னூறும், சுண்டிலேரி வதிக்கு கிழக்கு விளை நில

11. ம் குழி நானூறும், பாவை துறை வாய்க்காலுக்கு வடக்கு திருவையோத்தி தேவர் நிலங்குழி இருனூற்றைம் பதுக்கு கிழக்கு தடி யிரண்டிநால் குழி இருனூறும், ஆகத் தேவர் நிலங் குழி இரண்டாயிரத் திருனூறும் இரைகரத் தூட்டாக சந்த்ரா

---

கூறுவது வழக்கம். உதாரணமாக, பெருநல்வதிக்கு வடக்கு, சுண்டிலேரி வதிக்குக் கிழக்கு என்றும்; பாதிரிக்கழனி மேலைக்காலுக்குக் கிழக்கு, நடுவிற்காலுக்கு மேற்கு, மனையறுதி வாய்க்காலுக்குக் கிழக்கு, நந்தவனத் தோட்டக்காலுக்கு மேற்கு, பாவை துறை வாய்க்காலுக்கு வடக்கு என்றும் வந்திருத்தல் காண்க. இனி, 'திருவையோத்திதேவர் நிலம் குழி இரு நூற்றைம்பதுக்குக் கிழக்கு' என்பதால் சிறுபான்மை அயலார் நிலமும் எல்லையாகக் கூறப்படும் என்று தெரிகிறது. வதி - வழி.

9. குழி : இஃது ஒரு நீட்டளவை; தென்னாட்டில் 33 அங்குல நீள அகலமுள்ள இடத்தை ஒரு 'குழி' என்பர்.

பாதிரிக் கழனி - பாதிரி மரத்தினையுடைய வயல் ; கழனி - வயல் ; மெலைக்கால் - மேலைப் பக்கத்துக் கால் ; கால் - வாய்க்கால் ; நடுவிற் கால் - நடுவிடத்து வாய்க்கால்.

10. ஆலைமேடு ; கருப்பஞ்சாறு எடுக்கும் ஆலையுள்ள மேட்டு நிலம் போலும். நந்தவனம் - பூந்தோட்டம் ; தோட்டக்கால் - கிணற்றுப் பாய்ச்சலுள்ள கொல்லை நிலம் ; தெந்த்ரிய மரம் - தெந்திமரம், நேர் வாளம் ; சுண்டிலேரி வதி : சுண்டிலேரிக்குச் செல்லும் வழி என்பது; சுண்டில் - தொட்டால் வாடி என்னும் ஒரு பூண்டு வகை ; அப்பூண்டு அங்கு அதிகம் வளருதல் காரணமாக அவ்வேரி அப்பெயர் பெற்றது போலும். ஏரி - குளம்.

11. பாவை துறை வாய்க்கால் : பாவை - பதுமை : துறை - நீர்த் துறை ; அத்துறையில் சிறு கோயில் ஒன்று இருந்ததென்று கொள்ள வேண்டும். திருவையோத்தி தேவர்: இவருக்கு மணிமங்கலத்தில் 2200 குழி நிலம் இருந்ததென்று கூறப்படுகிறது.

தடி இரண்டிநால் - வயல் இரண்டாக ; தடி - வயல். இச் சொல் இப்பொழுது 'தளை' என்று வழங்குவதாகக் கூறுவர். 'தடி இரண்டி

12. நித்தவர் நிற்பதாகத் திருவமுதுக்கும் அச்சனாபோ கத்துக்கும் இறையிழிச்சி சிலாலேகை செய்து குடுத்தோம்.

---

நால் குழி இருனூறு' என்பது, வயல் இரண்டாகக் குழி இருநூறாக, நானூறு குழி நிலமும் என்க. எனவே, குழி இரண்டாயிரத்து இரு நூறு என்று கணக்கு வருதல் காண்க.

ஆகத் தேவர் நிலம் குழி இரண்டாயிரத் திருனூறும் :—ஆகக் கோயில் நிலம் 2200 குழியும் என்பது. தேவர் நிலம் - கோயில் நிலம்.

12. சந்த்ராதித்தவர் நிற்பதாக - சந்திர சூரியர் உள்ள காலமளவும் நடைபெறுவதாக ; சிலாலேகை செய்து - கல்லில் எழுதி ; சிலே - கல் ; இலேகை - எழுத்து. குடுத்தோம் - (மணிமங்கலம் மகா சபையோம்) கொடுத்தோம் என்பது.

பயிற்சி வினாக்கள்

(1) இராசாதிராசன் காலத்திய மணிமங்கலம் சபையோர் சாசனத் தில் கூறப்படும் செய்தி யாது? (2) 'திங்களேர் தருதன் ஞெருங்கல் வெண்குடை' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி யாருடையது? அவ் வரசரைப்பற்றிக் குறிப்பு வரைக. (3) தன்னுறவினர்கட்குப் பல நாடு களை வழங்கியவராய்க் குறிக்கப் பெற்ற அரசர்கள் யாவர்? வழங்கிய தன் கருத்து என்ன? (4) இராசாதிராசனுல் தோல்வியுற்ற பாண்டிய மன்னர் யாவர்? அவர் எத்தகைய சிறப்பினர்? (5) "மேவுபுகழி ராம குட மூவர்கெட முனிந்து"—இத்தொடரின் பொருள்களை ஆராய்க. (6) இராசாதிராசன் மலைநாட்டுப் போர், இலங்கைப் போர் - இவற்றை விளக்குக. (7) இராசாதிராசனுல் வீரசலாமேகன், சுந்தரபாண்டியன், வேணாட்டரசர், சாளுக்கியர் ஆகிய இவர்களுக்கு நேர்ந்தவை என்ன? (8) இராசாதிராசன் கம்பிலியில் செய்த வீரச் செயல்கள் யாவை? (9) அக்காலத்து நில வருவாயுள் எத்தனையில் ஒரு பங்கு வரியாக வாங்கப்பட்டதென்று எத்தொடரால் அறியப்படுகின்றது? (10) "இட் டருஞ் செறிமிளை யொட்ட விஷைபமும்", 'கங்க நிலங்கையற் கிறை வன்" - இவற்றிலுள்ள பிழைகளைத் திருத்திப் பொருள் எழுதுக. (11) அசுவமேதம் நடாத்திய சோழன் யாவன்? அவன் எவ்வகைப் பொருள் கொண்டு எவர் முகந்துகொளக் கொடுத்தான்? (12) தொண்டை நாட்டிற்குச் சாசனங்களில் வழங்கும் பெயர் யாது? (13) மணிமங்கலத்திற்கு மற்றொரு பெயர் யாது? (14) சாசனங்களால் தெரிய வந்த சபையாரியல்புகளையும் செயல்களையும் பற்றி எழுதுக. (15) தெளி வாகக் காலம் குறிக்கப்பட்ட சாசனங்கள் எவை? அக்காலத் தரசர் யாவர்? (16) சாசனங்களில் காலத்தை எங்ஙனம் முறையில் தெரிவித் திருக்கிறார்கள்? (17) மார்கழி மாதம் என்பதற்குச் சாசனங்கள் கூறும் பெயர் யாது? அது பழைய தமிழ் வழக்கோடு எங்ஙனம் வேறு படுகின்றது? (18) மணிமங்கலத்தில் எழுந்தருளிய திருமாலுக்கு அக்

காலத்தில் பெயரென்ன? (19) ஸ்ரீ காமக்கோடி விண்ணகராழ்வார் எவ்விடத்திலுள்ள மூர்த்தியின் பெயர்? அவருக்கு நிலம் தானம் செய்யப்பெற்ற தமிழ் ஆண்டையும் அதற்குரிய ஆங்கில ஆண்டையும் குறித்திடுக. (20) தேவர் பண்டாரத்திலிருந்து கடன் வாங்கும் வழக்கத்தை எவ்வாறு அறியலாம்? (21) 'நூறு காசு பொலிசைக்குக் கொண்டு'- இத் தொடர்மொழியின் பொருள் யாது? இஃது எதற்காகக் கூறப்பட்டுள்ளது? (22) கல்லெழுத்து என்பதற்குச் சாசனங்களில் வழங்கும் பெயர் யாது? (23) பொருள் தருக :—விச்சாதிரத் தோரணம், சமரபீரு, பொலியூட்டு, வதி, கன்னக்குச்சியர், பொலிசை, இறையிழிச்சி (24) குறிப்பு வரைக :—ப்ரஹ்ம ஸ்தான மண்டபம், விளங்கு முடிகவித்த வீரசலா மேகன், கம்பிலி, இராமகுட மூவர்.

# இரண்டாம் இராசேந்திர சோழன் சாசனம்

## 16. அமண்பாக்கம் சாசனம்*

அமண்பாக்கம் என்பது ஓர் ஊர். அவ்வூரிலுள்ள சில நிலங்களை மணிமங்கலம் ஸ்ரீ காமக்கோடி விண்ணகராழ்வார்க்குத் தானமாகக் கொடுத்த செய்தி பற்றிய சாசனம் 'அமண்பாக்கம் சாசனம்' என்று பெயர் பெற்றது. இச்சாசனம் பரகேசரிவர்மன் என்னும் சிறப்புப் பெயரையுடைய இரண்டாம் இராசேந்திர சோழன் †காலத்தில், அவன் ஆட்சியின நான்காம் ஆண்டில் ஏற்பட்டது. அதனால் இஃது 'இராசேந்திர சோழன் சாசனம்' என்றும் வழங்கும். இது செங்கல்பட்டு மாவட்டம், காஞ்சீபுரம் தாலூகாவிலுள்ள மணிமங்கலம் என்னும் ஊர் இராசகோபாலப்பெருமாள் கோயில் உட்பிரகாரத்துக் கிழக்குச் சுவரின் வெளிப் பக்கத்தில் காணப்படுகிறது; தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது. இருபத்து நான்கு பத்திகளையுடையது.

இச் சாசனத்தின் முற்பகுதியில் இரண்டாம் இராசேந்திர சோழனுடைய கொப்பத்துப் போரைப் பற்றிக் கூறும் அவனது மெய்க் கீர்த்தி அமைந்துள்ளது. அஃதாவது, இரண்டாம் இராசேந்திர சோழன் இரட்ட மண்டலத்தின்மீது படை எடுக்க, அதை ஆண்டு வந்த மேலைச் சாளுக்குய மன்னனுன முதலாம் சோமேசுவரன் என்னும் பெயரையுடைய ஆகவமல்லன் அவனைக் கோப்பம் என்னும் இடத்தில் எதிர்த்துத் தோல்வி யுற்றான்; அப் போரில் அவனுடைய படைத் தலைவர்கள் பலர் இருந்தனர் என்ற செய்தி இதில் கூறப்படுகிறது. சாசனத்தின் பிற்பகுதியில், இரண்டாம் இராசேந்திர சோழன் ஆட்சியின் நான்காவது

---

* S. I. I., Vol. III, Part I, No. 29, pp. 58—64.

† இராசேந்திர சோழன்: இவன் முதலாம் இராசேந்திரசோழ தேவனுக்கு மகன்; முதலாம் இராசாதிராச தேவனுக்குத் தம்பி. முதலாம் இராசாதிராசன் ஆட்சி காலத்தில் இவன் இளவரசனுக இருந்தான். அவன் கொப்பத்துப் போரில் இறந்ததும், இவன் சோழ நாட்டிற்கு அரசனுனன்; இவனை இரண்டாம் இராாசேந்திர சோழன் என்றும், விஜயராசேந்திரன் என்றும் கூறுவர். இவன் மேலைச் சாளுக்கியரோடு கொப்பத்தில் நடத்திய போரும், இலங்கையில் நடத்திய போரும் குறிப்பிடத் தக்கனவாகும். இவன் கி. பி. 1051 ஆம் ஆண்டு முதல் 1063 வரை சோழநாட்டை ஆண்டான்.

ஆண்டு எண்பத்திரண்டாவது நாள் இராசசூளாமணிச் சதுர்வேதி மங்கலம் என்னும் மணிமங்கலத்து மகா சபையினர் அமண் பாக்கம் என்னும் கிராமத்திலுள்ள சில நிலங்களை மணிமங்கலம் ஊர்க் கோவிலுக்குத் தானமாகக் கொடுத்த செய்தி காணப்படுகிறது.

இரண்டாம் இராசேந்திர சோழன் கி. பி. 1051 முதல் 1063 ஆம் ஆண்டு வரை சோழநாட்டை ஆண்டான். இச் சாசனம் அவனது ஆட்சியின் நான்காவது ஆண்டு ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1054 ஆம் ஆண்டு என்னலாம்.

சாசனம்

(1)ஸ்வஸ்திஸ்ரீ
திருமாது புவியெனும் பெருமாதரிவர்தன்[1]
மாதேவியர்களாக மீதொளிர்[2]
வெண்குடை யுயர்த்துத்[3] திண்கலி பெயர்த்துத்[4] தன்
சிறிய தாதை யாகிய யெறிவலி[5]
கங்கை கொண்ட சோழனைப் பொங்கிதல்[6] பொங்கு இகல்
இருமுடிச் சோழ[7]னென்றும் பொருமுரட்

ஸ்வஸ்தி ஸ்ரீ : இது சாசனங்களின் தொடக்கத்தில் மங்கலமாக வரும் வடமொழித் தொடர்.

1. திருமாது புவியெனும் பெருமாதர்: இஃது இரண்டாம் இராசேந்திர சோழன் மெய்க்கீர்த்தியின் தொடக்கமாக வரும் தொடர்; இவனுடைய மற்றொரு சாசனம் 'திருமகள் மருவிய' என்று தொடங்குகிறது. திருமாது - இலக்குமி ; புவியெனும் பெருமாது - பூதேவி.

இவர்தன் மாதேவியர்களாக : திருமாது பூமாது ஆகிய இவர்கள் தனக்கு மாதேவியர்களா யிருக்க என்பது. [1] 'இவர் தந்' என்றும் பாடம். மீதொளிர் வெண்குடை யுயர்த்து - மேலெழுந்து பிரகாசிக்கின்ற வெண்கொற்றக் குடையைத் தாங்கி என்பது. மீது - மேல் ; [2] 'மிதொளி', [3] 'யுயர்ந்து' என்றும் பாடம். திண்கலி பெயர்த்து - கொடிய துன்பத்தை நீக்கி ; கலி-துன்பம். [4] ''பெயர்த்து' 'என்றும் பாடம்.

தாதை - தந்தை ; எறிவலி - பகைவர்களை எறிதலில் வலிமை மிக்க. எறிதல் - கொல்லுதல் ; [5] 'வெறுழ் வலிக்' என்றும் பாடம். கங்கைகொண்ட சோழன் : இவன் இரண்டாம் இராசேந்திரதேவனுக்குச் சிறிய தந்தை. அவனால் 'இருமடிச் சோழன்' என்று பெயர்பெற்றவன். பொங்கிதல் - பொங்கு இகல், வீரஞ் செறிந்த. [6] 'பொங்கிகல்', [7] 'இருமடி சோழநென்றும்' என்றும் பாடம்.

டன்றிரு(2)த் தம்பியர் தம்முள் வென்றிகொள்
மும்முடிச்[8] சோழனைத் தெம்முனை யடுதிறற்
சோழ பாண்டிய னென்றுங்[9] கோழிமன்
ஜெருடுகழல் வீர சோழனைப் படிபுகழ்[10]
கரிகால சோழ னென்றும்[11] பொருதொழில்
வாள்வலித் தடக்கை மதுராந் தகனைச்[12]
(3)சோழ கங்க னென்றுங்[13] தோள்வலி
மேவிகல் பராந்தக தேவனைச் சோழ[14]
வயோத்திய ராச னென்றும்[15]
இருதயத்[16] தன்பொடு கருது காதலருள்
இத்த லம்புக ழிராசேந்திர[17] சோழனை
உத்தம சோழ னென்றுங்[18] தொத்தணி

---

**2. பொருமுரட் டன்திருத் தம்பியர்** : மும்முடிச்சோழன், வீர சோழன், மதுராந்தகன், பராந்தகதேவன் என்பவர்கள்; இவர்கள் இரண்டாம் இராசேந்திரதேவன் தம்பியர் ஆவர். இவர்களுக்கு அவன் முறையே சோழபாண்டியன், கரிகால சோழன், சோழகங்கன், சோழ வயோத்திய ராசன் என்று பெயரிட்டு, அங்கங்கே தனக்குப் பிரதிநிதிகளாக நியமித்தான். பொருமுரண் - பொருவதில் வலிமையுடைய; திரு - அழகு; [8] 'மும்மடி' என்றும் பாடம். வென்றி - வெற்றி.

தெம்முனை - பகைவர் போர்முனை; அடுதிறல் - அடுதலில் திறமை மிக்க; அடுதல் - அழித்தல்; [9] 'சோழபாண்டியநென்றும்' என்றும் பாடம். கோழிமன் ஜெருடுகழல் - கோழியூரில் நிலைபெற்ற வீரக் கழலணிந்த என்பது. கோழி - உறையூர்; மன்னுதல் - வாசம் செய்தல். [10] 'படிபுகழ்க்' [11] 'கரிகால சோழநென்றும்' என்றும் பாடம்.

**பொருதொழில் வாள்வலித் தடக்கை** - பொருகின்ற தொழிலில் வாள் வலிமை மிக்க பெரிய கையினையுடைய என்பது. பொருதல் - போர் செய்தல்; [12] 'மதுரந்தகனை' என்றும் பாடம்.

**3. தோள்வலி மேவிகல்** : தோள் வலிமை பொருந்திய. [13] 'சொழ' [15] 'வயோத்தியராஜநென்றும்' என்றும் பாடம்.

**இருதயத் தன்பொடு கருது காதலர்** : மனத்தில் விரும்பித் துணைசெய்யும் மக்கள் என்பது. காதலர் - மக்கள்; அவர்கள் இராசேந்திர சோழன், முடிகொண்ட சோழன், சோழகேரளன், கடாரங்கொண்ட சோழன், பல்புகழ் முடிகொண்ட சோழன், இரட்டபாடி கொண்ட சோழன் என்பவர்களாவர். இரண்டாம் இராசேந்திரன் அவர்களுக்கு உத்தமசோழன், விசயாலயன், சோழகேரளன், சோழ சனகராஜன், சுந்தரசோழன், சோழகன்னகுச்சியராசன் என்று பெயரிட்டு உத்தியோகத்திலமர்த்தினன். [16] 'துயரத்' என்றும் பாடம். தலம் பூமி; [17] 'புகழ் இராஜேந்திர', [18] 'சோழநென்றும்' என்றும் பாடம்.

முகையவி ழலங்கன் முடிகொ(4)ண்ட சோழனை
இகல்விச யாலய னென்றும்[19] புகர்முகத்
தேழுயர் களிற்றுச் சோழ[20]கே ரளனை
வார்சிலைச் சோழ[21] கேரள னென்றும்
திண்டிறற் கடாரங் கொண்ட சோழனைத்
தினகரன் குலத்து சிறப்பமர் சோழ[22]
சனக ராச னென்றுங்[23] கனைகடற்
படி (5)கொண்ட பல்புகழ்[24] முடிகொண்ட சோழனைத்
சுந்தர சோழ னென்றுஞ்[25] செந்தமிழ்ப்
பிடிக்களிற்[26] றிரட்ட பாடி கொண்ட
சோழனைத்[27] தொல்புவி யாளுடைச் சோழ
கன்னகுச் சியராச னென்னும்[28] பின்னுந்தன்
காதலார்[29] காதலர் தம்முள் மேதகு
கதிராங் கனைகழ (6)ல் மதுராந் தகனை
வெல்படைச் சோழ வல்லப னென்றும்[30]
மானச்[31] சிலைக்கையோ ரானைச்சே வகனை[32]

---

**4.** **தொத்தணி முகையவி ழலங்கல்** - தொன்றுதொட்டு அணியும் முகையவிழ்ந்த மாலை என்பது. முகை - மொட்டு ; அலங்கல் - மாலை ; இகல் - வலிமை ; [19]'விஜயாலயனென்றும்' என்றும் பாடம். புகர்முகத் தேழுயர் களிற்று-புள்ளிகள் பொருந்திய முகத்தினையுடைய ஏழுபெரிய களிறுகளைக் கொண்ட; புகர் - புள்ளி ; 'ஏழுயர் களிறு' என்பதற்கு ஏழு முழம் உயர்ந்திருக்கும் களிறு என்பாருமுளர். வார்சிலை - நீண்ட வில் ; [20], [21] 'சோள' என்றும் பாடம். தினகரன் குலம் - சூரிய குலம்; தினகரன்-சூரியன் ; [22]'சோள', [23] 'ஜனகராஜனென்றும்' என்றும் பாடம்.

**5.** **கனைகடல் படி** - ஒலிக்கின்ற கடலால் சூழப்பட்ட உலகம் என்பது. [24]'பலபுகழ்' [25]'சோழனென்றும்' என்றும் பாடம்.

**செந்தமிழ்ப் பிடி களிற்று** - செந்தமிழ் நாட்டுப் பிடியினது களிற்றினை யுடைய என்றபடி ; பிடிகளிறு - பிடியும் களிறும் கொண்ட சேனை எனினுமாம். பிடி - பெண் யானை ; களிறு - ஆண் யானை. இனி, [26] பிடிகல் எனப் பாடங்கொண்டு, 'தாங்கு கல்' (the rock of support) என்று பொருள் கொள்வாருமுளர். [27]சோழனை' என்றும் பாடம். காதலார் காதலர் - மக்களுடைய மக்கள்; [28] 'ராஜனென்றும்', [29]'காதலர்' என்றும் பாடம். மேதகு - மேலான.

**6.** **கதிராங்கனை கழல்**-சூரியனை யொத்தவனாய் ஒலிக்கின்ற கழலினை யுடைய ; கதிர் - சூரியன் ; ஒளி எனினுமாம். கனைத்தல் - ஒலித்தல் ; வெல்படை-வெல்லும் சேனை ; [30] 'வல்லபனென்றும்' என்றும் பாடம்.

திருபேந்திர சோழ னென்றும்[33] பருமணிச்
சுடர்மணி[34] மகுடஞ் சூட்டிப் படிமிசை
நிகழு நாளினு ளிகல்வேட்[35] டெழுந்துசென்
றொண்டிற லிரட்ட மண் (7)டல மெய்தி
நதிகளும் நாடும் பதிகளு மனேகம்
அழித்தனன் வளவனெனு[36] மொழிப்பொருள் கேட்டு
வேகவெஞ் சளுக்கி யாகவ மல்லன்
பரிபவ மெனக்கிதன் றெரிவிழித் தெழுந்து
செப்பருந் திறத்த[37] கொப்பத் தகவையிற்
சென்றெதி (8) ரேன்றமர் தொடங்கிய[38] பொழுதவன்
செஞ்சர மாரிதன் குஞ்சர முகத்தினுந்
தன்றிருத் துடையினுங்[39] குன்றுறழ்[40] புயத்தினுங்[41]
தைக்க வுந்[42] தன் னுடன்களி றேறிய

---

மானச் சிலக்கை - பெரிய வில்லைத் தாங்கிய கை; [31]'மான்' என்றும் பாடம். ஓரானைச் சேவகன் - ஒரு யானைப்பலம் பொருந்திய வீரன்; [32]'யொரானைச் செவகனை,' [33]'சோழனென்றும்' என்றும் பாடம். பருமணிச் சுடர் - பெரிய முத்துக்கள் ஒளிவிடும். [34]'நெடு' என்றும் பாடம். படிமிசை - உலகில். நிகழு நாளினுள் - ஆட்சி நிகழும் நாளையில்; இகல்வேட்டு - போரை விரும்பி; [35]'வெட்டெழுந்து' என்றும் பாடம். ஒண்டிறல் - வலிமை மிக்க; பதிகளும் - ஊர்களும்.

**7. அழித்தனன்......கேட்டு:** சோழன் இரட்ட மண்டலத்தின்மீது படையெடுத்து அதை அழித்தான் என்ற செய்தியைச் சளுக்கியனை ஆகவமல்லன் கேட்டு. வளவன் - சோழன்; [36] வளவனென்றும்' என்றும் பாடம். மொழிப் பொருள் - செய்தி; வேகவெஞ் சளுக்கி - மிகக் கொடிய சாளுக்கிய மன்னன்; இங்கு ஆகவமல்லனைக் குறித்தது.

பரிபவம் - இழிவு; எரிவிழித்து எழுந்து - எரிபோல் சீறி எழுந்து; எரி - நெருப்பு; செப்பரும் -செப்ப அரும், சொல்லுதற்கரிய; [37]'திரத்த' என்று பாடம். கொப்பத் தகவையில் - கொப்பம் என்னுமிடத்தில்; இது பேராறு என்னும் கிருஷ்ண நதியின் கரையிலுள்ளது; அக் காலத்தில் இஃது ஒரு விசேட தலமாகக் கருதப்பட்டது. எனவே 'செப்பருந் தீர்த்த கொப்பத்து' என்று மேற்கூறிய தொடரை அமைத்துக் கூறுவாருமுளர்.

**8. எதிரேன்று** - எதிரே நின்று; அமர் - போர்; [38] துடங்கிய' என்றும் பாடம். செஞ்சரமாரி கூரிய அம்புத் தொகுதி; சரம் - அம்பு; மாரி - மழைத் தொகுதி; குஞ்சரம் - யானை; [39]'துடையிலும்' என்றும் பாடம். குன்றுறழ் புயம் - மலையொத்த பருத்த புயம்; உறழ்-போல: உவமை உருபு. [40]'குன்றுறள்', [41]'புயத்திலும்', [42]'தைக்கவும்'

தொடுகழல் வீரர்கள் மடியவும் வகையா
லொருதனி[43] யநேகம் பொருபடை (9) வழங்கியம்
மொய்ம்பமர் சளுக்கி தம்பிசய சிங்கனும்
போர்ப்புல கேசியுங்[44] தார்த்தச பன்மனு
மானமன் னவரின்[45] மண்டலியசோ கையனும்[46]
ஆனவண் புகழா[47] மாரையனுந் தனிவர்
மட்டவி ழலங்கல் மொட்டையனுந் திண்டிறல்
நன்னி நுளம்பனு மெனு (10) மிவர் முதலினர்[48]
எண்ணிலி யரைசரை விண்ணகத் தேற்றி
வன்னிய ரேவனும் வயப்படைத் துத்தனும்
கொன்னவில் படைக்குண்ட மய்யனு மென்றின[49]
வெஞ்சின வரைசரோ[50] டஞ்சிச் சளுக்கி
குலகுல குலைந்து[51] தலைமயிர் விரித்து

---

என்றும் பாடம். வகையால்-யானை, குதிரை முதலிய படை வகையால்; அக் காலத்தில் நாலுவகைப் படைகளில் தேர்ப்படை இருந்ததாகத் தெரியவில்லை; ஏனைய மூன்று படைகளோடு, கப்பல் படையுமிருந்த தென்று தெரிகிறது; ஒருதனி - ஒப்பற்ற; [43]'தொருதனி' என்றும் பாடம்.

**9** வழங்கி - செலுத்தி: மொய்ம்பமர் - கொடிய போர்; போர்ப் புலகேசி - போரில் வல்ல புலிகேசி என்போன்; [44]'புலக்கேசியும்; என்றும் பாடம். தார்த் தசபன்மன் - வெற்றி மாலையுடைய தசபன்மன் என்போன்; தார் - மாலை. [45]மன்னவரில்', [46]'மண்டலகசோகனும்' என்றும் பாடம். வண்புகழா-சிறந்த புகழினையுடைய; [47] புகழாளும்- என்றும் பாடம். தனிவர் மட்டவி ழலங்கல் - தேன் சொரியும் மொட்டுகள் அவிழப்பெற்ற மாலை என்பது. இவர்தல் நிரம்பி வடிதல்; மட்டு - மொட்டு; தேன் எனினுமாம்.

**10** முதலினர் - முதலியோர். [48]முதலியர்' என்றும் பாடம். எண்ணிலியரைசரை: கணக்கில்லாத அரசர்களை; அஃதாவது, கொப்பத்துப் போரில் சயசிங்கன், புலிகேசி, தசபன்மன், மண்டலிய சோகையன், ஆரையன், மொட்டயன், நன்னிநுளம்பன் முதலிய கணக்கில்லாத அரசர் மடிந்தனர் என்பது. விண்ணகத்தேற்றி-கொன்று: வன்னியர் ஏவனும் - வன்னியர்களின் ஏவன் என்பானும்; வன்னியர் -படைத் தலைவர்.

வயப்படை - வலிய படை; வயம் - வலிமை; கொன்னவில் படை ' விசையினையுடைய வில் படை; என்றின என்று சொல்லப்பட்ட; அக் காலத்தில் வில்லும் அம்பும் முக்கிய ஆயுதங்களாய்க் கருதப்பட்டதாகத் தெரிகிறது. [49]'மய்யனுமென்றினன்,' [50]'அரைசரொடு' என்றும் பாடம்.

வெந்நுற் றொளித்துப்[52] பின்னுற(11)நோக்கிக்[53]
கால்பரிந் தோடி மேல்கடற் பாயத்[54]
துரத்திய பொழுதச் செருக்களத் தவன்விடு
சத்துருபயங் கரனகர பத்திரன் மூல[55]
பத்திர சாதி பகட்டரை சநேகமும்
எட்டுசிறை[56] பரிகளு மொட்டக நிரைகளும்
வராகவெல் கொடிமுத லிராசபரிச் சின்னமும்[57]
(12)ஒப்பில்சத்தி யவ்வைசாங் கப்பையென் றிவர்முதல்
தேவியர் குழாமும் பாவைய ரீட்டமு
மினையன[58] பிறவு முனைவயிற் கொண்டு
விசையாபி டேகம் செய்துதென் றிசைவயிற்[59]
போர்ப்படை நடாத்திக் கார்க்கட லிலங்கையில்
விறற்படை கலிங்கர்ம(13)ன் வீரசலா மேகனைக்

---

குலகுல குலைந்து - பெருமை கெட்டு ; 'குலங் குலை குலைந்து' என்பாருமுளர் ; [51]'குலங்குலை குலைந்து என்றும் பாடம். வெந்நுற்று-புறங்காட்டி ; வெந்-முதுகு; [52]'வெனுற நெளித்துப்' என்றும் பாடம். பின்னுற நோக்கி - பின்பக்கம் பார்த்து; [53]'நோக்கி' என்றும் பாடம்.

**11**. கால் பரிந்து - காலால் விரைந்து நடந்து; மேல் கடல்-மேலைக் கடற்கரை ; [54]'பாய' என்றும் பாடம் செருக்களம் - போர்க்களம். பகட்டரைசநேகமும் - அரச யானைகள் பலவும்; அவை சத்துரு பயங்கரன், கரபத்திரன், மூலபத்திர சாதி என்பன. ஆகவமல்லன் அவைகளைப் போர்க்களத்தே விட்டுப் புறங்காட்டி ஓடினான். [55]'கர பத்திரமூல' என்றும் பாடம். எட்டு நிரை - எட்டு வரிசை ; எட்டு நடை என்பாருமுளர். பரி - குதிரை; [56]'எட்டு நடை என்றும் பாடம். ஒட்டக நிரைகளும் - ஒட்டக வரிசைகளும்.

வராக வெல் கொடி முதல் - பன்றிக்கொடி முதலிய ; வராகம் - பன்றி : இராசபரிச் சின்னம் - அரச சின்னங்கள். [57] ராசபரிச்சந்தமும்; என்றும் பாடம்.

**12** ஒப்பில் - விலை மதிப்பற்ற; சத்தியவ்வை, சாங்கப்பை : இவர்கள் அரசன் மாதேவியராவர். இவர் முதல் - இவர்கள் முதலிய தேவியர் ; குழாமும் - அரச மாதர்களும் ; பாவையர் ஈட்டமும் - உயர்குலப் பெண்களும் காமக் கிழத்தியர் கூட்டமும்; இனையன பிறவும் - இவை போல்வன பிறவும்; [58]'மெனையன' என்றும் பாடம். விசையாபிடேகம் செய்து - வெற்றிப்பட்டம் கட்டி ; வயின் - இடம். [59]'விஜய அபிஷேகம் செய்து தெந்நிசை வயிர்ப்' என்றும் பாடம். கார்க்கடல் - கரிய கடல்.

**13**. விறற்படைக் கலிங்கர்மன் வீரசலா மேகன் : வீரசலாமேகனிடம் கலிங்கர் படை ஒன்றிருந்தமையின் அவன் இவ்வாறு அழைக்கப்

கட[60]களிற் றொடுபடக்[61] கதிர்முடி கடிவித்
திலங்கையர்க் கிறைவன் மானா பரணன்[62]
காதல ரிருவரைக் களத்திடைப் பிடித்து
மாப்பெரும்புகழ் மிகவளர்த்த கோப்பரகேசரிவர்மரான[63]
உடையார் ஸ்ரீ ராசேந்திர தேவர்க்கு யாண்டு நாலாவ

**14.** து நாள் அயெஉ ஜயங்கொண்ட சொழமண்டலத்து செங்காட்டுக் கொட்டத்துமாகனூர் நாட்டு ராஜசூளாமணிச் சதுருப்பெதி மங்கலத்து மஹா சபையொம் இவ்வாட்டை ஸிம்ஹ நாயற்று அபர பக்ஷத்து அஷ்டமியும் வியாழக் கிழமையும்

**15.** பெற்ற ரோஜணி நாள் எம்மூர் ப்ரஹ்ம ஸ்நாத மண்டபத்தெ கூட்டக் குறைவறக் கூடியிருந்து எங்களூர் ஸ்ரீமத் த்வாராபதியான ஸ்ரீ காமக்கோடி விண்ணகராழ் வார்க்கு குடுத்த நிலமாவது எங்களூர் தென்பிடாகை அமண் பாக்கத்து நில

---

பட்டான் போலும். மன் - தலைவன்; கடகளிறு - மதயானை; [60]'கடற்' என்றும் பாடம். கட - அழிய; [61] றொடு மகப்பட' என்றும் பாடம். கதிர்முடி கடிவித்து - முடியிழக்கச் செய்து, மானாபரணன் காதலர் - மானாபரணன் மக்கள்; இவன் இலங்கை மன்னன். [62]'திலங்கையற் இறைவன் மாநாபரணந்' என்றும் பாடம். களம் - போர்க்களம்.

**பரகேசரி வர்மர்:** இஃது இரண்டாம் இராசேந்திரனுக்குரிய பட்டப் பெயர்; இம்முறையில் முதலாம் இராசராசன் 'இராசகேசரி' என்றும், முதலாம் இராசேந்திரசோழன் 'பரகேசரி' என்றும், முதலாம் இராசாதி ராசன் 'இராசகேசரி' என்றும், அவனுக்குப் பின் வந்த இரண்டாம் இராசேந்திரதேவன் 'பரகேசரி' என்றும் அழைக்கப்பட்டிருத்தல் காண்க. [63]'கொப்பர கெசரி பந்மராந' என்றும் பாடம்.

**14. ராஜசூளாமணிச் சதுருப்பெதி மங்கலம்:** இதன் மற்றொரு பெயர் மணிமங்கலம் என்பது. இஃது இப்பொழுதுள்ள செங்கல்பட்டுச் சில்லாவிலுள்ளது. மஹா சபையொம் - ஊர்ச் சபையினர்;

இவ்வாட்டை - இவ்வாண்டு; அஃதாவது, இரண்டாம் இராசேந்திர தேவன் ஆட்சியின் நான்காவது ஆண்டு: ஸிம்ஹ நாயறு - ஐந்தாவது மாதம், ஆவணி மாதம் (Month of Avani = August-September). ஸிம்ஹம் - சிங்க ராசி; நாயறு - சூரிய கதியினால் ஏற்படும் மாதம். அபரபக்ஷம் - தேய்பிறைக் காலம்; அஷ்டமி - எட்டாவது திதி.

**15. ரோஜணி நாள்** - நாலாவது நாள். ப்ரஹ்ம ஸ்நாதம் - வேதம் கற்பிக்கும் இடம்; கூட்ட - சபை கூட்ட; குறைவறக் கூடியிருந்து -

**16.** ங் கீழ்பாற்கெல்லை மண்ணிக்காலுக்கு மேற்கும் தென்பாற்கெல்லை மண்ணிக்காலுக்கு வடக்கும், மேல்பாற்கெல்லை

**17.** அரைசங் குட்டத்துக்கும் நங்காசி யென்னும் புலத்துக்குங் கிழக்கும், வடபாற்கெல்லை பழூவூர் நக்கப்புத்தெரி கரைக்கு தெ

**18.** ற்கும், இத்தேவர்க்கு முன்பு சிலாலேகை பண்ணின நிலத்துக்கு தெற்கும் ஆக இந் நாற்பாற்கெல்லைக்கும் நடுவுபட்ட நி

**19.** லமும் ஓடையு முடைப்பும் மேநோக்கின மரமும், கீணோக்கிய கிணறும் இந் நாற்பாற்கெல்லைக்கும் நடுவுபட்ட

**20.** தெல்லாம் ஸேனாதிபதிகள் ஜயங்கொண்ட சோழ ப்ரஹ்மாதிராஜர் தாயார் காமக்கவ்வையள் பக்கம் ஸ்வம் கொண்டு சந்திரா

**21.** தித்தவற் இந் நிலத்துக்கு இறையிறுத்துக் குடுப்போ மாநோம் மஹா சபையோம் ஸபையு

**22** ளிருந்து கரையிட்டுக் கரைப் பொந்து. பணித்த காராம்பிசெட்டு நாராயணக் கிரமவித்தனும் இராயூர் ச

---

எல்லோரும் கூடியிருந்து. பிடாகை - உட்கிடையூர், சிறு கிராமம் (hamlet).

**16.** கீழ்பாற் கெல்லை - கிழக்கு எல்லை ; பாற்கு - பக்கம்.

**17** அரைசங் குட்டம் - அரச குட்டம்; குட்டம் - சிறுகுளம். நங்காசி - வயலின் பெயர்; புலம் நிலம்; பழூவூர் நக்கப்புத்தெரி - பழூவூர் நக்கன் என்னும் சிவனடியாரால் வெட்டப்பட்ட புதிய குளம்.

**18.** சிலாலேகை பண்ணின - சிலையில் எழுதிக்கொடுத்த ; சிலை - கல். உடைப்பு - ஓடைக்கரை ; நீர் எனினுமாம்.

**19** மேநோக்கின - மேல் நோக்கி வளர்ந்த மரஞ் செடிகள். கீணோக்கிய - கீழ் நோக்கிக் குழிந்த கிழங்கு வகைகள்.

**20.** காமக் கவ்வையள் : இவள் சேனாதிபதி சயங்கொண்ட சோழ பிரமாதிராசருக்குத் தாய் ; பிரமாதிராசர் என்ற பெயர் மாணிக்க வாசகருக்குப் பாண்டியன் அளித்த 'பிரமராயன்' என்ற பட்டப்பெயர் போல்வது. பக்கல் - இடம் ; ஸ்வம் கொண்டு - சொந்தமாகப் பெற்று.

**21** சந்திராதித்தவற் - சந்திர சூரியர் (உள்ள அளவும்); இறையிறுத்து - வரி நீக்கி.

**22** கரையிட்டு - கரை கண்டு: கரை - நிலப்பகுதி (blok of land); கரைப்பொந்து பணித்த - நிலத்தைப் பார்வையிட்டுக் கூறிய; 'போந்து' என்பதன் குறுக்கமே 'பொந்து' போலும்.

**23.** ந்திரதெவ அத்தாழிக் கிரமவித்தனும், ஸஹணை மாதவக் கிரமவித்தனும் பணிப்பணியால்

**24.** பணிகெட்டு எழுதினென் இவ்வூர் ஊர்க்கரணத் தான் அலங்காரன் சீராமனென் இவை என் எழுத்து

---

**காராம்பி செட்டு :** விவசாயத் தொழிலுக்குரிய கருவிகளை விற்கும் தொழில், வியாபாரம்; அதைச் செய்து வந்தவன் 'காராம்பி செட்டு நாராயணக் கிரமவித்தன்' எனப்பட்டான்; காராம்பி - எருது பூட்டி நீரிறைக்கும் கருவி வகை; செட்டு - வியாபாரம்; கிரமவித்தன் - வேதத்தின் கிரம பாடத்தில் வல்ல பார்ப்பாரது பழைய பட்டப்பெயர், (Ancient Brahman title, as one skilled in the Krama method of reciting the Vedas).

**23. பணித்த......பணிப்பணியால் :** மகாசபையிலுள்ள காராம்பி செட்டு நாராயணக் கிரமவித்தன், இராயூர் சந்திரதேவ அத்தாழிக் கிரமவித்தன், ஸஹணை மாதவக் கிரமவித்தன் ஆகிய இவர்கள் மூவரும் இட்ட கட்டளையால்.

**24 பணிகெட்டு -** அக் கட்டளையை அவர்கள் சொல்லக் கேட்டு; **ஊர்க்கரணத்தான் :** ஊர்ச்சபை நிகழ்ச்சிகளை எழுதும் எழுத்தாளன். இவனுக்கு 'மத்தியஸ்தன்' என்ற பெயரும் உண்டு. அமண் பாக்கம் சாசனத்தை எழுதிய ஊர்க் கரணத்தான், 'அலங்காரன் சீராமன்' என்போன் ஆவான்.

### பயிற்சி வினாக்கள்

1. அமண்பாக்கம் சாசனம் எங்குக் காணப்படுகிறது? அதற்கு வழங்கும் வேறு பெயர் யாது? அதில் கூறப்படும் செய்திகள் யாவை?

2. அமண்பாக்கம் சாசனம் ஏற்பட்ட காலமாகக் குறிக்கப்பெற்ற ஆண்டு பொருத்தமுடையதா? ஆராய்க.

3. இரண்டாம் இராசேந்திர தேவன் மெய்க்கீர்த்தியின் முதற் குறிப்பு யாது? அவனுடைய மற்றொரு மெய்க்கீர்த்தியின் முதற்குறிப்பு எது?

4. ஒரே அரசனுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட மெய்க்கீர்த்தி வருமாற்றை உங்கள் பாடப் பகுதிகொண்டு இரு சான்றுகள் காட்டி ஆராய்க.

5. இராசேந்திர தேவன் பட்டம் வழங்கியவர்களில் நால்வர் பெயரையும், அப் பட்டப்பெயர்களின் பெயர்களையும் எழுதுக.

6. இராசேந்திர தேவன் ஆகவமல்லனுடன் போர் புரியக் காரண மென்ன? அப் போரில் அவன் எவ்வெவ் வரசனை விண்ணகத் தேற்றினான்?

7. கொப்பத்துப் போர் எவ்வெக் கல்வெட்டுகளில் காணப்படுகிறது? அதன் நிகழ்ச்சியைச் சாசனத்தில் கூறுமாறு எழுதுக.

8. கொப்பத்தில் போர் புரிந்தார் யாவர்? அச் செய்தியுள்ள கல்வெட்டு எக்கோயிலின் சுவரிலுள்ளது?

9. கொப்பத்து யுத்தத்தில் சம்பந்தப்பட்டவர்கள் யாவர்? வென்றவர் யார்?

10. கொப்பத்துப் போரைப் பற்றிய விரிவான செய்தி கூறப்பெற்றுள்ள சாசனம் இன்னதென்று கூறி, அதில் கூறியுள்ளபடி தொகுத்து எழுதுக.

11. கொப்பத்துப் போரில் சோழ மன்னன் கைப்பற்றிய மூன்று யானைகளின் பெயரென்ன?

12. இராசேந்திர தேவனுடைய இலங்கைப் போரைப் பற்றிய செய்தி யாது?

13. விசயாபிஷேகம் என்பது யாது? அதனைச் செய்த சோழ மன்னர் யாவர்?

14. மணிமங்கலம் எங்குள்ளது? அதற்கு இராசேந்திர தேவன் சாசனத்தில் வழங்கும் பெயர் யாது?

15. ஸ்ரீ காமகோடி விண்ணகராழ்வார்க்கு நிலம் தானம் செய்யப்பட்ட தமிழ் ஆண்டு முதலியவற்றையும், அதற்குச் சமமான ஆங்கில ஆண்டையும் குறிப்பிடுக.

16. ஸ்ரீ காமகோடி விண்ணகராழ்வார்க்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலத்தை யாரிடத்திலிருந்து ஊர்ச் சபையினர் பெற்றனர்?

17. அமண்பாக்கம் சாசனத்தை எழுதும்படி பணித்த மூவர் யாவர்? எழுதியது யார்?

18. அரைசங்குட்டம், நங்காசி—இவை எவ்விடத்துள்ளன?

19. பொருள் தருக:— பகட்டரைசு, இராசபரிச் சின்னம், பிடாகை, சிலாலேகை, ஸ்வம்கொண்டு, காராம்பிசெட்டு, ஊர்க் கரணத்தான்.

20. குறிப்பு வரைக: வராகவெல்கொடி, சத்தியவ்வை சாங்கப்பை, வீரசலாமேகன், மானாபரணன், ப்ரஹ்ம ஸ்நாந மண்டபம், ப்ரஹ்மாதிராஜர், காமக்கவ்வையள், கிரமவித்தன்.

# முதலாம் வீரராசேந்திர தேவன் சாசனம்

## 17. செயங்கொண்ட சோழ பிரமாதிராயர் அர்ச்சனாபோக சாசனம்*

செயங் கொண்ட சோழ பிரமாதிராயர் என்பார், இரண்டாம் இராசேந்திரசோழன், முதலாம வீரராஜேந்திரசோழன் இவர்கள் காலத்தில் இருந்த சோழர் படைத் தலைவர்களில் ஒருவர். இவர் மணிமங்கலம் கோயில் இறைவனுக்கு அர்ச்சனா

* S. I. I, Vol. III, Part I, No. 30, pp-64 71.

1. வீரராசேந்திர தேவன். முதலாம் இராசேந்திர சோழ (கங்கை கொண்ட சோழ)னது நான்காவது மகன். இவன் கி. பி. 1063 முதல் 1070 வரை சோழநாட்டை ஆண்டான் இவன் தன் உறவினர்களுக்கு நாட்டின் பகுதிகளை ஆளும்படி கொடுத்தான். கூடல் சங்கமம் என்னும் இடத்தில் ஆகவமல்லனோடு ஐந்து தடவைகள் போர் செய்து வெற்றி கொண்டான். மற்றும் பொத்தப்பிநாட்டு மன்னனையும், சேரன் ஒருவனையும் வென்றான். சனநாதன் தம்பியின் தலையை வெட்டி வாகை சூடினான்; சீவல பாண்டியன் மகன் வீரகேசரியையும் தோற்கடித்தான்.

இவனுடைய கல்வெட்டுக்களில் இவன் மெய்க்கீர்த்திகள் இரண்டு வகையாகக் காணப்படுகின்றன. ஒன்று 'திருவளர் திரள்புயத்து' என்று தொடங்குகிறது. மற்றொன்று 'வீரமே துணையாகவும் தியாகமே அணியாகவும்' என்று தொடங்குகிறது. இவற்றுள் முன்னது மிக நீண்டது; பின்னது மிகச் சிறியது. இரண்டும் இவன் காலத்து வரலாறுகளை அறிவதற்குப் பேருதவி புரிகின்றன. இவன் 'வீர சோழன்' என்றும் அழைக்கப்பட்டான். இவன் பெயரால், பாண்டிய மண்டலத்து மிழலைக் கூற்றத்திலுள்ள பொன்பற்றி என்னும் நகரையாண்ட புத்தமித்திரன் என்பான், ஐந்திலக்கணத்தையும் கூறும் 'வீரசோழியம்' என்னும் தமிழ் இலக்கண நூலை இயற்றினான் என்பது குறிப்பிடத் தக்கது.

இவன் பட்டத்தரசியின் பெயர் உலகமுழுதுடையாள். இவனுக்கு மதுராந்தகன், கங்கைகொண்ட சோழன் என இரு புதல்வர்களும் ஒரு புதல்வியும் இருந்தனர். இவர்களில் மதுராந்தகனுக்குச் சோழேந்திரன் என்னும் பட்டப் பெயரைத் தந்து தொண்டைமண்டலத்தை ஆளவும், கங்கைகொண்ட சோழனுக்குச் சோழபாண்டியன் என்னும் பட்டப் பெயரைத் தந்து பாண்டிய மண்டலத்தை ஆளவும் பணித்தான். ஆயினும் இவர்களில் இவனுக்குப்பின் சோழமன்னனான இவன் மகன் அதிராசேந்திரசோழன் இன்னானென்று தெரியவில்லை. இவன் புதல்வியை மேலைச் சாளுக்கிய மன்னனான ஆறாம் விக்கிரமாதித்தன் மணஞ்செய்து கொண்டான்.

போகமாகக் கொடுத்த நிலத்தைப் பற்றிய சாசனம், 'சேயங் கோண்ட சோழ பிரமாதிராயா அர்ச்சனபோக சாசனம்' என்று பெயர் பெற்றது. இச்சாசனம் முதலாம் வீரராசேந்திரசோழன் காலத்தில், அவன் ஆட்சியின் ஐந்தாம் ஆண்டில் ஏற்பட்ட தால், 'முதலாம் வீரராசேந்திர தேவர் சாசனம்' எனறும் பெயர் வழங்கும். இது செங்கல்பட்டு மாவட்டம் காஞ்சிபுரம் தாலூகா மணிமங்கலம் என்னும் ஊரிலுள்ள இராசகோபாலப் பெருமாள் கோயில் மண்டபத்தின் வடக்குச் சுவரில் காணப்படுகிறது. தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது. நாற்பத்தேழு பத்திகளையுடையது.

இச் சாசனத்தின் முற்பகுதியில் முதலாம் வீரராசேந்திரன் பொத்தப்பி வேந்தனையும், கேரளனையும், ஜனநாதன் தம்பியை யும், பாண்டியன் சீவல்லவன் மகன் வீரகேசரியையும் கொன்ற செய்தியும், சேர மன்னரை வென்று திறை பெற்ற செய்தியும், மேலைச்சாளுக்கிய மன்னனை ஆகவமல்லனோடு ஐந்து தடவை கள் போர் செய்து வெறறிபெறற செய்தியும் கூறும் அவனது மெய்க் கீர்த்தி அமைந்துள்ளது. பிற்பகுதியில் மணிமங்கலம் சபையோரிடமிருந்து சேயசிங்க குலாந்தக பிரமராயர் என்பவர் விலைகொடுத்து வாங்கி அனுபவித்து வந்த 4450 குழி நிலத்தை அவர் மகனரான சேனதிபதி செயங்கொண்ட சோழ பிரமாதி ராயர்[2] மணிமங்கலம் கோயில் ஸ்ரீமத் துவாராபதியான காமகோடி விண்ணகராழ்வார்க்கு அர்ச்சனா போகமாகக் கொடுத்த செய்தி கூறப்பட்டுளளது. மணிமங்கலத்தை யடுத்த அமணபாக்கம் என்னும் ஊரிலுள்ள சில நிலங்களை வாங்கி, மணிமங்கலம் கோயில் காமகோடி விண்ணகராழ்வார்க்குத் தானமாகக் கொடுக்கப் பொருள் கொடுத்து உதவிய காமக்கவ்வை என்பாள் இவர் தாயார் என்பது இங்குக் குறிக்கற்பாலது.

முதலாம் வீர ராசேந்திர சோழன் கி. பி. 1063 முதல் 1070 ஆம் ஆண்டு வரைச் சோழ நாட்டை ஆண்டான். இச் சாசனம் அவன் ஆட்சியின் ஐந்தாம் ஆணடில் ஏற்பட்ட தெனவே, இதன் காலம் கி. பி 1068 ஆம் ஆண்டு எனனலாம்.

2. இவர் இரண்டாம் இராசேந்திரசோழன் படைத்தலைவர்களில் ஒருவர். வீரராசேந்திரசோழன் காலத்திலும் இவர் படைத்தலைவரா யிருந்தார். இவர் தந்தை பெயர் மஞ்சிப்பயனர் என்னும் செயசிங்க குலாந்தக பிரமாதிராயர் ; தாயார் பெயர், காமக்கவ்வை. இவர்கள் மணிமங்கலம் கோயில் ஸ்ரீ காமகோடி விண்ணகராழ்வாரிடம் அதிக பக்தி கொண்டவர்கள் என்பது, இவர்கள் அக்கோயிலில் இறைவ னுக்குச் செய்துள்ள தானங்களால் தெரிகிறது.

சாசனம்

(1) ஸ்வஸ்திஸ்ரீ
திருவளர திரள் புயத் திருநில வலையத்
தன்மணிப் பூணெனத் தாங்கிப் பன்(2)மணிக்
கொற்றவெண் குடைநிழல் குவலையத் துயிர்களைப்
பெற்ற தாயினும் பெணி மற்றுள
வறை(3) கழ லரயர்த நடிநிழ லொதுங்க
வுறைபிலத் துடைகலி ஒதுங்க முறைசெய்து
(விரைமலற் றெரியல் [1]விக்கலன் றன்(4)னொடு
வரிசிலைத் தடக்கை மாசா மந்தரைக்
கங்க பாடிக் களத்திடை நின்றுந்
துங்கபத் திரிபுகத் துரத்தி யாங்கவர்

---

குறிப்புரை

**1. ஸ்வஸ்திஸ்ரீ:** சாசனங்களின் துவக்கத்தில் மங்களமாக வரும் வடமொழித் தொடர்; திருவளர திரள் புயத்து: இது முதலாம் வீரராசேந்திர சோழன் மெய்க்கீர்த்தியின் தொடக்கத் தொடர்; இருநில வலயம்-பெரிய பூமி வட்டம்; இருநிலம்-பெரிய பூமி; வலயம்-வட்டம்; மணிப்பூண் - அழகிய ஆபரணங்கள்; 'புயத்து நிலவலயம் பூணெனத் தாங்கி' என்று முடிக்க.

**2. பன்மணி** - பலவகை முத்துக்களையுடைய; குவலயம் - உலகம், உயிர் - உயிரினங்கள்; பெற்ற தாயினும் பெணி - பெற்ற தாயினைவிட அதிகமாய்ப் பாதுகாத்து; அறைகழல் - ஒலிக்கும் வீரக் கழல்.

**3. உறை பிலத்துடை கலி ஒதுங்க** - கலி நீண்ட பாதாளத்தில்போய் ஒதுங்கும்படியான, அஃதாவது துன்பம் நீங்கும்படி என்பது. கலி - துன்பம், வறுமை; முறை செய்து - ஆட்சி செய்து; இதனால் வீர ராசேந்திரன் தன் நாட்டைத் தனக்குரிய ஆபரணமாகக் கொண்டு; தன் நாட்டிலுள்ள குடிகளைத் தாயைப்போலப் பாதுகாத்து, அவர்கள் வறுமையை நீக்கி, முறை செய்து ஆட்சி செய்தான் என அவனது ஆட்சி கூறப்பட்டது. விரைமலற் றெரியல். நறுமணமுள்ள மலர் மாலை; விரை மலர்த் தெரியல் என்றும் பாடம். விக்கலன் - விக்கிர மாதித்தன்; இவன் ஆகவமல்லன் மக்களில் இரண்டாவது மகன்; இவனை 'விக்கி' என்றும் அழைப்பர். இவனை, ஆகவமல்லன் படைத் தலைவர்களில் ஒருவன் என்பாருமுளர்.

**4 மாசாமந்தர்** - தானைத்தலைவர், கங்கபாடிக் களம் - களம்பாடி என்னும் இடத்துப் போர்க்களம்; துங்கபத்திரி - துங்கபத்திரா நதி; துங்கபத்திரா நதியும் கிருஷ்ணா நதியும் சந்திக்குமிடத்தில்தான் 'கூடல் சங்கமம்' இருந்தது. புகத் துரத்தி - செல்லும்படி துரத்தி.

வெங்கை நாட்டிடை மீட்டு(5)மவர் விட்ட
தாங்கரும் பெருவலித் தண்டுகெடத் தாக்கி
மாதண்ட நாயகன் சாமுண்ட ராயனைச்
செற்றவன் சிரத்தினை யறுத்து மற்றவ
னொருமக ளாகிய (6) இருகயன் றெவி
நாகலை யென்னுந் தொகையஞ் சாயலை
முகத்தொடு மூக்குவே றாக்கிப் பகைத்தெதிர்
மூன்றாம் விசையினு மென்றெதிர் பொருது
பரிபவ(7)ந் திர்வந[2] எனக் கருதிப் பொருபுனல்

(ஆகவமல்லன் தன் மகன் விக்கிரமாதித்தனைச் சோழநாட்டு எல்லையைச் சேர்ந்த கங்கபாடி வனவாசி, சாந்தனிகே, துளம்பபாடி முதலிய மாகாணங்களுக்கு அதிகாரியாக நியமித்தான். வீரராசேந்திர சோழன் தன் ஆட்சியின் இரண்டாவது ஆண்டு (கி. பி. 1064) இவனோடு பொருது பல சாமந்தர்களைக் கொன்று, பகைவரைத் துங்கபத்திரை வரையும் துரத்தினான். இது வீரராசேந்திரன் ஆகவமல்லனோடு செய்த முதற் போராகும்.) வேங்கை - வேங்கை நாடு; மீட்டும் - மேலும்.

**5. அவர் விட்ட** - சாளுக்கியர் விட்டுவைத்த; பெரும் வலித்தண்டு - வலிமை மிக்க பெருஞ் சேனை; கெடத் தாக்கி - அழியும்படி தாக்கி; **மாதண்ட நாயகன்** - மாபெருஞ் சேனைத்தலைவன்: இஃது இங்குச், (சாமுண்டராயனைக் குறிக்கும். இவன் வேங்கை நாட்டிடை ஒரு பெருஞ் சேனையுடன் தங்கி இருந்தான், வீரராசேந்திரன் வேங்கை நாட்டில் புகுந்து இவன் சேனையைத் தாக்கி, இவனது தலையையும் அறுத்தான். இது வீரராசேந்திரனுக்கும் ஆகவமல்லனுக்கும் நடந்த இரண்டாவது போராகும்.) சிரம் - தலை.

**6 அவன் ஒரு மகள்:** (இவளை ஆகவமல்லனுடைய ஒரே மகள் என்பர். இவள் இயற்பெயர் நாகலை; இருகையன் என்பானுக்கு மனைவி; ஆதலால் 'இருகையன் தேவி நாகலை' என்றார். இவள் இயற்கை அழகுடையவள் என்பது, 'தொகையஞ் சாயல்' என்னும் அடைமொழித் தொடரால் விளங்குகிறது. தொகை-மயில்; சாயல் - அழகு; வீரராசேந்திரன் இவளைப் பிடித்து இவளது முகம், மூக்கு வேறாக அரிந்து, இவளை அவமானப்படுத்தினான். மூன்றாம் விசையினும் - மூன்றாவது தடவையாகவும், இது வீரராசேந்திரன் ஆகவமல்லனோடு செய்த மூன்றாவது போர் என்பது.) என்று எதிர் பொருது - எதிர்த்து நின்று போர் செய்து; பரிபவம் - இழிவு, அவமானம்.

**7 திர்வந** - தீர்வன; 'தீர்வது' என்றும் பாடம். பொருபுனல் - மோதும் அலைநீர்; கூடல் சங்கமம்: கிருஷ்ணை, பஞ்சகங்கை (துங்கப்

(கூடல் சங்கத் தாகவ மல்லன்
மக்க ளாகிய விக்கலன் சிங்கண
னென்றிவர் தம்மொடு மெணில்சா மந்தரை
வென்றடு தூ(8)சிமுனை விட்டுத் தன்றுணை
மன்னருந் தானும் பின்கடுத் திருந்து
வடகட லென வகுத்தவத் தானையைக்
கடக்களி றொன்றாற் கலக்கி அடற்பரி
கொசலை சிங்கனை கொ(9)டிப்படை முன்னல்
தூசிவெங் களிற்றொடுந் துணித்து கெசுவ
தண்ட நாயகன்[3] தாற்கெத் தரயன்
திண்டிறல் மாரயன் சினப்பொத் தரய

பத்திரை) ஆகிய இரு நதிகளும் கூடும் இடம். வீரராசேந்திரன் தன்னைக் கூடல் சங்கமம் என்னும் இடத்தில் வந்து எதிர்த்த ஆகவ மல்லனோடு போர்செய்து, அவன் மக்களாகிய விக்கலன், சிங்கணன் என்பவர்களோடு பல படைத்தலைவர்களையும் வென்றான். அவனுக்குத் துணையாக வந்த மன்னர் பலர் புறமிட்டு ஓடினர். விக்கலன், சிங்கணன்: இவர்கள் இருவரும் ஆகவமல்லன் மக்கள். எணில் சாமந்தரை - எண்ணிக்கைக்கு அடங்காத படைத்தலைவர்களை ; அடுதூசி - அடுகின்ற தொழிலையுடைய தூசிப்படை ; அடுதல் - கொல்லுதல் ; தூசிப்படை - படைவீரர் ; 'குதிரைப்படை' எனினுமாம்.

8. அடுதூசி .....கலக்கி - போர்செய்த அடுதலில் வல்ல தூசிப் படையாக வந்த அவன் சேனையை முன்னர்ச் செலுத்தி. அதன்பின் தானும் தனக்குத் துணையாக வந்த மன்னர்களும் செல்லும்படி வகுக்கப் பட்ட அச் சேனையை வீரராசேந்திரன் ஒரு யானைப்படையை விட்டுக் கலங்கச்செய்தது என்பது. துணை மன்னர் - துணையாக வந்த மன்னர்கள்; வடகடல் - வடவைக் காலத்துக் கடல்; தானை - சேனை ; கடக்களிறு மதயானை ; இங்கு யானைப்படையைச் சுட்டியது, அடல்பரி - அடல்புரி, எதிர்த்துப் போர் செய்யும்; கொசலை சிங்கனை - கோசலநாட்டுச் சிங்கன் என்பானை.

9. கொடிப்படை முன்னல் - முன்னணிச் சேனைக்கு முன்னர் ; தூசி வெங் களிற்றொடுந் துணித்து-தூசி, வெங்களிறு ஆகியவற்றை வெட்டி. தூசி - குதிரை ; வெங்களிறு - யானைகள்.

கெசுவ தண்ட.........சிந்த பிள்ளைஞ்செய்து : கேசவதண்ட நாயகன், கேத்தரயன், போத்தரயன், இரேச்சயன், மூவத்தி என்று சொல்லப் பட்ட போரில் வல்ல தானைத் தலைவர்களை அழித்தது என்பது. [3] தார் ; வெற்றிமாலை ; திண்டிறல் - மிக்க வலிமை ; சினம் - கோபமிக்க - பொற்கொதை - பொன்மாலை யணிந்த.

னிரெச்சய னியல்[4]செபொற் (10)கொதைழு வத்தியென்
றார்த்தடு துப்பி லநெகசா மந்தரை
சிந்த பின்னஞ் செய்து)பின்னை
முதலி யான மதுவண னொட
விரித்தலை யொடு விக்கல (11)னொட
செருத்தொழி லழிந்து சிங்கண னொட்ட[5]
அண்ணம முதலிய ரனைவரு மமர்பொர்ப்
பண்ணிய பகடிழிந் தொட நண்ணிய
வாகவ மல்லனு மவற்கு[6]மு னொ(12)ட
வெகவெங் களிற்றினை விலக்கி வாகைகொண்
டங்கவர் தாரமு மவர்குல தனமுஞ்
சங்குந் தொங்கலுந் தாரையும் பெரியும்
வெண்சா மரையு மெக டம்பரமும்
சூகரக் கொடியும் (13)மகரதொ ரணமும்

---

**10.** என்று ஆர்த்து அடுதுப்பில் அநேக சாமந்தர் - என்று கூவி அழைத்து, போரில் பகைவர்களைக் கொல்லும் அநேகப் படைத் தலைவர்கள் என்பது. சிந்த பின்னஞ் செய்து - அழித்து ; பின்னை - பின்னர் : முதலி - போர்த்தலைவன்.

**11.** செருத்தொழில் - போர்த்தொழில்; அழிந்து - தோல்வியுற்று; அமர் பொர்ப் பண்ணிய - இருந்து போர் செய்த ; பகடு இழிந்து ஓட - யானையிலிருந்து இறங்கி ஓட ; ஆகவமல்லனும் அவற்கு முனோட - நான்காவது தடவையாக முதலாம் வீரராசேந்திரனோடு போர் செய்த ஆகவமல்லன், போரில் தோற்று தங்கள் யானைகளிலிருந்து இறங்கி ஓடிய மதுவணன், விக்கலன், சிங்கணன், அண்ணலன் முதலிய படைத் தலைவர்களுக்கு முன் தான் ஓடி உயிர்பிழைத்தான் என்பது.

**12** வெகவெங் களிறு : இது முதலாம் வீரராசேந்திரன் ஏறிவந்த யானையின் பெயர். விலக்கி - செலுத்தி , வாகைகொண்டு - வெற்றி கொண்டு ; அவர் தாரம் - அவர்கள் மனைவியர் ; குலதனம் - பெருஞ் செல்வம்;சங்கு - சங்கினால் செய்த கைவளைகள்; 'வெற்றிச் சங்கு' எனினு மாம்; தொங்கல் - காதணி வகை; தாரையும் பெரியும் - தாரை, பேரிகை என்னும் இரு அரச சின்னங்களான ஊது குழல்கள் (Trumpets); வெண்சாமரை - அரச சின்னமாகக் (canopis) கொள்ளப்படும் கவரி மானின் மயிர்க்கற்றை ; மெகடம்பம் - மேகாடம்பரம், நிழல்செய்யும் மேற்கட்டி ; அம்பரம் - ஆடை. சூகரக்கொடி - காக்கைக் கொடி : சூகரம் - காக்கை ; இது மேலைச்சாளுக்கிய மன்னருக்குரியது,

**13.** மகர தோரணம் - மகர வடிவமாகச் செய்த அணிகலன் : மகரம் - ஒருவகை மீன்; புட்பகப்பிடி - புட்பகம் என்னும் பெண் யானை;

புட்பகப் பிடியும் பொருகளிற் றீட்டமும்
பாய்பரித் தொகையொடும் பறித்து செயொளி
வீரசிங் காசநம் பார்தொழ வெறி
எழில்தர உலக முழுதுடை யாளொ (14)டும்
விசைய மணிமகுட மெய்ந்து எழில்கொள்
தத்துமா புரவிப் பொத்தப்பி வெந்தனை
வாரனை வன்கழற் கெரளன் றன்னை
ஜன நாதன் றம்பியைப் பொ(15)ர்க்களத்
தலங்சல்சூழ் பசுந்தலை யரிந்து 'புலங்கழல்
தென்னனை ஸ்ரீவல்ல வன்மகன் சிறுவன்
மின்னவில் மணிமுடி வீர கெசரியை
மதவரை யொன்று (16)லுதைப்பித் துலகையிற்
கெரளர் தங்குல செங்கிரை யொடும்
வெரறப் பறிந்தொடி மெல்கடல் வீழ
வாரண மருகுளி செலித்தி[3] வாரியி

---

பிடி - பெண் யானை; பொருகளிற்று ஈட்டம் - போர் செய்ய வல்ல யானைப்படை; பரித்தொகை - குதிரைப் படை; பறித்து - எடுத்துக் கொண்டு; செயொளி - செவ்விய ஒளி; எழில்தர - அழகு பொருந்த; உலகமுழுதுடையாள்: இவள் முதலாம் வீரராசேந்திரன் பட்டத்தரசி.

**14.** விசைய மணிமகுடம் - வெற்றி முடி; மெய்ந்து-சூடி; தத்துமா புரவி - விரைந்து பாயும் குதிரையையுடைய; பொத்தப்பிவெந்தன் - பொத்தப்பி நாட்டிற்கு அரசன்; பொத்தப்பி நாடு சித்தூர் சில்லாவி லுள்ள காளத்தியைச சேர்ந்ததென்பர். பொத்தப்பி வெந்தனை...... தலை யரிந்து - பொத்தப்பி வேந்தன், கேரளன், ஜனநாதன் தம்பி ஆகிய இவர்களுடன் போர்செய்து, இவர்கள் தலைகளைத் துணித்து என்பது. ஜனநாதன் சக்கரக்கோட்ட மண்டலத்தை ஆண்ட ஓர் அரசன். அவன் 'தாராவர்சன்' என்றும் அழைக்கப்படுவான். அலங்கல் - மாலை.

**15.** புலங்கழல் - பொன்னாலான கழல்: தென்னன் - பாண்டியன்; ஸ்ரீவல்லவன் மகன் சிறுவன் - சீவல்லவன் மகனான சிறுவன் என்பது; இவன் பெயர் 'வீரகேசரி' என்பதாகும். இவன் தலையை வீரராசேந்திரன் யானையின் காலால் இடறச் செய்தான் மின்னவில் - மின்னலைப் போன்று ஒளிவீசும்; மதவரை - மதயானை.

**16.** உலகையிற் கெரளர்......செலுத்தி: இது வீரராசேந்திரன் கேரள மன்னருடன் செய்த போரைப் பற்றியது. உலகை - உதகை; இது பாண்டியனுக்குச் சொந்தமான இடமென்பர்; இங்கு வந்து எதிர்த்த கேரள மன்னரை வீரராசேந்திரன் வென்று, அவர்கள்

லெண்ணருங் களிற்றின்(17) இரட்டரைக் கவர்ந்த
கன்னியர் களிற்றொடுங் கட்டி பண்ணுப்
பிடியொடு மாங்கவர் விடுதிறை கொண்டு
மீண்டு சூழ்புனற்
கொண்டாற் றுறவிற் குறித்த வெம்(18)பொரில்
தண்ட நாயகர் தம்மில் திண்டிறல்
மல்லிய ணனையு மஞ்சிப் பயனையும்
பில்குமதக் களிற்றுப் பிரமதே வனையுந்
தண்டார் ரசோகயன் றன்னையு மொண்டி(19)றற்
சத்தி யணனை யுஞ்சந்து விக்ரமப்
பத்தி யணன் றன்னையு மதகு

---

குழந்தைகள் முதலாகக் கொன்றான். அவனுக்குப் பயந்து ஓடிய அவர்களை இவன் மேலைக்கடல் வரை பின் தொடர்ந்து சென்றான்; தன் யானையை மேலைக்கடலில் நீராடச்செய்து தன் பெருமையை நிலை நாட்டினன். செங்கிரை குழந்தைகள்; வெர் அற பறிந்து-முழுவதுமாக அழித்து; வாரணம் - யானை; வீழ - கேரளர் மேலைக்கடலில் ஓடி ஒளிக்க; அருகளி செலுத்தி - மேலைக்கடலின் ஓரமாக நடத்தி; வாரி - கடல்; எண்ணருங் களிறு - கணக்கில்லாத யானை.

**17** இரட்டர் - மேலைச்சாளுக்கியர்; இவர்கள் பெரும் யானைப் படையை யுடையவர்களா யிருந்தனர். இவர்கள் படையுடன் கன்னியர் படைகளும் சேர்ந்து வந்தது. கவர்ந்த - பின் தொடர்ந்து வந்த; கன்னியர் என்பார், குமரிக்கு உரியவரான பாண்டியராவர். இவர் களையும் இவர்கள் யானைகளையும் வீரராசேந்திரன் பிடித்துக் கட்டி, இவர்களிடம் அழகிய பிடிகளோடு திறைப் பொருளையும் பெற்று மீண்டான். பண்ணுப்பிடி - அழகிய பெண் யானை; திறை - திறைப் பொருள்.

**18.** தண்டநாயகர் - படைத்தலைவர்கள்; அவர்களாவார் மல்லி யணன், , மஞ்சிப்பயன், பிரமதேவன், அசோகையன், சத்தியணன், பத்தியணன், வீமயன், வங்காரன், கங்கன், நுளம்பன், காடவர்கோன், வைதும்பராயன் முதலியோர். போரில் வீரராசேந்திரன் இவர்களைப் பிடித்து இவர்கள் தலைகளை அரிந்தான். திண்டிறல் - மிக்க வலிமை; பில்கு மதக்களிறு - மதம் பொழியும் யானை; தண்டார் அசோகயன் - புதிய மாலையணிந்த அசோகையன்; முந்திய சாசனத்தில் மண்டலிக சோகையன் என்பான் ஒருவன் கொப்பத்துப் போரில் இறந்தான் என்ற செய்தி இங்கு நோக்கத்தக்கது. ஒண்டிறல் - வலிமை

**19.** சந்துவிக்ரமப் பத்தியணன்: பத்தியணன் என்பான் பகைவர் களைச் சந்து செய்விப்பவனும், எதிர்த்தால் அழிப்பவனுமான ஒரு

தெமருதெரியல் வீமயன் றன்னையு
மாமதி வங்கா ரனையும் நாமவெற்
கங்கனை நுள(20)ம்பனைக் காடவர் கோனை
மங்குமத யானை வைதும்ப ராயனை
யிருந்தலை யரிந்து பெரும்புனற் றுறைநு
கங்கை மாநகர் கைக்கமின் றிங்களில்
வழிவரு சளுக்கி (21)ப்ழியொடு வாழ்வதிற்
சாவது சால நன்றென் றெவமுற்
றிந்திய சிந்தய னாகி முன்னம்
புதல்வருந் தானு முதுகிட் டுடைந்த
[10] கூடலங் களமெனக் குறித்த கூடலி(22)ல்

---

தலைவன். சந்து - உடன்பாடு: விக்ரஹம் - அழிவு; மத்தகு - மதம் பொழியும் யானை போல; 'மததகர்' என்றும் பாடம் தெமருதெரியல்-தேன் நிறைந்த மாலை; மாமதி - சிறந்த அறிவுடைமை; நாமவேல் - அச்சத்தைத் தரும் வேல்; கங்கன் - பல்லவரின் ஒரு பிரிவான கங்கர் தலைவன்: நுளம்பன் - நுளம்பபாடி நாட்டையாண்ட பல்லவர் தலைவன்;

**20** காடவர்கோர் - பல்லவர் தலைவன்; இவன் செஞ்சிநாட்டிற்குத் தலைவன்; மங்கு மதம் - குறைந்த மதம்; அஃதாவது வீரராசேந்திரன் வீரத்தைக் கண்டு அஞ்சியதால், பகைவீரர் யானைகள் மதம் பொழிவதை விட்டு ஒழிந்தன என்பது. இனி 'மல்குமத' மெனக் கொண்டு, 'நிறைந்த மதத்தினையுடைய' எனப் பொருள் கொள்ளினுமாம். பெரும் புனல் துறைது கங்கை மாநகர்-மிக்க புகழுடைய கங்கை நீரால் தூய்மை செய்யப் பெற்ற தனது தலைநகரான கங்கை கொண்ட சோழபுரம்; இதனை முதலாம் இராசேந்திரசோழன் கட்டினன் என்பது அவன் வரலாற்றால் அறியப்படும். கைத்த - வைத்த, சிறையாக்கிக் கொண்டு வரப்பட்ட என்பது மின் திங்களில் வழிவரு சளுக்கி-ஒளி பொருந்திய திங்கள் குலத்தில் தோன்றிய சாளுக்கிய மன்னனான ஆகவமல்லன்; இவனுக்கு முதலாம் சோமேசுவரன் என்ற பெயரும் உண்டு: மேலைச் சாளுக்கிய (இரட்டபாடி) நாட்டிற்கு இவன் மன்னன். முதலாம் இராசேந்திர சோழன் ஆட்சியின் இறுதிக் கால முதல் இவன் நான்கு தலைமுறைகளாகச் சோழர்களுடன் போர்செய்து வந்துள்ளான்.

**21.** பழி - இழி சொல்; எவம் உற்று - துன்பமடைந்து, வருந்தி. எவ்வம் - துன்பம்; இந்திய சிந்தயனாகி - நினைந்த மனத்தவனாகி; புதல்வர் - மக்கள்; அவராவார் விக்கலனும் சிங்கணனும். முதுகிட்டு - தோல்விபுற்று; உடைந்த - ஓடிய; கூடலங் களம் என - கூடல் சங்கம மென்னும் இடமே போர் செய்யு மிடமென்று.

**22.** கூடலில் வாராது அஞ்சினர் மன்னவர் அல்லர் - கூடல் சங்கமம் என்னும் இடத்தில் போர் செய்ய வாராது அஞ்சியவர்கள் மன்னர் என்று

வாரா தஞ்சினர் மன்னவ ரல்லர்
பொர்ப்பெரும் பழிப் பிரட்ட ராகவென்
றியாவரு மறியவெழுதிய [11]பதக
மெவரு மொலை விடையொடுங் குடுத்த
விரட்ட (23)பாடிப் பிரட்டர்கள்
கங்கா கெத்தனை யெவ அங்கவன்
வந்தடியிணை வணங்கிய் வாசக முணர்த்தலும்
சிந்தைய்யுமுகமுந் திருப்புய மிரண்டு
மெந்தெழி லுவகையொ டிரு(24) மடங்கு பொலியப்
பொந்த பொர்க்களம் புகுந்து காந்தையில்
வல்லவர் கொனை வரவுகா ணாது
சொல்லிய நாளின் மெலுமொர் திங்கள்
பார்த்தி ருந்த பி(25)ன்னைப் பொத்தவன்

---

கருதப்படார்; முன்பு ஒரு தடவை வீரராசேந்திரனோடு கூடல் சங்கமம் என்னும் இடத்தில் போர்செய்து புறங்காட்டிய ஆகவமல்லன் இவ்வாறு தன் தூதர் மூலம் வீரராசேந்திரனுக்குச் சொல்லி அனுப்பினான். போர்-போரில்; பழிப் பிரட்டர்-பழித்தற்குரிய பொய்யர்; பிரட்டு - புரட்டு, பொய்; பதகம்: இது 'சபதம்' என்றிருத்தல் வேண்டும்; 'பதிகம்' என்றும் பாடம். மெவருமொலை - முக்கியமான கடிதம்; விடையொடும் குடுத்த-தன் ஆணை முத்திரையோடும் கொடுத்த; இரட்டபாடி பிரட்டர்கள் - இரட்டபாடிக்கு மன்னனான ஆகவமல்லன் அமைச்சர்கள்; பிரட்டர் என்பது இங்கு அமைச்சரைக் குறித்தது.

**23.** வாசகம் உணர்த்தலும் - கடிதத்தின் செய்தியை வீரராசேந்திரனுக்குச் சொல்லலும்; இவ்வாறு உணர்த்தியவன் இரட்டபாடி அமைச்சர்களில் ஒருவனாகிய கங்காகெத்தன் என்பவனாவான். திருப்புயம் - அழகிய தோள்கள்; உவகை - மகிழ்ச்சி.

**24.** பொலிய - விளங்க; பொந்து; படை எடுத்து வந்து; அப்பொர்க்களம் - கூடல் சங்கமம்; காந்தையில்: காந்தை என்பது ஓர் ஊர்; இது கரந்தை என்றிருத்தல் வேண்டும். வல்லவர்கொன் - ஆகவமல்லன், சொல்லிய நாள் - குறிப்பிட்ட நாள்; ஆகவமல்லன் ஓலையில் குறிப்பிட்ட நாளில் வீரராசேந்திரன், கூடல் சங்கமத்திற்கு வந்தான்; ஆகவமல்லன் அங்கு வரவில்லை; அவன் வரவுக்காக வீரராசேந்திரன் அவன் குறிப்பிட்ட நாளுக்கு மேலாக ஒரு திங்கள் அங்குள்ள கரந்தை என்னுமிடத்தில் பாடிவீடு அமைத்துக் காத்திருந்தான். திங்கள் - மாதம்.

**25.** பொத்து - பேர்த்து, அவ்விடத்தை விட்டு; அவன் கால் கெட ஓடி - ஆகவமல்லன் தன் கால் சோரும்படி பயந்து ஓடி; மெல் கடல் -

கால்கெட வோடி மெல்கட லொளித்தலுந்
தெவ நாதனுஞ் சித்தியுங் கெசியு
மூவருந் தனித்தனி[13] முதுகிடப் பரவரு
மிரட்ட பாடி யெழரை யிலக்க
(26) முரட்டொழி லடக்கி முழங்கெரி முட்டி[18]
வெங்கதிற் புலியெறு வியந்து விளையாடத்
துங்கபத் திரிக்கரை ஜயபத் திரத்தூண்
நாநிலம் பரச நாட்டி மெநாள்
வ(27)ந்த பிரட்டனை வல்லவ நாக்கிச்
சுந்தரக கண்டிகை கட்டி
புரச யானை[14] புழைக்கையிற் பிழைத்திவ்
வுலக மறிய வோடிய பரிசொரு

---

மேலைக் கடல்; ஆகவமல்லன், வீரராசேந்திரனோடு ஐந்தாவது தடவை யாகச் செய்த போரில் அவனுக்குப் பயந்து மேலைக் கடலில் ஓடி ஒளித்தான் என்பது. ஆனால் பிற வரலாறுகள், அவன் சுரங் கண்டு திடீரென்று இறந்தான் என்று கூறுகின்றன. தெவநாதன், சித்தி, கெசி: இவர்கள் மூவரும் ஆகவமல்லன் படைத்தலைவர்கள்; இரட்ட பாடிப் பகுதியில் வீரராசேந்திரனை எதிர்த்துப் போர் புரிந்து; முதுகிட்டனர். பரவரும் - புகழ்தற்கரிய.

**26.** முரட்டொழில் அடக்கி - வலிமையால் அடக்கி; எரிமுட்டி, தீக்கொளுவி; வெங்கதிர் புலி எறு - சூரியனும் புலியும்; இவை இரண்டும் சோழர்க் குரியன; சூரியன் சோழரின் குலச் சின்னம்; புலி, அவரது அரச சின்னம். விளையாட - பறக்கும்படியாக; துங்க பத்திரிக்கரை - துங்கபத்திரா நதியின் கரையில்; ஜயபத்திரத் தூண்- வெற்றிகளைப் பற்றி எழுதிய தூண்; ஜெயபத்திரம்-வெற்றிச் செய்திகள்: நாநிலம் பரச - உலகத்தார். புகழும்படி: வீரராசேந்திரன் தான் ஆகவமல்லனை ஐந்து தடவை புறங்கண்ட செய்தியை ஒரு தூணில் எழுதி இரட்டபாடியையடுத்த துங்கபத்திரா நதிக்கரையில் நாட்டினான். அதில் சோழர்களுக்குரிய சூரிய கதிர்களும், புலியேறும் எழுதப்பட் டிருந்தன. மெநாள் - முன்னாள்.

**27.** மெநாள் வந்த பிரட்டன்-முன்னாளில் போர்தொடுத்துவந்தவன்; இவன் ஆறாம் விக்கிரமாதித்தன் எனத் திருக்கழுக்குன்றத்திலுள்ள வீரராசேந்திரனது ஏழாவது ஆண்டுக் கல்வெட்டுக் கூறுகின்றது. வல்லவ நாக்கி-சாளுக்கிய மன்னவனாக்கி; சுந்தரக் கண்டிகை - அழகிய கண்டிகை; இது விக்கிரமாதித்தன் அரசனானதற்கு அடையாளமாக அவன் கழுத்தில் அணியப்பட்டது. முன்பு ஒரு நாள் வீரராசேந்திரன் இவனை வென்று தன் பட்டத்து யானையால் கொல்லும்படி கட்டளை

பலகையிற் பழுதற வெழுதிய பின்னை
சார்த்தி(28)ன வுறையுஞ் சளுக்கிப தம்பெற்ற
பூத்தின மார்வொடும் பூட்டிப் பெர்த்துக்
தான்கைக் கொண்ட வெங்கைநன் னாடு
மீட்டுக் கொண்டலால் மீள்கிலங் கெட்டிநீ

விட்டபோது இவன் அதற்குத் தப்பி எல்லாரும் அறியும்படி ஓடி மறைந்தான்; அச் செய்தியை வீரராசேந்திரன் ஒரு பலகையில் எழுதி இவன் கழுத்தில் தொங்கவிட்டான் என்பது. இச் செய்தியைச் சிறிது மாற்றி, வீரராசேந்திரன் ஆகவமல்லன் இறந்தபின், அவன் உருவத்தைச் செய்து, அதன் கழுத்தில் கண்டிகையையும், தனக்கு அவன் தோல்வியுற்ற செய்திகள் எழுதிய பலகை ஒன்றையும் தொங்கவிட்டான் என்பாருமுளர். புரசயானை-பட்டத்து யானை; புழைக்கை - துதிக்கை; பிழைத்து - தப்பி; பரிசு - தன்மை, செய்தி.

28 சார்த்தின வுறையும் - அம்புகள் வைக்கப்பட்ட அம்பறாத் தூணியும்; உறை - அம்புகள் வைக்கும் பை; சளுக்கி பதம் பெற்ற - சாளுக்கிய மன்னன் என்று பட்டமெய்திய; பதம் - பட்டம், பதவி; பூத்தின மார்வு - அழகிய மார்பு.

ஆகவமல்லன் என்னும் முதலாம் சோமேசுவரன் கி. பி. 1068 இல் இறந்தான்; அவன் முதல் மகன் இரண்டாம் சோமேசுவரன்; இரண்டாவது மகன் விக்கிரமாதித்தன்: மூன்றாவது மகன் செயசிங்கன்; ஆகவமல்லனுக்குப் பின் அவன் முதல் மகனுன இரண்டாம் சோமேசுவரன் மேலைச்சாளுக்கிய மன்னனானான்; ஆனால் அவன் ஆட்சியை யாரும் விரும்பவில்லை. அதனால் விக்கிரமாதித்தனுக்கும் அவனுக்கும் பகை ஏற்பட்டது; விக்கிரமாதித்தன் வீரராசேந்திரனைக் கூடல் சங்கமத்தில் போய் அடைக்கலமடைந்தான். அவன் தம்பி; செயசிங்கனும், கடம்பவேந்தனாகிய உபகேசியும் அவனை ஆதரித்தார்கள். அதனால் வீரராசேந்திரன் இரண்டாம் சோமேசுவரனைச் செயித்து விக்கிரமாதித்தனை 'ஆறும் விக்கிரமாதித்தன்' என்ற பெயரால் மேலைச் சாளுக்கிய மன்னனாக்கினான். அன்றியும் அவன் தன் மகளையும் விக்கிரமாதித்தனுக்கு மணஞ்செய்து கொடுத்தான். இவ் விக்கிரமாதித்தனே முன்பு ஒரு தடவை வீரராசேந்திரனால் பிணிக்கப்பட்டு, அவன் பட்டத்து யானையால் கொல்ல ஏவப்பட்டவன். ஆனால் இவன் அதிலிருந்து அப்பொழுது தப்பித்துக்கொண்டான்.

பெர்த்து - கூடல் சங்கமம் என்னும் இடத்திலிருந்து புறப்பட்டு' கைக்கொண்ட-முன்னர் விக்கிரமாதித்தன் கைப்பற்றிய; 'ஆகவமல்லன்-கைப்பற்றிய எனினுமாம்; நீ வல்லனாகில் - நீ வலிமையுடையவனானால், இங்கு 'நீ' என்றது, அப்பொழுது வேங்கைநாட்டை ஆண்ட சாளுக்கிய தண்டத் தலைவனைக் குறிக்கும்.

வல்ல ளுகில் வந்து(29)காக் கென்று
சொல்லி யெடுத்தவத் தானை விசைய
வாடையொ டடுத்த பேராற்றில் தடுத்த
ஜனநா தனையுந் தண்டநா யகனு
மினமார் கடக்களிற் றிராஜ மய்யனையு
முப்பர சனையு முதலாக வுடைய
வப்பெருஞ் சேனையை அடவிற் பாச்சி
கோதா விரியில்தன் போதக நீடுண்ணக்
கலிங் கமுங்கடந் தப்பால்
சக்கர கொட்டத் தப்பு(30)றத் தளவு
மெவருந் தானைத் தாவடி செலுத்தி

29. எடுத்த - எழுந்த ; தானை - சேனை; விசயவர்டை என்பது இப்பொழுது 'பெஜவாடா' என்று வழங்குகிறது ; கிருஷ்ண நதி இதன் பக்கமாக ஓடுகிறது. பேராற்றில்-கிருஷ்ண நதியில்; தடுத்த-எதிர்த்த; வேங்கை நாட்டை மீட்கச் சென்ற வீரராசேந்திரன் தானையைக் கிருஷ்ண நதிக்கரையில் மேலைச் சாளுக்கிய தண்டநாயகரான சனநாதன், இராசமய்யன், முப்பரசன் என்போர் பெரும் படையுடன் வந்து எதிர்த்தனர். ஆனால் அப்போரில் இம்மூவரும் புறமிட்டுக் காடுகளுக்குள், ஓடி மறைந்தனர்.

தண்ட நாயகன் - படைத்தலைவன் ; இனமார் ; கடக்களிறு - மதம் பொழியும் யானைப் படை ; அடவிற் பாச்சி - காட்டிற்குள் ஓட்டி ; போதகம் - யானை ; வீரராசேந்திரன் தன் வெற்றிக் குறிகுறியாகத் தன் யானையைக் கோதாவரியில் நீருண்ணச் செய்தான் ; கலிங்கம் - கலிங்க நாடு; இது கோதாவரிக்கும் மகா நதிக்கும் இடையில் உள்ளது; கீழைச் சாளுக்கியருக்குச் சொந்தமானது. இப்பொழுது இது வட சர்க்காரில் இருக்கிறது. சக்கரக் கொட்டத்து அப்புறத் தளவும் மெவரும் தானை - கலிங்க முதல் சக்கரக் கோட்டத்திற்கு அப்பால் வரையும் செல்லும் பெருஞ்சேனை ; இது வீரராசேந்திரன் சேனைப் பெருக்கத்தைக் காட்டும்.

சக்கரக் கோட்டம் என்பது - விசாகப்பட்டினம் ஜில்லாவிற்கு மேற்கில் மத்திய மாகாணத்தைச் சேர்ந்த பஸ்தர் (Bastar) சமஸ்தானத்தின் தலைநகரான இராசபுரத்திற்கு எட்டுக்கல் தொலையில் உள்ள 'சித்திர கோடா' என்னும் ஊராகும்.

30. தாவடி செலுத்தி - தாவிச் செல்லும் படியாக நடத்தி ; மீட்டு - வென்று ; தன் பூங்கழற்கு - தன் பாதங்களில் ; படைக்கலத் தடக்கை- படை ஏந்திய பெரிய கையினையுடைய; படைக்கலம் - படை, ஆயுதம் ; விஜெயாதித்தற்கு அருளி - விசயாதித்தன் என்னும் வேங்கை நாட்டு

வெங்கைநாடு மீட்டுக் கொண்டுதன்
பூங்கழற் கடைக்கலம் புகுந்த படைக்கலத்
தடக்கை விஜெ(31)யா தித்தற் கருளி
விசைகொடு மீண்டுவிட் டருளி இகலிடைப்
பூண்டஜயத் திருவொடுங் கங்காபுரி புகுந்தருளி
அங்கே ராஜாதி ராஜ ராஜந்(32)னெனத்
தாரதிப ராகத் தம் [17]நியமத் தியற்றிப்
படியில் மன்னவ ரடிதொழு தெத்த
[18]வீன்மணிப் பீடத் திருந்து
வெங்கை நனுட் டிநிற் கொண்ட
(33)விருநெதிப் பிறக்கம் வரிசையிற் காட்டி
ஆழியு நிகளமுங் கழற்றி யாங்கவர்
வாழிய விரத மாற்றி [19]பூழிமஞ்

மன்னனுக்குக் கொடுத்து; விசயாதித்தன் முதற் குலோத்துங்க சோழன் சிறிய தந்தையாவான்; இவனை ஏழாம் விசயாதித்தன் என்பர். இவன் சோழராட்சிக் குட்பட்டுக் கீழைச் சாளுக்கிய நாட்டின் ஒரு பகுதியான வேங்கை நாட்டை ஆண்டு வந்தான்; இதனை ஆகவமல்லன் மகனான விக்கிரமாதித்தன் பிடித்துத் தன் தண்டநாயகர் மேற்பார்வையில் வைத்திருந்தான்.

**31.** இசைகொடு - புகழோடு; மீண்டு விட்டு அருளி - திரும்பவும் விசயாதித்தற்குக் கொடுத்து; இகலிடை பூண்ட - போரில் கொண்ட; ஜயத்திருவொடும் - வெற்றியோடும்; கங்காபுரி - கங்கைகொண்ட சோழபுரம்; இது சோழநாட்டின் தலைநகர்; ராஜாதி ராஜராஜந் : இப்பெயரை வீரராசேந்திரன் தன் வெற்றிக்கு அடையாளமாகச் சூடிக்கொண்டான்; கங்கை கொண்ட சோழபுரம் சாசனத்தில் இப்பெயர் இராசாதி ராஜன்-இராசராசன்' என்று காணப்படுகிறது.

**32.** தாரதிபராக—உலகத்து மன்னராக; தம் நியமத்து இயற்றி - தன் முன்னோரின் வழியே ஏற்று; படி - உலகம்; மன்னவர் - பிற அரசர்கள்; வீன்மணிப் பீடம் - ஒளி பொருந்திய முத்துக்கள் பதித்த சிம்மாசனம்; வெங்கை நனுட்டி நிற்கொண்ட - வெங்கை நாட்டினின்றும் திறையாகக் கொண்டு வந்த.

**33.** இரு நெதிப் பிறக்கம் - செல்வக் குவியல்; வரிசையிற் காட்டி; ஒவ்வொன்றாகக் காட்டி; ஆழியும் நிகளமும் கழற்றி-சிறைப்பட்டோர் கட்டுகளையும் சங்கிலிகளையும் நீக்கி; அஃதாவது சிறைப்பட்டோரை விடுவித்து என்பது. ஆழி - காப்பு, கட்டு; 'கட்டளை' எனினுமாம், நிகளம்-கைகளைப் பிணிக்கும் சங்கிலி; அவர் வாழிய விரத மாற்றி - சிறையிலிருந்தும் விடுவிக்கப்பட்டோர் சுதந்திரமாய் வாழும்படியாகத் தான்;

செது வரம்பாட் செங்கோல் (34)செலுத்தி
மெதினி விளக்கி மீதுயர் வீரத்
தநிகொடி தியாகக் கொடியொடு மெற்பவர்
வருகென்று நிற்ப பொர்த்தொழி லுரிமையி
லெ(35)ய்தி அரசு[20] வீற் றிருந்து
மெவரு மநுநெறி விளக்கிய கொராஜ
கெசரி வந்ம ரான உடையார்
ஸ்ரீவீர ராஜெந்திர[21] (36)தெவர்க்கு யாண்டு

அஞ்சாவது ஜயங்கொண்ட சொழ மண்டலத்து செங்காட்டுக் கொட்டத்து மாகணூர் நாட்டு மணி மங்கலமான ராஜ சூளாமணிச் சதுர் வெதி மக்கல—

37. த்து மஹா ஸபெபெயொம் இவ்வாட்டைக் கன்னி நாயற்று அமரபக்ஷத்து சதுர்த்தஸியுந் திங்கட்கிழமையும் பெற்ற உத்திரத்து நாள் எம்முர்[22] பிர்மமஸ்தா

---

கொடுத்த வாக்கை நிறைவேற்றி; விரதம் - வாக்கு; ஆற்றி - நிறைவேற்றி; பூழிமம் செது வரம்பாட் - பனி நிறைந்த இமய முதல் சேது (இராமேசுவரம்) வரையுமாக; ‘சூழிமம்’ என்றும் பாடம்.

34. மெதினி விளக்கி - உலகத்தில் புகழுண்டாகச் செய்து; மீது உயர் - மேலே உயர்த்தப்பட்ட; வீரத்தநிக் கொடி - ஒப்பற்ற வெற்றிக் கொடி; தியாகக் கொடி - தியாகத்திற்கு (கருணைக்கு) அறிகுறியான கொடி; எற்பவர் - பணிந்து வேண்டுவோர்; இது வீரராசேந்திரனது அருளுடைமையைக் குறித்தது. பொர்த்தொழில் உரிமை - போர்த் தொழிலைத் தனக்குச் சொந்தமாகக் கொண்டமை.

35. மெவரு மநுநெறி விளக்கிய - செய்தற்கரிய மநுவென்னும் மன்னன் வகுத்த வழி நின்ற; கொராஜ கெசரிவந்மர்: இது வீரராசேந்திரனுக்குரிய சிறப்புப் பெயர்; உடையார் - மன்னர்.

36. ராஜ சூளாமணிச் சதுர்வெதி மங்கலம்: இதன் மற்றொரு பெயர் மணி மங்கலம்; இது செயங்கொண்ட சோழ மண்டலத்தில் (தொண்டை நாட்டில்) செங்காட்டுக் கோட்டத்தில் மாகணூர் நாட்டில் உள்ளது. இதனால் வீரராசேந்திரன் காலத்தில் தொண்டை நாடு செயங்கொண்ட சோழமண்டலம் என்று அழைக்கப்பட்டதென்றும்-அது பல கோட்டங்களாகவும், நாடுகளாகவும் பிரிக்கப்பட்டிருந்ததென்றும் நாம் அறிகின்றோம்.

37. மஹாஸபெபெயொம் - மணி மங்கலம் ஊர்ச் சபையோம்; இவ்வாட்டை - இந்த ஆண்டு; அஃதாவது, வீரராசேந்திரன் ஆட்சியின் ஐந்தாம் ஆண்டு (கி. பி. 1068); கன்னி நாயறு - புரட்டாசி மாதம், அமரபக்ஷம் - தேய்பிறைக் காலம்; உத்திரத்து நாள்: இருபத்தேழு

**38.** னம் பெரிய மண்டபத்தெ தர்மம்[23] செய்து கூட்டக் குறைவறக் கூடியிருந்து இவ்வூர் ஜீவிதமுடைய ஸெநாபதிகள் [24]ஜயங்கொண்ட சொழ பிர்ம்மாதிராஜர் தமப்பநா—

**39** ர் மஞ்சிப்பயநாரான ஜயஸிங்க குலாந்தக ப்ரம ராயர் பக்கல் நாங்கள் ஸ்வங்கொண்டு முன்பிவர்க்கு இறையிலியாகக் குடுத்து இவருதா யிவர் அ

**40.** நுபவித்து வருகிற நிலமாவது இவ்வூர் பெருந்தூம்பு நின்றும் போன பெருங்காலுக்கு கிழக்கு[25] பாரத வாய்க்காலுக்கு வடக்கு இவர் விலை கொண்டுடை

**41.** ம[26] கமுகந்தொட்டங் குழி இருநூற்றைம்பதும் பெரியெரி கரைக்கு கிழக்கு பனை யக்தஞ்செரித் தூம்புக் காலுக்கு (த்தெற்கும்) வடக்கு கொரஞ்சி உருத்ரஸிமவித்தந்

---

நாட்களில் பன்னிரண்டாவது நாளாகிய உத்திர நாளில்; அது சதுர்த்தசியும் திங்கட்கிழமையும் கூடியது; சதுர்த்தஸி-பதினான்காவது திதி; பிர்ம்மஸ்தகனம் - கருப்பக் கிருகம், கருப்பக் கிருகத்தையடுத்த மண்டபம்; இதுவே 'பிரமஸ்தான பெரிய மண்டபம்' என்று கூறப்பட்டது.

**38.** **தர்மஞ் செய்து** - பூசை செய்து; **கூட்ட** - அழைக்க; **குறைவறக் கூடி** - ஒருவரும் விடாமல் வந்து; **இவ்வூர் ஜீவிதம் உடைய** - இந்த ஊரில் வாழுபவர்; **ஜீவிதம்** - வாழ்க்கை; **ஸெநாபதிகள் ஜயங்கொண்ட சொழ பிர்ம்மாதிராஜகர்** : இவரைப்பற்றிய குறிப்பினை இச்சாசன முன்னுரைக் குறிப்பில் காண்க. **தமப்பநார்** - தகப்பனார்.

**39.** **மஞ்சிப்பயநாரான** : செயங்கொண்ட சோழ பிரம்மாதி ராசர் தகப்பனார் பெயர் மஞ்சிப்பயனார்; இவருக்கு ஜயசிங்க குலாந்தக பிர்மராயர் என்ற பெயருமுண்டு. முன்னது இவரது இயற்பெயரும், பின்னது சிறப்புப் பெயருமாகும். **நாங்கள்**-ஊர்ச் சபையோம்; **ஸ்வம் கொண்டு** - பொருள் பெற்று; **இவர்க்கு** - ஜயசிங்க குலாந்தக பிரமராயருக்கு; **இறையிலியாக** - வரியில்லாது; **இறை** - வரி; **இவருதாய்** - இவருக்குச் சொந்தமானதாக.

**40—41.** **கமுகந் தொட்டங்குழி இருநூற்றைம்பதும்** : இது மஞ்சிப் பயனார் விலைக்கு வாங்கியது; மணிமங்கலம் கலிங்கலிலிருந்து தண்ணீர் பாயும் பெரிய வாய்க்காலுக்குக் கிழக்கிலும், பாரத வாய்க்காலுக்கு வடக்கிலும் உள்ளது. எனவே, தெற்கிலும் மேற்கிலும் மணிமங்கலம் ஊர் இருந்ததென்று ஊகிக்கலாம். **பெருந்தூம்பு** - பெரிய மடை, கலிங்கல். **பெருங்கால்** - பெரிய வாய்க்கால். **விலைகொண்டுடைய** - விலைக்கு வாங்கிய.

**கமுகந்தொட்டம்** - பாக்குமரச் சோலை; **குழி**-33 அங்குல நீள அகலமுள்ள நிலம்: விளக்கம் முந்திய சாசனக் குறிப்புக்களில் காண்க.

**42.** தொட்டத்துக்கு தெற்கு பெருவதிக்கு மெற்கு(ங் கிழக்கு) மற்று தெவதானம் நீக்கி குழி நாலாயிரத்து இரு நூறும் ஆக இவ்வூர்க் கொலா—

**43.** ல குழி நாலாயிரத்து நாநூற்றைம்பதும் இவ்வூர் ஸ்ரீமத் த்வாராபதி ஸ்ரீ காமக்கொடி விண்ணகர் ஆழ்வார்க்கு [27]அர்ச்சநா பொகமாக இந்த

**44.** மஞ்சிப்பயநார் மகநார் ஸெநாபதிகள் ஜயங்கொண்ட சொழ பிர்மாதிராஜர் குடுத்தார் இந்நிலம் நாலாயிரத்து நாநூற்றைம்ப—

**45.** து குழியும் சந்ரதித்தவத் இந்த ஆழ்வார்க்கு ஸபெஹயொமெ இறையிறுத்துக் குடுப்பொமாநொம் மஹாஸபெயொம் ஸபெயு—

**46.** விருந்து கரையிட்டு கரைப் பொந்து பணித்தார் பிருந்தூர் பவநந்தி ஸஹஸ்ரநும் அரணைப் புறத்து திண்டகூள மாதவக் ரமவித்தநும் ஈவு—

---

**42.** தெவதானம் நீக்கி குழி நாலாயிரத்து இருநூறும் : இஃது இரண்டாவது நிலம் ; இதில் தேவதான நிலமும் கலந்திருந்தது. இதற்கு மேற்கில் பெரிய ஏரிக் கரையும், தெற்கில் பனையஞ்சேரி மதகிலிருந்து தண்ணீர் பாயும் வாய்க்காலும், வடக்கில் கொரஞ்சி ருத்ரக் கிரமவித்தன் தோட்டமும், கிழக்கில் பெருவழியும் எல்லைகளாக இருந்தன. பெருவதி - பெரிய வழி, பாதை ; தெவதானம் - கோவிலுக்குத் தானமாக விடப்பட்ட நிலம் ; இவ்வூர் கொலால்-இந்த ஊரில் வழங்கும் அளவுக் கோலால்.

**43.** ஸ்ரீமத் த்வாராபதி : இது மணிமங்கலம் இராசகோபாலப் பெருமாள் கோயில் இறைவன் பெயர். இவரது மற்றொரு பெயர் ஸ்ரீ காமக்கொடி விண்ணகர் ஆழ்வார் என்பது. அர்ச்சநா பொகம் - கோயில் அர்ச்சகர்களுக்கு விடப்படும் மானியம்; 'அர்ச்சனைக்கு உரிய பொருள்' என்பாருமுளர் ; அர்ச்சனைக்குரிய செலவு எனினுமாம்.

**44.** மஞ்சிப்பயநார் மகநார் : இவர் [சேனாபதிகள் ஜயங்கொண்ட சோழ பிரமாதிராசா ஆவர். குடுத்தார் - கொடுத்தார்.

**45.** சந்ரதித்தவத் - சந்திர சூரியர் உள்ள அளவும் ; இந்த ஆழ்வார்க்கு-இந்த இறைவற்கு;அஃதாவது காமக்கோடி விண்ணகராழ்வார்க்கு; இறை இறுத்து - வரி நீக்கி ; அஃதாவது அந்த நிலத்திற்குரிய வரியை நாங்கள் கொடுத்து, இறைவன் வரியின்றி அனுபவிப்பதற்குக் கொடுப்போம் என்பது.

**46.** கரையிட்டு கரைபொந்து - எல்லையிட்டு அளந்து சரிபார்த்து ; பணித்தார் - சொன்னார் ; அவராவார், பிருந்தூர் பவநந்திசக்ஸ்ரன்

**47.** ணி மாதவ க்ரமவித்தநும் பணிப் பணியால் பணி கெட்டு எழுதினேன் ஊர்க்கரணத்தான் வடுகன் பாக்கரனேன் இவை என் எழுத்து.

---

அரணைப்புறம் திண்டகூல மாதவ கிரம்வித்தன், ஈவுணி மாதவ கிரம வித்தன் ஆகியோர்.

**47.** பணிப்பணியால் - ஒவ்வொருவரும் சொல்ல; பணிகெட்டு - அவரால் சொல்லியவற்றைக் கேட்டு ; ஊர்க்கரணத்தான் - ஊர்ச்சபைக் கணக்கன் ; இவனை 'மத்தியஸ்தன்' என்றும் கூறுவர். வடுகன் பாக்கரன் - வடுகனாகிய பாஸ்கரன். இவை என் எழுத்து: இவ்வாறு சாசனத்தை எழுதியவர் சாசனத் திறுதியில் எழுதுவது வழக்கம்.

பயிற்சி வினாக்கள்

1. செயங்கொண்ட சோழ பிரமாதிராயர் என்பார் யார்? அவரைப் பற்றிக் குறிப்பு வரைக.

2. செயங்கொண்ட சோழ பிரமாதிராயர் சாசனம் யார் காலத்தில் ஏற்பட்டது? அஃது எங்குக் காணப்படுகிறது?

3. செயங்கொண்ட சோழ பிரமாதிராயர் சாசனத்தில் காணப் படும் மெய்க்கீர்த்தியில் வீரராசேந்திரனது எந்தெந்த வெற்றிகள் கூறப் பட்டுள்ளன? அதில் கூறப்படும் செய்திகள் யாவை?

4. பதப் பொருள் தருக:—நிலவயம், சாமந்தர், தண்டு, தண்ட நாயகன், பரிபவம், தூசு, வடகடல், தானை, கொடிப்படை, முதலி, வாகை, தாரம், குலதனம், மெகடம்பம், சூகரம், பரித்தொகை, தென்னன், மதவரை, செங்கீரை, வாரணம், வாரி, திறை, பிரட்டர், பதகம், வல்லவர்கோன், திங்கள், சளுக்கு பதம், அடவி, பொதகம், ஆழி, நிகளம், பிறக்கம், விரதம், ஆட்டை, கன்னி நாயறு, அமரபக்ஷம், பிரம ஸ்தானம், ஜீவிதம், தமப்பனார், ஸ்வம், இறையிலி, தூம்பு, பெருவதி, தேவதானம், இறையிறுத்து, ஊர்க்கரணத்தான்.

5. தொடர்களை விளக்குக:-'நீ வல்லவன் மகன் சிறுவன்,' 'பெரும் புனற் றுறை கங்கைமாநகர்,' 'பூழிமசேதுவரம்பா' 'மநுநெறி விளக்கிய கொ', அர்ச்சனா போகம், கரையிட்டுக்கரை பொந்து, பணிப் பணியால்

6. குறிப்பு வரைக :—விக்கலன், கங்கபாடிக் களம், சாமுண்ட ராயன், நாகவை, கூடல் சங்கம், கோசலை, சிங்கன், உலகமுழுதுடையாள், உலகை, கன்னியர், கங்காகெத்தன், காந்தை, விசய வாடை, விசயாதித்தன்.

7; இச் சாசனத்திலிருந்து வீரராசேந்திரன் ஆட்சிச் சிறப்பும், வெற்றி, புகழ், நாட்டின் எல்லை இவற்றைக் குறிப்பிடுக.

8. "ஆகவ மல்லனு மவற்குமுன் னோட"—எவர்க்கு முன்னோடினான் ? எவ்விடத்தில் ?

9. கூடல் சங்கமத்தில் வீரராசேந்திரன் செய்த போரைக் குறிப்பிட்டு, அதில் அவன் கொண்ட பொருட்களையும் எழுதுக.

10. 'வீரசிங்காசநம் பார்தொழ வெறி' 'சிந்தையு முகமுந் திருப்புயமிரண்டு, மெந்தெழி லுகவையொ டிருமடங்கு பொலிய', 'ஜயபத்திரத் தூண் நாநிலம் பரச நாட்டி', 'வல்லனுகில் வந்து காக்கென்று'—இவை நிகழ்ந்த இடஞ்சுட்டி வரலாற்றுக் குறிப்புத் தருக.

11. 'பழியொடு வாழ்வதிற் சாவது சால நன்றென்று', 'கூடலில் வாரா தஞ்சினர் மன்னவ ரல்லர்'—இவ்வாறு, ஆகவமல்லன் எவ்வெவ்விடங்களில் கூறினன்? நிகழ்ந்தன யாவை?

12. வீரராசேந்திரன் இரட்டபாடி ஏழரை இலக்கத்தைச் செயித்த போது முதுகிட்ட மூவர் யாவர்? தன் வெற்றிக்கு அடையாளமாக அவன் அங்குச் செய்தன யாவை?

13. வீரராசேந்திரனை வேங்கை நாட்டில் எதிர்த்த மூவர் யாவர்? அவர்கள் முடிவு யாது?

14. "அங்கே ராஜாதி ராஜரா ஜன் றெனத்,
தராதிப ராகத் தம்பியமத் தியற்றி"—இயற்றியவர் யார்? எப்பொழுது? வரலாறு தருக.

15. மணிமங்கலம் எங்குளது? அதற்கு வழங்கிய மறுபெயர் யாது?

16. வீரராசேந்திரன் காலத்தில் தொண்டை மண்டலத்துக்கு என்ன பெயர்? அஃது எவ்வாறு பிரிக்கப்பட்டிருந்தது? சான்று காட்டி விளக்குக.

17. மஞ்சிப்பயனர், ஸ்ரீத் வராபதி—இவர்கள் யாவர்? இவர்களுக்கு வழங்கிய வேறு பெயர்கள் யாவை?

18. வீரராசேந்திர தேவன் சாசனத்தில் ஸ்ரீத்வராபதிக்கு அர்ச்சனபோகமாகக் கொடுக்கப்பட்ட நிலத்தைக் கரையிட்டுக் கரைபோந்து பணித்தார் யாவர்? அச்சாசனத்தை எழுதிய ஊர்க்கரணத்தான் யாவன்?

# முதலாம் குலோத்துங்க சோழன் சாசனங்கள்

## 18. முதலாம் குலோத்துங்க சோழன் மெய்க்கீர்த்தி சாசனம்*

### முன்னுரை

முதலாம் குலோத்துங்க சோழன் சாசனங்கள் என்பவை முதலாம் குலோத்துங்க சோழனால் ஏற்பட்ட சாசனமும், அவன் காலத்தில் பிறரால் ஏற்பட்ட சாசனமு மாகும். அவை முதலாம் குலோத்துங்க சோழன் மெய்க்கீர்த்தி சாசனமும், வில்லவராயன் சாசனமுமாம். அவற்றுள் முன்னது, குலோத்துங்க சோழன் ஆட்சியின் பதினைந்தாம் ஆண்டு வரையுள்ள நிகழ்ச்சிகளைக் கூறும் அவன் மெய்க் கீர்த்தி மட்டும் அமைந்தது.

---

* S. I. I., Vol., II, Part II. No. 58, pp. 299-236

1. முதலாம் குலோத்துங்க சோழன் கீழைச் சாளுக்கிய மன்னனான இராசராச நரேந்திரனுக்கு அவன் மனைவியும், முதலாம் இராசேந்திர சோழன் மகளுமான அம்மங்கைதேவியிடத்தில் பிறந்த மகன். இராசேந்திரன் என்பது இவனது இயற்பெயர்.

இவன் வேங்கி நாட்டிற்கு இளவரசனானபோது, 'விஷ்ணு வர்த்தனன்' என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றான். இளமையில் தந்தை இறக்கவே, இவன் சிறிய தந்தையான விசயாதித்தன் கீழைச் சாளுக்கிய நாட்டை ஆண்டான். அப்பொழுது இராசேந்திரன் தன் அம்மானான வீரராசேந்திரன் மேலைச் சாளுக்கியரோடு செய்த போர்களில் உதவியாயிருந்து போர் செய்தான். வீரராசேந்திரன் கி. பி. 1070 இல் இறந்தான். அவனது ஆட்சியின் 1067 ஆம் ஆண்டு இளவரசுப் பட்ட மெய்திய அவன் மகன் அதிராசேந்திரன் அதே ஆண்டில் சோழ நாட்டிற்கு மன்னனானான்; ஆனால் அவன் சில மாதங்களே சோழ மன்னனாயிருந்து, பின் நோய் கண்டு திடீரென்று இறந்து விட்டான். அதிராசேந்திரனுக்குப் பிள்ளையில்லாததால், சோழநாடு அரசனின்றித் தத்தளித்தது.

அப்பொழுது வடபுலத்தில் போர் செய்துகொண்டிருந்த இராசேந்திரன், சோழநாட்டிற்குத் திரும்பி வந்து, தனது தாய்வழி உரிமை பாராட்டி கி.பி. 1070இல் சோழநாட்டிற்கு மன்னனாகி, குலோத்துங்கன் என்னும் பெயரைச் சூடிக் கொண்டான், வீரராசேந்திரன் பரகேசரி எனவும், அவன் மகன் அதிராசேந்திரன் இராசகேசரி எனவும்,

இச் சாசனம் தஞ்சைப் பெரிய கோயில் நடுவிடத்துக் கருப்ப கிருகத்து மேலைப்புறச் சுற்றுச் சுவரின் வெளிப்புறத்தில்

---

குலோத்துங்கன் பரகேசரி எனவும் பெற்றுள்ள பட்டப்பெயர்களால் குலோத்துங்கன் அதிராசேந்திரனுக்குப்பின் சோழ மன்னன் ஆனன் என்பதை அறியலாம்.

முதலாம் குலோத்துங்கசோழன் சக்கர கோட்ட மண்டலத்தை யாண்ட தாராவர்ஷனை வென்று அவன் நாட்டிலுள்ள வைராகரம் என்னுமிடத்தில் யானைகளைக் கைப்பற்றியது, வீரராசேந்திரனுக்கு உதவியாகச் சென்று குந்தள நாட்டில் போர் நிகழ்த்தியது ஆகியவை இவனது இளமைக் காலப் போர்களாகும். இவன் சோழ நாட்டிற்கு மன்னனான பின், முதலில் தன்னை வடபுலத்திலிருந்து எதிர்த்த மேலைச் சாளுக்கிய மன்னனை ஆறுவது விக்கிரமாதித்தனோடும், அவனுக்கு உதவியாக வந்த அவன் தம்பி செயசிங்கனோடும் போர் செய்து நங்கிலி என்னுமிடத்தில் வெற்றி பெற்றான். அதனால் கங்க மண்டலமும் சிங்கணமென்னும் கொண்காணமும் (வனவாசி) இவன் வசமாயின.

பின்னர், இவன் பாண்டிய நாட்டின்மீது படை எடுத்துச் சென்று, அங்குத் தன்னை வந்து எதிர்த்த பாண்டியர் ஐவரையும் வென்று, அங்கங்கே வெற்றித் தூண்கள் நாட்டினான். அப்போரில், முத்துச்சலாபத்திற்குரிய பகுதியும், பொதியில் கூற்றமும், சையமலையும், கன்னியாகுமரிப் பகுதியும் இவன் வசமாயின.

இதன் பின்னர், இவன் சேரநாட்டின்மீது படை எடுத்துச் சென்று, மேலைக் கடற்கரையிலுள்ள விழிஞம், காந்தளூர்ச்சாலை, கோட்டாறு முதலிய இடங்களில் சேர மன்னனுடன் போர் செய்து வென்று, அங்கங்கே தன் படைகளை நிறுவி மீண்டான்.

இனி, இவனது தென்கலிங்கப்போர் இவன் மகன் விக்கிரம சோழனாலும், வடகலிங்கப்போர் இவன் படைத் தலைவனான கருணாகரத்தொண்டைமானாலும் நடைபெற்றன. வடகலிங்கப்போரைச் சிறப்பித்துப் பாடிய நூலே சயங் கொண்டார் பாடிய கலிங்கத்துப்பரணி என்னும் நூலாகும்.

முதலாம் குலோத்துங்கசோழன் கடாரம் கம்போச நாடு, கன்னோசி நாடு, பர்மா முதலிய அயல் நாடுகளுடன் தொடர்பு கொண்டிருந்தான். தன் நாட்டில் சுங்க வரியை நீக்கிச் 'சுங்கந் தவிர்த்தோன்' என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றான். தன் நாட்டிலுள்ள நிலங்களை யளந்து நிலவரியை ஏற்படுத்தினான். இவனுடைய பட்டத்தரசி இரண்டாம் இராசேந்திர சோழனுடைய மகளான மதுராந்தகி என்பவளாகும். இவனுக்கு இராசராச சோழகங்கன், இராசராச மும்முடிச் சோழன், வீரசோழன் விக்கிரமசோழன் முதலிய எழு புதல்வர்களும், இரு புதல்வியரும் இருந்தனர். இவனது ஆட்சிக் காலத்தில் அரசியல் தலைவர்கள் பலரும், குறுநில மன்னரும் வாழ்ந்து வந்தனர்.

காணப்படுகிறது. இச் சாசனமும் இதனோடு சேர்ந்த இராசேந்திரன் காலத்துச் சாசனங்கள் நான்கும் பூமிக்குள் ஐந்தடி ஆழத்தில் புதைந்து கிடப்பதால், இதன் மெய்க்கீர்த்தி யடங்கிய பகுதி மட்டுமே படியெடுக்க முடிந்தது என்பர். இது தமிழ் மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது; நான்கு பகுதிகளையுடையதாய், அறுபத்து நான்கு வரிகளைக் கொண்டது.

இம் மெய்க்கீர்த்தி சாசனத்தின் துவக்கத்தில் முதலாம் குலோத்துங்கசோழன் தன் இளமைப் பருவத்தில் வெங்கிநாட்டிலிருந்து வடபுடலம் சென்று சக்கரகோட்டத்தை வென்று, அதனை ஆண்ட தாராவர்ஷனிடம் திறை பெற்றதும், மேலைச் சாளுக்கியர் நாடான குந்தளநாட்டின்மீது படை எடுத்துச் சென்று, நங்கிலி முதலிய இடங்களில் ஆருவது விக்கிரமாதித்தனை வென்றதும், கங்க மண்டலம், சிங்கண முதலிய நாடுகளைச் செயித்ததுமான செய்திகள் கூறப்படுகின்றன. பின்னர் அவன் தன் தாய்வழி உரிமை பாராட்டி முதலாம் குலோத்துங்கன் என்னும் பெயரொடு சோழ நாட்டிற்கு மன்னனானதும், அவனது ஆட்சிச் சிறப்பும், பாண்டி மண்டலத்தில் பஞ்ச பாண்டியரை வென்று வெற்றிக் கொடி நாட்டியதும், பொதியில், சையம், கன்னியாகுமரி முதலிய இடங்களை வென்றதும், குடமலை நாட்டில் புகுந்து கோட்டாறு முதலிய இடங்களில் தன் படைகளை நிறுவியதுமான செய்திகள் அமைந்துள்ளன. இவை முதலாம் குலோத்துங்கன் வரலாற்றை அறிவதற்குப் பெரிதும் உதவுவதோடு, கலிங்கத்துப் பரணியில் அவனைப்பற்றிக் கூறப்பட்டவற்றை உறுதிப்படுத்தவும் உதவுகின்றன.

முதலாம் குலோத்துங்க சோழன் கி. பி. 1070 முதல் 1120 ஆம் ஆண்டு வரை சோழ நாட்டை ஆண்டான். இச் சாசனம் அவனது ஆட்சியின் பதினைந்தாம் ஆண்டில் ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1085 ஆம் ஆண்டு என்னலாம்.

சாசனம்

(1)ஸ்வஸ்திஸ்ரீ
புகழ்சூழ்ந்த புணரி யகழ்சூழ்ந்த புவியில்ப்
பொன்னெமி யளவுந் தன்னெமி னடப்ப

---

குறிப்புரை

1. புகழ் சூழ்ந்த புணரி யகழ்சூழ்ந்த புவியில்: இது முதற் குலோத்துங்கசோழன் மெய்க்கீர்த்தியின் துவக்கத்தொடர். இவனுடைய

*விளங்கு சயமகளை யிள(2)ங்கோப் பருவத்து*
*சக்கர கோட்டத்து விக்கிரமத் தொழிலால்*
*புதுமணம் புணர்ந்து மதவரை யீட்டம்*
*வயிரா கரத்து வாரி அயின் முனை(3)க்—*

---

மெய்க்கீர்த்திகளில் சில 'புகழ்மாது விளங்க செயமாது விரும்ப' என்றும், வேறு சில, 'திருமன்னி விளங்கும்' என்றும் தொடங்கும்.

புணரியகழ் - கடலாகிய அகழி; புணரி - கடல். 'புகழ் சூழ்ந்த புவி, புணரி யகழ் சூழ்ந்த புவி' என்று கூட்டுக. பொன்னெமி யளவும்- பொன் மலை வரையும்; பொன்மலை - மேரு மலை; தன்னெமி - தன் ஆணை; நெமி - ஆணை, கட்டளை; விளங்கு சயமகள் - புகழ் விளங்கும் வெற்றி; இங்கு வெற்றி ஒரு பெண்ணாக உருவகம் செய்யப்பட்டுள்ளது. இளங்கோப் பருவத்து - இளவரசனாயிருந்த காலத்தில்.

2. சக்கர கோட்டம்: இது மத்திய மாகாணத்திலுள்ள வத்ஸ ராச்சியத்தில் உள்ளது. இதனை இப்பொழுது இந்திராவதி நதிக் கரையில் உள்ள 'சித்திரக் கூடம்' என்பர். இதைத் தலைநகராகக் கொண்டது சக்கரக்கோட்டக மண்டலமாகும். இராசேந்திரன் என்னும் முதற் குலோத்துங்கன் இளவரசனாயிருந்த காலத்தில், திக்கு விசயம் செய்தற்கெண்ணி வடபுலம் நோக்கிச் சென்று, இதையாண்ட தாராவர்ஷனைச் செயித்து, அவனிடம் திறை கொண்டான் என்பது வரலாறு. விக்கிரமத் தொழில் - வீரத் தொழில்; விக்ரமம் - வீரம்.

புதுமணம் புணர்ந்து - சயமகளை இளங்கோப் பருவத்துப் புதுமணம் புணர்ந்து என்றபடி. அஃதாவது, குலோத்துங்கன் இளவரசனாயிருந்த காலத்தில் வடபுலம் சென்று தன் வீரத் தொழிலால் சக்கரக்கோட்டம் முதலிய பல புதிய நாடுகளைச் செயித்து என்பது. மதவரை யீட்டம், யானைகளின் தொகுதி; யானைப்படை; வரை - மலை; மதம் பொழியும்- வரை 'மதவரை' எனப்பட்டது; வயிராகரத்து வாரி - வயிராகரம் என்னும் இடத்தில் கைப்பற்றி; வயிராகரம் என்பது, மத்திய மாகாணத்திலுள்ள தோரூர். அங்கு யானைகளும், வைரச் சுரங்கங்களும் அதிகம் உண்டு என்பர். குலோத்துங்கன் தன் வடபுல யாத்திரையில் அவ் வூரிலுள்ள எண்ணிறந்த யானைகளைக் கைப்பற்றினன் என்று தெரிகிறது. அயின்முனை - கூரிய முனை; இங்கு, வாள் முனையைக் குறித்தது.

3. கொந்தள வரைசர்தந் - மேலைச் சளுக்கிய அரசர்களுடைய; கொந்தளம் - மேலைச் சளுக்கியராண்ட நாடு. முதற் குலோத்துங்கன் தன் வடபுல யாத்திரையில் சளுக்கியராண்ட பகுதியையும் தாக்கினன் என்று இதனால் தெரிகிறது. தளம் - சேனை; இரிய - புறங்காட்டி ஓட; வாளுறை கழித்து - வாளெடுத்து; தோள்வலி காட்டி - போர் செய்து; பொர்ப்பரி நடாத்தி - போர் செய்யும் குதிரைகளைச் செலுத்தி.

கொந்தள வரைசர் தந்தள மிரிய
வாளுறை கழித்துத் தொள்வலி காட்டிப்
பொர்ப்பரி நடாத்திக் கீ(4)ர்த்தியை நிறுத்தி
வடதிசை [1]வாகை சூடித் தென்திசை
தெமரு கமலப் பூமக(5)ள் பொதுமையும்
பொ(6)ன்னி யாடை நன்னிலப்(7) பாவை
தனிமையுந் த(8)விரப் புனிதற் றிருமணி
மகுடம்[2] (9) முறை மையிற் சூடித்

---

4 வடதிசை வாகை சூடி - வடக்குத் திசையில் பகைவர்களை வென்று வெற்றி மாலைசூடி; மத்திய மாகாணத்திலுள்ள வயிராகரத்தை எரியூட்டி அதிலுள்ள யானைகளைக் கைப்பற்றியதும், சக்கரக் கோட்டக மண்டலத்தை யாண்ட தாரவர்ஷனைச் செயித்துத் திறை கொண்டதும், கொந்தளர் சேனையை முறிய அடித்ததும் முதற் குலோத்துங்கன் வடதிசையில் கொண்ட வெற்றிகளாகும். தென் திசை- தென்றிசையிலுள்ள பாண்டிய நாட்டில்.

5. தெமரு கமலப்............தனிமையும் தவிர: வீரராசேந்திரன் இறந்த பின்னர், சோழநாட்டை ஆளுதற் குரியார் இல்லாமல், உள் நாட்டுக் கலகங்கள் உண்டாகத் தலைப்பட்டன; தெற்கே பாண்டிய மன்னர் போரிட்டுத் தங்கள் அடிமைத் தளையை நீக்க முயன்றனர். இவ்வாறு பொதுமையிலும், தனிமையிலும் கிடந்து வாடிய சோழ இராச்சியத்திற்குத் துணை செய்வான் வேண்டி, வேங்கி நாட்டையாண்ட இரண்டாம் இராசேந்திரன் தன் தாய்வழி உரிமை பாராட்டிக் 'குலோத்துங்கன் என்னும் பெயரோடு சோழ நாட்டிற்கு அரசனானான். அச் செய்தியை இவ்வடிகள் புலப்படுத்துகின்றன.

தெமரு கமலப் பூமகள்: இலக்குமி; அஃது இங்கு சோழராட்சியாகிய செல்வத்தைக் குறித்து நின்றது. பொதுமை - பொதுத் தன்மை.

6 பொன்னி - காவிரி; காவிரி நதி பாயப் பெற்ற சோழநாடு பொன்னி யாடை நன்னிலப் பாவை' எனப்பட்டது.

7 8. தனிமை - உதவியற்ற நிலை: தவிர - நீங்க; புனிதற் றிரு மணிமகுடம் - சிறந்த மதிப்பிற்குரிய மணிமுடி; 'புனிதத்திரு' என்றும் பாடம்.

9. முறைமையில் சூடி - முறையான உரிமை கொண்டாடி முடி சூடி; முதற் குலோத்துங்கன் முதலாம் இராசேந்திர சோழனுக்குப் பௌத்திரனும், வீரராசேந்திரனுக்கு மருமகனுமாவா னாதலின், சோழ ராச்சியத்திற் குரியவர் வேறு ஒருவரும் இல்லாத நிலையில் அவன் தன் தாய்வழி யுரிமை கொண்டாடி முடி சூடினான்.

தந்நடி யிர(10)ண்டுந் தடமுடி யாகத்
தொன்னில வெ(11)வந்தர் சூட முன்னை
மனுவாறு பெருக (12)கலியாறு வறுப்பச்
செங்கோல் திசை(13)தொறுஞ் செல்ல வெண்குடை
யிருநில (14)வளாக வெங்கணுந் தனாது
திருநிழல் வெ(15)ண்ணிலாத் திகழ ஒருதநி
மெருவிற் புலி(16)விளை யாட வார்கடற்
றீவாந்தரத்து பூபாலர்(17) திறைவிடு தந்த
கலஞ்சொரி களிறு முறை(18)முறை நிற்ப விலங்கிய
தெந்னவன் க(19)ருந்தலை பருந்தலைத் திடத்தன்
பொ(20)ன்னகர் புறத்திடைக் கிடப்ப இன்னாள்

---

**10-11.** தந்நடி......வெந்தர் சூட :—தன் பாதங்களில் நிலவேந்தர் பலர் விழுந்து வணங்க ; தடமுடி - கிரீடம் ; முன்னை - ஆதியில் ; மனுவாறு - மனு வேந்தன் வகுத்த நெறி - பெருக - நடக்க.

**12.** கலியாறு வறுப்ப - துன்பமாகிய தொடர் குறைய ; கலியாறு என்பதற்குத் 'துன்பக்கடல்' எனப் பொருள் கொள்ளினுமாம். செங்கொல் - ஆட்சி.

**13-14.** திசை தோறும் - நாற்றிசையும் ; இருநில வளாகம் - உலகம்; 'எங்கணும் தனாது திருநிழல் வெண்ணிலாத் திகழ' என்று கொள்க ; தனாது - தனது.

**15.** வெண்ணிலாத் திகழ—வெண்ணிலாவினைப் போல ஒளி வீச ; ஒரு தநி மெரு - ஒப்பற்ற மேருமலை; புலி விளையாட - புலிக்கொடி பறக்க ; புலிக்கொடி சோழருக் குரியது.

**16-17.** வார்கடற் றீவாந்தரத்து பூபாலர்: கடல் நடுவணுள்ளதாய தீவுகளிலுள்ள அரசர்கள் ; வார்கடல் - நீண்ட கடல்; திறை விடு தந்த- திறையாகச் செலுத்திய: கலஞ்சொரி களிறு-மதக்களிறு; கலஞ்சொரி கல மளவாக மதத்தைச் சொரியும்; முறை முறை நிற்ப - வரிசை வரிசையாக நிற்ப.

**18-19.** விலங்கிய - புகழ் விளங்கும் ; 'பகைத்து வேறுபட்ட' எனினுமாம். 'கருந்தலை - பெரிய தலை ; பருந்தலைத்திட - பருந்து உண்ணும்படி துணித்திட என்பது.

**20.** பொன்னகர்ப் புறத்திடைக் கிடப்ப - தென்னவன் கருந்தலை பொன்னகர்ப் புறத்திடை பருந்தலைத்திடக் கிடப்ப என்பது. பொன்னகர் என்பது, கங்கைகொண்ட சோழபுரத்தினைப் போலும். இது விக்கிரமாதித்தனுக்குத் துணையாகத் திரிபுவன பாண்டியனுடன் முதற் குலோத்துங்க சோழன் நடாத்திய போராய் இருத்தல் வேண்டுமென்றும், இஃது அவனுடைய ஆட்சியின் ஐந்தாவது ஆண்டில் நடந்

பி(21)ற்குலப் பிறை பொல் நிற்பிழை யென்று(22)ஞ்
சொல்லெதிர் கொடிற் றல்லது தன்(23)கை
வில்லெதிர் கொடா விக்கலந், கல்லதர்
ந(24)ங்கிலி துடங்கி மணலூர் நாடுவென்த
து(25)ங்க பத்திரை யளவும் (26)வெங்கணும்
பட்ட வெங்களிறும் (27) விட்டதங் மா(28)னமுங்
கூறிந வீரமுங் கிடப்ப (29) எறிந
மலைகளு முதுகு நெளிப்ப (30) இழிந்த
நெதிகளுஞ் சுழன்றுடை(31)க் தொட விழுந்த

---

திருத்தல் வேண்டுமென்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். இன் நாள் — இதே சமயத்தில்.

**21—22.** பிற்குலப் பிறைபொல் - இளம் பிறைச் சந்திரனைப் போல; 'பிழைபோல்' என்றும் பாடம். நிற்பிழை - நிலையான குற்றம்; சொல்லெதிர் கொடிற்றல்லது - சொல்லுக்கு மாறாகக் கோடிற்று அல்லாமல் அஃதாவது 'நிற் பிழை' என்னும் சொல் பிழை பட்டதல்லாமல் என்பது.

**23.** தன்கை வில்லெதிர் கொடா விக்கலந் - தன்னுடைய கை வில்லின் குறி தவறாத விக்கலன்; விக்கலந் - விக்கிரமாதித்தன்; கல்லதர் - குன்றுகளுக்கிடையிலுள்ள பாதை (Rocky roads); அதர் - வழி.

**24.** நங்கிலிதுடங்கி மணலூர் நாடுவென்த: முதற் குலோத்துங்கன் ஒரு படையுடன் வடக்கு நோக்கிச் சென்று விக்கிரமாதித்தன் தம்பி செயசிங்கன் ஆண்டு வந்த வனவாசியைக் கைப்பற்றினன்; அதனல் விக்கிரமாதித்தன் கோலார் சில்லாவிலுள்ள நங்கிலி என்னுமிடத்தில் அவனை எதிர்த்துப் போர் புரிந்தான். போரில் குலோத்துங்கன் வெற்றிகொண்டு விக்கிரமாதித்தனைத் துங்கபத்திரைக்கு அப்பால் போகத் துரத்திச் சென்றான். அங்ஙனம் துரத்திச் சென்றவன் இடையிலுள்ள மணலூர், அளத்தி முதலான இடங்களில் மீண்டும் அவனைப் புறங்கண்டான் என்பது. இப்போர் முதற்குலோத்துங்கனது ஆட்சியின் பதினொன்றாம் (கி. பி. 1081) ஆண்டில் நடைபெற்றிருக்க வேண்டும்.

**25—28.** துங்கபத்திரை யளவும் வெங்கணும்: நங்கிலி துடங்கித் துங்கபத்திரை அளவாகவுள்ள எல்லா இடங்களிலும் என்பது. இஃது இறுதியில் துங்கபத்திரை நதிக்கரையில் நடந்த போரைப்பற்றியது. 'நங்கிலி துடங்கி......எங்கணும்' என்பதற்குப் பதிலாக, 'அளத்தியிலிட்ட களிற்றின் நீட்டமும்' என்ற பாடம் சில பிரதிகளில் காணப்படுகிறது. பட்ட வெங்களிறு - இறந்துபட்ட யானைகள்.

**29—31.** விட்ட தந் மானமும் - பெருமை; கூறிந வீரமுங் கிடப்ப - வீரக் கூற்றும் போர்க்களத்தே நிற்க; எறிந மலைகளும் முதுகு

கடல்களுந் தலைவி(32)ரித் தலமரக் குடதிசை
தன்னா ளுகந்து (33) தானுந் தாதையும்
பன்னா ளிட்ட பல(34)பல முதுகும்
பயந்தெதிர் மாறிய ஐயப்(35)பெருந் திருவும்
புகழிக் செல்வியும்
வாளா ரொண்(36)கண் மடந்தைய ரீட்டமும்
மீளாது குடுத்த வெ(37)ங்கரி நிரையுங்
கங்க மண்டலமுஞ் சிங்கண மெ(38)ன்னும்
பாணி இரண்டும் ஒருவிசைக் கொண்டு
(39)ஈண்டிய புகழொடு பாண்டி மண்டிலங்
(40)கொள்ளத் திருவுளத் தருளி வெள்ள
வருபரி தரங்கமும்(41)பொருகரித் தரங்கமுந்

---

நெளிப்ப - ஏறிச்சென்ற மலைகளிலெல்லாம் பாதைகள் உண்டாக; இழிந்த நெதிகள்-சேனைகள் இறங்கிய நதிகள்: கடல்களும் தலைவிரித் தலமர-கடலலைகள் ஒலிக்க; அஃது இங்குச் சேனைத்திரளைக் குறிக்கும்.

**32—39.** குடதிசை தன்னா ளுகந்து......கொண்டு ஈண்டிய புகழொடு : துங்கபத்திரைக் கரையில் நடந்த போரில், விக்கிரமாதித்தனும் அவன் தம்பி சயசிங்கனும் தோல்வியுற்று ஓடி ஒளிந்தனர். பொருட்குவியலும், மடந்தைய ரீட்டமும், எண்ணிறந்த யானைகளுமன்றி, கங்கமண்டலம், சிங்கணம் என்னும் இரு நாடுகளும் குலோத்துங்கன் வசமாயின என்பது. குடதிசை - மேலைத்திசையில்.

பன்னுளிட்ட பல பல முதுகும் - பல நாட்களாகப் புறங்காட்டிய வீரர்களும்; பயந்தெதிர் மாறிய - பயந்து பின் வாங்கிய; ஐயப் பெருந்திரு- வெற்றி; வாளா ரொண்கண் மடந்தையர் - வாள்போன்ற கூரிய கண்களையுடைய பெண்கள்; ஈட்டம் - கூட்டம், தொகுதி; மீளாது குடுத்த - மீட்க இயலாது விட்ட; வெங்கரி நிரை-யானைக் கூட்டங்கள்; சிங்கணம் - சிங்கணம் என்னும் நாடு; இதனைக் கொண்கானம் என்றும் கூறுவர். பாணி இரண்டும் - நாடுகள் இரண்டையும்; அவை கங்க மண்டலமும் கொண்கானமும்.

**39—41.** ஈண்டிய புகழேடு - நிறைந்த புகழோடு; திருவுளத் தருளி - எண்ணங்கொண்டு; வெள்ள வருபரி தரங்கமும் - வெள்ளமாய் வரும் குதிரைகளாகிய அலைகளும்; வெள்ளம் - கூட்டம்; தரங்கம் - அலை. பொருகரித் தரங்கம் - போர்செய்யும் யானைகளாகிய அலைகளும்; தந்திர வாரியும்-போர்வீரர்களாகிய கடலும்; இங்குக், குலோத்துங்கன் காலாட்படை கடலாகவும், குதிரைப் படையும் யானைப்படையும் அக் கடலிடை எழும்பும் அலைகளாகவும் உருவகிக்கப் பட்டுள்ளன.

தந்திர வாரியு முடைத்தா(42)ய்
வடகடல் தென்கடல் படர்வது போலத்
த(43)ன்பெருஞ் சேனை ஏவிப் பஞ்வர்
ஐய்வரும் பொ(44)ருத பொர்க்களத்து அஞ்சி
வெருவி முதுகுநெ(45)ளித் தொடி அரணைநப்புக்க
காடு துடைத்து(46) நாட்டடிப் படுத்து
மற்றவர் தம்மை(47)ம வனசரர் திரியும்
பொற்றை(48)வெஞ்சுர மெற்றிக் கொற்ற
வி (49)ஜய ஸ்தம்பம்எத் திசைதொறும் நிறு(50) த்தி
முத்திச் சலா(51)பமும் முத்தமிட் பொதியிலும்
மத்த(52)வெங் கரிபடு மைய்யச் சய்யமுங்
கன்நி(53)யுங் கைக்கொண் டருளி தென்நாட்
டலைகாட்டி(54)ய்குட மலைநா டுள்ள

---

**42.** வடகடல் தென்கடல் படர்வது போல: வடகடல், தென்கடல் மேல் படர்வதுபோல வடக்கேயுள்ள சோழர் படை தெற்கேயுள்ள பாண்டியர் படைமேல் பாய்ந்து என்பது.

**43—46.** பஞ்வர் ஐய்வரும் பொருத: வீரராசேந்திர தேவன் காலம் வரை சோழ மன்னர்களின் ஆட்சிக்குட்பட்டுத் திறை செலுத்திவந்த பாண்டியர்கள் அதிராசேந்திரன் பட்டமெய்தியதும், சுயாதீனமடைந்து பாண்டிய நாட்டை ஐந்து பிரிவுகளாகப் பிரித்துத் தனித்தனியாட்சி புரிந்து வந்தனர். அவர்களே 'பஞ்சவர் ஐவர்' எனப்பட்டனர். அவர்களைத் தன்னடிப்படுத்த முதற் குலோத்துங்கன் கி. பி. 1084 ஆம் ஆண்டு படை எடுத்து வாகை சூடினான். பாண்டியர் ஐவரும் புறங்காட்டி ஓடி ஒளிந்தனர். முதற் குலோத்துங்கன் தான் வென்ற பகுதிகளில் வெற்றித் தூண்களை நாட்டினான். கோட்டாறு என்னும் இடத்தில் தன் படைகள் தங்குவதற்கு ஒரு படைவீடு அமைத்தான். இப் போரில் இவன் கைப்பற்றிய நாடுகளுள் முத்துச் சலாபத்திற்குரிய மன்னார்குடாக் கடலைச் சார்ந்த நாடும், பொதியில் கூற்றமும், கன்னியாகுமரிப் பகுதியும் சிறந்தவையாகும்.

வெருவி - பயந்து; நெளித்தொடி - புறங்காட்டி ஓடி; அரணைநப் புக்க காடு துடைத்து - தக்க காவல் என்று புகுந்த காட்டை அழித்து; நாட்டடிப்படுத்து - நாட்டைத் தனக்கு அடிமைப்படுத்தி.

**47—50.** வனசரர்-வேடர்: பொற்றை வெஞ்சுரம் - சிறு குன்றுகளை யுடைய பாலைவனம்; எற்றி - துரத்தி, கொற்ற விஜய ஸ்தம்பம் - வெற்றித் தூண்கள்.

**51—52.** முத்தமிட் பொதியிலும்: முத்தமிழ் பேசப்படும் பொதியில் கூற்றமும்; கூற்றம் - நிலப்பகுதி; மத்தவெங் கரிபடு - யானைகள்

சாவெ றெல்லாம் இரு(55)விசும் பெற
மாவெ றியதங் வருதநித் தலைவரை(56)க்
குறுகலர் குலையக் கொட்டாறுட்பட
நெறிக(57)ளில் நிலைகளிட் டருளி பொங்கொளி
யாரமும் (58) திருப்புயத் தலங்கலும் பொல்
வீரமுந் தி(59)யாகமும் விளங்க வீற்றிருந்
தருளிந கொவி ராஜகெ(60)கசரி வந்ம
ராநசக்ர வத்திகள் ஸ்ரீகொலொத் துங்க
(61)சொழ தெவற்க்கு யாண்டு பதினஞ்சா
(62)வது உடையார் ஸ்ரீ வீரராசெந்ர தெவர் நம்பிராட்
(63)டியாரான அருமொழிநங்கை யாராந ஸிம்ஹறன்மஹா
(64) தெவியார்........

---

நிறைந்த; மையச்சய்யமும் - மேலைத்தொடர்ச்சி மலைப்பகுதியும்; சய்யம்-மலை; கன்நி - கன்னியாகுமரிப் பகுதி.

**53.** தென்நாட் டலை காட்டி - கன்னியாகுமரியைச் சோழநாட்டின் தெற்கு எல்லையாகக் காட்டி என்பது.

**54—55.** குடமலை நாடு - கொங்குநாடு ; சாவெறு - சாவேறு. பகையரசனைச் சூழ்ந்து காக்கும்படை ஒருமுகமாகப் பாய்ந்து ஊடறுத்துச் செல்ல முயன்று அந்நிலையில் உயிர் துறத்தலையே விரதமாகக் கொண்ட வீரர் தொகுதி (heroes) ; இரு விசும் பெற - மடிய; மா - குதிரை ; வரு தநித் தலைவர் - படைத் தலைவர்.

**56—59.** குறுகலர் குலைய - பகைவர் அழிய; கொட்டாறு - கன்னியாகுமரியை யடுத்த ஒரு நகர் ; இதில் குலோத்துங்கன் படைவீடு ஒன்றிருந்தது.

நெறிகளில் நிலைகளிட் டருளி : குலோத்துங்கன் படை எடுத்துச் சென்ற வழிதோறும் படைவீடு அமைத்து என்பது. ஆரம் - முத்து மாலை ; அலங்கல் - பூமாலை ; ஆரமும் அலங்கலும்போல வீரமும் தியாகமும் விளங்க என்றபடி.

**60.** ராஜகெசரி வந்மர் : இது குலோத்துங்கன் பட்டப்பெயர் ; இவனுக்கு முன் முடிசூடிய அதிராசேந்திரன் 'பரகேசரி' என்று அழைக்கப்பட்டான். சக்கரவத்திகள் : சோழஅரசர்கள் பெரும்பாலும் 'உடையார்' என்றே அழைக்கப்பட்டனர் ; முதலாம் குலோத்துங்கன் கால முதல் அவர்கள் 'சக்கரவர்த்திகள்' என்றும், 'திரிபுவன சக்கரவர்த்திகள்' என்றும் அழைக்கப்பட்டனர்.

**61—64.** யாண்டு பதினஞ்சாவது-ஆட்சியின் பதினைந்தாவது ஆண்டு; உடையார் ஸ்ரீ வீரராசெந்ர தெவர் - இவன் சோழநாட்டை கி. பி. 1063

முதல் 1070 வரை ஆண்டான்; முதலாம் குலோத்துங்கனுக்கு இவன் அம்மான் முறையினன். இவனது பட்டத்தரசியின் பெயர் உலக முழுதுடையாள். இவனுக்கு அருமொழி நங்கை என்னும் மற்றொரு மனைவியும் உண்டு என்பது, இச் சாசனத்தால் அறியப்படுகிறது.

**நம்பிராட்டியார்** - மனைவியார்; **அருமொழி நங்கையாராந வீரம்ஹன் மஹாதெவியார்:** அருமொழி நங்கை என்பது இயற்பெயர்; வீரம்ஹன் மஹாதெவியார் என்பது சிறப்புப்பெயர். இவள் வீரராசேந்திரன் மனைவியருள் ஒருத்தி. இவள் தன் கணவனான வீரராசேந்திரன் இறந்த பின்னும், பதினைந்து ஆண்டுகள் வரை உயிரோடிருந்தாள் என்பது இச் சாசனத்தால் அறியப்படுகிறது.

### பயிற்சி வினாக்கள்

1. முதலாம் குலோத்துங்க சோழன் மெய்க்கீர்த்தி சாசனம் எங்குக் காணப்படுகிறது? அஃது எப்பொழுது ஏற்பட்டது? அதில் காணப்படும் செய்திகள் யாவை?

2. முதற் குலோத்துங்கன் மெய்க்கீர்த்திகளின் தொடக்கங்கள் சிலவற்றை எழுதுக.

3. குலோத்துங்கன் இளமைப் பருவத்தில் அடைந்த வெற்றிகள் யாவை?

4 குறிப்பு வரைக:—சக்கரகோட்டம், வயிராகரம், விக்கலன், நங்கிலி, முத்தின் சலாபம், பொதியில், சையம், கோட்டாறு, பஞ்சவர்.

5. "தேமரு கமல......தனிமையுந் தவிர" குலோத்துங்கன் செய்தது யாது?

6. முதற் குலோத்துங்கன் காலத்துச் சோழநாட்டு எல்லையைச் சாசனக் குறிப்புக்கொண்டு எழுதுக.

7. விளக்கம் தருக:—பிற்குலப் பிறைபோல் நிற்பிழை எனும் சொல், வடகடல் தெந்கடல் படர்வது போல, 'சாவெறெல்லாம் தநி விசும்பேற......நிலைகளிட் டருளி'.

8. 'பாணி இரண்டும் ஒரு விசைக் கைக்கொண்டு' - கொண்டது யார்? பாணி இரண்டு எவை?

9. குலோத்துங்கன் பெயரோடு சேர்த்துச் சொல்லப்பட்ட அடைமொழிகள் யாவை? அவன் வெற்றிச் சிறப்பைத் தருக.

10. குலோத்துங்க சோழனைப் பற்றிக் கூறும் சாசனங்கள் எவை? அவை அவன் ஆட்சியில் எந்தெந்தக் காலங்களில் ஏற்பட்டன? அவைகளால் அறியப்படும் குலோத்துங்கன் செய்திகள் எவை?

11. பொருள் தருக:—கண்ணாறு, சாவேறு, விச்சாதிரம், ஒருமா.

12. அருமொழி நங்கை யாவர்? அவளுக்கு வழங்கிய வேறு பெயர் யாது?

# 19. வில்லவராயன் சாசனம்*

## முன்னுரை

வில்லவராயன் சாசனம் என்பது, வில்லவராயன் என்னும் பெயருடைய ஒருவன் திருவானைக்கா திரிபுவனபதியார்க்கு உரியதான தேவதான நிலத்தை அக் கோயில் கன்மிகளிடம் விலைக்கு வாங்கி, அதனை உழுது திருத்தி அக்கோயிலில் அவன் எழுந்தருள்வித்த இடங்கை நாயகற்கும் நம்பிராட்டியார்க்கும் தானமாகக் கொடுத்ததைப் பற்றிய சாசனமாகும். இச் சாசனம் முதலாம் குலோத்துங்கன்† காலத்தில் அவன் ஆட்சியின் நாற்பத்தேழாம் ஆண்டில் ஏற்பட்டது. இது திருச்சிராப்பள்ளி மாவட்டம் திருவரங்கம் சம்புகேசுவரர் கோயில் இரண்டாவது பிரகாரத்தின் கீழைச் சுவரில் காணப்படுகிறது. தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது. இருபத்தொரு பத்திகளையுடையது.

இச் சாசனத்தின் முற்பகுதியில் முதலாம் குலோத்துங்கன் வெற்றிகளையும், கன்னியாகுமரி முதல் துங்கபத்திரை வரையுள்ள அவனது நாட்டுச் சிறப்பினையும், அவன் தன் பட்டத்தரசியான உலகமுழுதுடையாளோடு வீற்றிருந்த சிறப்பினையும் கூறும் அவனது மெய்க்கீர்த்தி அமைந்துள்ளது. பிற்பகுதியில், வில்லவராயன் என்போன், திருவானைக்கா எம்பெருமான் கோயில் நிலமாய்ப் பயனின்றிக் கிடந்த நிலத்தை விலைக்கு வாங்கி நன்முகப் பண்படுத்திப் பயிரிட்டு, ஆண்டு ஒன்றுக்கு அக்கோயிலில் அவன் எழுந்தருளச்செய்த இடங்கை நாயகர்க்கும் நம்பிராட்டியார்க்கும் நாள் பூசைக்கும் திருவிழாவிற்குமாக, இருபத்து முக்கலனே இருதூணிக் குறுணி நெல்லைக் கார்பாதி பசானம் பாதியாக அளப்பதாக அக் கோயில் கன்மிகளிடம் உறுதிசெய்து கொடுத்த செய்தி அமைந்துள்ளது.

முதலாம் குலோத்துங்க சோழன் கி. பி. 1070 முதல் 1120 ஆம் ஆண்டு வரை சோழநாட்டை ஆண்டான். இச் சாசனம் அவனது ஆட்சியின் 47 ஆம் ஆண்டு ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1117 ஆம் ஆண்டு என்னலாம்.

---

* S. I. I. Vol. III. Part II, No. 76, PP. 168—172.

† முதலாம் குலோத்துங்கன் வரலாற்றினை இதற்கு முந்திய சாசன முன்னுரைக் குறிப்பில் கண்டுகொள்க.

### சாசனம்

(1)ஸ்வஸ்திஸ்ரீ
புகழ்சூழ்ந்த புணரி யகழ்சூழ்ந்த புவியில்
பொங்கெமி யளவுந் தங்கெமி நடப்ப
விளங்கு சயமகளை யிளங்கொப் பருவத்து
சக்கர கொட்டத்து விக்கிரமத் தொழிலால்
புதுமணம் புணர்ந்து மதவரை யீட்டம்
வயிரா கரத்து வாரிஅயிர்(2) முனைக்—.
கொந்தள வரசர் தந்தள மிரிய
வாளுறை கழித்துத் தொள்வலி காட்டிப்
பொர்ப்பரி நடாத்திக் கீர்த்தியை நிறுத்தி
பொன்னி யாடை நன்னிலப் பாவை
தனிமையுந் தவிரப் புனிதற் றிருமணி
(3)மகுடம் முறை மையிற் சூடித்

---

**1. ஸ்வஸ்தி ஸ்ரீ :** இது சாசனங்களில் மங்கலம் குறித்து வரும் வட மொழித்தொடர். **புகழ் சூழ்ந்த புணரி யகழ் சூழ்ந்த புவியில்** - முதலாம் குலோத்துங்கன் சாசனங்களுள் சிலவற்றில் வரும் மெய்க் கீர்த்தியின் தொடக்கம் இது. **புணரி** - கடல்; **அகழ்** - அகழி. **பொந்நெமி யளவும்** - பொன்மலையாகிய மேரு வரையும்; **தந்நெமி :** தன் ஆணை; **சயமகள்** - வெற்றியென்னும் பெண்; **இளங்கோ பருவம்** - இளவரசனாயிருந்த காலம்.

**சக்கர கொட்டம் :** இது மத்திய மாகாணத்திலுள்ள வத்ஸ ராச்சியத்திலுள்ளது; இதனைக் குலோத்துங்கன் காலத்திலாண்டவன் தாராவர்ஷன் என்பவனாவான். **விக்கிரமத் தொழில்** - வீரத் தொழில்.

**புதுமணம் புணர்ந்து** - வெற்றிகொண்டு; **மதவரை யீட்டம்**-யானைகள்; **வயிராகரம் :** இது சக்கரகோட்ட மண்டலத்தை யடுத்திருந்த ஓர் ஊர்; குலோத்துங்கன் இதனை எரியூட்டி, இங்குள்ள யானைகளைக் கைப்பற்றினான்.

**2. கொந்தளவரசர்** - சாளுக்கிய மன்னர்; மேலைச் சாளுக்கிய மன்னனை விக்கிரமாதித்தன் ஆட்சிக்குட்பட்ட பல சிற்றரசர் இருந்தனர்; அவர்களில் கொந்தள அரசர்களும் ஒரு சிற்றரச மரபின ராவர். இவர்களை நுளம்ப பாடியை ஆண்ட 'பாண்டிய மன்னர்' என்பர் இக்கால ஆராய்ச்சியாளர்.

**தேமரு கமலப் பூமகள்** - சோழ ராச்சியம்; **பொன்னியாடை நன் நிலப்பாவை** - காவிரி நதி பாயும் சோழநாடு.

**3. மகுடம் முறைமையிற் சூடி :** சோழநாட்டிற்குரிய மகுடத்தைத் தன் தாய்வழி உரிமையோடும் சூடி : **தொந்நில வெந்தர் சூட :** தனது

தங்கடி யிரண்டுந் தட்முடி யாகத்
தொங்கில வெந்தர் சூட முன்னை
மனுவாறு பெருக கலியாறு வறுப்ப
செங்கொல திசைதொறுஞ் செல்ல வெண்குடை
யிருநில விளாகம் வெண்கணுங் தனது
திருநிழ்ல் விண்ணிலாத் திகழ (4)ஒருதனி
மெருவில் புலிவிளை யாட வார்கடற்
றிவாங் தரத்துப் பூபாலர் திறைவிடுதந்த
கலஞ்சொரி களிறு முறைநிற்ப விலங்கிய
தெந்னவங் கருந்தலை பருந்தலைத் திடத்தங்
பொந்னகர்ப் புறத்திடைக் கிடப்ப விநாள்
பிற்குலப் பிறைபொல் நிற்பிழை எந்நுஞ்
சொல்லதிர் கொடிற் றல்(5)லது தங்கை
வில்லது கொடா வெழகுலத் தரசர்
அளத்தியி லிட்ட களிற்றின திட்டமும்

---

ஆட்சியினைப் பழைமையான வேந்தர் பலரும் ஏற்றுத் திறை செலுத்த; மனுவாறு - மனு நெறி; இருநில விளாகம் - உலகம்.

4. மெருவில் புலி விளையாட: மேருமலையில் புலிக்கொடி பறக்க; அஃதாவது மேருமலை வரை தன் ஆட்சிநடக்க என்பது. தீவாந்தரத்துப் பூபாலர்: கடலில் தீவுகளிடையிருந்து ஆளும் அரசர்கள்; கலஞ்சொரி களிறு - மதயானை.

விலங்கிய தெந்னவந்: தன்னாணையை மறுத்த பாண்டியன்; பருந் தலைத்திட - பருந்துகள் உண்ண; வில்லது கொடா வெழ குலத்தரசர்: வில் வைத்துக் குறி தவறாது எய்யும் சாளுக்கிய குல மன்னர் என்பது; வேழகுல மென்பது, வேள்குல மென்றும், வேளகுல மென்றும் சாசனங்களில் காணப்படுகிறது.

5. அளத்தியிலிட்ட - அளத்தி என்னுமிடத்தில் விட்டுப்போன; நங்கிலி என்னுமிடத்தில் நடந்த போரில் குலோத்துங்கன் விக்கிரமாதித்தனைத் துங்கபத்திரை நதிவரை துரத்திச் சென்றான். அங்ஙனம் துரத்திச்சென்றவன், இடையிலுள்ள மணலூர், அளத்தி முதலான இடங்களிலும் அவனைப் போரில் புறங்கண்டான் என்பது வரலாறு. 'அளத்தி' என்பது மைசூர் ராச்சியத்திலுள்ளதோர் ஊர்.

பரியும் - குதிரைப்படையும்; வீரமும்கிடப்ப - மானத்தோடு வீரமும் சொல்லளவில் நிற்ப; மலைகளும் முதுகு நெளிப்ப - நதிகளோடு மலைகளும் நடந்துசெல்வதற்கு இடங்கொடுப்ப; விழுந்த கடல்களுந் தலை விரித் தலமர - தோல்வியுற்ற சேனைத்திரளும் வருந்த.

பட்டமும் பரியும் விட்டதக் மாகமும்
கூறிந வீரமும் கெடப்ப எறிந
மலைகளு முதுகு நெளிப்ப யிழிந்த
நதிகளுஞ் சூழன்றுடைந் தோட விழுந்த
கடல்களுந் தலைவிரித் தலமரக் குடதிசைத்
தந்நா ளுகந்து தானும் தானை(6)யும்
பந்நா ளிட்ட பலபல முதுகும்
பயந்தெதிர் மாறின ஜயப்பெருந் திருவும்
பழியுகந்து குடுத்த புகழிந் செல்வியும்
வாளா ரொண்கண் மடந்தைய ரீட்டமும்
மீளாது குடுத்த வெங்கரி நிரையும்
கங்கமண் டலமும் சிங்கண மென்றும்
பாணி யிரண்டும் ஒருவிசைக் கைக்கொண்
(7)டீண்டிய புகழொடு பாண்டி மண்டலங்
கொள்ளத் திருவுளத் தடைத்து வெள்ள
வருபரித் தரங்கமும் பொருபரிக் கலங்களும்போலத்
தந்திர வாரியு முடைத்தாய் வந்து
வடகடல் தெந்கடல் படர்வது போலத்
தம்பெருஞ் சேனையை யேவிப் பஞ்சவ
ஐவரும் பொருத போர்க்களத் (8)தஞ்சி

6. பந்நாவிட்ட பல பல முதுகும்......ஜயப்பெருந் திருவும்: பல நாட்களாகப் போரில் புறங்காட்டிய பல வீரர்கள் பயந்து தன்பக்கம் சேர்ந்ததாகிய வெற்றியும் என்பது. மீளாது குடுத்த - மீட்க இயலாது விட்டுவிட்ட ; நிரை - கூட்டம், தொகுதி. பாணி - காடு, ஒருவிசை - ஒரே தடவையில்.

7. ஈண்டிய - மிகுந்த ; திருவுளத் தடைத்து - எண்ணங்கொண்டு ; வெள்ளவரு - வெள்ளம்போல வரும், மிகுதியாக வரும் ; தரங்கம்- அலை : பொருபரி ; இது 'பொருகரி' என்றிருத்தல் வேண்டும்; போர் செய்யும் யானை என்பது இதன் பொருள். கலம் - மரக்கலம்.

தந்திரவாரி : காலாட் படையாகிய கடல் ; தந்திரம் - காலாள் படை ; வாரி - கடல். வடகடல் தெந்கடல் படர்வது போல - வடகடல் தென்கடல் மீது பாய்வது போல; வட கடலும் தென் கடலும் கலப்பது போல எனினுமாம். பஞ்சவர் ஐவர் : இதற்குரிய விளக்கத்தை முந்திய சாசனக் குறிப்புரையிடத்துக் காண்க.

8. வெரு - வெருவி, பயந்து ; நெளித்து - பின் வாங்கி ; காடறத் துடைத்து - காடு முழுவதையும் அழித்து. நாட்டடிப் படுத்து-காட்டைத் தன் வசப்படுத்தி ; வனசரர் - வேடர்.

வெருநெளித் தொடி அரணைனப் புக்க
காடறத் துடைத்து நாட்டடிப் படுத்து
மற்றவர் தம்மை வனசரர் திரியும்
பொச்சை வெஞ்சுர மெற்றி கொற்ற
விஜய ஸ்தம்பந் திசைதொறு நிறுத்தி
முத்திச் சலாபமும் முத்தமிட் பொதியிலு
மத்தவெங் கரிபடு மைய்(9)யச் சய்யமுங்
கந்நியுங் கைக்கொண்டு புநிதத் தெந்நாட்
டெல்லே காட்டிக் குடமலே நாட்டுள்ள
சாவெ றெல்லாந் தநிவிசும் பெற
மாவெ றியதந் வருதினித் தலைவரைக்
குறுகலர் குலேயக் கொட்டா றுட்பட
நெறிதொறும் நிலேகளிட் டருளித் திறல்கொள்
வி(10)ரஸிம் ஹாசனந் திரியவிட் டருளிப்

---

பொச்சை - பொற்றை, சிறுகுன்று: வெஞ்சுரம் - பாலேநிலப் பகுதி; எற்றி - துரத்தி; கொற்றம் - வெற்றி; விஜய ஸ்தம்பம் - வெற்றிக்[illegible] நாட்டும் தூண்கள்.

முத்திந[illegible]........கந்நியும் கைக்கொண்டு: பாண்டியநாட்டுப் போரில் குலோ[illegible]ங்கன் முத்துச் சலாபத்திற்குரிய மன்னார்குடாக் கடலேச் சார்ந்த நா[illegible]டையும், பொதியில் கூற்றத்தையும், மேலே மலே தொடர்ந்த பகுதியையும், கன்னியாகுமரிப் பகுதியையும் கைக் கொண்டான் என்பது. கந்நி - கன்னியாகுமரிப் பகுதி; கரிபடு மையச் சய்யம் - யானைகளேயுடைய பசுமையான மேலேமலே தொடர்ந்த பகுதி; சய்யம் - மலே.

9. புநிதத் தெந்நாட் டெல்லே காட்டி: புனிதமிக்க கன்னியா குமரியைத் தென்னுட்டின் எல்லேயாகக் குறித்து என்பது. குடமலே நாடு - கொங்குநாடு; சாவெறு - சாவர், வீரமிக்கவர்கள்; தநி விசும் பெற - மடிய; மாவெறிய - குதிரையின்மீது ஏறிப் போர் செய்த; வருதினி - படை; குறுகலர் - பகைவர்.

கொட்டாறுட்பட - கோட்டாறு முதல்; இது கன்னியாகுமரியை யடுத்ததோர் ஊர்; இங்குக் குலோத்துங்கன் ஒரு படைவீடு அமைத் திருந்தான். நெறிதொறும் நிலேகளிட் டருளி: செல்லுமிடங்களி லெல்லாம் வெற்றித் தூண்கள் நாட்டி என்பது. நிலேகள் - தூண்கள்.

10. ஆரமும் திருப்புயந்.........வீரமுந் தியாகமும் விளங்க: ஆரம் - முத்துமாலே; அலங்கல் - பூமாலே: வீரம் ஆரத்திற்கும், தியாகம் அலங்கலுக்கும் உவமை. பார் மிசை - உலகில்.

பொங்கொளி யாரமுந் திருப்புயத் தலங்கலும்பொல்
விரமுந் தியாகமும் விளங்கப் பார்மிசைச்
சிவநிடத் துமையெனத் தியாக வல்லி
உலகுடைய யாளி ருப்ப அவளுடந்
கங்கைவிற் றிருந்தென மங்கை (11)யர் திலதம்
எழிசை வல்லபி எழுலக முடையாள்
வாழி மலர்ந்திரு திருப்ப ஊழியுந்
திருமா லாகத்துப் பிரியா தென்று
திருமகளி ருந்தென விரஸிம் ஹாசனத்து
உலகுடை யாளொடும் விற்றிருந் தருளிய
கோவிராஜ கேஸரி வந்ம ராக
திரிபுவந்நச் சக்கர(12) வத்திகள் ஸ்ரீகுலோத்

---

**சிவநிடத்......உலகுடையாளிருப்ப :** மதுராந்தகிக்குப் பின், குலோத்துங்கன் இரண்டாவது மனைவியான தியாகவல்லி என்பாள் பட்டத்தரசியானாள் : அவள் பெருமையும், அரசன்பால் அவள் கொண்டிருந்த மதிப்பும் இத் தொடரால் விளக்கமுறும்.

**அவளுடந் கங்கை.........மலர்ந்திரு திருப்ப :** குலோத்துங்கனுடைய மூன்றாவது மனைவியின் பெயர் ஏழிசை வல்லபி என்பது. இவள் 'மங்கையர் திலதம்' என்றும், 'ஏழுலகமுடையாள்' என்[illegible], 'தியாக வல்லியுடன் கங்கை வீற்றிருந்தென' என்றும் [illegible]க் கூறப் படுகிறாள். கங்கை - கங்காதேவி; கங்கையும் [illegible]யும் சிவனுடைய மனைவியர் என்பது புராண வரலாறு.

**11.** ஊழியும் - ஊழிக்காலத்தும் ; ஆகம் - மார்பு ; திருமகள் - இலக்குமி : 'ஊழியும், திருமா லாகத்துப் பிரியா தென்று, திருமக ளிருந்தென..... உலகுடையாளொடும் வீற்றிருந் தருளிய' என்ற அடிகளால் இவள் பட்டத்தரசி என்று தெரிகிறது.

**கோவிராஜ கேஸரி வந்மராந திரிபுவந்நச் சச்கரவத்திகள் :**—குலோத்துங்கனது சிறப்புப் பெயர்களில் இராசகேசரி, திரிபுவன சக்கரவர்த்திகள் என்பனபரம்பரையாக வந்த பட்டப்பெயர்கள். இவை அவனுடைய எல்லாச் சாசனங்களிலும் பொருந்திவரும். 'கோ' என்ற சொல் தமிழகத்தில் பேரரசர்களாய் ஆண்ட பண்டைய மன்னர்களைக் குறித்தது; கோப்பெருஞ்சோழன், கோநெடுமாறன் என்ற பெயர்களைக் காண்க. சோழராச்சியத்தை யாண்ட பேரரசர்களை இராசகேசரி வர்மன், பரகேசரி வர்மன் என்ற பட்டங்களுடன் 'கோ' என்ற சொல்லையும் சேர்த்து வழங்கிவந்தனர். அம்முறையில் குலோத்துங்கன் 'கோவிராசகேசரி' என்றழைக்கப்பட்டான்.

**12.** பாண்டி குலாசநி - பாண்டியகுலத்திற்கு இடிபோன்றவன்; அசனி - இடி. இது குலோத்துங்கனது சிறப்புப் பெயர்களில் ஒன்று

துங்க சொழ தெவர்க்கு யாண்டு

சயிஎ ஆவது பாண்டி குலாசநி வளநாட்டு மீகொழை தெவதாந பிரமதெயம் திருவானைக்காவில் திருவெண்ணாவல்கிழிநிதமர்ந் தருளிய த்ரிபுவனபதிக்கு முலப்ருத்தியநாகிய ஸ

13. ண்டெஸ்வரந் ஆதெஸம் ஜயசிங்கதுலகால வளநாட்டு மிசெங்கிளி நாட்டு வளம்பகுடி அரயமகந் முனையந் அருமொழி தெவநான வில்லவராயனுக்கு நாம் விற்றுக்

---

போலும். இப்பெயரால் ஒரு வளநாடு 'பாண்டிய குலாசநி வளநாடு' எனப்பட்டது. மீ கொழை - மீ கொள், மேலாகக் கொள்ளும் என்பது. இதனைப் பாண்டி குலாசனி வளநாட்டின் ஒரு பிரிவு என்பாருமுளர்.

**தெவதாநம்:** கோயிலுக்கு விடப்பட்ட இறையிலி நிலம்; **பிரமதெயம்:** பிராமணர்க்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட ஊர். **திருவானைக்கா;** இது இப்பொழுது 'சம்புகேசுவரம்' என்றழைக்கப்படுகின்றது - திருச்சிராப் பள்ளிக்கு அருகிலிருக்கிறது. **திருவெண்ணாவல் கீழ்:** இந்த இடம் இப்பொழுது 'சம்புகேசுவர சுவாமி ஆலய' மெனத் திகழுகிறது; சம்பு -; நாவல்மரம்.

**த்ரிபுவனபதி:** இது சம்புகேசுவா லாயத்தில் வீற்றிருக்கும் கடவுளின் ஆதிப்பெயர்; இப்பொழுது அக்கடவுள் 'சம்புகேசுவர சுவாமி' என்று அழைக்கப்[illegible]கிற[illegible]

**முல ப்ருத்[illegible]** மூலப்பிருத்தியன், மூலத்தானத்துச் சேவகன்; தொண்டன், அடிமை என்பது.

**13. ஸண்டெஸ்வரந்:** நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவர்; இவருடைய அரிய சேவைக்குப் பரிசாகச் சிவபெருமான் இவருக்குச் சண்டேசுவரபதம் அளித்தாரென்பர்; அஃதாவது அடியார் தலைவராய் மூலத்தானத்திலிருந்து சிவபெருமானுக்குரியவற்றை இவரே பெற்று அநுக்கிரகிக்கும் பதத்தை இவர் பெற்றார் என்பது. **ஆதெஸம்-** கட்டளை; அக்காலத்தில் கோயில் நிலங்களை அந்தந்தக் கோயில் மூலப் பிருத்தியனை சண்டேஸ்வரன் கட்டளைப்படி விற்றதாகக் கூறுவது வழக்கம்போலும்.

**வில்லவராயன்:** இவனுடைய முழுப்பெயர் முனையன் அருண்மொழித் தேவனை வில்லவராயன் என்பது. வளம்பகுடி அரையன் என்பது இவன் தந்தை பெயர்; இவனுக்குச் சொந்த ஊர் செயசிங்க குலகால வளநாட்டு, மீசெங்கிளி நாட்டு வளம்பகுடி என்பதாகும். புதுக் கோட்டை ராச்சியத்தில் ஆலங்குடி தாலூகாவில் உள்ள வாராப்பூரும், குளத்தூர்த் தாலுகாவிலுள்ள திருவெங்கை வாசல், கீரனூர் முதலியனவும் செயசிங்ககுல கால வள நாட்டில் உள்ளன. அது வட சிறுவாயில் நாடு, குளமங்கலம் நாடு, தென்மீ பொழில் நாடு, தென் கவிர் நாடு முதலிய பல நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. மிசெங்கிளி நாடு-மேல்செங்கிளி

குடுத்த நிலமாவது உடையார் திருவானைக்காவுடைய எம்பெருமாந் தே—

**14.** வதாநம் தெங்கரை ஊர்களில் பாண்டி குலாசநிவள நாட்டு மீகொழை ஆளிகுடியில் இவனுக்கு விற்றுக் குடுத்த நிலத்துக் கிசைந்த கிழ்பார்க் கெல்லை பிள்ளை கொள்ளி வாய்க் காலுக்கு மெற்கும் தெங்பார்க் கெல்லை களத்தில் வடக்கில கைய் வா—

**15.** ய்க்காலுக்கு வடக்கும் மீபார்க்கெல்லை உத்தம சிலிச் சருப்பெதி மங்கலத்து தெங்பிடாகை புதுக்குடி எல்லைக்கு கிழக்கும் வடபார்க்கெல்லை தெந்நாற்றங்கரைப் பெருவழிக்கு தெற்கு ஆக இவ்விசைந்த பெருநாங் கெல்லையுள் பட்ட நிலம்.

**16.** சதெ $(4\frac{3}{4})$ இந்நிலம் நாலெமுக்காலும் இத்தெவர்க்கு யாண்டு நாற்பத்தெழாவது வரை பயிரிலி புஞ்செய்யாய்க் குட்டமு மண்ணுமிட்டுக் கிடந்தமையி லந்நிலம் முனையந் அருமொழி தெவநான வில்லவ ராயனுக்கு விற்றுக் குடுத்து—

---

நாடு; இது புதுக்கோட்டை ராச்சியத்தில் குளத்தூர்த் தாலுகாவிலுள்ள மலையடிபட்டி என்னும் ஊர் முதலியவற்றைக் கொண்டது. நாம் விற்றுக் குடுத்த நிலம்: சண்டேசுவரன் உள்ளிட்ட கன்மிகளாகிய நாம் வில்லவராயனுக்கு விற்றுக்கொடுத்த நிலம் என்பது. உடையார் திருவானைக்காவுடைய எம்பெருமாந்: இது திருவானைக்காவில் திருவெண்ணாவல்கீழ் அமர்ந்தருளிய திரிபுவனபதியைக் குறிக்கும்; உடையார் - சுவாமி.

**14.** **தெந்கரை ஊர்களில்:** முன்னர்த் 'தென்கரை நாட்டு' என வந்திருத்தலும் இதனையே குறிக்கும்போலும். நிலத்துக் கிசைந்த - நிலத்தோடு பொருந்திய; பிள்ளை கொள்ளி வாய்க்கால்: இது ''பிள்ளை கொல்லி வாய்க்கால்' என்றிருத்தல் வேண்டும் என்று தெரிகிறது.

**களம்** - திட்டு நிலம்; மிபார்க்கெல்லை - மேலைப்புற எல்லை; தெந்பிடாகை - தென்பக்கத்துச் சிற்றூர்; புதுக்குடி என்பது, உத்தமசீலிச் சருப்பெதி மங்கலத்துக்குத் தென் பக்கத்திலுள்ள ஒரு சிற்றூராகும். உத்தமசீலிச் சதுருப்பெதி மங்கலம், இப்பொழுது 'உத்தமசீலி' என்று வழங்குகிறது. இதுவும், புதுக்குடியும் பாண்டி குலாசனி வளநாட்டிலுள்ளன.

**16.** **இவ்விசைந்த** - இப்படிப்பட்ட; நிலம் ச தெ - நாலே முக்கால் குழி நிலம்; இனி. 'நாலேமுக்கால் வேலி நிலம்' எனக் கூறி அதற்குச் சான்றாக இச் சாசனத்தில் வரும் 'புன்செய் வரிசையால் வேலி

**17.** க் கொள்வதாக எம்மி லிசைந்த விலைப்பொருள் அன்றூடு நற்காசு சப5 இக்காசு நாலெ மாகாணியுங் கைக் கொண்டு திருவானைக்காவுடைய எம்பெருமாந் ஸ்ரீ பண்டா ரத்து ஒடுக்கி முனையந் அருமொழிதெவனை வில்லவராய னுக்கு விற்றுக் குடுத்—

**18.** து இவந் உடையார் திருவானைக்காவுடைய எம் பெருமாந் கொயிலில் இடங்கை நாயகரெந்று எழுந்தருளு வித்த இஷபவாஹனதெவர்க்கும் நம்பிராட்டியார்க்கு திரு மஞ்சநங்களுக்கு திருவமிர்து படிக்கு இரண்டு திருநாளிலும் இரண்டு நாள் திருவிழா எழுந்தருளுகைக்கு உள்ளிட்டு

**19.** வெண்டும் நிமந்தங்களுக்கு இந்நில சதெ கல்லித் திருத்தி ஸ்ரீ பண்டாரத்து புந்செய் வரிசையால் வெலி ஒந்றுக்கு நெல் ஐங்கலமாக ராஜகெஸரி மரக்காலால் இந்நிலம் நாலெ முக்காலுக்கும் அளப்பதாக ஜ உயிந களவ த ந இந் நெல் இருபத்தி முக்கலநெ இருதூணிக் குறு

---

ஒன்றுக்கு நெல் ஐங்கலமாக இராசகேசரி மரக்காலால் இந்நிலம் நாலே முக்காலுக்கும் அளப்பதான நெல் இருபத்து முக்கலனே இரு தூணிக் குறுணி' என்னுந் தொடரைக் காட்டுவர். பயிரிலி புந்செய்யாய் - பயிர் விளையாத புன்செய் நிலமாய்; குட்டமு மண்ணுமிட்டுக் கிடந்த மையில் - பள்ளமு மேடுமாய்க் கிடந்ததால்; குட்டம் - குழிந்த நிலம்; மண் - மண் திட்டு.

**17.** **எம்மி லிசைந்த** - யாம் சம்மதித்த; **அன்றூடு** - நாளொன்றுக்கு; **நற்காசு** - பொற்காசு. இனி 'அன்றூடு பொற்காசு' என்பதற்கு 'அந்நாளில் வழங்கிய பொற்காசு என்னும் நாணயம்' என்று பொருள் கொள்ளினுமாம் சப5 $= 4\frac{1}{16}$; **கைகொண்டு** - பெற்று.

**ஸ்ரீபண்டாரம்** - கோயில் பண்டாரம்; **ஒடுக்கி** - சேர்த்து; **விற்றுக் குடுத்து** - விலைக்குக் கொடுத்து; **இடங்கை நாயகர்** - இடங்கை குலத் தவருக்குத் தலைவர்; இடங்கையர் என்பார் சோழருக்குள் மரியாதை செலுத்து முறைமையின் காரணமாகப் பிரிந்த ஒரு குலப் பிரிவினர் என்பர். வில்லவராயன் அக்குலத்தவனு யிருந்து, சம்புகேசுவ ராலயத்தில் 'இடங்கை நாயகர்' என்ற பெயருடன் இடபவாகனரை எழுந்தருளப் பண்ணினதாகத் தெரிகிறது.

**18.** **இஷபவாஹந தெவர்** - சிவபெருமான்; **இஷபம்** - இடபம். **திரு மஞ்சநம்** அபிடேகம்; **திருவமிர்து** - நிவேதன உணவு; **நிமந்தம்** - கோயில் செலவு; **கல்லித் திருத்தி** - வெட்டித் திருத்தி.

**19.** **ராஜகெஸரி மரக்கால்** : இஃது அரண்மனை மரக்கால்; இராசராச சோழன் சாசன முதலியவற்றிலும் இப்பெயர் வந்திருத்தல் காண்க.

**20.** ணியும் அளக்குமிடத்தில் கார் பாதி பசாநம் பாதி அளப்பதாகவும் இதில் மிகுதி கொண்டு இவந் இடங்கை நாயக ரெந்று எழுந்தருளுவித்த இஷபவாஹந தெவர்க்கும் நம்பிராட்டியார்க்கும் திருமஞ்சனபடிகளுக்கும் திருவமுது படிக்கும் இரண்டு திருநாளிலும் இரண்டு நாளெழுளந் தருளுகைக்கு

**21.** உள்ளிட்டு வெண்டு நிமந்தங்களுக்கு நிமந்தஞ் செய்து குடுத்தோம் முனையந் அருமொழிதெவநான வில்லவ ராயநுக்கு திருவானைக்காவுடைய எம்பெருமானுக்கு மூல ப்ருத்தியநாகிய ஸண்டெஸ்வரந் உள்ளிட்ட கந்மிகளோம் இது பந்மாஹேஸ்வர ரக்ஷை

---

ஐ உ௰௩ கள வத ங-நெல் இருபத்து முக்கலனே இரு தூணிக் குறுணி; ஐ - நெல்: உ௰௩ இருபத்து மூன்று; கள - கலம்; வத - இருதூணி; ங - குறுணி.

**20.** **கார்** - கார் காலத்தில் விளையும் நெல்; கார் காலம் - மழைக் காலம்; பசாநம் - பசான் என்னும் ஒருவகைச் சம்பா நெல்; இது சித்திரை மாதத்தில் அறுவடையாகும்.

**இதில் மிகுதிகொண்டு**-இதைக்கொண்டு; திருமஞ்னபடி - அபிடேகம் செய்ய ஆகும் செலவு; படி - செலவு. எழுளந்தருளுகைக்கு - உலா வருவதற்கு.

**21.** உள்ளிட்டு - சேர்த்து; நிமந்தம் செய்து குடுத்தோம்-கோயில் ஊழியத்திற்கு ஏற்பாடுசெய்து கொடுத்தோம்; உள்ளிட்ட கந்மிகளோம்-கோயில் அதிகாரிகளாகிய யாம்; பந்மாஹேஸ்வர ரக்ஷை - அடியார் கூட்டம் காக்க.

### பயிற்சி வினாக்கள்

1. வில்லவராயன் சாசனம் எங்குக் காணப்படுகிறது? அதில் கூறப்படும் செய்தி யாது?

2. முதற் குலோத்துங்க சோழன் ஆட்சியின் நாற்பத்தேழாம் ஆண்டில் அமைக்கப்பட்ட சாசனத்திலுள்ள மெய்க்கீர்த்தியின் தொடக்கம் யாது? அதிலிருந்து அம் மன்னனைப் பற்றி நாம் அறியக் கூடியன யாவை?

3. சம்புகேசுவர ராலயத்தில் பொறிக்கப்பட்ட சாசனங்கள் எவை? எக்காலத்தில் ஏற்பட்டன? அவற்றின் பெயரும், அவை கூறும், செய்தியும் எழுதுக.

4. முதற் குலோத்துங்கன் மெய்க்கீர்த்தியோடு கூடிய சாசனங்களுள் எவையேனும் இரண்டு சாசனங்களுக்கு இடம், ஏற்பட்ட காலம் இவற்றை வரைக.

5. குறிப்பு வரைக:—சக்கர கோட்டம், மதவரை யீட்டம் தீவாந்தரத்துப் பூபாலர், கலஞ்சொரி களிறு, வருபரித்தரங்கமும் பொருபரிக் கலங்களும் திரிபுவனச் சக்கரவர்த்திகள்.

6. பாண்டி குலாசனி வளநாடு எங்குள்ளது? அதனை இப்பொழுது எப்பிரதேசமாகக், கொள்ளலாம்?

7. 'திருவானைக்கா' எங்குள்ளதென்பதைச் சாசனச் சான்று காட்டி விளக்குக.

8. 'மூல ப்ருத்யாகிய சண்டேஸ்வரன் ஆதேசம்'—பொருள் என்னை? சண்டேசுவர ஆதேசமாகக் கூறியது எது பற்றி?

9, வில்வராயன் யார்? அவனது ஊரின் பெயரும், அஃது அமைந்துள்ள நாடு, வளநாடுகளின் பெயர்களும் யாவை?

10. பொருள் தருக:—சையம், வரூஉதினி, பிடாகை, பசானம், ஸ்ரீ பண்டாரம், திருமஞ்சனம், நிமந்தம், கன்மிகள்.

11. அந்றூடு நற்காசு சப5-இதன் பொருளை விளக்குக.

12. 'இந் நெல் இருபத்து முக்கலனே இரு தூணிக் குறுணி'—இதனைக் குறியீட்டெழுத்தால் எழுதுக.

13. அக் காலத்தில் வழங்கிய நிறுத்தலளவைப் பெயர், முகத்தலளவைப் பெயர் ஆகியவைகளைக் குறிப்பிடுக.

14. நன்செய் நிலங்களில் இரு போகங்களைக் குறிக்கும் பெயர்கள் எவை?

15. 'புகழ்சூழ்ந்த புணரி அகழ்சூழ்ந்த புவியில்' என்று தொடங்கும் சாசனம் யாருடையது?

16. 'பொங்கொளி ஆரமும் திருப்புயத் தலங்கலும் போல், வீரமுந் தியாகமும் விளங்க'—இதற்குக் குறிப்புரை வரைக.

17. சோழ மன்னரின் ஈழப்படை எடுப்பினைச் சுருக்கி எழுதுக.

# விக்கிரம சோழன் சாசனங்கள்

## 20. காணி காரளவு உரிமைச் சாசனம்*

### முன்னுரை

விக்கிரம சோழன் சாசனங்கள் என்பவை விக்கிரம சோழன்† ஆட்சியில் அவனால் ஏற்பட்டதும், பிறரால் ஏற்பட்டதுமான சாசனங்களைக் குறிக்கும். இங்கு அவனது ஆட்சியின் நான்காம் ஆண்டு ஏற்பட்ட, காணி காரளவு உரிமைச் சாசனமும், பதினைந்தாம் ஆண்டில் ஏற்பட்ட அவனது தில்லைத் திருப்பணி சாசனமும் அமைந்துள்ளன. இவற்றுள், காணி காரளவு உரிமைச் சாசனம் தஞ்சைப் பெரியகோவில் நடுவிடத்துக் கருப்ப கிருகத்தின் வடபுறத்துச் சுற்றுச் சுவரின் வெளிப்பக்கத்தில் காணப்படுகிறது. இது தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது; நான்கு பத்திகளையுடையது.

---

* S. I. I. Vol. II, Part III, No. 68, pp. 307—312.

† விக்கிரம சோழன் முதற் குலோத்துங்கனுடைய நாலாவது மகன். இவனுடைய தாய் பெயர் மதுராந்தகி. இராசராச சோழ கங்கன், இராசராச மும்முடிச் சோழன், வீர சோழன் மூவரும் இவன் தமையன்மார். இவர்கள் ஒருவர் பின் ஒருவர் இறக்க, இவன் கி. பி. 1118இல் இளவரசனாகி, முதலாம் குலோத்துங்கனுக்குப் பின் 1120ஆம் ஆண்டு முதல் சோழ மன்னனானான். பரகேசரி என்பது இவனுக்கு வழங்கிய சிறப்புப் பெயர்.

இளமையில் இவன் வேங்கி நாட்டிலிருந்து ஆட்சி புரிந்தான். அப்பொழுது தென் கலிங்கத்தை ஆண்ட தெலுங்க வீமனைப் போரில் புறங்கண்டான். அதன் சிறப்பினை ஒட்டக்கூத்தர் ஒரு பரணி நூலால் பாடினார். அந்நூல் இப்பொழுது காணப்படவில்லை. இவனுக்குத் தியாக சமுத்திரம், அகளங்கன் என்ற சிறப்புப் பெயர்களும் உண்டு. இவனுடைய கல்வெட்டுக்களில் இருவகையான மெய்க்கீர்த்திகள் காணப்படுகின்றன. ஒன்று "பூமாலை மிடைந்து பொன்மாலை திகழ்தர" என்று தொடங்குகிறது. அது பெரிது. மற்றொன்று "பூமாது புணர புவிமாது வளர" என்று தொடங்குகிறது.

இவனுக்கு முக்கோக்கிழானடிகள், தியாக பதாகை, நேரியன் மாதேவி என மூன்று மனைவியர் இருந்தனர். இவர்களில் முதல் இருவரும் ஒருவர் பின் ஒருவர் பட்டத் தரசியாயிருந்தனர். இரண்டாம் குலோத்துங்க சோழன் இவனுடைய மகனாவான். விக்கிரம சோழன் கி. பி. 1120 முதல் 1136 ஆம் ஆண்டுவரை சோழ நாட்டை ஆண்டான்.

இச் சாசனத்தின் முற்பகுதியில் 'பூமாலை மிடைந்து' என்று தொடங்கும் விக்கிரம சோழனது மெய்க்கீர்த்தி அமைந்துள்ளது. அதில் அவன் இளமையில் தெலிங்க வீமனோடு போர் செய்து வென்ற செய்தியும் குடிகளை அவன் ஆண்ட சிறப்பும், செழியர், சேரலர், சிங்களர், கங்கர் (கன்னடர்), கொங்கணர் முதலியோர் அவனுக்குத் திறை செலுத்தியமையும், அவன் தன் தேவிய ரான முக்கோக்கிழானடி, தியாக பதாகை ஆகியவர்களோடு சிம்மாசனத்தில் வீற்றிருந்த சிறப்பும் கூறப்படுகின்றன.

பிற்பகுதியில் விக்கிரம சோழன், தஞ்சைப் பெரிய கோயிலிலும், அக் கோயிலுக்குச் சொந்தமான ஊர்களிலும் வரும் கோயில் நெல்லை யளந்து கோயில் களஞ்சியத்தில் சேர்க்கும் பணியை இராசராச பல்லவரையன் என்னும் ஆவுடையான் அரையன் உடையானுக்கு உரிமையாக்கிய செய்தியும், பின் அவன் இறக்க, அவன் மகன் உடையான் கல்லாலையை அந்த வேலைக்கு நியமித்த செய்தியும் கூறப்படுகின்றன. எனவே, அக் காலத்தில் அரசியலிலும் கோயில்களிலும் பணிசெய்வார் தலை முறை தலைமுறையாகச் செய்துவந்தனர் என்று இச் சாசனத்தால் அறியப்படுகிறது.

விக்கிரம சோழன் கி. பி. 1120 முதல் 1136 ஆம் ஆண்டு வரை சோழநாட்டை ஆண்டான். இச் சாசனம் அவன் ஆட்சியின் நான்காம் ஆண்டில் ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1124 ஆம் ஆண்டு என்னலாம்.

## சாசனம்

(1) ஸ்வஸ்திஸ்ரீ
பூமாலை மிடைந்து பொன்மாலை நிகழ்தரப்
பாமாலை மலிந்த பருமணித் திரள்புயத்

---

இவன் ஆட்சியின் காலத்தில் ஒட்டக் கூத்தர் முதலிய புலவர்கள் இருந்தனர். அரசியல் அதிகாரிகள் பலர் இவன் காலத்தில் சிறந்து விளங்கினர். இவன் தில்லையில் செய்த திருப்பணிகள் குறிப்பிடத்தக்கன.

## குறிப்புரை

1. **ஸ்வஸ்திஸ்ரீ** : சாசனங்களின் தொடக்கத்தில் பெரும்பான்மையும், இறுதியில் சிறுபான்மையும் வரும் ஒரு வடமொழித் தொடர்; 'மங்களம் உண்டாக' என்பது இதன் பொருள்.

**பூமாலை மிடைந்து** - பூமாலை சூடி; **பொன்மாலை நிகழ்தர** - பொன் மாலையும் விளங்க; **பாமாலை மலிந்த** - பாமாலைகளால் புகழப்பட்ட; **பாமாலை** - பாடல்கள்; இங்கு ஒட்டக்கூத்தர் இவன்மீது பாடிய உலா;

திருநில மடந்தையொடு ஜயமக ளிருப்பத்
தந்துணை மார்வந் தனதெனப் பெற்றுத்
திருமகள் ளொருதனி யிருப்பக் கலைமகள்
சொற்றிறம் புணர்ந்த கற்பின ளாகி
விருப்பொடு நாவகத் திருப்பத் திசைதொறும்
திகிரியொடுஞ் செங்கோல் நடப்ப அகில
புவனமுங் கவிப்ப தொருபுது மதிபோல்
வெண்குடை மீமிசை நிற்பக் கருங்கலி
ஒளித்து வன்பிலத் திடைக்கிடப் பக்குளத்
தெலிங்க விமன் விலங்கல்மிசை யெறவுங்
கலிங்க பூமியைக் கனையெரி பருகவும்

பரணி முதலியவற்றைக் குறிக்கும்: பருமணித் திரள்புயம் - பெரிய அழகிய திரண்ட கைகள்; இரு நில மடந்தை - சோழ நாடு; ஜயமகள்- வெற்றி; திருமகள் - செல்வம்; கலைமகள் - கல்வி.

நிலமடந்தை செயமகள் இருவரும் திரள்புயத்திலும், திருமகள் மார்பிலும், கலைமகள் நாவிலும் இருந்தனர் என்பது.

திகிரி - ஆணை; செங்கொல் - ஆட்சி; அகில புவனம் - உலகம் முழுவதும்; கவிழ்தல் - நிழல் செய்தல்; வெண்குடை மீமிசை நிற்ப - வெண் கொற்றக் குடை மேலே நின்று நிழல் செய்ய; கருங்கலி-வறுமை. வன்பிலம் - பாதாளம்; குளத்தெலிங்கவிமன்: குளமென்பது, ஓர் ஊர். அது வேங்கிநாட்டைச் சேர்ந்த கொலாறு என்னும் குளக்கரையி லுள்ளது. இப்பொழுது கோதாவரி மாவட்டத்திலுள்ள கோலாறு என்னும் குளக்கரையிலுள்ள ஏலூரை அவ்வூர் என்பர். இதிலிருந்து தெலிங்க வீமன் ஆட்சி புரிந்தவனு யிருத்தல் வேண்டும். இனிக், குள மென்பதைத் தெலிங்க வீமன் குலப்பெயர் என்பாருமுளர். தெலிங்க வீமன் என்பான், கலிங்கநாட்டை ஆண்டுவந்தவன். விக்கிரம சோழன் இளவரசனுயிருந்த காலத்தில், வேங்கி நாட்டினின்றும் இவன்மீது படை எடுத்துச்சென்று, இவனை வென்முன். இவன் விக்கிரமசோழனுக்குத் தோற்று, தன் சேனைகளுடன் மலையின்மீது ஏறி ஒளித்தான்.

விலங்கல் மிசை யெறவும் - மலைகளின்மேல் ஏறி ஒளிக்கவும். கலிங்க பூமி - கலிங்க நாடு; கனை எரி பருகவும் - மிக்க தீயினுல் அழியவும்; ஐம்படைப்பருவத்து - ஐம்படைத்தாலி அணிந்த இளமைப் பருவத்தில்; ஐம்படை என்பதற்கு ஐங்கணை எனப் பொருள்கொள்வாரு முளர். வெங்கை மண்டலம்: கீழைச் சாளுக்கிய நாடு; விக்கிரம சோழன் இளவரசனு யிருந்தபோது இந்நாட்டிலிருந்து ஆட்சிபுரிந்தான். அப்பொழுதுதான் தெலிங்க வீமனுடன் கலிங்கப் போர் நிகழ்ந்தது. வடதிசை வாகை சூடி - வடக்கே தெலிங்க வீமனை வென்று.

ஐம்படைப் பருவத்து........படை தாங்கி
வெங்கை மண்டலத்துத் தாங்கினி திருந்து
வடதிசை வாகை சூடித் தெந்(2)றிசைத்
தெமரு கமலப் பூமகள் பொதுமையும்
பொன்னி யாடை நன்னிலப் பாவையின்
தநிமையுந் தவிர்த்து புநிதத் திருமணி
மகுட முறை மையிற் சூடித்
தன்னளி பரப்பித் தநித்தநி பரந்து
மண்முழுதுங் களிப்ப மணிஞ வொடுங்க
விசையமும் புகழு மெல்மெ லொங்கச்
செழியர்வெஞ் சுரம்புக செரலர் கடல்புக
அழிதரு சிங்கள ரஞ்சிநெஞ் சலமாகக்
கங்கர் திறையிடக் கன்னடர் வென்னிடக்
கொங்க ரொதுங்கக் கொங்கணர் சாயமற்
றெத்திசை மன்னருந் தந்தமக்கரணெநத்

2. பூமகள் பொதுமை - நாட்டின் பொதுவுடைமை; தென்னுடை பலருக்கும் பொதுவாக் இருந்தமையை விக்கிரம சோழன் நீக்கித் தன்ன தாக்கினன் என்பது. பொன்னியாடை நன்நிலப்பாவை - காவிரி நதியாயப் பெற்றசோழ நாடு; பொன்னி - காவிரியாறு; தநிமை - தனித்த நிலைமை; அஃதாவது, சோழ நாடு மட்டும் ஆட்சி புரிவதென்பதைக் குறிக்கும். "தெமரு உரிமை......நிற்றஞ்ச' என்பது வரை விக்கிரம சோழனது ஆட்சிச் சிறப்புக் கூறப்பட்டுள்ளது. மணிமகுடம் - முடி; அளி பரப்பி - அன்பு செலுத்தி; மண் முழுதும் களிப்ப - நாட்டா ரெல்லாரும் மகிழ; மணிஞ வொடுங்க - ஆராய்ச்சிமணி ஒலிக்காது; குடிகள் வழக்குக் கூறாது என்பது. விசையம் - வெற்றி; செழியர்-பாண்டியர்; சிங்களர் - இலங்கை மன்னர்; வெஞ்சுரம் - காடு; செரலர்-சேர மன்னர்; இவர்கள் எதையும் அழிக்கும் இயல்பின ரென்பார் 'அழிதரு சிங்களர்' என்றார். நெஞ்சலமாக - நெஞ்சு அலமர, மனம் வருந்த; கங்கர் - கங்கபாடி மன்னர்; திறை - கப்பம்; கொங்கர் ஒதுங்க-கன்னட நாட்டார் புறங்காட்ட; கங்கர் என்பது, இங்குக் 'கன்னர்' என்றிருத்தல் வேண்டும். கொங்கணர் - கொங்கு நாட்டவர்; எத்திசை மன்நரும் - எல்லாத் திசையிலுமுள்ள அரசர்களும்; அரண் - பாது காவல், அடைக்கலம்; திருமலற் செவடி உரிமையில் நிற்றஞ்ச - மலர் போன்ற பாதங்களில் முறையாக நின்று வணங்க; நிற்றஞ்ச - நின்று இறைஞ்ச.

தொல்லை......இனி திருப்ப: இது விக்கிரம சோழன் தன் பட்டத்தரசியான முக்கோக்கிழானடிகளோடுவீற்றிருந்த சிறப்புக் கூறுகின்றது.

திருமலற் செவடி உரிமையில் கிற்றஞ் சத்
தொல்லை யெழுலகுந் தொழுதெழத் தொந்றிய
முல்லை வாணகைய் முக்கொக் கிழாநடி
உமையொடுஞ் சங்கரன்
இமையத்திருந் தாநெனப் பொருந்தி இனி திருப்ப
ஆங்கவன் மகிழு கங்கையொப் பாகிய
தெரிவையர் திலதம் தியாகப தா(3)கை
புரிகுழல் மடப்பிடி புனிதகுண வனிதை
திரிபுவந முழுதுடையா ளிவன்திருவிளத் தருள்
முழுதுடை யாளென அமைந்தினி திருப்பச்
செம்பொன் கின்வீர ஸிம்ஹா ஸனத்து
வீற்றிருந்தருளிய கொப்பரகெசரி பந்மரான திபுவநச்
சக்கரவத்திகள் ஸ்ரீவிக்கிரம சொழ தெவற்கு யாண்டு

---

தொல்லை - பழைமையான ; எழுலகம் - ஏழு உலகத்தாரும் ; முல்லை வாணகை - முல்லை மலர் போன்ற அழகிய பற்களையுடையவள் ; முக்கோக்கிழானடிகள் விக்கிரமசோழனோடு சிம்மாசனத்தில் வீற்றிருந்த தன்மை உமாதேவியோடு சிவபெருமான் இமயமலையில் இருந்தவொத்த தென்பது. சங்கரன் - சிவன்.

ஆங்கவன்......அமைந்தினி திருப்ப : இத் தொடர் விக்கிரம சோழன் இரண்டாவது மனைவியான தியாகபதாகை என்பாள் அவனுடன் வீரசிம்மாசனத்தில் வீற்றிருந்த சிறப்பைக் கூறுகின்றது. ஆங்கவன் மகிழும் - சிவபெருமான் விரும்பும் ; கங்கையொப்பாகிய-கங்காதேவியை யொப்ப.

3. இதில் தியாக பதாகை என்பாள், 'தெரிவையர் திலகம்', 'புரிகுழல் மடப்பிடி', 'புனித குணவனிதை', திரிபுவந முழுதுடை யாள்', 'திருவுளத் தருள் முழுதுடையாள்' என்னும் தொடர்களால் சிறப்பித்துக் கூறப்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கது. இச் சாசனத்தில் முக்கோக்கிழானடி உமாதேவிக்கும், தியாகபதாகை கங்கை தேவிக்கும், சங்கரன், விக்கிரம சோழனுக்கும் உவமையாகக் கூறப்பட்டுள்ளனர்.

செம்பொன்கின் வீரஸிம்ஹாஸனம் : செம்பொன்னால் செய்யப்பட்ட வெற்றிச் சிம்மாசனம் ; கோ - மன்னர் ; பரகேஸரி பந்மர் - பரகேசரி வர்மர் ; இது சோழ மன்னர் தமக்குள் சிறப்பாக இட்டுக்கொள்ளும் பரகேசரி, இராசகேசரி என்னும் பட்டப் பெயர்களில் ஒன்று ; திரிபுவநச் சக்கரவத்திகள் : சேர சோழ பாண்டியம் என்னும் மூன்று நாடுகளுக்கும் தலைவர் என்பது இதன் பொருள். திரிபுவநம் - மூன்று நாடு ; அவை சேர, சோழ பாண்டிய நாடுகள் ; சக்கரவத்திகள் - பேரரசர் : விக்கிரம

னலாவது உடையார் ஸ்ரீராஜ ராஜீஸ்ர முடையார் கொயிலில் காரளக்கும் ராஜ ராஜப் பல்லவரயநுக்கு தன் பாட்டன் நிலேயாய் வருகிற காணிகாரளவுக்கு காணியாக குடுத்தொமென்று திருவாய்மொழிக் தருளி உடையார் ஸ்ரீராஜ ராஜீஸ்வரம் உடையார் கொயில் சிகாரியஞ் செய்வா நுக்கும் பரியார மூலப்பட்டுடைப் பஞ்சா சாரியத் தெவர் கன்மிகளுக் கும் ப்ரஸாதம் செய்து வந்த திருமுகப்படி கல்லில் வெட்டியது மூன்பு காரளந்து வருகிற புதுவுடையான் அர—

---

சோழன் ஆட்சி தமிழ்நாடு மூன்றிலும் நடைபெற்ற தென்பது இதனுல் தெரிகிறது.

யாண்டுனலாவது - ஆட்சியின் நான்காவது ஆண்டு; அஃதாவது கி. பி. 1124 ஆம் ஆண்டு. உடையார் - இறைவன்; ஸ்ரீ ராஜராஜீஸ்ர முடையார் கொயில் - தஞ்சைப் பெரிய கோவில்; கார் அளக்கும் - கோயிலுக்கு வரும் கார் காலத்து நெல்லே அளந்து கணக்கெடுக்கும்; கார் - கார்காலத்தில் விளேயும் நெல்; எனவே தேவதான நிலங்களில் பயிர் செய்வோர் கார்காலத்து நெல்லேக் கொண்டுவந்து கோயிலுக்கு அளப்பர் என்பது போதரும். ராஜ ராஜ பல்லவரயந் - இவன் தன் பாட்டன் நிலேயாய்ச் செய்துவந்த காரளவு என்னும் பணியை விக்கிரம சோழன் கட்டளேப்படி செய்துவந்தான். இவனுடைய மற்றொரு பெயர் புதுவுடையான் அரயன் உடையான் என்பது. இவன் இறந்த பின் அக் காரளக்கும் பணி இவன் மகனுன உடையான் கல்லாலேக்கு உரிமை யாக்கப்பட்டது. தன் பாட்டன் - அவன் பாட்டன்.

நிலேயாய் வருகிற - நிலேயாகச் செய்துவந்த; காணி காரளவு: இஃது அரசியலார் மேற்பார்வையில் நடைபெறும் கோயில் அலுவல்களில் ஒன்று; கோயில் நிலங்களில் இருந்து வரும் நெல்லே அளந்து களஞ்சி யத்தில் சேர்ப்பதாகும். காணியாக - உரிமையாக; காணி - நிலவுரிமை; திருவாய் மொழி - அரச கட்டளே; உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் உடையார். கொயில் - தஞ்சைப் பெரியகோயில்: அது முதலாம் இராச ராசனுல் கட்டப்பட்டது. அங்குள்ள இறைவன் பெயர் இராச ராசேசுவரர். உடையார் என்பது, சிறப்புப்பற்றி அரசனுக்கும் இறைவனுக்கும் வழங்கும் ஓர் அடைமொழி. ஸ்ரீ காரியம் செய்வாந் - கோயில் காரியம் செய்பவன், கோயில் அதிகாரி.

பரியார மூலப்பட்டுடைப் பஞ்சா சாரிய தெவர் கன்மிகளுக்கும் என்பது, பரியார மூலப் பட்டுடைப் பஞ்சாசாரியர்க்கும் தேவர் கன்மிகளுக்கும் என்றிருத்தல் வேண்டும். பஞ்சாசாரியர் - கோயில் அருச்சகர்; பரியாரம்- பரிகாரம், பணி: மூலம் - கோயில். இறைவன் எழுந்தருளியிருக்கும் இடம்; கோயில் அருச்சகர் மூலத்தானம் இறைவன் எழுந்தருளியிருக்கும் இடத்தில் பணி செய்யும்போது பட்டாடை அணிந்திருப்பர். அதனுல்

**4.** யன் உடையான் மரித்தமையில் இவன் மகனை உடையாந் கல்லாலைக்கு தஞ்சாவூர்த் தெவர்க்கு அடைத்த நாட்டுப் பண்டாரங்களும் அளந்து இத்தால் வந்த காரளவு மாடம் உள்ளிது ஒடுக்கி வருகிற பரிசு தேவர் பண்டாரத்தெ ஒடுக்க கடவதாகவும் தனக்கும் தந் வர்க்கத்தார்க்கும் சந்ரா தித் தவந் செல்ல வைத்த பங்கு ஒன்று.

---

அவர்கள் 'பரியார மூலப் பட்டுடைப் பஞ்சாசாரியர்' எனப்பட்டனர். தெவர் கன்மிகள் - கோயில் பூசகர்; இவர்கள் அருச்சகருக்கு உதவியாய் நிற்பவர்கள்.

**ப்ரஸாதம் செய்து வந்த** - அரசனது ஆணைப் பொறி இடப்பட்டு வந்த: **திருமுகம்** - ஓலை; அரசனது கட்டளை எழுதப்பட்ட ஓலை, அவனது ஆணைப் பொறி யிடப்பட்டு வெளிவரும் என்பது இதனால் தெரிகிறது. '**திருமுகப்படி கல்லில் வெட்டியது**' என்பதால், அரசனது ஆணை முதலில் ஓலையில் எழுதப்பட்டுப் பின் கல்லில் செதுக்கப்படும் என்பது போதரும். **முன்பு கார் அளந்து வருகிற** - முன்பு அரசன் ஆணைப்படி கார் அளக்கும் தொழிலைப் புரிந்து வந்த என்பது.

**4. புது வுடையான் அரயன் உடையான்:** இவனுடைய மற்றொரு பெயர் இராசராச பல்லவராயன் என்பது. இவன் இறக்க, இவன் மகன் உடையான் கல்லாலை என்பவனுக்குக் காரளக்கும் பணி அரசனாணையால் உரிமையாக்கப்பட்டது. **தஞ்சாவூர்த் தெவர்** - தஞ்சைப் பெரிய கோயில் இறைவன்; **அடைத்த** - உரிமையான ; **நாட்டுப் பண்டாரங்களும் அளந்து** - நாட்டுப்புறங்களிலுள்ள களஞ்சியங்களுக்கு வரும் நெல்லையும் அளந்து: இதனால் தஞ்சைப் பெரியகோயில் இறைவனுக்கு அக் கோயிலில் மட்டுமன்றி, நாட்டுப் புறங்களிலும் அங்கங்கே நிலங்களும் அந்நிலங்களிலிருந்து வரும் நெல்லைச் சேர்த்துவைக்கும் களஞ்சியங்களும் இருந்தன என்று தெரிகிறது. **இத்தால் வந்த காரளவும்** - இதன் மூலம் வந்த நெல்லும் ; **மாடம் உள்ளிது ஒடுக்கி வருகிற பரிசு** - களஞ்சியத்தினுள்ளே சேர்த்து அதனால் வரும் கூலி ; **மாடம்** - கோயில் களஞ்சியம் ; **ஒடுக்கி** - சேர்த்து ; **பரிசு** - காரளப்பதற்குக் கூலியாக வரும் நெல் : **தெவர் பண்டாரம்**-தஞ்சைப் பெரிய கோயிலிடத்துப் பண்டாரம்; நாட்டுப் பண்டாரம் இதனின் வேறாகும். **தந் வர்க்கத்தார்** - தன் சந்ததியார், தன் வழியினர். **சந்ராதித்தவந்செல்ல** - சந்திர சூரியர் உள்ள காலம் வரை நடைபெற ; **வைத்த பங்கு ஒன்று** - கொடுத்த ஒரு பகுதி ; எனவே காணி காரளக்கும் பணி பலவிடங்களிலும் நடைபெற்ற தென்றும், அதில் ஒரு பகுதி உடையான் கல்லாலைக்குப் பகிர்ந்து கொடுக்கப்பட்டது என்றும் தெரிகிறது.

## பயிற்சி வினுக்கள்

1. காணி காரளவு உரிமைச் சாசனம் என்பது யாது? அது யார் காலத்தில் எப்பொழுது ஏற்பட்டது? எந்த இடத்தில் காணப்படுகிறது?

2. காணி காரளவு உரிமைச் சாசனத்தில் கூறப்படும் செய்திகள் யாவை?

3. விக்கிரம சோழன் மெய்க்கீர்த்தி எவ்வாறு தொடங்குகிறது? அதில் கூறப்படும் அவனது ஆட்சிச் சிறப்புக்களும், வெற்றிச் சிறப்புக் களும் எவை?

4. "குள தெலுங்க வீமன் விலங்கன்மிசை ஏறவும்"—பொருள் யாது? குளதெலுங்க வீமன் என்பதில், 'குளம்' என்றது எதனை? வரலாறு தருக.

5. விக்கிரம சோழன் மனைவியர் யாவர்? அவனது திருவோலக்கச் சிறப்பு எங்ஙனம் கூறப்பெற்றுள்ளது?

6. பொருள் தருக;—பாமாலை, கிகிரி, கருக்கலி, வன்பிலம், விலங்கலம், செழியர், திறை, வெங்கிட.

7. விளக்கம் தருக:—குளதெலிங்க வீமன், ஐம்படைப் பருவம், மணிநா வொடுங்க.

8. 'அகில, புவனமும் கவிப்ப தொருபுது மதிபோல' 'உமையொடு சங்கரன் இமயத்திருந் தானென'—இடஞ்சுட்டி உவமேயங் கூறி விளக்குக.

# 21. தில்லை திருப்பணி சாசனம்*

## முன்னுரை

தில்லை திருப்பணி சாசனம் என்பது, விக்கிரம சோழன் தில்லையில் செய்த திருப்பணிகளைப்பற்றிக் கூறும் சாசனமாகும். இச் சாசனம் அவனது ஆட்சியின் 15 ஆம் ஆண்டில் ஏற்பட்டது. இது திருச்சி மாவட்டம் உடையார் பாளையம் தாலுகா திருமழபாடி என்னும் ஊரிலுள்ள வைத்தியநாதர் கோயில் இரண்டாவது பிரகாரத்தின் தெற்குச் சுவரில் காணப் படுகிறது. தமிழ் மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது. நாற்பத்திரண்டு வரிகளையுடையது.

இச் சாசனம் முழுவதும் காணப்படவில்லை. முதலாம் குலோத்துங்க சோழன் மெய்க்கீர்த்தி சாசனத்தைப் போல, இதுவும் விக்கிரம சோழனது "பூமாலை மிடைந்து" என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி மட்டும் அமைந்ததொரு சாசனமா யுள்ளது. ஆனால். இம் மெய்க்கீர்த்தி விக்கிரம சோழனது 4 ஆம் ஆண்டு மெய்க்கீர்த்தியினும் நீளமுள்ளதாய், அவன் தில்லையில் செய்த திருப்பணிகளைக் கூறுகின்றது. சாசனங் களில் அமைந்த மெய்க்கீர்த்திகள், ஆண்டுதோறும் நீண்டு காணப்படும் என்பதற்கு இச்சாசனமும் ஒரு சான்றாயமைகிறது.

---

* இச் சாசனத்தின் முற்பகுதியில் விக்கிரமசோழன் வெற்றிச் சிறப்பும் ஆட்சிச் சிறப்பும், அவன் தன் ஆட்சியின் பத்தாம் ஆண்டில் தான் பெற்ற திறைப்பொருளால், தில்லையில் பொன்னம்பலத்தைச் சுற்றியுள்ள திருமாளிகை, கோபுரவாசல், கூடசாலைகள், பலிவளர் பீடம், திருத்தேர்க் கோயில் முதலியவற்றைப் பொன்னால் வேய்ந்தது தான் பிறந்த உத்திரட்டாதி நாளில் பெருவிழா ஒன்று தோற்றுவித்து, கோயில் இறைவனைத் தேரில் வரச் செய்து அவ் விறைவன் திரு மேனிக்கு முத்து மாலைகள் பல கொடுத்தது, கோயில் திருமாளிகையைச் சுற்றி, தன் பெயரால் ஒரு திரு நெடு வீதி எடுத்தது, இறைவன் திரு வமுது கொள்ளும் பரிகல முதலாகக் கற்பகத்தரு, பரிச்சின்ன முதலியவைகளைப் பொன்னால் செய்வித்தது முதலிய திருப்பணிகளும், செழியர், சேரலர், சிங்களர், கங்கர், கன்னடர், கொங்கர், கொங்கணர் முதலியவர்களை வென்று அடிமைப்படுத்தியதும், தன் பட்டத்தரசியான திரிபுவனமுழுதுடையாளோடும் வீர சிம்மாசனத்தில் வீற்றிருந்ததும் ஆன செய்திகளைக் கூறும் அவனது மெய்க்கீர்த்தி அமைந்துள்ளது.

பிற்பகுதியில், விக்கிரம சோழன் ஆட்சியின் பதினைந்தா மாண்டு, திருமழுவாடி உடையார் கோயில் ஆதி சண்டேஸ்வர தேவர் அருளால், கோயில் அதிகாரிகளான ஸ்ரீமகேஸ்வரர், ஸ்ரீகாரியம் செய்வார், கோயில் கணக்கு நெல் குப்பை ஆகியோர் எழுதிய சாசனம் அமைந்துள்ளது. இச்சாசனம் முழுவதும் இப்பொழுது காணப்படவில்லை. இதில். அள்ளியூருடையான் திருமழபாடி கோயிலில் திருநந்திதேவர் திருமேனி யொன்றை எழுந்தருளச் செய்ததாகத் தெரிகிறது.

இச் சாசனத்தால் விக்கிரம சோழன் வெற்றிச் சிறப்பினும் அவனது திருப்பணிச்சிறப்பு மிக்கதென்று தெரிகிறது. அன்றியும் அக்காலத்தில் கோயில் தேர், 'தேர்க்கோயில்' என்று அழைக்கப் பட்டுள்ளமையும் குறிப்பிடத்தக்கது.

விக்கிரம சோழன் கி. பி. 1120 முதல் 1136 ஆம் ஆண்டு வரை சோழ நாட்டை ஆண்டான். இச் சாசனம் அவனது ஆட்சியின் பதினைந்தாம் ஆண்டில் ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1135 ஆம் ஆண்டு என்னலாம்.

**சாசனம்**

(1) ஸ்வஸ்திஸ்ரீ
பூமாலை மிடைந்து பொன்மா (2) லை திகழப்
பாமாலை மலிந்த பருமணித் திரள்புயத்
திரு(3)நில மடந்தையொடு ஜெயமக ளிருப்பதக்
கநவரை (4)மார்வந் தநதெநப் பெற்றுத்
திருமக ளொருதநி யிருப்பக் (5)கலைமகள்

---

1. **பூமாலை மிடைந்து**-பூமாலை சூடி: சாசனங்களில் "ை" என்னும் துணை எழுத்து "ெ" எனப் பெரும்பாலும் அதன் பண்டை வடிவத்தில் காணப்படுதல் குறிப்பிடத்தக்கது.

2. **திகழ** - விளங்க; பாமாலை மலிந்த - பாமாலைகளால் புகழ்ப் பட்ட; பாமாலை - பாடல்கள்; இங்கு ஒட்டக்கூத்தர் இவன்மீது பாடிய உலா, பரணி முதலியவற்றைக் குறிக்கும்.

3. **திருநில மடந்தை** - சோழ நாடு; ஜெயமகள்-வெற்றி; கநவரை மார்வம் - கனத்த மலையொத்த மார்பு; வரை - மலை; மார்வந்-மார்பு; அம், சாரியை பெற்று நின்றது.

4. **திருமகள்** - செல்வம்; ஒருதநி இருப்ப - தான் ஒருத்தியே தனித்து இருக்கவும்.

5. **கலைமகள்** - கல்வி; சொற்றிறம் புணர்ந்த கற்பினள் ஆகி-சொல் வன்மைபடைத்த தூய தன்மையுடையதாகி; கற்பு - தூய தன்மை.

சொற்றிறம் புணர்ந்த கற்பின ளாகி
விருப்பொடு நா(6)வகத் திருப்ப திசைதொறுந்
திகிரியொடு செங்கோல் நடப்ப அகில
புவநமுங் கவிப்(7)ப தொர்புது மதிபோல்
வெண்குடை மிமிசை நிழற்ற கருங்கலி
யொளித்து வந்பிலத் திடை(8)க்கிடப்பக் குளத்திடை
தெலுங்கவீமந் விலங்கல்மிசை யெறவுங் [டைத்
கலிங்க பூமியைக் கநலெ(9)ரி பருகவும்
ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கியும்
வெங்கை மண்டலத் தாங்கிநி திருந்து
வட(10)திசை வடிப்படுத் தருளி தெந்றிசைத்

---

**6.** நாவகம் - நாவிடத்து ; திகிரி - ஆணை ; செங்கோல் - ஆட்சி ; நடப்ப - நடைபெற ; அகிலபுவனம் - உலக முழுவதும்; கவிப்பது - மூடுவது.

**7.** புதுமதி - புதிய திங்கள் ; மிமிசை - மேலாக நின்று; நிழற்ற - நிழலைச் செய்ய ; கருங்கலி - வறுமை, நோய் முதலியன ; ஒளித்து - ஒழித்து, நீக்கி ; வந்பிலம் - பாதாளம்.

**8.** குளத்திடை-குளம் என்னும் ஊரில் வாழ்ந்த; விலங்கல் மிசை யெறவும் - மலையின் மீது ஏறி ஒளிக்கவும்; கலிங்க பூமி - கலிங்க நாடு ; கநலெரி பருகவும் - நெருப்பால் அழிக்கப்படவும்.

விக்கிரம சோழன் பூமாலை, பொன் மாலைகளுடன் பாமாலைகளும் சூடப்பெற்றவன் ; நாடு, வெற்றி, செல்வம், கல்வி ஆகியவற்றை ஒருங்கே பெற்றவன் ; நான்கு திசைகளிலும் தன் ஆணையும் ஆட்சியும் நடைபெற, உலக முழுவதையும் நிழல் செய்யும் ஒரு புதிய திங்களைப் போலத் தன் வெண்கொற்றக் குடையால் தண்ணளி செய்தவன்; நாட்டில் வறுமை முதலியவற்றை நீக்கியவன் என்பது.

**9.** ஐம்படைப் பருவம் - இளமைப் பருவம் ; ஐம்படை - ஐம்படைத் தாலி ; அது வில், வாள், தண்டு, திகிரி, சங்கு இவை ஐந்தின் வடிவமாகச் செய்து குழந்தைகளின் கழுத்தில் அணியப்படும் ஒருவகைக் காப்பணி. வெங்கை மண்டலத் தாங்கிநிதிருந்து - விக்கிரம சோழன் இளவரசனா யிருந்தபோது, வேங்கி நாட்டிலிருந்து ஆட்சி செய்தான்; அப்பொழுதுதான் அவன் கலிங்கப்போரை நடத்தித் தெலிங்கவீமனைப் புறமிட்டோடச்செய்தான்.

**10.** வடதிசை வடிப்படுத்தருளி - வடதிசையில் கலிங்க வீமன் நாட்டைத் தன்னாட்சிக்குட்படுத்தி: தெந்றிசை - தென்னாட்டில் : இது முதல் இச் சாசனம் முந்திய சாசனத்தின் மெய்க்கீர்த்தியினின்றும் வேறு

தருமமுந் தவமுந் தானமுந் தழைப்ப
வேதமும் மெய்(11)மெய்யு மாதியுகம் போலத்
தலைசிறப்ப வந்தருளி வேலற்கரும் பொர்ப்புலி
யாணை பார்த்திவர் சூட நிலை (12)நமணி
மகுடம் முறைமுறைமையிற் சூடி
மந்நுயிர்க் கெல்லா மிந்நுயிர்த்தாய் போலத்
தந்நொளி பரப்பித் தநந்நநி பா(13)ர்த்து
மண்முழுதுங் களிப்ப மநுநெறி வளர்த்து
தந்கொயிற் கொற்ற வாசல் புறத்து
மணிநா வொடுங்க முரசு(14)கள் முழங்க
விசெயமும் புகழும் மென்மெலொங்க

---

பட்டு, விக்கிரம சோழனின் ஆட்சிச் சிறப்புக் கூறுகின்றது. தருமம் - அறநெறி ; தவம் - ஒழுக்கம் ; தானம் - கொடை ; தழைப்ப - வளர.

**11.** ஆதியுகம் போலத் தலைசிறப்ப - கிரேதா, திரேதா, துவாபர, கலி என்னும் நால்வகை யுகங்களில் கிரேதாயுகம் முதல் யுகமாகும். அந்த யுகத்தில் நாட்டில் அறம், ஒழுக்கம் முதலியன காணப்பட்டன, அதுபோல விக்கிரமன் ஆட்சியிலும் விளங்கிற்று என்பது. வந்தருளி - தோன்றி ; புலி ஆணை - புலிக்கொடி தாங்கிய விக்கிரம சோழன் கட்டளை ; பார்த்திவர் சூட - ஏனைய மன்னர்கள் ஏற்றுக்கொள்ள.

**12.** மகுடம் - முடி ; மந்நுயிற் - உலகத்து மக்கள் ; இந்நுயிற்த் தாய் பொல-இனிய உயிரைத் தரும் தாயைப் போல; தந்நொளி பரப்பி-தன் புகழைக் காட்டி ; தநித்தநி பார்த்து - தானே நேரில் போய்க் கண்டு.

**13.** மண் முழுதும் களிப்ப - நாடு முழுவதும் மகிழ ; மநுநெறி வளர்த்து - மநு வென்னும் மன்னனால் ஏற்பட்ட ஆட்சி முறையைக் கடைப்பிடித்து : தந் கொயிற் கொற்ற வாசல் புறம் - தன் அரண்மனை வாயிலுக்கு வெளியிடம் ; மணிநா ஒடுங்க - ஆராய்ச்சிமணி அடிபடாது கழிய ; அஃதாவது நாட்டில் குடிகளுக்குக் குறைவு ஒன்றுமின்றி ஆட்சி நடைபெற என்பது. முரசுகள் - வெற்றி முரசு; மண முரசு முதலியன.

**14.** முழங்க - ஒலிக்க ; விசெயம் - வெற்றி ; மென்மெலொங்க - மேலும் மேலும் வளர ; இது முதல் இம் மெய்க்கீர்த்தி விக்கிரமசோழன் தில்லையில் செய்த திருப்பணியைக் கூறுகின்றது. வாழி வாழி மாநிலம் காக்க - 'வாழி வாழி இம்மா நிலம் காக்க' என்று; திருமணி பொற்றேடு எழுது - அழகிய பொன்னேட்டில் எழுதப்படும் ; இவ்வாறு எழுதுவதை 'அரசர்க்கு ஆண்டெழுதுவது' என்று கூறுவர். இது மன்னன் ஆட்சியின் ஒவ்வோர் ஆண்டு துவக்கத்திலும் எழுதப்படும்; அப்பொழுது அவர் ஆட்சிக்குட்பட்ட மன்னர் திறை கொண்டுவந்து செலுத்துவர்.

வாழி வாழி இம்மா நிலங்காக்கத்
திருமணிப் பொற்றொ(15)ட் டெழுதுபத் தாண்டு
வருதிறை மூந்நெ மந்நவர் சுமந்து
நிறை நிறைத்துச் சொரிந்த செ(16)ம்பொற் குவை
தந்குல நாயகந் தாண்டவம் பயிலுஞ் [யால்
செம்பொந் நம்பலஞ் சூழ்திரு மா(17)ளிகையும்
கோபுர வாசல் கூடசாலைகளும்
உலகு வலங்கொண் டொளிவிளங்கு பொந் மெய்ந்து
கு(18)லவரை உதைய குன்றமொடு நின்றெனப்
பசும்பொந் மெய்ந்து பலிவளர் பீடமும்
விசும்பொளி (19) தழைப்ப விளங்கு பொந் மெய்ந்து
இருநிலந் தழைப்ப இமையவர் களிப்ப

---

15. பத்தாண்டு வரு திறை - கடந்த பத்து ஆண்டுகளாகப் பிற மன்னர்களால் கொண்டுவரப்பட்ட திறைப்பொருள். இனி, 'வருதிறை' என்பதை, 'வருமுறை' எனக் கொள்ளின், முறையாகக் கொண்டுவரப் படும் என்று பொருள்கொள்ளத் தகும். முந்நெ - கடந்த பத்து ஆண்டு களாக ; மந்நவர் - தன்னாட்சிக்குட்பட்ட மன்னர்கள் ; திறை - திறைப்பொருள் ; நிறைத்து-சேர்த்து; சொரிந்த-கொண்டுவந்து தந்த.

16. செம்பொற் குவை - பொற்குவியல் ; தந்குல நாயகன் - தன் குலத் தெய்வமான தில்லை நடராசப் பெருமான் ; தாண்டவம் பயிலும் - திருநடனம் செய்யும் ; தாண்டவம் - நடனம் ; செம் பொந் நம்பலம் - திருச்சிற்றம்பலம் ; இது தில்லையில் உள்ளது.

17. திருமாளிகையும் கோபுர வாசல் கூடசாலைகளும் : இங்குத் திருமாளிகை என்பது கோயில் திருமதிலையொட்டி உட்புறத்து அமைந் துள்ள கட்டடங்களைக் குறிக்கும் ; அவைகளில் பெரியோர் வாழ்வர்: கூடசாலை என்பது, தாழ்வாரம். இவை இரண்டையும் விக்கிரம சோழன் தான் திறைப்பொருளாகக் கொண்ட பொன்னால் வேய்ந்தான். அப்பொழுது, அத் திருமாளிகை, இவ் வுலகைச் சுற்றி மதில்போல் நிற்கும் சக்கரவாளக் கிரியையும், கோபுரவாசல் கூடசாலைகள் உதய கிரியையும் ஒத்து விளங்கின என்பது. ஒளி விளங்கு - ஒளி வீசும் ; நெமிக் குல வரை-சக்கரவாளக் கிரி; இஃது உலகைச் சுற்றிலும் மதில் போல் வளைந்துள்ள தென்பர். குலவரை - பெரிய மலை.

18. உதைய குன்றம் - ஞாயிறு தோன்றும் மலை; இதனை 'உதய கிரி' என்பர். பசும்பொந் மெய்ந்து - பசும் பொன்னால் மூடி ; பலிவளர் பீடம் - காணிக்கை படைக்கும் இடம் ; பலி - காணிக்கை ; விசும்பு ஒளி தழைப்ப - ஆகாயத்தில் அதன் ஒளி வீச.

19. இருநிலம் - உலகத்தார் ; இமையவர் - தேவர்கள்.

பெரிய திருநாள் பெரும்(20)பியர் விழாவெனும்
உயர்பூரட் டாதி உத்திரட் டாதியில்
அம்பல நிறைந்த அற்புதக் கூத்தர்
இந்(21)பர் வாழ எழுந்தருளுவ தற்குத்
திருத்தெற் கொயில் செம்பொந் மெய்ந்து
பருந்திரள் முத்திந் (22) பயில்வடம் பரப்பி
நிறைமணி மாளிகை நெடுந்திரு வீதி தந
திருவளர் பியரால்ச் செ(23)ய்துசமைத் தருளி

**20. பெரிய திருநாள் பெரும் பியர் விழா** - பெரிய திருநாள் என்று சொல்லப்படும் பெரும் பெயர் விழா ; இது விக்கிரம சோழன் பிறந்த நாளாகிய உத்திரட்டாதி நாளில் நடைபெற்றது. இஃது இருநாட்கள் நடைபெற்றதென்பது, 'உயர் பூரட்டாதி உத்திரட்டாதியில்' என்ற தொடரால் தெரிகிறது. பூரட்டாதி - 25 ஆம் நாள் ; உத்திரட்டாதி - 26 ஆம் நாள். அம்பலம் நிறைந்த அற்புதக் கூத்தர் - சிதம்பரம் கோயிலாகிய பொன்னம்பலத்தில் எழுந்தருளிய நடராசப்பெருமான் ; இந்பர் - அன்பர், அடியார் ; இவ்வுலகத்தவர் எனினுமாம்.

**21. திருத்தெற் கோயில்** - அழகிய தேராகிய கோயில் ; இது, திருநாட்களில் தில்லைப் பொன்னம்பலத்திலுள்ள நடராசப்பெருமான் திருவுருவத்தை எழுந்தருளச் செய்து, வீதி வருவதற்கு உரியது ; முற்காலத்தில் மரத்தினால் செய்யப்பட்ட தேரே, இறைவன் எழுந்தருளிய கோயிலாக இருந்ததென்பது இதனால் தெரிகிறது. விக்கிரம சோழன் தில்லைக்கோயில் தேரையும் பொன்னால் வேய்ந்தான் என்க. பருதிரள் முத்து - பருத்துத் திரண்ட முத்துக்கள் ; அம்முத்துக்களாலான மாலை, 'முத்திந் பயில் வடம்' எனப்பட்டது. இது தேர்க் கோயிலில் எழுந்தருளும் இறைவன் திருவுருவத்திற்கு அணிவதற்கு அளிக்கப்பட்டது.

**22. மாளிகை நெடுந்திரு வீதி** - திருச்சுற்றுமாளிகையை யடுத்த நீண்ட வீதி ; இஃது இவன் பெயரால் 'விக்கிரம சோழன் வீதி' என்று அழைக்கப்பட்டது. திருவளர் பியரால்ச் செய்து - விக்கிரமசோழன் என்னும் தன் பெயரால் உண்டாக்கி.

**23. சமைத்தருளி** - அமைத்து ; பைம்பொன் குழித்த பரிகலம் முதலால்-பசிய பொன்னால் குழி குழியாகச்செய்த உண்ணும் பாத்திரம் முதலாக ; பரிகலம் - உண்கலம் ; இதில் இறைவனுக்குச் சமைத்த நிவேதன உணவு வைக்கப்படும். அவ்வுணவு பலதிறப்பட்டனவா யிருக்குமாதலால், அவைகளைத் தனித்தனியே வைத்தற்கு, அவ்வுண்கலம் பல குழிகளையுடையதா யிருந்ததென்பது. செம்பொன் கற்பகம் - செம்பொன்னால் செய்த கற்பகத்தரு ; இது தில்லைக் கோயிலிடத்துள்ளது. பரிச்சிந்நம்-கடவுள், அரசர் முதலியோர்க்குரிய அடையாளப் பொருட்கள் : இவை மரியாதைக்காக விழாக் காலங்களில் வெளியே கொண்டுவரப்படும்.

பைம்பொற் குழித்த பரிகல முதலால்
செம்பொற் கற்பகத் தொடுபரிச் சிந்(24)தமும்
அளவி லாதந வொளிபெற வமைத்துப்
பத்தா மாண்டில் சித்திரைத் திங்கள்
அத்த(25)ம் பெற்ற ஆதித்த வாரத்துத்
திருவளர் மதியிக் த்ரயொதசிப் பக்கத்து
இந்த பலவும் இநிது(26)சமைத் தருளி
ஒருகுடை நிழக்கீழ் தலமுழுதுங் கவிப்பச்
செழியர்வெஞ் சுரம்புக செரலர் க(27)டல்புக
அழிதரு சிங்கணர் அஞ்சிநெஞ் சலமர
கங்கர் திறையிடக் கந்நடர் வெந்நிட
கொங்(28)க ரொதுங்க கொங்கணர் சாயமற்
றெத்திசை மந்ந(29)ருந் தந்தமக் கரணென

---

**24.** அளவிலாதந-கணக்கில்லாதவை; பத்தாமாண்டில்-பத்தாவது ஆண்டு ; அஃதாவது, கி. பி. ~~1026~~ ஆம் ஆண்டு ; சித்திரைத்திங்கள் - சித்திரை மாதம். 1130

**25.** அத்தம் பெற்ற ஆதித்த வாரம் - அத்த நாளும் ஞாயிற்றுக் கிழமையும் கூடிய ; அத்தம் - அஸ்தநாள்; அஃதாவது பதின்மூன்றும் நாள் ; ஆதித்தவாரம் - ஞாயிற்றுக்கிழமை ; வளர்மதியின்-வளர்பிறை காலத்தில் ; த்ரயொ தசி பக்கம் - பதின்மூன்றுவது திதி ; பக்கம்—15 நாள். திதி என்பது ஆகாயத்தில் சந்திரனுக்கும் சூரியனுக்குமுள்ள தூரம். இந்நபலவும் - இவ்வகையான திருப்பணிகள் பலவற்றையும்.

**26.** சமைத்தருளி - செய்துமுடித்து ; விக்கிரமசோழன் தனது தில்லைத் திருப்பணிகளையெல்லாம் அவனது ஆட்சியின் பத்தாம் ஆண்டு சித்திரைத் திங்கள் அத்தநாளும் ஞாயிற்றுக்கிழமையும் கூடிய வளர் பிறை திரையோதசி பக்கத்தில், (கி. பி. ~~1028~~ 1130 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 15 ஆம் நாள்) செய்துமுடித்தான் என்பது. தலமுழுதும் கவிப்ப-உலக முழுவதும் அடங்க ; செழியர் - பாண்டியர் ; சுரம் - காடு.

**27.** சிங்கணர் - சிங்கள மன்னர் ; அலமர - ஏங்க ; கங்கர் திறை இட - கங்க மன்னர் திறை செலுத்த ; கந்நடர் - கன்னடர் ; வெந்நிட - புறங்காட்டி ஓட.

**28.** கொங்கர் ஒதுங்க - கொங்கு நாட்டவர் பின்வாங்க ; கொங்கணர் சாய - கொண்காண நாட்டவர் மடிய.

**29.** அரண் - அடைக்கலம், ஒதுக்கிடம் ; திருமலற்செவடி - தாமரை மலர் போன்ற செவ்விய பாதங்கள் ; உரிமை - சொந்தமானது.

**30.** இறைஞ்ச - வணங்க ; விக்கிரமசோழனோடு போர் செய்தவர் களில் பாண்டியர் காட்டிற்கு ஓடினர்; சேரர் கடலில் புகுந்தனர் ;

திருமலர்ச் செவடி உரிமெ (30)யி லிறைஞ்ச
ஆங்கவன் மகிழுங் கங்கெயொப் பாகிய
(31)தெரிவெயர் திலதந் தியாக பதாகெ
புரிகுழல் மடப்பி(32)டி புநிதகுண வநிதெ
திரிபுவன முழுதுடெ யாள் அவன் தி(33)ருவுளத்

---

சிங்கள மன்னர் பயந்து ஏங்கினர்; கங்கர் திறை செலுத்தினர்; கன்னடத்தார் புறமிட்டோடினர். கொங்கு நாட்டவர் பின்வாங்கினர்; கொங்கணர் மடிந்தனர். பிறநாட்டு மன்னர்கள் எல்லாரும் இவன் பாதங்களே அடைக்கலமென வந்து பணிந்தனர் என்பது. அவன் மகிழும் கங்கெ - சிவபெருமான் விரும்பும் கங்காதேவி.

**31. தெரிவெயர் திலதந் தியாக பதாகெ**-தெரிவையர் திலகமாகிய தியாக பதாகையுடன்; இச்சாசனத்தில் இவனுடைய முதல் மனைவியான முக்கோக்கிழானடிகள் பெயர் குறிக்கப்படவில்லை. முந்திய சாசனத்தில், "முல்லை வாணகைய் முக்கோக் கிழானடி, உமையொடும் சங்கரன், இமையத்திருந்தா நெனப் பொருந்திஇனிதிருப்ப" என வந்திருப்பதால், இவனது ஆட்சியின் 15 ஆம் ஆண்டில் அவள் இல்லை என்பது போதரும்.

தியாக பதாகெ என்பாள், இச் சாசனத்தில் கங்கை யொப்பாகிய தெரிவெயர் திலதம், புரிகுழல் மடப்பிடி, புநிதகுண வநிதெ, திரிபுவனமுழுதுடெயாள் என்பன முதலாகச் சிறப்பித்துக் கூறப்படுகிறாள்.

**32. திரிபுவனமுழுதுடெயாள்** - மூன்று உலகத்தையும் தனக்கு உரிமையாவுடையவள் என்பது; திரிபுவனம் - சேர, சோழ, பாண்டிய நாடுகள்; முதலாம் குலோத்துங்க சோழன் முதலியோர் 'திரிபுவன சக்கரவர்த்திகள்' என அழைக்கப்படுதலும் காண்க.

**32. அவன் திருவுளத் தருள் முழுதுடெயாள்** - விக்கிரமசோழனது அருளுக்கு உரிமையானவள் தியாக பதாகை என்பது. ஊழி அந்நெடு மாலா கத்து......திருமார்வத் தருளொடு மிருப்ப: இவ் வடிகள் உலக முழுதுடையாள் என்னும் மற்றொரு மனைவி விக்கிரமசோழனுடன் அவன் சிம்மாசனத்தில் இருந்த செய்தி கூறுகின்றன; அஃதாவது, உலக முடிவில் திருமாலின் திருமார்பினைப் பிரியாதிருக்கும் இலக்குமியைப்போன்று, மாதர் மடமயில் என்றும், பூதலத் தருந்ததி என்றும், அரணிய கற்புடையாள் என்றும் சிறப்பித்துக் கூறப்படும் தரணி முழுதுடையாள் விக்கிரமசோழன் மனதைவிட்டு நீங்காது இருப்ப என்பது. இத்தகைய தொடர் ஒன்று முதலாம் குலோத்துங்கசோழன் சாசனத்திலும் வந்திருத்தல் குறிப்பிடத்தக்கது. தரணி முழுதுடையாள் என்பாள் இவனது மூன்றாவது மனைவியாய் இருத்தல்வேண்டும் போலும்.

தருள்முழுதுமு டெடயாளென வுடனிருப்ப
ஊழி அங்கெடு மாலா கத்துப்
(34)பிரியா தென்றுந் திருமக ளிருந்தமெதன
மாதர் மடமயில் பூதலத் தருந்ததி
அரணிய (35) கற்பிற் தரணிமுழு துடெடயா
ளிவந்திரு மார்வத் தருளொடு மிருப்பச்
செம்பொந் வீரஸி(36)ம் ஹாஸநத்து
திரிபுவன முழுதுடெடயாளொடும் விற்றிருந் தருளிய
கொப்பரகெசரி வந்மராந(37)திரிபுவநச் சக்ரவர்த்திகள்
ஶ்ரீவிக்கிரம சொழ தெவற்கு யாண்டு
௰ரு ஆவது(38)திரிபுவந முழுதுடெடவளநாட்டுப் பொய்
கெ நாட்டு உடெடயார் திருமழு

---

**36. திரிபுவன முழுதுடெடயாளொடும் விற்றிருந்தருளிய :** விக்கிரம சோழன் கங்கை யொப்பாகிய தியாகபதாகையும், நெடுமாலாகத்துத் திருமகள் இருந்தென தரணி முழுதுடையாளும் உடனிருப்ப திரிபுவன முழுதுடையாளொடு வீரசிம்மாசனத்து வீற்றிருந்தான் என்பதால், இம் மூவரும் இவன் தேவியர் எனக் கருத இடமிருக்கிறது. கொப்பரகெசரி : விக்கிரமசோழன் பரகேசரி எனவே, இவனுக்குப்பின் ஆட்சிசெய்த இரண்டாம் குலோத்துங்கசோழன் இராசகேசரி என்பது போதரும்.

**37. திரிபுவநச் சக்கரவர்த்திகள் :** இப்பெயர் முதலாம் குலோத்துங்க சோழன் காலமுதல் சோழமன்னருக்கும் பாண்டிய மன்னருக்கும் வழங்கிவருவது குறிப்பிடத்தக்கது. முதலாம் குலோத்துங்கசோழன், விக்கிரமசோழன், குலசேகர தேவர், சுந்தரபாண்டிய தேவர் முதலியோர் திரிபுவன சக்கரவர்த்தி பட்டம் பெற்றவர்களாவர்.

**38. திருமழுவாடி உடெடயார்** கொயில் - திருமழுவாடி என்பது இப்பொழுது திருமழபாடி என்று வழங்குகிறது. இது விக்கிரமசோழன் காலத்தில் திரிபுவந முழுதுடை வளநாட்டு, பொய்கை நாட்டில் இருந்தது. இப்பொழுது, திருச்சி மாவட்டம் உடையார்பாளையம் தாலூகாவில் உள்ளது.

திரிபுவந் முழுதுடெட வளநாடு என்பது முதலாம் இராசராசன் காலத்தில், அவன் சிறப்புப்பெயரால் இராசேந்திர சிங்கவளநாடு என்று வழங்கியது. இது காவிரி நதிக்கு வடக்கே வெள்ளாறு வரை பரவி இருந்தது என்பர். இது முதலாம் குலோத்துங்கன் காலத்தில் 'தியாக வல்லி வளநாடு' என்று பெயர்பெற்றிருந்தது.

திருமழுவாடி உடையார் கோவில், இப்பொழுது 'வயித்தியநாத சுவாமி கோயில்' என்று அழைக்கப்படுகிறது. இங்குப் பங்குனி மாதம், நந்தி தேவருக்குத் திருக்கல்யாண விழா நடை பெறுகிறது.

**39.** வாடி உடெயார் கொயிலில் ஆதிசண்டெச்வர தெவர் ஆதெசம் அருளால் இ—

**40.** க் கொயிலில் ஸ்ரீ மாஹெச்வரொமும் ஸ்ரீ காரியஞ் செய்வாரும் இக்கொயில் கணக்கு

**41.** நெல குப்பெபெயுடெயாநும் உள்ளிட்ட ஸ்தாநத் தொம் எழுத்து இக்கொயிலில்

**42.** ஸ்ரீ நந்திகெச்வரதெவரெ எழுந்தருளுவித்த அள்ளி யூருடெயாந் எச்சில் மண்.

---

**39.** ஆதிசண்டெச்வரதெவர் ஆதெசம் அருளால்-ஆதி சண்டேசுவரர் அருளாலும் கட்டளையாலும்: ஆதி சண்டேசுவரரைப்பற்றி இந்நூல் வில்லவராயன் சாசனம் 185 ஆம் பக்கத்தில் காண்க. ஆதெசம் - கட்டளை.

**40.** ஸ்ரீமாஹெச்வரொமும் - கோயில் அதிகாரிகளாகிய யாமும்; ஸ்ரீ காரியம் செய்வாரும் - கோயில் காரியங்களை மேற்பார்வை செய்வாரும்: ஸ்ரீ காரியம் செய்வார் - கோயில் மேலாளர்; கொயில் கணக்கு - கோயில் கணக்கன்; இவன் ஊர்ச்சபைக் கணக்கனுன கரணத்தானின் வேறுவான். திருமழபாடி உடையார் கோயில் கணக்கன் பெயர், நெல் குப்பெப யுடையான் என்பதாகும்.

**41.** உள்ளிட்ட - கூடிய, சேர்ந்த; ஸ்தாநத்தொம் - கோயில் தலைவர்கள். ஸ்தாநம் - கோயில். ஸ்தாநத்தொம் எழுத்து என்பது. ஆதி சண்டேஸ்வர தேவர் கட்டளையாலும் அருளாலும், கோயில் அதிகாரிகளான ஸ்ரீ மாகேஸ்வரர், ஸ்ரீ காரியம் செய்வார், கோயில் கணக்கு ஆகியோர் எழுதிய சாசனம் என்று பொருள்படும்; எழுத்து - சாசனம்.

**42.** அள்ளியூருடெயாந்: இவன் அள்ளியூருக்குத் தலைவன்; திருமழவாடி உடையார் கோயிலில் திருநந்தீச்சுவரர் திருமெனி ஒன்றை எழுந்தருளச்செய்தான். 'எச்சில் மண்' என்பன பற்றிய விளக்கம் தெரியவில்லை.

## பயிற்சி வினுக்கள்

1. தில்லைத் திருப்பணிச் சாசனம் என்பது யாது? விக்கிரமசோழன் தில்லையில் செய்த திருப்பணிகளைக் குறிப்பிடுக.

2. தில்லைத் திருப்பணிச் சாசனம் எங்குக் காணப்படுகிறது? அச் சாசனத்தில் வரும் அள்ளியூருடையானைப் பற்றி அறியப்படும் செய்தி யாது?

3. விக்கிரமசோழன் மெய்க்கீர்த்தி எவ்வாறு தொடங்குகிறது? அவனது 4 ஆம் ஆண்டு மெய்க்கீர்த்திக்கும் 15 ஆம் ஆண்டு மெய்க்கீர்த்திக்கும் இடைப்பட்ட செய்திகளாகக் கூறப்படுவன யாவை?

4. விக்கிரமசோழன் மெய்க்கீர்த்தியில் காணப்படும் அவனுடைய வெற்றிகள் யாவை ? அவன் ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கிச் செய்த போரினை விளக்குக.

5. விக்கிரமசோழனது ஆட்சிச் சிறப்பினைக் குறிப்பிடுக- 'அகில புவனமும் கவிப்பதோர் புதுமதிபோல,' 'ஆதியுகம் போல', 'மன்னுயிர்க் கெல்லா மின்னுயிர்த் தாய்போல' என்பனவற்றால் விளக்குவன யாவை?

6. பொருள் தருக :—பாமாலை, கருங்கலி, வன்பிலம், விலங்கல், திருமாளிகை, கூடசாலை, வடம், பரிகலம், கற்பகம், பரிச்சின்னம், திங்கள், அத்தம், வாரம், பக்கம்.

7. விளக்கம் தருக :—குளத்திடைத் தெலுங்கவீமன், ஐம்படைப் பருவம், மனுநெறி வளர்த்து, மணிநா வொடுங்க, பொற்றேட்டு எழுபத்தாண்டு, தன்குல நாயகன், அம்பலம் நிறைந்த அற்புதக் கூத்தர், திருத்தேர்க் கோயில்.

8. 'நேமிக்குலவரை யுதயகுன்றமொடு நின்றென — நின்றன' யாவை ? விளக்கி எழுதுக.

9. பெரிய திருநாட் பெரும் பெயர் விழா நடைபெற்ற நாட்கள் எவை ? சாசனச் சான்று காட்டி விளக்குக.

10. விக்கிரமசோழன் செம்பொன்னால் வேய்ந்தன யாவை ?

11. விக்கிரமசோழன் தில்லையில் செய்த திருப்பணி முடிந்த நாள் எது ? அதற்குச் சரியான இந்நாளைய காலம் எது ?

12. இச்சாசனத்தில் கூறப்படும் விக்கிரமசோழன் தேவியர் யாவர்? அவர்கள் சிறப்புக்கள் யாவை ?

13. கங்கை, திருமகள்—இவர்களுக்கு ஒப்பான விக்கிரமசோழன் தேவியர் யாவர் ? அவர்கள் எங்ஙனம் சிறப்பித்துக் கூறப்படுகின்றனர்? "திரிபுவனமுழுதுடையாள்" என்பதற்குச் சொற்பொருள் தருக.

# 22. மூன்றும் இராசராச சோழன் சாசனம்

## முன்னுரை

மூன்றும் இராசராச சோழன் சாசனம் என்பது, மூன்றும் இராசராசன்* காலத்தில் ஏற்பட்ட சாசனம் என்று பொருள் படும். இச் சாசனம் மூன்றும் இராசராச சோழ ஆட்சியின்

* மூன்றும் இராசராச சோழன், மூன்றும் குலோத்துங்க சோழனுக்கு மகன் என்று கருதப்படுகிறது. விக்கிரமசோழனுக்குப் பின் அவன் மகன் இரண்டாம் குலோத்துங்கசோழன் (கி. பி. 1133—1150), அவன் மகன் இரண்டாம் இராசராசசோழன் (கி. பி. 1146—1163), விக்கிரமசோழன் பெயரனை எதிரிலிப்பெருமாள் என்னும் இரண்டாம் இராசாதிராசன் (கி. பி. 1163—1178), அவன் தம்பி என்று கருதப்படும் மூன்றும் குலோத்துங்கன் (கி. பி. 1178—1218) ஆகியோர் ஆண்டனர். மூன்றும் குலோத்துங்கசோழன் மகனை மூன்றும் இராசராசசோழன் கி. பி. 1216 முதல் 1256 வரை சோழநாட்டை ஆண்டான். இவன் இராசகேசரி பட்டம் பெற்றவன்.

இவன் காலத்தில் வடமேற்கே ஹொய்சளரும், தெற்கே பாண்டியரும், மகதநாட்டு வாணகோவரையர், திருமுனைப்பாடி நாட்டுக் காடவராயர் முதலிய குறுநில மன்னரும் இவனுக்குப் பகைவராயிருந்து பல துன்பங்களைத் தந்தனர். முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன் இவனோடு போர் செய்து, இவன் நாட்டைப் பிடித்துத் தன் ஆட்சிக் குட்படுத்தினன். ஆனால் போசள மன்னனை வீர நரசிம்மன், மாறவர்மன் சுந்தரபாண்டியனை வென்று, மீண்டும் இராசராசன் சோழ நாட்டை ஆளும்படி செய்தான்.

இவனுடைய கல்வெட்டுக்கள் தென்னார்க்காடு, வடார்க்காடு செங்கல்பட்டு, சேலம், சித்தூர், கடப்பை, நெல்லூர் முதலிய மாவட்டங் களில் காணப்படுகின்றன. இவனுக்குச், "சீர் மன்னி இருநான்கு திசை மன்னும்" எனவும், "சீர் மன்னு மலர்மகளும்" எனவும் தொடங்கும் இருவகை மெய்க்கீர்த்திகள் உள்ளன. இவன் காலத்தில் தான் சைவ சித்தாந்த சாத்திரங்களுள் ஒன்றான சிவஞானபோதம் என்னும் நூல், திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்ட தேவரால் எழுதப் பெற்றது.

இராசராசன் பட்டத்தரசி புவனமுழுதுடையாள் எனப்படுவாள். மூன்றும் இராசேந்திரசோழன் இவனுக்கு மகனாவான். இவனுக்குப் பகைவரும், நண்பருமான பல குறுநில மன்னரும், அரசியல் தலைவர் களும் இவன் காலத்தில் வாழ்ந்தனர். இவன் கி. பி. 1256 இல் இறந்தான் என்பர்.

பதினெட்டாம் ஆண்டில் ஏற்பட்டது. இது செங்கல்பட்டு மாவட்டம் காஞ்சிபுரம் தாலூகா மணிமங்கலம் என்னும் ஊரி லுள்ள இராசகோபாலசுவாமி கோயில் மண்டபத்தின் கிழக்குச் சுவரில் காணப்படுகிறது. தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது. எட்டு வரிகளையுடையது.

இச்சாசனத்தில் மூன்றும் இராசராச, சோழன் 'திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ ராஜராஜ தேவர்' என்று குறிக்கப்பட் டுள்ளான். அவனது ஆட்சியின் 18 ஆம் ஆண்டு, மார்கழி மாதம், வளர்பிறை ஐந்தாம் திதியும் புதன்கிழமையும் கூடிய அவிட்ட நாளில். மணிமங்கலம் வண்டுவராவதி எம்பெருமான் கோயில் அபிஷேக மண்டபத்திற்கு அடியில் புலிமுகமிடப்பட்ட படிக்கட்டு வொன்றைக் கல்லால் கட்டுவதற்கு வேண்டும் பொன்னை, மணிமங்கலம் உடையான் பஞ்சநெதி இலச்சுமணன் மலேகினிய நின்றான் மூத்தமகனை பிரமபிரியனும், அவன் தம்பி ஆகவமல்லதேவனும் தானமாகக் கொடுத்த செய்தி கூறப் படுகிறது. அக்காலத்தில் கோயில் மண்டப முதலியன ஒவ்வொருவர் பெயரால் கட்டப்பட்டன என்பதற்கு இச்சாசனம் ஒரு சான்றாகும்.

மூன்றும் இராசராச சோழன் கி. பி. 1216 முதல் 1256 ஆம் ஆண்டு வரை சோழநாட்டை ஆண்டான். இச்சாசனம் அவனது ஆட்சியின் 18 ஆம் ஆண்டில் ஏறபட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1234 ஆம் ஆண்டு என்னலாம்.

## சாசனம்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திருவாய்க்கெழ்வி முன்னாக திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ ராஜராஜ தெவற்—

2. கு யாண்டு ய அ வது தநுநாயற்று பூர்வ்வ பக்ஷத்து பஞ்சமியும் புதன் கிழமையும் பெ—

---

குறிப்புரை

1. திருவாய்க் கெழ்வி - அரசன் ஆணையைக் கேட்டு அறிவிப்பவன்; முன்னாக - சான்றாக; முன்னிலையில் எனினுமாம்: திரிபுவனச் சக்கர வத்திகள் ஸ்ரீ ராஜராஜ தெவர் - மூன்றும் இராசராச தேவன்; இவன் திரிபுவன சக்கரவர்த்திகள் என்னும் பட்டம் பெற்றவன்; இவன் வரலாற்றை இச் சாசன முன்னுரை அடிக்குறிப்பில் காண்க.

2. தநு நாயிறு - மார்கழித் திங்கள்; பூர்வ்வ பக்ஷம் - முதல் பக்கம்; அஃதாவது வளர்பிறைக் காலம்; பஞ்சமி - ஐந்தாவது திதி.

**3.** ற்ற அவிட்டத்தி னாள் ஜயங்கொண்ட சொழ மண்ட லத்துப் புலியூர்க் கொட்டமான குலொத்து—

**4.** ங்கசொழவளனாட்டுக் குன்றத்தூர் நாட்டு மணிமங் லமான கிராமசிகாமணிச் சதுவெதி மங்—

**5.** கலத்து வண்டுவராபதி எம்பெருமான் கொயிலில் அபிஷெக மண்டபத்துக்கு கிழைப்—

**6.** புலிமுகமான சொபானத்துக்கு வெண்டும் பொன் னிட்டுக் கல்காரஞ் செய்வித்தான் மணிமங்—

---

**3. அவிட்டத்தினாள்** - இருபத்து மூன்றாவது நாள்; **ஜயங்கொண்ட சொழமண்டலம்** - தொண்டை நாடு : **புலியூர்க் கொட்டம் :** இது முதற் குலோத்துங்கன் காலத்தில் குலோத்துங்க சோழ வளநாடு என்று பெயர் பெற்றிருந்தது. இப்பொழுது செங்கல்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த சைதாப்பேட்டை, பொன்னேரி முதலிய தாலூகாக்கள் அடங்கிய பகுதியைக் குறிக்கும் என்பர்.

**4. குன்றத்தூர் நாட்டு மணி மங்கலம் ;** இது செயங்கொண்ட சோழ மண்டலத்துப் புலியூர்க் கோட்டத்தில் உள்ளது ; புலியூர்க் கோட்டம், முதற் குலோத்துங்கன் கால முதல் 'குலோத்துங்க சோழ வளநாடு' என்று பெயர்பெற்றதால், மணிமங்கலம் என்னும் ஊர் அவ்வளநாட்டுக் குன்றத்தூர் நாட்டில் உள்ளதாயிற்று. முதல் இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திரன், முதலாம் வீரராசேந்திரன் முதலியோர் காலத்தில், மணிமங்கலம், ஜெயங்கொண்ட சோழமண்டலத்துச் செங்காட்டுக் கோட்டத்து, மாகணூர்நாட்டில் இருந்ததென்பது அன்னார் காலத்துச் சாசனங்களால் அறிகின்றோம்.

**கிராமசிகாமணி சதுவெதிமங்கலம் :** இது மூன்றாம் இராசராசன் காலத்தில் மணிமங்கலத்திற்கு வழங்கிய மற்றொரு பெயர். ஆனால் முதல் இராசாதிராசன் முதலியோர் காலத்தில் அது இராசசூளாமணி சதுர்வேதி மங்கலம் என்று அழைக்கப்பட்டது.

**5. வண்டுவராபதி எம்பெருமான் :** மணிமங்கலம் கோயில் இறைவன் பெயர். இவருக்குக் 'காமக் கோடி விண்ணக ராழ்வார்' என்ற மறு பெயருமுண்டு. **அபிஷெக மண்டபம்** - இறைவன் திருவுருவத்தைத் திருமஞ்சனம் செய்யுமிடம் ; **கிழை** - அடிப்பகுதியில்.

**6. புலிமுகமான சொபானம்** - புலிமுக வடிவத்தில் செய்யப்பட்ட படிக்கட்டு ; **சொபானம்** - படிக்கட்டு; **பொன்னிட்டு** - பொன்னைச் செலவு செய்து ; **கல்காரம்** - கல்லால் செய்யப்படும் பணி; காரம் என்பது தாரம் என்றிருத்தல் வேண்டும். தாரம் - பணி, வேலை.

மணிமங்கலம் கோயில் அபிடேக மண்டபத்தினடியில் கல்லால் படி கட்டுவதற்கு, அவ்வூர் மணிமங்கல முடையான் பஞ்சநெதி

7. கலமுடையான் பஞ்சநெதி இலக்ஷ்மணன் மலைகினி ய நின்ருன் பிரம பெரியன் பெரிய பிள்—

8. ளையும் இவன் தம்பி ஆகவமல்லதெவனும் இவர்கள் தன்மம்

---

இலச்சுமணன் மலைகினிய நின்ருன் மூத்த மகனை பிரம பெரியனும், அவன் தம்பி ஆகவமல்ல தேவனும் பொன் கொடுத்தனர் என்பது.

7. **மணிமங்கலமுடையான் பஞ்சநெதி இலக்ஷ்மணன் மலைகினிய நின்ருன் பிரமபெரியன் பெரிய பிள்ளை** என்பது, "மணி மங்கல முடையான் பஞ்ச நெதி இலக்ஷ்மணன் மலை கினிய நின்ருன் பெரிய பிள்ளையான பிரம பெரியன்" என்றிருத்தல் வேண்டும். 'மலை குனிய நின்ருன்' என்பது திருவேங்கடமுடைய இறைவன் திருப் பெயர்களில் ஒன்ருதலால், 'மலை கினிய நின்ருன்' என்பது, 'மலை குனிய நின்ருன்' என்றிருத்தல் வேண்டுமென்று தெரிகிறது. பெரிய பிள்ளை - மூத்தமகன்.

8. **இவன் தம்பி** - பிரம பெரியன் தம்பி; **இவர்கள் தன்மம்** - இது இவர்கள் தானம்; **தன்மம்** - தானம்.

## பயிற்சி விஞக்கள்

1. மூன்றும் இராசராச சோழன் சாசனம் எங்குக் காணப் படுகிறது? அஃது எக்காலத்தில் ஏற்பட்டது?

2. மூன்றும் இராசராச சோழன் சாசனத்தில் கூறப்படும் செய்தி யாது? அதில் அவனுக்கு வழங்கிய பெயர் யாது?

3. விளக்கம் தருக :—திருவாய்க் கேள்வி முன்னக, தநுநாயற்று பூர்வபக்ஷத்து பஞ்சமியும் புதன்கிழமையும் பெற்ற அவிட்டத்திஞள்.

4. விளக்குக :—ஜயங்கொண்ட சோழமண்டலம், வண்டுவராபதி எம்பெருமான், அபிஷேகமண்டபம், புலிமுகமான சோபானம், கல்காரம் செய்வித்தல்.

5. மணிமங்கலம் எங்கு உள்ளது? அஃது இரண்டாம் இராசேந்திர சோழன், மூன்றும் இராசராச சோழன் காலத்தில் எங்கெங்கு உள்ளதாகக் கூறப்படுகிறது?

6. மணிமங்கலத்துக்கு வழங்கிய வெவ்வேறு பெயர்களை, அந்தந் தக் காலக் குறிப்புடன் கூறுக.

7. பிரமபெரியன் யார்? அவன் தந்தை, தம்பி ஆகியோர் பெயர்கள் யாவை? அவன் செய்த திருப்பணி யாது?

# 23. மாறன் சடையன் சாசனம்*

## முன்னுரை

மாறன் சடையன் சாசனம் என்பது மாறன் சடையன் என்னும் பாண்டியன்† காலத்தில் ஏற்பட்ட சாசனம் என்று பொருள்படும். இச் சாசனம் மாறன் சடையன் ஆட்சியின் பதினேழாம் ஆண்டில் ஏற்பட்டது. இஃது புதுக்கோட்டையைச் சேர்ந்த ஆலங்குடி தாலூகா திருக்கோகர்ணம் என்னும் ஊரிலுள்ள கோகர்ணேச்வரர் கோயில் நடுவிடத்துக் கருப்ப கிருகத்தின் தெற்குச் சுவரில் காணப்படுகிறது. தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பெற்றது; இருபத்தொரு வரிகளையுடையது.

---

* Pudukkottai State Inscriptions, No. 239, p. 133.

† மாறன் சடையன் என்பான், கி. பி. 765 க்கும், 790 க்கும் இடைப்பட்ட காலத்தில் பாண்டியநாட்டை ஆண்ட ஒரு பாண்டிய மன்னனாவான். இவனது அண்ணமலைக் கல்வெட்டுக்களால் இவன் மாறன் என்பானுக்கு மகன் என்றும், இவனது இயற்பெயர் சடையன் என்றும் தெரிகிறது. திருச்சிராப்பள்ளிக் கல்வெட்டுக்கள் இவனைப் பாண்டியாதிராச வரகுணன் என்று குறிப்பிடுகின்றன. இவனே, நெடுஞ்சடையன் பராந்தகன் என வேள்விக்குடி சாசனத்தால் அறிகின்றோம். இவன் ஏறக்குறைய 50 ஆண்டுகள் ஆட்சிபுரிந்தான் என உயர்திரு. K. A. நீலகண்ட சாஸ்திரி அவர்கள் கூறுவர்.

இவன் காவிரியின் தென்கரையிலுள்ள பெண்ணாகடம் என்னும் இடத்தில் நிகழ்ந்த போரில், பல்லவர்களை வென்றானென்றும், வேணாட்டரசனாகிய ஆய்வேளோடு போர் செய்து அவனைப் புறங்கண்டான் என்றும் வேள்விக்குடிச் சாசனம் கூறும். காவிரியின் வடகரையிலுள்ள ஆயிரவேலி, அயிரூர், புகழியூர் முதலிய இடங்களில் கொங்குநாட்டு மன்னனான அதியனை வென்ற செய்தி சென்னைப் பொருட்காட்சிச் சாலையிலுள்ள இவன் செப்பேடுகளால் தெரிகிறது. இவன் பரம வைஷ்ணவன் என்றும், கொங்குநாட்டிலுள்ள காஞ்சிவாய்ப் பேரூரில் திருமாலுக்குக் குன்ற மன்னதொரு கோயில் எடுத்தான் என்றும் கூறுவர். இவனாட்சிக் காலத்தில்தான் பெரியாழ்வார் வாழ்ந்தாரென்பதும், அவர் இவனைத் தமது திருமாலிருஞ் சோலைப் பாசுரங்களில் புகழ்ந்து பாடியுள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கவை.

வேள்விக்குடிச் செப்பேடுகளும், சீவரமங்கலத்துச் செப்பேடுகளும் இவன் பிறப்பித்தனவேயாகும். வரலாற்றாராய்ச்சிக்கு இவை பெரிதும் பயன்படுகின்றன.

இச் சாசனத்தில் வல்லநாட்டுக் கவிப்பால் கல்குறிச்சி என்னும் ஊரிலுள்ள வரகுணவதி அரையன் என்னும் நக்கஞ் செட்டி என்பான் திருக்கோகர்ணம் [திருவெள்பூர்] கோயில் இறைவர்க்கு ஒரு நந்தாவிளக்கு வைத்து அதன் செலவுக்கு இரவும் பகலுமாகப் பல இடங்களில் யாசித்துப் பதினைந்து பொன் முதலாகக் கொடுத்த செய்தி கூறப்படுகிறது.

மாறன் சடையன் கி. பி. 765 க்கும் 790 க்கும் இடைப் பட்ட காலத்தில் பாண்டிய நாட்டை ஆண்டான் என்று தெரிகிறது. இச் சாசனம் அவன் ஆட்சியின் பதினேழாம் ஆண்டில் ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 781-782ஆம் ஆண்டு என்னலாம்.

**சாசனம்**

1. ஸ்வஸ்திஸ்ரீ கொமற—
2. ஞ் சடையார்க்கு யா—
3. ண்டு ௰எ ஆவது—
4. வல்ல நாட்டு கவி—
5. ப்பால் கல்குறிச்—
6. சி வரகுணவதி
7. அரையன் ஆன
8. நக்கஞ் செட்டி உ—

---

**குறிப்புரை**

1. **கொமறஞ்சடையார்:** இவன் பாண்டிய மன்னருள் ஒருவன்; சடையன் என்பது இவன் இயற்பெயர். மாறன் என்பது இவன் தந்தை பெயர். இவன் கி. பி. 765 முதல் 790 வரை பாண்டிய நாட்டை ஆண்டான் என்பர்.

3. **யாண்டு ௰எ ஆவது** - ஆட்சியின் 17 ஆம் ஆண்டு; அஃதாவது கி. பி. 781—782.

4. **வல்லநாடு:** இது பாண்டியநாட்டின் ஒரு பகுதி; கவிர் என்னும் மாவட்டத்தைத் தன்னில் கொண்டது. அக்காலத்தில் இஃது இராசராச வளநாட்டைச் சேர்ந்திருந்தது, கவிப்பால்: இது வல்லநாட்டினு ளடங்கிய ஒரு மாவட்டம்.

5. **கல் குறிச்சி:** இது கற்குறிச்சி என்றும் வழங்கும்; இதன் பழைய பெயர் 'திருக்கட்டளை' என்பது.

6. **வரகுணவதி அரையன்:** இது நக்கஞ் செட்டி என்பவனுக்கு வழங்கிய சிறப்புப் பெயர்.

8. **உஞ்ஞட்டு** - பிச்சை எடுத்து; உஞ்ஞும், உஞ்ஞ விருத்தி என்பன அரிசிப் பிச்சை ஏற்று நடாத்தும் வாழ்க்கையைக் குறிக்கும். பதிப்பாசிரியர், 'உஞ்ஞட்டு' என்பதற்கு, 'உண்ணி ஆற்றுதல்' என்று பொருள்கொண்டு, உண்ணுதல் என்பது, கோயில் காரியத்திற்காக யாசித்துச் சேர்த்தல் என்று பொருள் கூறுவர். உண்ணி - உண்பவன்; 'அப்பன் இரந்துண்ணி' என வருமிடத்தில் இப்பொருள் படுதலைக் கூறலாம். இங்ஙனம் ஓர் உறுதி செய்து ஊர்தோறும் சென்று பிச்சை

| | | | |
|---|---|---|---|
| 9. | ஞ்ஞட்டு திருவெ— | 16. | வெத்த பொன் |
| 10. | ள்ப்பூர் கொகர்— | 17. | டிநு பதின் அஞ்— |
| 11. | ணத்து மாதெ— | 18. | கழஞ்சு இப் |
| 12. | வர்க்கு நொந்தா— | 19. | பொன் நாட்டார் ர— |
| 13. | விளக்கினுக்கு ராவு— | 20 | க்ஷெயாக வெத்த |
| 14. | ம் பகலும் நொந்— | 21. | பொன் |
| 15 | தா விளக்குனுக்கு | | |

எற்றுச் சேர்த்துக் கடவுளுக்குக் காணிக்கையாகக் கொடுக்கும் வழக்கம் இன்னும் தென்னாட்டில் வழக்கமாதல் வெளிப்படை.

**9. திருவெள்ப்பூர்:** இக்காலத்தில் இவ்வூரின் பெயர் 'திருவாப்பூர்' என்று வழங்குகிறது. எனவே, திருக்கோகர்ணம் என்பதன் பழைய பெயர் இதுவா யிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

**10. கொகர்ணத்து மாதெவர்** - திருக்கோகர்ணம் கோயில் இறைவனாகிய கோகர்ணேச்வரர்.

**11—12. கோகர்ணம்** - திருக்கோகர்ணம்; இது திருவாப்பூரைச் சேர்ந்தது; இப்பொழுது ஆலங்குடித் தாலூகாவில் உள்ளது. மாதெவர் மஹாதேவர்; இஃது திருக்கோகர்ணத்து இறைவன் பெயர்.

**13—14. நொந்தா விளக்கு** - நந்தா விளக்கு; இதனைத் 'தூண்டா விளக்கு' என்றும் கூறுவர். ராவும் பகலும் - இரவும் பகலும்.

**16—18. வெத்த** - சேமநிதியாக வைத்த; பொன் - பொன் நாணயம்; இது $1\frac{1}{4}$ ரூபாய் மதிப்புள்ளதென்பர். பதின் அஞ் கழஞ்சி-15 கழஞ்சு. கழஞ்சு என்பது பொன்னை நிறுக்கும் ஒரு நிறுத்தலளவை. இக்காலத்தில் அது $\frac{1}{6}$ அவுன்ஸ் எடையைக் குறிக்கும். இதனால் ஒரு பொன், கழஞ்சு எடையுள்ளதென்றும், அது $1\frac{1}{4}$ ரூபாய் மதிப்புள்ள தென்றும் தெரிகிறது.

**19—20. நாட்டார்** - நாட்டாண்மைக்காரர்; நாட்டு மகா சனம் எனினுமாம். எண்பேராயத்துள் இவர்கள் ஒருவராயிருத்தல் கூடும். ரக்ஷெயாக வைத்த - காவலாக வைத்த; ரக்ஷை - காப்பு.

**21. பொன்** - பொற் காசு.

### பயிற்சி வினாக்கள்

1. கோமாறன் சடையன், நக்கஞ் செட்டி, உஞ்ஞட்டு-இவற்றைப் பற்றிக் குறிப்பு வரைக.

2. மாறஞ் சடையன் சாசனத்தின் காலம் எது? அஃது எங்குக் காணப்படுகிறது? அதில் கூறப்படும் செய்தி யாது?

3. விளக்குக:—வல்ல நாட்டு கவிப்பால் குறிச்சி, வாகுண அரையன் ஆன நக்கஞ்செட்டி, திருவெள்ப்பூர், கொகணர்த்து மாதெவர், நாட்டார் ரக்ஷெயாக வெத்த.

# 24. குலசேகர தேவர் சாசனம்*

## முன்னுரை

குலசேகர தேவர் சாசனம் என்பது, சடையவர்மன் குலசேகரதேவ பாண்டியன் காலத்தில் ஏற்பட்ட சாசனம் என்று பொருள்படும். இச் சாசனம் அவன் ஆட்சியின் மூன்ருவது ஆண்டில் ஏற்பட்டது. இது புதுக்கோட்டையைச் சேர்ந்த திருமய்யம் தாலூகாவில் மலையக்கோயில் என்னும் ஊரிலுள்ள குடபோகக்கோயிலின் வாயில் வடபுறச் சுவரில் காணப்படுகிறது. தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பெற்றது; இருபத்தொன்பது வரிகளையுடையது.

இச் சாசனத்தின் முற்பகுதியில் 'பூவின் கிழத்தி மேவி வீற்றிருப்ப' என்று தொடங்கும் குலசேகரதேவ பாண்டியன் மெய்க்கீர்த்தி அமைந்துள்ளது. அதில் அவன் புகழ், அவனுடைய முன்னோருடைய புகழுடன் சேர்த்துக் கூறப்படுகிறது. மேலும், அவனுட்சியின் கீழ் வில்லவர், செம்பியர், விராடர், மராடர், பல்லவர் முதலியோர் இருந்து திறைசெலுத்திய செய்தியும் காணப்படுகிறது. பிற்பகுதியில், கல்வாயில் நாடுடையான் என்னும் அரசியல் அதிகாரி ஒருவன், திருவோதிக்காலை

---

* Pudukkottai State Inscriptions, No. 246, pp. 136—137.

†குலசேகர தேவ பாண்டியன், மூன்ரும் குலோத்துங்க சோழனுக்குத் திறை செலுத்தி வந்த மாறவர்மன் விக்கிரம பாண்டியன் மகன். இவனை முதலாம் சடையவர்மன் குலசேகர பாண்டியன் என்று வரலாற்ருசிரியர் கூறுவர். இவன் கி. பி. 1190 இல் முடி சூடி, 1216 ஆம் ஆண்டு வரை பாண்டிய நாட்டை ஆண்டான்.

இவனுடைய மெய்க்கீர்த்திகள், 'பூதலமடந்தை' என்றும் 'பூவின் கிழத்தி' என்றும், 'பூதலவனிதை' என்றும் பலவகையாகத் தொடங்குகின்றன. அவைகளில் இவனுடைய புகழ் ஒன்றே சிறப்பாகக் கூறப்படுகிறது. வரலாற்றுக் குறிப்புக்கள் எதுவும் காணப்படவில்லை. செம்பியர், வில்லவர், மாளவர், பல்லவர் முதலியோர் இவனுட்சியின் கீழ் இருந்து திறை செலுத்தி வந்ததாக இவன் சாசனம் கூறுகின்றது.

இவனுடைய சாசனங்கள் மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம் ஆகிய மாவட்டங்களில் காணப்படுகின்றன. இவனுடைய சிங்காதனங்கள் மழவராயன் என்றும், முனைய தரையன் என்றும் பெயர்பெற்றிருந்ததாகத் தெரிகிறது. சேரமான் கோதை ரவிவர்மன் என்னும் மலைநாட்டரசன் இவனுக்கு மைத்துன முறையினன் என்பது திருநெல்வேலிச் சாசனத்தால் அறியப்படுகிறது. களவழி நாடாழ்வாருகிய சயங்கொண்ட சோழ சீவள்ளுவன் என்பான் இவனுடைய அரசியல் தலைவர்களில் முதன்மையானவன்.

என்னும் ஊரிலுள்ள தேவதான நிலமான பாணிதம் பற்றிற்கும், விருதராச பயங்கர வளநாட்டு, கான நாட்டு ஸ்ரீவரமுடைய நாயனூர் தேவதான நிலப்பகுதிக்கும் உரிய கடமை, வரி, அந்தராயம் என்னும் வரிகளை நீக்கி, சூரிய சந்திரர் உள்ளளவும் அனுபவிக்குமாறு உதவிசெய்து கொடுத்த செய்தி காணப் படுகிறது. இவற்றுள் கடமை என்பது அரசனுக்குக் குடிகள் விளைச்சலிலிருந்து செலுத்தவேண்டும் ஒருபகுதி. வரி என்பது, பணமாக அரசாங்கத்திற்குச் செலுத்தவேண்டுவது அந்தராயம் என்பது, ஊர்ச் சபையாருக்குக் கொடுக்கவேண்டுவது.

சடையவர்மன் குலசேகர தேவ பாண்டியன் கி. பி. 1190 முதல் 1216ஆம் ஆண்டு வரை பாண்டிய நாட்டை ஆண்டான். இச்சாசனம் அவனாட்சியின் மூன்றும் ஆண்டில் ஏற்பட்ட தெனவே, இதன் காலம் கி. பி. 1192-1293 ஆம் ஆண்டு என்னலாம்.

சாசனம்

(1)ஸ்வஸ்திஸ்ரீ
பூவின் கிழத்தி மெய்விற் றி(2)ருப்ப
மெதிநில மாது நிதியி வபுநா
(3) வியதபொர் மடன்தை செயற்புயத் தி(4)ருப்ப
மாக்கலை மடந்தை வாக்கி கி(5)ல் விளங்க

---

குறிப்புரை

1. பூவின் கிழத்தி - திருமகள்; மெய் விற்றிருப்ப (- மேவி வீற் றிருப்ப) - பொருந்தி இருக்க.

2. மெதி நில மாது (-மேதினி மாது) - நிலமகள், நாடுகள்; நிதி யிவ புநா (- நீதியில் புணர) - அறநெறியில் வந்து சேர.

3. வியத பொர் மடன்தை (- வியப்போர் மடந்தை) - வியத்தற் குரிய போர் மகள்; 'பகைவரை வென்று ஏவல் கொள்ளும் போர் மகள்' எனினுமாம்; வியம் - ஏவல். இனி, 'வயப்போர்' எனக்கொண்டு, 'வலிய போர்' என்றும் பொருள் கொள்ளலாம். செயற்புயத் திருப்ப (- ஜய புயத் திருப்ப) - வெற்றியுடைய தோளில் இருக்க.

4. மாக்கலை மடந்தை (- மாக்கலை மடந்தை) - சிறந்த கலைமகள்; வாக்கிநில் விளங்க (- வாக்கினில் விளங்க) - நாவிடத்து இருப்ப

5. திக்கிருநான்குந் (- திசையிரு நான்கும்)- எட்டுத் திசைகளிலும்; விசைநிள வெறிய (-இசை நிலா வெறிப்ப) - புகழாகிய திங்கள் ஒளி வீச; குலசேகர தேவ பாண்டியன் செல்வம், நாடு, வெற்றி, கல்வி இவைகளை ஒருங்கே பெற்று, எட்டுத் திசைகளிலும் தன் புகழ் உண்டாக ஆண்டான் என்பது.

திக்கிரு ணுங்குந் விசை(6)கிள வெறிப
ம மநுநெறி நகழ
அறுந(7)ன்ற சமையங்கள் ஆறுத்தமைப்ப
கா(8)நில் வெங்கை விளனுடந் நுடன்து
நிந் (9)நவர அங்களாகாசள தன்தை விற்றிரு
(10) ப்ப எங்கிகிசு எழுகடல் எழு பொழி
வெ(11)ன்கு நிழற்ற செங்கோல் நடப்ப
கொடு(12)ங்கலி நங்கி நெடும்பிலநீ கொழிப்ப
(13)பி........வர் செம்பியர் வில்லவ ஆடலர்

---

6. ம மநு நெறி நகழ (-மறைநெறி வளர, மநுநெறி நிகழ) - வேத நெறியின் படியும் மநு வென்னும் அரசன் வகுத்த வழியின்படியும் ஆட்சி நடைபெற.

7. அறு நன்ற சமையங்கள் ஆறு தமைப்ப ( அறநெறிச் சமயங்கள் ஆறும் தழைப்ப) - ஆறு சமையங்களும் வளர ; உலகாயிதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பஞ்சராத்திரம், பாட்டாசாரியம் இவை அறு சமயங்கள். இனி, சைவம், வைணவம், சக்தம், சௌரம், கணபதியம், கௌமாரம் என்பாருமுளர். விளக்கம் அடுத்த சாசனக்குறிப்பில், காண்க.

8. காநில் - கானில், காட்டில் ; வெங்கை விளனுடந் (- வேங்கை வில்லுடன் )- புலிக் கொடியையுடைய சோழனும் விற்கொடியையுடைய சேரனும்; நுடனது (-தொடர்ந்து உற) - சேர்ந்து மறைய.

9. நிந்த வர அங்களாகா சளதன்தை விற்றிருப்ப (- மீனங் கனகாசலத்து வீற்றிருப்ப) - மீன் கொடியை இமயத்தில் பொறித்து விளங்க. மீனம் - மீன்கொடி; அது பாண்டியர்க்குரியது. கனகாசலம்-இமயமலை. பாண்டியர் வடநாடு சென்று இமயத்தில் தங்கள் மீன் கொடியைப் பொறித்த வரலாறு இங்கு நினைத்தற்குரியது. இனி. 'மேருமலை' எனக்கொண்டு மதுரைக் கோயில் கோபுரத்தைக் குறிப்பாருமுளர்.

10. எங்கிகிசு (-எண்கிரி சூழ்ந்த) எட்டு மலைகளும் சூழ்ந்த ; கிரி ; மலை. எழுகடல் எழுபொழி வென்கு நிழற்ற (-எழுகடல் எழுபொழில் வெண்குடை நிழற்ற) - உலகைச் சுற்றி எட்டு மலைகளும். எழு கடல் களும் எழு பொழில்களும் விளங்க ; இது புராண வரலாறு.

11. செங்கோல் நடப்ப - ஆட்சி நடைபெற.

12. கொடுங்கலி நங்கி (-கொடுக்கலி நடுங்கி) - கொடிய வறுமை நீங்கி; கலி - துன்பம், வறுமை. நெடும் பிலந் கொழிப்ப (-நெடும்பிலத், தொழிப்ப) - நீண்ட பாதாளத்தில் போய் மறைய ; பிலம் - பாதாளம்.

13. பி......வர்(வில்லவர்)-சேரர்; - செம்பியர் - சோழர்; வில்லவ- விராடர்; ஆடலர்-மராடர்; பல்லவர் - பல்லவ அரசர்; விராடர், மராடர் இன்னாரென்று தெரியவில்லை.

பல்லவர்(14)திறை உறடன் முறை முறைபமிய
இருநெ(15)மிந் ஆளவம ஒரு நெதி ஓங்க
இந்நமு தளாதி(16)ப இல்விசை நாடம்
மந்நி வள்ளர மணிஅ(17)னி விரஸிஹஸநது
விதறிரு தருழிய கொச்ச(18)டைய பற்மராந
த்ரிபுவந சக்கரவத்திகள்

19. (திரிபுவந சக்கிரவத்திகள்) ஸிரி குலெசெகரதெ—
20. வற்க்கு யாண்டு ௩ ஆவது காந நாடாந விருத—
21. ராஜ பயங்கர வளநாட்டு காந நாட்டு திரு—

---

14 திறை உறடன் முறை முறை பமிய (- திறையுடன் முறைமுறை பணிய) - திறை கொண்டு தந்து முறையாக நின்று பணிய ; திறை - கப்பம்.

15. இரு நெமிந் ஆளவம (-இருநேமி யளவும்) - அகன்ற உலக முழுவதும்; நேமி - உலகம். ஒரு நெதி ஓங்க (-ஒரு நேமி ஓங்க) - தன் ஓர் ஆட்சியே நடைபெற; நேமி - சக்கரம், ஆணை. இந்நமு தளாதிப- இன்னமு தாகிய) இனிய அமுதமாகிய.

16. இல்விசை நாடம (- இயலிசை நாடகம்) - இயல் தமிழும் இசைத் தமிழும் நாடகத் தமிழும் ; மந்நி வளர - நிலைபெற்று வளர ; மணி அனி - மணிகள் தொங்கவிடப்பட்ட ; அனி - அணி, அழகு.

17. விரஸிஹஸநது விதறிரு தருழிய - வெற்றிச் சிம்மாசனத்தில் வீற்றிருந்த ; கொச்சடைய பற்மர் : இது குலசேகர தேவ பாண்டிய னுக்கு வழங்கிய சிறப்புப் பெயர் ; சோழ மன்னர்கள் தமக்குள் இராச கேசரி, பரகேசரி என்னும் சிறப்புப் பெயரை மாறி மாறி வைத்து வழங்கி யதுபோல; பாண்டிய மன்னர்கள் மாறவர்மன், சடையவர்மன் என்னும், சிறப்புப் பெயர்களைத் தமக்குள் மாறி மாறி வைத்து வழங்கி வந்தனர். குலசேகரதேவ பாண்டியன் அவைகளில் 'சடையவர்மன்' என்னும் சிறப்புப் பெயர் பெற்றவன்.

18-19. திரிபுவந சக்கரவத்திகள் : பாண்டிய மன்னருள் சடைய வர்மன் குலசேகர தேவன் மாறவர்மன் சுந்தரபாண்டியன் முதலியோர் 'திரிபுவன சக்கரவர்த்தி' பட்டம் பெற்றவர்களாவர். இதன் விளக்கத் தினை முந்திய சாசனங்களில் காண்க. ஸிரிகுலெசெகர தெவற்-முதலாம் சடையவர்மன் குலசேகர தேவ பாண்டியன் ; ஸிரி - திரு.

20—21. காந நாடாந விருதராஜ பயங்கர வளநாடு : கான நாடு என்பது விருதராச பயங்கர வளநாட்டின் பழைய பெயர். விருதராசன் என்பது முதலாம் குலோத்துங்க சோழனுடைய சிறப்புப் பெயர்களில் ஒன்று. புதுக்கோட்டையைச் சேர்ந்த திருமய்யம் தாலூகாவே இந் நாடு என்று கூறலாம்.

22. வொதி கால்லயில் காநநாட்டு ஸ்ரீ வரமுடைய
23. ர யந்நா தெவதானம் பாணிதம் பற்றில்—
24. உள்ள தெவதானம் உள்ள நிலத்தில் க—
25. டமையும் வரியும் அன்தராயம் இவா—
26. ண்டு முதல் தவித்தொம் சந்திராதி—
27. த்தவரை செல்வதாக செய்து குடு—
28. த்தென் கல்வெட்டி குடுத்தெ—
29. ன் கல்வாயில் நாடாழ் வாந்தென்

---

22. **காந நாட்டு திருவொதி கால்லயில்:** வளநாட்டின் உட்பகுதி நாடு, சதுர்வேதி மங்கலம் முதலியனவாகும். இங்குக் கானநாடு என்பது கானநாடு என்னும் விருதராச பயங்கர வளநாட்டிலுள்ள ஒரு பகுதியாகும். 'திருவொதி கல்வாயில்' என்பது இங்குத் திரிந்து, 'திருவொதி கால்லயில்' என்று அமைந்துள்ளது; இதன் பழம்பெயர் 'மலையக் கோயில்' என்பது. இதனைத் 'திருவோதிக்கால்' என்றும் வழங்குவர்.

**ஸ்ரீவரமுடையா யந்நா** - ஸ்ரீ வரமுடைய நாயனார்.

23—24. **தெவதானம்** - கோயிலுக்குத் தானமாக விடப்பட்ட நிலம். இங்கு ஸ்ரீவரமுடைய நாயனாருக்குத் தானமாக விடப்பட்ட நிலம், என்பது. பாணிதம் பற்று: பற்று என்பது நாட்டின் ஒரு பகுதிக்கு வழங்கும் பெயர். பாணிதம் பற்றில் உள்ள தெவதானம் என்பது, பாணிதம் பற்று என்னும் ஊரிலுள்ள தேவதானமும் என்று பொருள் படும். உள்ள நிலத்தில் ஸ்ரீவரமுடைய நாயனார் தேவதானமும் பாணிதம் பற்றில் உள்ள தேவதானமும் உள்ள நிலத்தில் என்பது.

25. **கடமையும் வரியும் அன்தராயம்:** இவை வரி வகைகள்; இவற்றுள் கடமை என்பது, நிலத்தில் விளையும் ஒருபகுதியை அரசனுக்கு வரியாகக் கொடுப்பது; 'ஆறிலொரு கடமை' என்னும் சொல் வழக்குக் காண்க. வரி என்பது, அரசாங்கத்திற்குப் பணமாகச் செலுத்துவது. அன்தராயம், என்பது, அந்தர் + ஆயம் என விரியும்; அந்தர்-உள்ளிடம்; ஆயம் - வரி; எனவே உள்ளிடத்து வரி, ஊர் வரி என்று பொருள்படும். இஃது ஊர்ச் சபைக்குக் கொடுக்க வேண்டுவது.

**தவித்தொம்** - நீக்கினோம்; **சந்திராதித்த வரை** - சந்திர சூரியர் உள்ள வரையும்.

27—28. **செல்வதாக செய்து குடுத்தென்** - நடைபெறும்படி உறுதி செய்து கொடுத்தேன்; கல்வெட்டி குடுத்தென் - கல்லில் வெட்டியும் கொடுத்தேன். எனவே, ஒன்றை உறுதிசெய்து கொடுத்து, அதனைக் கல்லில் வெட்டுவது 'சாசனம்' என்பது போதரும்.

29. **கல்வாயில் நாடாழ் வாந்தென்:** கல்வாயில் நாடாழ்வான் என்பான், கல்வாயில் நாட்டுக்குத் தலைவனானவான்; இவன் பாண்டிய

ராட்சிக்கு உட்பட்டுக் கல்வாயில் நாட்டை ஆண்டு வந்த செய்தி, புதுக் கோட்டைச் சாசனங்கள் பலவற்றால் தெரிகிறது. இவனுடைய மற்றொரு பெயர் 'கண்டன் ஆளுடையான்' என்பது. கல்வாயில் நாடு, கேரள சிங்கவள நாட்டையும் கல்வாயில் நாட்டையும், கொழுந்திற் கூற்றம் முதலிய பிரிவுகளையும் தன்னில் கொண்டது. புதுக்கோட்டையைச் சேர்ந்த திருமய்யம் தாலூகாவிலுள்ள சில ஊர்கள் இந்நாட்டிலடங்கியன வாகும்.

கண்டன் ஆளுடையானை கல்வாயில் நாடாழ்வான் என்பான், கான நாடான விருதராச பயங்கர வளநாட்டு, கான நாட்டு, திருவோதிக் கல்வாயிலிலுள்ள கான நாட்டு ஸ்ரீவரமுடைய நாயனார் தேவதானத் திலும், பாணிதம் பற்றிலுள்ள தேவதானத்திலும் அடங்கிய நிலங்களுக் குரிய கடமை, வரி அந்தராயம் ஆகிய வரிகளை நீக்கி, அவற்றிற்கு உறுதி மொழியாகக் கல்லில் வெட்டிக் கொடுத்த செய்தி இதனால் அறியப்படு கிறது.

## பயிற்சி வினாக்கள்

1. குலசேகர தேவ பாண்டியன் சாசனம் எங்குக் காணப்படு கிறது? அதன் காலம் எது? அதில் கூறப்பட்டுள்ள செய்தி யாது?

2. குலசேகர தேவ பாண்டியன் மெய்க்கீர்த்தியின் தொடக்கம் யாது? அவனுடைய முன்னோர் செயல்களாகவும், அவன் செயல்க ளாகவும் கூறப்படுவன யாவை?

3. 'திக்கிருனங்கு..............பொழிவென்கு நிழற்ற'— இதனைத் திருத்தி எழுதுக.

4. குலசேகர தேவ பாண்டியனுக்கு வழங்கிய சிறப்புப் பெயர்கள் யாவை?

5. விளக்கம் தருக :—கான நாடாந விருத ராஜபயங்கர வளநாடு கா௩ நாட்டு திருவொதி கால்நயில், கால நாட்டு ஸ்ரீவரமுடைய நாயனார், பாணிதப் பற்று, கல்வாயில் நாடாழ்வான்.

6. குலசேகர தேவ பாண்டியன் சாசனத்தில் கூறப்படும் வரி களின் பெயர்களையும், அவற்றின் பொருளையும் எழுதுக.

7. குலசேகர தேவன் சாசனத்தில் எந்தெந்த வரிகள் நீக்கப்பட் டுள்ளன? நீக்கிய வரலாறு தருக.

# 25. சுந்தரபாண்டியன் சாசனம்-I*

## முன்னுரை

†சுந்தரபாண்டியன் சாசனம் என்பது, முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் ஏற்பட்ட சாசனம் என்று பொருள் படும். இச்சாசனம் அவன் ஆட்சியின் மூன்ருவது ஆண்டில் ஏற்பட்டது. இது புதுக்கோட்டையைச் சேர்ந்த திருமய்யம் தாலூகாவிலுள்ள கண்ணனூர் பாலசுப்பிரமணிய சுவாமி கோயில் நடுவிடத்துக் கருப்ப கிருகத்தின் வடக்குச் சுவரில் காணப்படுகிறது. தமிழ்மொழியில், கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பெற்றது. இருபத்தெட்டு வரிகளையுடையது.

இச் சாசனத்தின் முற்பகுதியில் 'பூமருவிய திருமடந்தையும்' என்று தொடங்கும் சுந்தரபாண்டியன் மெய்க்கீர்த்தி அமைந்துள்ளது. இதில் பாண்டிய மன்னரின் முன்னேர் அருஞ் செயல்களோடு, சுந்தரபாண்டியன் சோணுடு கொண்ட செய்தியும் கூறப்படுகிறது. பிறபகுதியில், கான நாடான விருத ராச

---

* Pudukkottai State Inscriptions, No. 250, pp 139-140.

† சுந்தரபாண்டியனை வரலாற்ருசிரியர் முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் என்று குறிப்பிடுவர். இவன் சடையவர்மன் குல சேகர தேவ பாண்டியனுக்குத் தம்பி ; விக்கிரமபாண்டியன் இரண்டாம் புதல்வன். குலசேகர தேவ பாண்டியனுக்குப் பின் கி. பி. 1216 முதல் 1238 வரை பாண்டிய நாட்டை ஆண்டான்.

இவன் கி.பி. 1219 இல், சோழ மண்டலத்தின்மீது படை எடுத்துச் சென்று, மூன்ரும் இராசராசனை வென்று ஆயிரத்தளி (அமராவதி) என்னுமிடத்திலுள்ள அபிசேக மண்டபத்தில் வீராபிசேகம் செய்து, தில்லைப் பொன்னம்பலவாணரைத் தரிசித்துத் திரும்பினுன். இதனுல் இவன் 'சோணுடு கொண்டருளிய ஸ்ரீசுந்தரபாண்டியன்' எனச் சாசனங் களில் புகழப் பெற்ருன். பின்னர் மூன்ரும் இராசராசன் கேட்டுக் கொண்டபடி, இவன் அவனுக்கு மீண்டும் சோழநாட்டைக் கொடுத்து 'சோணுடு வழங்கி யருளிய சுந்தரபாண்டியன்' என்று பெயர் பெற்ருன்.

இவன் கி. பி. 1235ஆம் ஆண்டு மீண்டும் மூன்ரும் இராசராசனேடு போர் செய்து வென்று; அவன் தலைநகரங்களில் ஒன்ருன முடிகொண்ட சோழபுரத்தில் வீராபிசேகம் செய்து கொண்டான். அதனுல் இவன், சாசனங்களில் 'ஸ்ரீகோமாறவர்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் சோணுடு கொண்டு முடிகொண்ட சோழபுரத்து வீராபிசேகம் பண்ணி யருளிய ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவர்' என்று அழைக்கப்பட்டுள்ளான்.

இவனுடைய சாசனங்கள் தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, புதுக் கோட்டை முதலிய மாவட்டங்களில் காணப்படுகின்றன. இவனுடைய மெய்க்கீர்த்தி 'பூமருவிய திருமடந்தையும்' என்று தொடங்குகிறது.

பயங்கர வளநாட்டுத் துறுமாநாட்டுத் திருநாவலூராரும் அஞ்சனமங்கலமென்னு மூராரும் செலுத்தி வந்த இறையை, அவர்கள் கேட்டுக்கொண்டபடி, இலேசாக்கிக் கல்லில் வெட்டிக் கொடுத்த செய்தி கூறப்படுகிறது.

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கி. பி. 1216 முதல் 1238 ஆம் ஆண்டு வரை பாண்டிய நாட்டை மதுரையிலிருந்து ஆண்டான். இச் சாசனம் அவன் ஆட்சியின் மூன்றாவது ஆண்டு ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1218—1219 ஆம் ஆண்டு என்னலாம்.

சாசனம்

(1) ஸ்வஸ்திஸ்ரீ
பூமருவிய திருமடந்தையுஞ் செயமடந்தையும் புயத்திருப்ப நாமருவிய(2)கலைமடந்தையுஞ்செயமடந்தையும் நலஞ்சிறப்பக் கொளாந்த சினப்புலியுங்(3)கொடுஞ்சிலையுங் குலைந்தொளிப்ப

---

உலகமுழுதுடையாள் இவனுடைய பட்டத்தரசி யாவாள். உய்ய நின்றாடுவானான குருகுல தரையன் இவன் அமைச்சன் என்றும், கண்டன் உதயஞ்செய்தான் காங்கேயன், திருக்கானப் பேருடையான் மழவச் சக்கரவர்த்தி முதலியோர் இவனுடைய அரசியலதிகாரிக ளென்றும், காரானை விழுப்பரையர் இவனுடைய அவைக்களப் புலவர் என்றும் சாசனங்கள் கூறுகின்றன. இவனுக்குப் பின் சடையவர்மன் குலசேகர பாண்டியன் பட்டமெய்தி, சில திங்கள் பாண்டிய நாட்டை ஆண்டான் என்று கூறுவர்.

குறிப்புரை

1. **பூமருவிய திருமடந்தை** - செந்தாமரை மலரில் பொருந்திய திருமகள் : செயமடந்தை: இது 'புவிமடந்தை' என்றிருத்தல் வேண்டும். திருமாலை அரசனாகவும், அவர் தேவியரான திருமகள், புவிமகள் இருவரையும் அரசன் தேவியராகவும் கூறுவது தமிழ் மொழியின் மரபு. நாமருவிய - நாவிடத்துப் பொருந்திய.

2. **கலைமடந்தை** - கலைமகள் ; செயமடந்தை - வெற்றிக்குரிய தேவதை ; நலஞ் சிறப்ப - பெருமை அடைய ; கொளாந்த சினப்புலி - கொல்லும் இயல்புடைய புலிக்கொடியையுடைய சோழன்.

3. **கொடுஞ் சிலையும்** - வளைந்த விற்கொடியையுடைய சேரனும்; குலைந்து - போரில் தோற்று ; வாளார்ந்த பொற்கிரி மெல் - ஒளி பொருந்திய மேருமலையின் உச்சியில்; வரிக்கயல்கள் விளையாட - பாண்டியனுக்குரிய மீன் கொடி பறக்க ; இங்கு, மேருமலை என்றது; மதுரைக் கோயில் கோபுரத்தின் உச்சியைக் குறிக்கும். பாண்டியனுக் குரிய மீன்கொடி மதுரைக் கோயில் உச்சியில் பறக்க என்பது கருத்து.

வாளர்ந்த பொற்கிரிமேல் வரிக்கயல்கள்(4)விளையாட
இருங்கடல் வலையத் தறம் பெருகக்
கருங்கலி கடிந்து செங்கோல் நடப்ப
ஒருகு(5)டை நிழ லருநிலங் குளிர
மூவகைத் தமிழு முறைமையில் விளங்க
நால்வகை வெதமும் நவின்று டன்(6)வர
ஐய்வகை வெழ்வியுஞ் செய்வினை யியற்ற
அறுவகைச் சமயமு மழகுடந் திகழ

குலசேகர தேவ பாண்டியன் சாசனத்தில் 'வேங்கை வில்லுடன் தொடர்ந்துற, மீனங் கனகாசலத்துவீற்றிருப்ப' என வந்திருத்தலும் இக் கருத்ததே.

**4. இருங்கடல் வலையம்** - பெரிய கடலால் சூழப்பட்ட உலகம்; **கருங்கலி கடிந்து** - வறுமையை நீக்கி; **செங்கோல் நடப்ப** - ஆட்சி நடைபெற.

**5. ஒரு குடை நிழலரு நிலங் குளிர**(-ஒரு குடை நிழல் இருநிலம் குளிர)- பாண்டியனது ஒரு வெண் கொற்றக் குடையின் கீழ் இந்த உலகம் முழுவதும் இருந்து பயன்பெற; இனி, 'இரு நிலம்' என்பதை 'சோழ நாடும், பாண்டிய நாடும்' என்று பொருள்கொள்வாரு முளர்.

**மூவகைத் தமிழ்** - முத்தமிழ்; அவை: இயல் தமிழ், இசைத் தமிழ் நாடகத் தமிழ்; இவற்றுள் இயற்றமிழ் என்பது, செய்யுளும் உரை நடையும்; இசைத்தமிழ் என்பது, இசையோடு கூடிய தேவாரம், திருவாசகம் முதலியன; நாடகத் தமிழ் என்பது, இயலும் இசையும் கலந்து நடித்தற்குரிய தமிழ் ஆகும். **நால்வகைவெதம்** - ருக், யஜுர், சாமம், அதர்வணம் என்பன; **நவிலுதல்** - ஓதுதல்.

**6. ஐய்வகை வெழ்வி**: இதனைப் 'பஞ்ச மகா யக்ஞம்' என்று கூறுவர். அவை: கடவுள் வேள்வி(தேவ யக்ஞம்), பிரம வேள்வி(பிரம யக்ஞம்), பூத வேள்வி (பூத யக்ஞம்), மனித வேள்வி (மானிட யக்ஞம்), தென்புலத்தார் வேள்வி (பித்ரு யக்ஞம்) என்பனவாம். அவற்றுள் கடவுள் வேள்வி என்பது, கடவுளை வழிபடல்; பிரம வேள்வி என்பது, வேதமோதுதல்; பூத வேள்வி என்பது, உயிர்களுக்கு உணவளித்தல்: மனித வேள்வி என்பது, சுற்றத்தாருக்கு உணவளித்தல். தென் புலத்தார் வேள்வி என்பது, இறந்துபோன முன்னோர்களுக்குக் கொடுத்தலாம். **செய்வினை இயற்ற** - நடைபெற.

**அறுவகைச் சமயம்** - சைவம், வைணவம், சாக்தம், சௌரம், கணபதியம், கௌமாரம் என்பன. சைவம் என்பது, சிவனை வழி படுவது; வைணவம் என்பது, திருமாலை வழிபடுவது; சாக்தம் என்பது. சக்தியை வழிபடுவது; சௌரம் என்பது, சூரியனை வழிபடுவது, கணபதியம் என்பது, கணபதியை வழிபடுவது; கௌமாரம் என்பது, குமரக் கடவுளை (சுப்பிரமணியனை) வழிபடுவது.

எழு(7)வகைப் பாடலு மியலுடன் பரவ
எண்டிசை யளவுஞ் சக்கரஞ் செல்லக்
கொங்கர் கலிங்கர் ெ(8)காசலர் மாளுவர்
சிங்களர் தெலிங்கர் சினர் குச்சரர்
வில்லவர் மகதர் விக்கலர் செம்மியர்
பல்(9)லவர் முதலிய பார்த்திவ ரெல்லா
முறைவிட மருளெந் ெறாருவர் முந்ஒருவர்
முறைமுறை கடவ(10)தந திறைகுணந் திறைஞ்ச
இலங்கொளி மணிமுடி இந்திரன் பூட்டிய
பொலங்கதி ரார மா(11)ர்பினிற் பொலிய

---

7. **எழுவகைப் பாடல்** - வெண்பா முதலிய நால்வகைப் பாக்களும் தாழிசை, துறை, விருத்தமென்னும் பாவினங்களும் ஆகுமென்பர். இனி, 'எழுவகைச் சுரங்களினால் பாடப்பெறும் பாடல் வகைகள்' என்பாரு முளர். 'ஏழிசையாவன சட்சம், ரிடபம், காந்தாரம், மத்திபம், பஞ்சமம், தைவதம், நிடாதமென இவை' என்று கூறுவர் அடியார்க்கு நல்லார். இயலுடந் பரவ - இலக்கண முறைப்படி நடைபெற.

**எண்டிசை யளவும்** - எட்டுத் திசைகள் வரையும்; சக்கரம் செல்ல - ஆணை நடைபெற; கொங்கர் - கொங்குநாட்டு மன்னர்; கலிங்கர் - கலிங்க நாட்டு மன்னர்.

8. **கோசலர்** : இது கொய்சலர் என்றிருத்தல் வேண்டும். மாளுவர் - மாளுவ நாட்டு மன்னர்; மாளுவ நாடு, மைசூருக்கும் கூர்சர நாட்டுக்கும் இடையிலுள்ளது. சினர் - சீன நாட்டார்; இவர் சீனநாட்டுத் தூதுவராகப் பாண்டியன் அவையிலிருந்தவர். குச்சரர் - கூர்சர நாட்டவர்; வில்லவர் - சேரர்; மகதர் - மகதை நாட்டவர்; இது வாணர்களைக் குறிக்கும். விக்கலர் - மேலைச் சாளுக்கியர்; செம்மியர் - சோழர்; பல்லவர் - பல்லவர் தலைவர்கள்.

9. **பார்த்திவர் எல்லாம்** - மன்னர்கள் எல்லாரும்; உறைவிடம் - அடைக்கலம்; அருளெந்ெறாருவர் முந் ஒருவர் முறை முறை கடவ - தருவாயாக என்று ஒருவர் முன் ஒருவர் தாம் முறையாகச் செலுத்தக் கடமைப்பட்டதான.

10. **தநதிறை குணந்திறைஞ்ச** - தத்தமது திறைப் பொருட்களைக் கொண்டுவந்து கொடுத்து வணங்க; இந்திரன் பூட்டிய பொலங்கதி ராரம் - இந்திரன் மார்பில் அணிந்திருந்த பொன் மாலை; பொலம் - பொன்; ஆரம்-மாலை; இம் மாலையைப் பாண்டிய மன்னர் பரம்பரையாக அணிந்து வந்தனர். இச் செய்தியைச் சிலப்பதிகாரம் மதுரைக் காண்டத்திலும், திருவிளையாடல் புராணத்திலும் காண்க.

11. **பொலிய** - விளங்க; பனிமலர்த் தாமரைத் திசைமுகன் - குளிர்ந்த இதழ் விரிந்த தாமரை மலரில் தோன்றிய பிரமன். இவனுடைய மரபில் தோன்றியவன் மனு வென்னும் மன்னனாவான்.

பனிமலர்த் தாமரைத் திசைமுகன் படைத்த
மனுநெறி தழைப்ப(12)மணிமுடி சூடி
விளங்கிய மணிபணி விரசிங்கா சநத்து
வளங்கெழு கவரி இருமருங் கசைப்ப(13)க்
கடலென முழங்குங் கரிநல்லி யானை
வடபுல வேந்தர்த மணிபுயம் பிரியா
இலங்கி(14)ழை யரிவையர் தொழுதுநின் றேத்த
உலகமுழு துடையாளொடும் விற்றிருந் தருளிய
ஸ்ரீகொ (15)மாற பன்மராந திரிருபுவன சக்கரவத்திகள்
சொணாடு கொண்டருளிய
ஸ்ரீசுந்தர பாண்டிய(16)தெவற்கு யாண்டு
௬வது பிரஸாதஞ் செய்தருளின திருமுகப்படி கான

---

12. மணி பணி - முத்துக்களால் பணி செய்யப்பட்ட; இரு மருங்கும் - இரண்டு பக்கங்களிலும்.

13. கடலென முழங்கும் - கடல்போல் ஒலிக்கும்; கரிநல்லி யானை வடபுல வேந்தர்-கரியையும் யானையையுமுடைய வடநாட்டு மன்னர்கள். கரி - ஆண்யானை; யானை - பெண்யானை. மணி புயம் பிரியா - அழகிய தோள்களை விட்டு நீங்காத.

14. இலங்கு இழை அரிவையர் - ஒளிவிடும் அணிகலன்களையுடைய மகளிர்; இவர்கள் வடபுல வேந்தர் உரிமை மகளிர்; இவர்கள் பாண்டியனால் சிறைபிடித்துக் கொண்டுவரப்பட்டு, அவன் அவையில் பணிப்பெண்களாயிருந்தனர் என்பது. தொழுது நின்றேத்த-பணிந்து நின்று துதிக்க.

உலக முழுதுடையாளொடும் விற்றிருந்தருளிய - உலக முழுதுடையாள் என்னும் பட்டத்தரசியோடும் சுந்தரபாண்டியன் தன் சிம்மாசனத்தில் வீற்றிருந்த; இவ்வாறு முதலாம் குலோத்துங்க சோழன் தன் தேவியான உலக முழுதுடையாளோடும், விக்கிரம சோழன் தன் தேவியரான முக்கோக்கிழானடிகள், தியாகபதாகை முதலியவர்களோடும், அரிகேசரி பராக்கிரம பாண்டியன் தன் தேவியான உலக முழுதுடையாளொடும் சிம்மாசனத்தில் வீற்றிருந்ததாக அவர்கள் சாசனங்கள் கூறுகின்றன.

15. கொமாறபன்மர்: இது சுந்தரபாண்டியனுக்குரிய சிறப்புப்பெயர். இவன் 'திரி புவன சக்கரவத்திகள்,' 'சொணாடு கொண்டருளிய ஸ்ரீ சுந்தரபாண்டிய தெவர்' எனவும் இச் சாசனத்தில் அழைக்கப் பட்டுள்ளான்.

16. பிரஸாதஞ் செய்தருளின திருமுகப்படி - சுந்தரசோழன் ஆணை விட்டு எழுதிய ஓலையின்படி; பிரஸாதம் - ஆணை, கட்டளை; திருமுகம் - அரசனது ஆணை எழுதிய ஓலை; திருபம் எனினுமாம்.

ஞடான விருதராஜ பய—

17. ங்கர வளநாட்டுத் துறுமா நாட்டுத் திருநாவ லூரும் அனுமன் தாயான அஞ்சன மங்கலமும் முன்பு

18. இறுத்து வருகிற இறையிலெ உலகுடைய நாயனர் திருமெனிக்கு நன்ருக இலெசு பெறவெணுமென்

19. று பிள்ளையார் அழகப் பெருமாள் நாயனர்க்கு விண்ணப்பஞ் செய்து நினைப்புமிட்டு நிரும் வார்த்துத் த

---

17. திருநாவலூரும்......அஞ்சனமங்கலமும் : இவை இரண்டு ஊர்களும் முன்பு கானநாடு என்று பெயர் பெற்றிருந்த விருதராச பயங்கர வளநாட்டின் ஒரு பகுதியான துறுமா நாட்டிலுள்ளவை. இவற்றுள் 'அஞ்சனமங்கலத்திற்கு வழங்கிய மற்ரெரு பெயர் 'அனுமந்தாய்' என்பது. அது 'அனுமந்தராய்' என்றிருத்தல் வேண்டும். இனி, அனுமன் தாய்' என்பதற்கு 'அஞ்சனுதேவி' எனப் பொருள்கொண்டு, அவள் பெயரால் ஏற்பட்ட ஊர் 'அஞ்சன மங்கலம்' என்று பெயர் பெற்றதெனக் காரணம் கூறுவாருமுளர்.

18. முன்பு இறுத்து வருகிற - முன்பு செலுத்தி வருகிற; இறுத்தல்-வரி செலுத்துதல். இறையிலெ - வரிப் பொருளில்; இறை - அரசியல் வரி; உலகுடைய நாயனர்: இஃது இடைக்காலத்தில் அரசனுக்கு வழங்கிய பொதுப்பெயர்; இங்கு அது சுந்தரபாண்டியனைக் குறித்தது, திருமெனிக்கு நன்ருக-அரசன் உடல்நலம்பெற்று நீடு வாழ; திருமேனி என்பது, கடவுள் உடலுக்கும், உருவத்திற்கும் வழங்கும் பெயர்; அரசனும் 'இறை' எனப்படுவதால் அவன் உடலையும் 'திருமேனி' என்ருர் போலும். இலெசுபெற வெணுமென்று - குறைக்கவேண்டு மென்று; இலெசு - குறைத்தல், தளர்த்தல்.

19. பிள்ளையார் அழகப்பெருமாள் : அழகப்பெருமாள் என்பது இயற் பெயர்; பிள்ளையார் என்பது, அரசனுடைய நெருங்கிய சுற்றத்தார்க்கும், நெருங்கிய தொடர்புடைய அரசியலதிகாரிகளுக்கும் வழங்கும் பொதுப் பெயர். அழகப்பெருமாள், சுந்தரபாண்டியனுக்கு மைத்துன முறையினன். இவன் சுந்தரபாண்டியன் ஆட்சியில் ஓர் அரசியலதிகாரியாய் இருந்து பணிசெய்தான். நாயனுருக்கு விண்ணப்பம் செய்து - அரசர்க்கு அறிவித்து; திருநாவலூராரும், அஞ்சனமங்கலத்தாரும் தாங்கள் செலுத்திவந்த வரியைக் குறைக்கும்படி, அரசியல் அதிகாரியான அழகப்பெருமாளைக் கேட்டுக்கொண்டனர்; அவன் அதைச் சுந்தர பாண்டியனுக்குத் தெரிவித்து நினைவுபடுத்தினன் என்பது. நாயனர் என்பது, அரசனுக்கு வழங்கிய பெயர். முன்னர், 'உலகுடைய நாயனர்' என வந்திருத்தலும் காண்க. நினைப்பு மிட்டு - நினைவுப்படுத்தி; நிரும் வார்த்துத் தருவித் தருளிய - சுந்தரபாண்டியன் தண்ணீர் வார்த்து உறுதி செய்து கொடுத்த.

**20.** ருவித்தருளிய பிரஸாதஞ் செய்தருளின திரு முகப்படி பயிரெழுத முதல் கொண்ட நிலத்துக்கு மாத்தா லி

**21.** ருகல நெல் தாழ்த்து மாத்தால் ஐங்கலனெ இரு தூணிப் பதக்கு நாழுழி நெல்லிறுப்பதாவும் இவ்

**22.** வூர்களில் நிரிலி நிலமாய் வரிசைப்படி இறுத்து வருகிற நிலங்களுக்கு மாத்தால் முக்கலனெ இருதூணி மு

**23.** க்குறுணி முவுழக்கு நெல் இறுப்பதாகவும் நவிரை இன்னெல்லி லொன்று முக்கா லிறுப்பதாகவும்.

**24.** வரகு இன்னெல்லில் ஒன்று பாதி இறுப்பதாகவும் எள்ளுந் தினையும் இன் நெல்லில் நான்கொன்று இறுப்

---

**20.** **பிரஸாதம் செய்தருளின திருமுகப்படி** - அரசன் ஆணை எழுதிய ஓலையின்படி; **பயிர் எழுத முதல்கொண்ட நிலம்** - பயிராகி மேனி கண்ட நிலம்; அஃதாவது முதல்தரமான நிலம் என்பது. **மாத்தால்**- ஒருமா நிலத்துக்கு; மா - நூறு குழி.

**21.** **இருகலநெல் தாழ்த்து** - இரண்டு கலம் நெல் வீதம் குறைத்து; கலம் - 96 நாழி; **மாத்தால் ஐங்கலனே இரு தூணி பதக்கு நாழுழி நெல்** - ஒருமா நிலத்திற்கு 5 கலன் 2 தூணி 1 பதக்கு 4 நாழி (564 நாழி) நெல்; எனவே, முன்னர் ஒருமா நிலத்திற்கு 7 கலன் 2 தூணி 1 பதக்கு 4 நாழி (756நாழி) நெல் வரியாகச்செலுத்தி வந்தனர் என்பது போதரும். தூணி - 32 நாழி; பதக்கு - 16 நாழி.

**22.** **நிரிலி நிலமாய்** - நீர் இலி நிலமாய், தண்ணீர் இல்லாத நிலமாக; **வரிசைப்படி இறுத்து வருகிற**-அரசியல் திட்டப்படி செலுத்தி வருகிற; **மாத்தால் முக்கலெனா இருதூணி முக்குறுணி முவுழக்கு நெல்**-ஒருமா நிலத்திற்கு 3 கலன் 2 தூணி 3 குறுணி $\frac{3}{4}$ நாழி ($376\frac{3}{4}$ நாழி) நெல் குறுணி - 8 நாழி; உழக்கு - $\frac{1}{4}$ நாழி; எனவே 4 உழக்கு = 1 நாழி; 8 நாழி=1 குறுணி; 2 குறுணி=1 பதக்கு; 2 பதக்கு=1 தூணி; 3 தூணி=1 கலன் என்பன அக்காலத்தில் நெல் முதலியன அளத்தற் குரிய முகத்தலளவைப் பெயர்களும், அளவுகளுமாகும்.

**23.** **நவிரை:** இஃது ஒரு வகை நெல்; ஆடி மாதத்தில் விதைக்கப் படுவது. **இன்னெல்லில் ஒன்று முக்கால் இறுப்பதாகவும்** - நீரிலி நிலத்திற்குக் கொடுத்துவந்த நெல்லில் ஒன்றுக்கு முக்கால் வீதம் செலுத்தவும்; ஒரு மா நீரிலி நிலத்துக்கு $376\frac{3}{4}$ நாழி நெல் இறுத்தல் வேண்டுமென்ற குறிப்பை 22 ஆம் வரியில் காண்க.

**24.** **வரகு** - வரகு கொடுப்பதானால்: **இன்நெல்லில் ஒன்று பாதி இறுப்பதாகவும்** - மேலே நீரிலி நிலத்திற்குக் குறிப்பிட்ட நெல்லளவில் ஒன்றுக்குப் பாதி செலுத்தவும்; **எள்ளுந் தினையும்** - எள்ளும் தினையும் கொடுப்பதானால்; **நான்கொன்று** - நான்கில் ஒன்று.

25. பதாகவும் உலகுடைய நாயனுர் எழுந்தருளினுல திருவெழுச்சிக் குடிமை முதலா க நாடென்றவரிகள் எப்

26. பெர்பட்டனவும் ஒன்று பாதி இறுப்பதாகவும் வெட்டி முடடை ஆள் செயாதிதாகவும் பிரஸா

27. தஞ் செய் தருளின திருமுகப்படி ப்ரமதேஸங் திரு நாவலூரர்க்கும் அனுமன்றுயான அஞ்சன மங்கலத்துக் —

28. கு இறுக்கும்படி கல்வெட்டிக் குடுத்தென் அவ்னி நாராயண தெவநென் உஸ்வஸ்தி ஸ்ரீ

---

25. உலகுடைய நாயனர் - சுந்தரபாண்டியன்; எழுந்தருளினுல் - அந்த ஊர்களுக்கு வந்தால்; திருவெழுச்சிக் குடிமை முதலாக திருவெழுச்சிக் குடிமை என்பது, அரசன் ஓர் ஊருக்கு வருதற்குச் செலவாகும் தொகைக்கு கொடுக்கும் வரி வகை; முதலாக - தொடங்கி; நாடென்ற வரிகள் - நாட்டைக் காத்தற்குக் கொடுக்கும் வரி, இதனை, 'நாடுகாவல்' என்றும் கூறுவர்.

26. எப்பேர் பட்டனவும் - எல்லா வரிகளுக்கும்; ஒன்று பாதி இறுப்பதாகவும் - நீரிலி நிலத்துக்குக் குறிப்பிட்ட நெல்லளவில் ஒன்றுக்குப் பாதி செலுத்தவும்.

வெட்டி முடடைஆள் - வெட்டியும் முட்டையாளும்; இங்கு வெட்டி என்பது, ஊர்ப் பொதுநலக் காரியங்களுக்கு அமர்த்தப்பட்டுக் கூலியின்றிச் செய்யும் வேலை; அதுபற்றி ஊர்ச்சபையாருக்குக் கொடுக்கும் கடமையும் (வரியும்) இப் பெயர்பெறும். முட்டையாள் என்பது, 'முட்டாவாள்' என்று சொல்லப்படும். இடையருமல் தொடர்ந்து பொதுவேலை நடப்பதற்குக் கூலியின்றி ஆள் அளிக்கும் கடமை அதற்கான செலவும் அப்பெயர் பெறும். செயாதிதாகவும் - (கூலியின்றி) வேலை செய்வதையும், அவர்களுக்குக் கொடுக்கப்படும் உணவினையும்) நீக்கவும்.

27. பிரஸாதம் - அரசனது ஆணை, கட்டளை; திருமுகம் - ஓலை; ப்ரமதெயம் திருநாவலூரர்க்கும் - பிரமதேயமான திருநாவலூர் மக்களுக்கும்; ப்ரமதேஸம் - கோயிலுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலம், ஊர் முதலியன; அநுமன்றுயான - 'அனுமன் தராய்' என்று சொல்லப்படும்.

28. இறுக்குர்படி - செலுத்துமாறு; கல்வெட்டிக் குடுத்தேன்; அரசனது கட்டளையைக் கல்லில் வெட்டிக் கொடுத்தேன் என்பது; இவ்வாறு இச் சாசனத்தை வெட்டியவன் அந்த இடத்து அரசியல் தலைவனுன நாராயணதேவன் என்போன். உ - உபயம், தானம்; இவ்வாறு முன்னர் 14 ஆம் சாசன முடிவில் வந்திருத்தலும் காண்க. 'ஸ்வஸ்தி ஸ்ரீ': இது மங்கலமொழியாகச் சாசனத்தின் முதலில் வரும்;

சாசனத்தின் முடிவிலும் இது வரும் என்பதற்கு இச் சாசனம் ஒரு சான்றாகிறது.

(1) பயிர் எழுந்த முதல்தரமான ஒரு மா நிலத்திற்கு 2 கல நெல் குறைத்து 5 கலன் 2 தூணி, 1 பதக்கு 4 நாழி நெல் கொடுக்கவும், (2) தண்ணீர் குறைவான ஒரு மா நிலத்திற்கு 2 கல நெல் குறைத்து 3 கலன் 2 தூணி, 3 குறுணி 3 உழக்கு நெல் கொடுக்கவும், (3) அதுவே 'நவிரை' என்னும் நெல்லாயின் முன் கூறிய வீதத்தில் ஒன்றுக்கு முக்கால் பாகம் கொடுக்கவும், (4) வரகு கொடுப்பதாயின் முன் கூறிய வீதத்தில் ஒன்றுக்குப் பாதி கொடுக்கவும், (5) எள், தினை கொடுப்பதாயின் முன் கூறிய வீதத்தில் நான்கில் ஒன்று கொடுக்கவும், (6) மன்னர் எழுந்தருளியதற்குக் கொடுக்கப்படும் திருவெழுச்சிக் குடிமை முதல் நாடென்ற வரிகள் எல்லாவற்றிற்கும் முன் கூறிய வீதத்தில் ஒன்றுக்குப் பாதி கொடுக்கவும், (7) வெட்டி முட்டையாள் என்னும் வரிகளை நீக்கவும் அரசன் ஆணை எழுதி அனுப்ப அவனி நாராயணன் என்பான் அதைக் கல்லில் வெட்டினான் என்பது.

## பயிற்சி வினாக்கள்

1. சுந்தரபாண்டியன் யார்? அவன் காலத்துச் சாசனங்களாகக் கூறப்படுவன எங்கெங்கு உள்ளன? அவற்றின் காலத்தைக் குறிப்பிடுக.

2. சுந்தரபாண்டியன் மெய்க்கீர்த்தியின் தொடக்கம் யாது? அதில் அவன் செயலாகவும், அவன் முன்னோர் செயலாகவும் கூறப்படுவன யாவை?

3. சோழர் மெய்க்கீர்த்திக்கும் பாண்டியர் மெய்க்கீர்த்திக்கும் உள்ள வேறுபாட்டைக் குறிப்பிடுக.

4. திருநாவலூர், அஞ்சனமங்கலம் என்னும் ஊர்கள் எங்கு உள்ளன? அவ் ஊரார்க்குக் குறைக்கப்பட்ட இறைகள் யாவை?

5. விளக்கம் தருக :—"கொளார்ந்த......விளையாட", "ஐவகை வேள்வி", "அறுவகைச் சமயம்", "எழுவகைப் பாடல்", "இந்திரன் பூட்டிய பொலங்கதி ராரம்", "திசைமுகந் படைத்த மனுநெறி", "பிரசாதம்செய்தருளின திருமுகப்படி", "நீர் வார்த்து".

6. அஞ்சனமங்கலம் விருதராச பயங்கர வளநாடு—இவைகளுக்கு வழங்கிய வேறு பெயர்கள் யாவை?

7. பொருள் தருக :—இறை, உலகுடைய நாயனார், பிள்ளையார், திருமேனி, இலேசு, பிரசாதம், திருமுகம், நவிரை, திருவெழுச்சிக் குடிமை, நாடென்றவரி, வெட்டி, முட்டையாள், பிரமதேயம்.

8. உலகுடைய நாயனார், பிள்ளையார், அழகப்பெருமாள், அவனி நாராயணன்—குறிப்பு வரைக.

9. இச் சாசனத்தில் காணப்படும் அளவைப் பெயர்களைக் குறிப்பிடுக.

# 26. சுந்தரபாண்டியன் சாசனம்-II*

## முன்னுரை

சுந்தரபாண்டியன் சாசனம் என்பது, முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன்† காலத்தில் ஏற்பட்ட சாசனம் என்று பொருள்படும். இச் சாசனம் அவன் ஆட்சியின் ஐந்தாம் ஆண்டிற்கு எதிரான ஆறும் ஆண்டு ஏற்பட்டது. இது புதுக்கோட்டையைச் சேர்ந்த திருமய்யம் தாலூகாவில் நெய் வாசல் என்னுமூரிலுள்ள அகத்தீசுவரர் கோயில் நடுவிடத்துக் கருப்பகிருகத்தின் தெற்குச்சுவரில் காணப்படுகிறது. தமிழ் மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது. இருபத்தெட்டு வரிகளையுடையது.

இச்சாசனத்தின் தொடக்கத்தில் சுந்தரபாண்டியன் பெயர், 'கோமாற பன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் சோழநாடு கொண்டருளிய சிரி வீரசுந்தரபாண்டிய தேவர்' என்று குறிக்கப் பட்டுள்ளது. பின்னர், அவன் ஆட்சியின் ஆறும் ஆண்டு இடப ஞாயிறு (வைகாசித் திங்கள்), இருபத்திரண்டாம் நாள் திங்கட் கிழமைக்குச் சரியான ஏழாவது நாளான புனர்பூச நாளில் கூத்தன்தில்லை நாயகன் என்னும் ஒரு வியாபாரி வண்டாங்குடி கள்ளர் என்பாரிடமிருந்து, காராண் கிழமையாக விலைக்கு வாங்கிய வண்டாங்குடி என்னு மூரைச் சுற்றியுள்ள நிலங்களுக் குரிய இறை, குடிமை, அந்தராயம், நாடேன்றவரி, வாரமங்கலம் கணக்கப் பேறு முதலிய எல்லாவற்றிற்கும் நெல்வாயில் திரு அகத்தீசுவரம் உடைய நாயனுற்குப் பசானபோகம் மா ஒன்றுக்கு இருகல நெல்லும் அந்தராயம் கால் திரமமும், குறுவை நெல் மா ஒன்றுக்கு ஒரு கல நெல்லும் அந்தராயம் அரைக்கால் திரமமும் எள், தினை, வரகு ஆகியவை மா ஒன்றுக்கு தூணிப்பதக்கு நெல்லும், அந்தராயம் மாகாணித் திரமமும் வரியாகச் செலுத்து வதாகவும், அவற்றுள் கடமையாகச் செலுத்தும் நெல்லைக் கல்வாயில் நாட்டு கடமை அளக்கும் மரக்காலால் அளந்து கொடுப்பதாகவும், திரமத்தை ஐந்து வீதம் செலுத்துவதாகவும், கண்டன் ஆளுடையானை கல்வாயில் நாடாழ்வான் என்னும் அரசியல் அதிகாரிக்கு உறுதி செய்து கற்பூரவிலையும் கொடுத்த செய்தி கூறப்படுகிறது.

சுந்தர பாண்டியன் கி. பி. 1216 முதல் 1238 ஆம் ஆண்டு வரை பாண்டியநாட்டை மதுரையிலிருந்து ஆண்டான். இச்

---

* Pudukottai State Inscriptions No. 260, pp. No, 145—146.

† இவனைப் பற்றிய வரலாற்றை முந்திய சாசனக் குறிப்பில் காண்க.

சாசனம் அவன் ஆட்சியின் ஆருவது ஆண்டு ஏற்பட்ட தெனவே, இதன் காலம் கி. பி. 1222 ஆம் ஆண்டு என்னலாம்.

சாசனம்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கொமாறபன்மரான திரிபுவன ச
2. க்கரவத்திகள் சொழநாடு கொண்டருளிய சிரிவிர சுந்தர
3. பாண்டிய தெவற்கு யாண்டு ரு ஆவதின் எதிரா மாண்
4. டு இசப நாயிற்று யிருபத்திரண்டாந் தியதியும் தி—
5. ங்கட்கிழமை புணர்பூசத்து நாள் கண்டன்
6. ஆளுடையானன கலவாயில் நாடாழ்வானெ—
7. ன் காளையர் கால் பெருந்தெருவில் வியாபாரி வெண்
8. ணை நல்லூருடையான் கூத்தன் தில்லை நாயகன் —
9. திருத்தியூர் முட்டத்தாரான வண்டாங் குடிக் கள்
10. ளர் பக்கல காராண் கிழமையாக விலைகொண்டுடை

**1—2 சிரிவிர சுந்தரபாண்டிய தெவர் :** முந்திய சாசனத்தில் இவன் பெயர், 'ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவர்' என வந்துள்ளது. இச் சாசன முதல் இவன் 'வீர' என்னும் அடைமொழி கொடுத்து வழங்கப்படுகிருன். கொமாறபன்மர், திரிபுவனசக்கரவத்திகள், சொழநாடு கொண்டருளி யவன் என்பன இவனுக்கு வழங்கிய சிறப்புப் பெயர்களாகும்.

**3. யாண்டு ரு ஆவதின் எதிராமாண்டு** - ஆட்சி ஆண்டு ஐந்தாவதற்கு அடுத்த ஆண்டு; அஃதாவது ஆருவது ஆண்டு என்பது.

**4. இசப ஞாயிறு** - இடப ஞாயிறு, இரண்டாவது திங்களான வைகாசித் திங்கள் ; **தியதி** - நாள்.

**5. புணர்பூசத்து நாள்** - புனர் பூசம் என்னும் ஏழாவது நட்சத்திரம்.

**6. கண்டன் ஆளுடையானன கல்வாயில் நாடாழ்வான் :** கண்டன் ஆளுடையான் என்பது இயற்பெயர் ; கல்வாயில் நாடாழ்வான் என்பது சிறப்புப்பெயர். இச் சிறப்புப் பெயரால் முந்திய 24 ஆம் சாசனத்திலும் இவன் அழைக்கப்பட்டிருத்தல் காண்க. கல்வாயில் நாட்டுக்குத் தலைவன் 'கல்வாயில் நாடாழ்வான்' என்று பெயர் பெற்ருன்.

**7—10. கூத்தன் தில்லை நாயகன் :** இவன் ஒரு வியாபாரி ; இவனுக்குச் சொந்தவூர் வெண்ணெய் நல்லூர். காளையர் காலப் பெருந் தெருவில் இருந்து வியாபாரம் செய்துவந்தான். வண்டாங்குடி என்னு மூரிலுள்ள கள்ளர்களிடம் அவ்வூருக்கு உட்பட்டதும், அவ்வூரைச் சுற்றியிருந்ததுமான நிலங்களைப் பயிரிடுவதற்கென்று விலைக்கு வாங்கினன்.

**காளையர் கால பெருந்தெரு :** இது காளையார் கோயில் என்னும் ஊரிலுள்ள ஒரு பெருந்தெரு போலும். காளையார் கோயில், இராமநாத

11. ய வண்டாங்குடி வலையிற் சுற்றுமுற்றுக்கும் யி—
12. றை குடிமை அந்தராயம் நாடென்றவரி வாரமரக்—
13 கலம் கணக்கபெறு மற்றும் எப்பெற்பட்ட சி—
14. ல் ஆயம் கடமை உள்ளவயிற்றுக்கும் நெல்வாயில்
15. திருவகத்திசிரம் உடைய நாயநாற்கு கொல் குடிதா
16. ங்கியால் புள்ளிபுக்க நிலம் ஒரு மாவுக்கு பசானபொ

-புரம் மாவட்டத்தில் உள்ளது. வெண்ணை நல்லூர்: இப்பெயருடைய ஊர் தஞ்சை மாவட்டத்தில் உள்ளது. திருவெண்ணெய் நல்லூராயின் அது தென்னார்க்காட்டு மாவட்டத்திலுள்ளதைக் குறிக்கும். திருத்தியூர் முட்டத்தார் - இது வண்டாங்குடி கள்ளர்களுக்கு வழங்கிய மற்றொரு பெயர். முட்டத்தார் - முற்றத்தார்.

11. வண்டாங்குடி வலையில் - வண்டாங்குடி என்னும் ஊர் எல்லையில்; சுற்றுமுற்றுக்கும்-வண்டாங்குடியைச் சுற்றியுள்ள நிலங்களுக்கு; முற்றுதல் - சூழ்தல்.

12. இறை - அரசாங்கத்திற்குச் செலுத்தும் வரி, நிலவரி; குடிமை-நாட்டின் குடியாக வாழுவதற்குச் செலுத்தும் வரி; அந்தராயம்-உள்வரி, உள் வருமானம்; ஊர்ச் சபை, நாட்டவர்போல்வார்க்குக் கொடுக்கும், வரி; நாடென்ற வரி - நாட்டவர்க்குக் கொடுக்கும் வரி; இதனை 'நாடு காவல்' என்றும் கூறுவர்; இது நாடுகாவலுக்காகக் கொடுக்கப் படுவது. வாரமரக்கலம் - வரிவகைகளில் ஒன்று.

13 கணக்கப்பெறு - கணக்கப்பேறு கிராமக் கணக்கனுக்கு நெல்லாகக் கொடுப்பது; எப்பெற்பட்ட - எல்லா விதமான.

14. சில் ஆயம் - சில்லறை வரிகள்; இதனைச் சில்லிறை, சில் வரி என்றும் கூறுவர். கடமை என்பது, அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டும் வரிகளின் பொதுப் பெயர்; இங்கு இறை முதலியவை நீங்கிய ஏனைய வரிகள் என்று பொருள்படும். உள்ளவயிற்றுக்கும் - உள்ளனவாய் ஏற்பட்ட வரிகளுக்கும்.

15. நெல்வாயில திருவகத்திசிரம் உடைய நாயனார் - நெல்வாயில் என்னும் ஊரிலுள்ள திருவகத்தீசுவரம்கோயில் சிவன். நெல் வாயில் என்பது இப்பொழுது 'நெய்வாசல்' என்று வழங்குகின்றது. கொல் குடி தாங்கி - குடிதாங்கிக் கோல்; இது நிலமளக்கும் ஓர் அளவுக் கோல்; நெல் வாயில் திருவகத்திசிரத்துக் கோயிலுக்குரியது; நாட்டில் வழங்கி வந்த அளவுகோலினும் பெரியது.

16 புள்ளி புக்க நிலம் - கணக்கில் வந்த நிலம்; அளந்து கணக்கிட்ட நிலம்; புள்ளி - கணக்கு, ஒரு மாவுக்கு - ஒரு மா நிலத்துக்கு; மா - 100 குழி. பசானபொகம் -சித்திரைத் திங்களில் அறுவடையாகும் ஒரு வகை நெல்; பசானம் - சம்பா நெல்: பொகம் - நெல் விளைச்சல்.

17. கத்துக்கு கரும்புட்பட மாத்தால் யிருகல நெல்லு—
18. ம் அந்தராயத்துக்கு காற்திரமமும் ஆடி குறுவை
19. அற்பிசிக் குறுவைக்கு மாத்தால் கலநெல்லும் அ—
20. ரைக்கால் திரமமும் எள் திணைவரகுக்கு மாத்தால்தூ
21. ணி பதக்கு நெல்லும் மாகாணி திரமமும் இறுபபதாக—
22. வும் இவ்விறை கல்வாயில் நாட்டு கடமை காலா லெ
யிறுப்—
23. பதாகவும் திரமம் அஞ்சுமெனி இறுப்பதாகவும் இதுக்கு
24. இவன் பக்கலெ கற்பூர விலையும் கொண்டு இப்படி சந்தி-
25. ராதித்தவற் செல்வதாக சம்மதித்தொம் கண்டன் ஆளு

---

**17.** கரும்புட்பட - கரும்பு நட்ட நிலமும் சேர்த்து ; மாத்தால் இரு கலநெல்லும் - ஒரு மா நிலத்திற்கு 2 கலம் நெல்லும் ; இது நிலவரி ; கலம்- 96 நாழி.

**18.** அந்தராயத்திற்கு காற்திரமமும் - உள்வரிக்குக் கால் திரமமும் ; அந்தரார்யம் - ஊர் வரி, சபையாருக்குக் கொடுப்பது ; திரமம் - ஒரு வகைக் கிரேக்க நாணயம் (Drachma) ; ஆடி குறுவை அற்பிசிக் குறுவை - ஆடித் திங்களிலும் ஐப்பசித் திங்களிலும் அறுவடையாகும் குறுவை நெல் ; குறுவை - ஒருவகை நெல்.

**19.** மாத்தால் - ஒரு மா நிலத்துக்கு. கலநெல்லும் - ஒரு கலம் நெல்லும்.

**20—21.** திணை - திணைப்பயிர்: மாத்தால் தூணிபதக்கு நெல்லும்;- ஒரு மா நிலத்திற்கு 1 தூணி 1 பதக்கு (48 நாழி) நெல்லும் ; தூணி - 32 நாழி ; பதக்கு - 16 நாழி ; இறுப்பதாகவும்—செலுத்துவதாகவும்.

**22.** இவ்விறை - நெல்லாகக் கொடுக்கும் இந்த வரி ; கல்வாயில்; நாட்டுக் கடமை காலாலெ - கல்வாயில் நாட்டில் கடமை அளக்கும் மரக் காலால் ; கடமை - இறை ; கால் - மரக்கால்.

**23.** திரமம் அஞ்சுமெனி இறுப்பதாகவும் - திரமமென்னும் நாணய வரியை ஐந்து தடவையாகக் கொடுப்பதாகவும் ; அஞ்சுமெனி - ஐந்து தடவை ; 'ஐந்து திரமம் வீதம்' என்பாருமுளர். இதுக்கு - இதற்கு.

**24.** இவன் பக்கல் - இவனிடத்தில் ; கற்பூரவிலை - கோயில் நிலங்களை வாங்குதற்குரிய விலை ; இவ்வாறு கோயில் நிலங்களுக்கு விலை கொடுத்து, அதை அனுபவிப்பதற்கு விளைச்சலில் ஒரு பகுதியைக் கோயிலுக்குக் கொடுப்பது அக்கால வழக்காகும்.

**25.** சந்திராதித்தவல் செல்வதாக - சந்திர சூரியர் உள்ள காலம் அளவும் நடைபெற ; சம்மதித்தொம் - ஒப்புக்கொண்டோம்.

26. டையானை கல்வாயில் நாடாழ்வனேன் வெண்ணை நல்லூ—

27. ருடையான் கூத்தன் தில்லை நாயகனுக்கு இது

28. பன்மாஹேஸ்வர ரக்ஷை.

**26—27 கண்டன் ஆளுடையானை கல்வாயில் நாடாழ்வனேன்:** இவன் பெயர் முன்னர் குலசேகர தேவர் சாசனத்தில் 'கல்வாயில் நாடாழ்வான்' என வந்திருத்தல் காண்க. கண்டன் ஆளுடையான் என்பது இவனது இயற்பெயர் போலும். சம்மதித்தோம் கூத்தன் தில்லை நாயகனுக்கு - கூத்தன் தில்லை நாயகனுக்குக் கொடுக்கச் சம்மதித்தோம் என்பது.

சுந்தரபாண்டியன் ஆட்சியின் ஐந்தாவதற்கு எதிரான ஆறும் ஆண்டு வைகாசித் திங்கள் 22ஆம் நாள் திங்கட்கிழமை புனர்பூசத்தில், வெண்ணெய்நல்லூருடையானும், காளையர் காலப் பெருந்தெருவில் வியாபாரம் செய்தவனுமான கூத்தன் தில்லை நாயகன் என்பான் திருத்தியூர் முட்டத்தாரான வண்டாங்குடி கள்ளர்களிடம், அவர்கள் ஊர் எல்லையில் அவ்வூரைச் சுற்றியிருந்த நிலங்களில் பயிர்த் தொழில் செய்யும் உரிமை பெறுதற்கு விலை கொடுத்து வாங்கி, அந்நிலத்திற்குச் செலுத்தி வந்த இறை, குடிமை, அந்தராயம் நாடென்ற வரி, வார மங்கலம், கணக்கப்பேறு முதலிய சில்லாயம், கடமை ஆகியவற்றுக்குப் பதிலாக, நெல்வாயில் திருவகத்தீசுவரம் கோயில் சிவபெருமானுக்கு, அவ்வூரில் வழங்கிய குடிதாங்கிக் கோலால் அளந்து கணக்கிடப்பட்ட நிலத்தில், பாசன போகமாக கரும்பு நட்ட நிலத்திற்கும் சேர்த்து ஒரு மா நிலத்திற்கு இரண்டு கல நெல்லும், அந்தராயமாக $\frac{1}{4}$ திரமமும், ஆடித் திங்கள் ஐப்பசித் திங்களில் குறுவை நெல் விளையும் ஒரு மாநிலத்திற்கு ஒரு கல நெல்லும் அந்தராயமாக $\frac{1}{8}$ திரமமும், எள், தினை, வரகு ஆகியவை விளையும் ஒரு மாநிலத்திற்குத் தூணிப்பதக்கு (48 நாழி) நெல்லும் அந்தராயமாக $\frac{1}{8}$ திரமமும், கொடுக்க ஒப்புக்கொண்டு, கண்டன் ஆளுடையானை கல்வாயில் நாடாழ்வானிடம் அந்த நிலத்திற்குரிய கற்பூரவிலையும் கொடுக்க அவன் அதற்குச் சம்மதித்தான் என்பது.

**28. இது பன்மாஹேஸ்வர ரக்ஷை** - சிவனடியார் கூட்டம் (Company of Saiva devotees) காக்கக் கடவர்: ரக்ஷை - இரட்சிக்க காக்கக் கடவர். இவ்வாறு 19 ஆம் சாசனத் திறுதியிலும் வந்திருத்தல் காண்க.

## பயிற்சி வினாக்கள்

1. அகத்தீசுவரர் கோயில் சுந்தர பாண்டியன் சாசனம் எக்காலத்தது? அதில் கூறப்படும் செய்தி யாது?

2. அகத்தீசுவரர் கோயில் சாசனத்தில் சுந்தரபாண்டியன் பெயர் எவ்வாறு குறிக்கப் பெற்றுள்ளது? அதில் ஆண்டு குறித்துள்ள முறைக்கும் பிறவற்றிற்கு முள்ள வேறுபாடு யாது?

3. கல்வாயில் நாடாழ்வான், கூத்தன் தில்லை நாயகன், வண்டாங்குடி கள்ளர். இவர்களுக்கு வழங்கிய வேறு பெயர்கள் யாவை? குறிப்பு வரைக.

4. காராண்கிழமை, சில் ஆயம், கோல் குடிதாங்கி, புள்ளி புக்க நிலம், பசானபோகம், கல்வாயில் நாட்டுக் கடமைக் கால், அஞ்சுமேனி, கற்பூரவிலை, சந்திராதித்தவல் பன்மாஹேஸ்வரர் ரக்ஷை - விளக்கம் தருக.

5. பொருள் தருக:—இசப ஞாயிறு, தியதி, புணர்பூசம், இறை, குடிமை, அந்தராயம், கணக்கப்பேறு, கோல், கால், புள்ளி, போகம். குறுவை, பசானம், திரமம், மா, மேனி.

6. இச்சாசனத்தில் குறிக்கப்பட்ட நாட்பெயர்கள், வரிகள்; அளவைப் பெயர்கள் முதலியவற்றைக் குறிப்பிடுக.

7. இச்சாசனத்தின் மூலம் அறியப்படும் பண்டைச்செய்தி யாது?

# 27. அரிகேசரி பராக்கிரம பாண்டியன் சாசனம்-I*

## முன்னுரை

அரிகேசரி என்பது பராக்கிரம பாண்டியனுக்குரிய மற்றொரு பெயர். இஃது 'அரிகேசரி தேவர்' எனவும் வழங்கும். இவன் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த தென்காசி விசுவநாதசுவாமி கோயிலுக்குக் கொடுத்த தானத்தைப்பற்றிய சாசனம், 'அரிகேசரி பராக்கிரம பாண்டியன் சாசனம்' எனப் பட்டது. இச் சாசனம் இவனது ஆட்சியின் இருபத்தொன் பதாவது ஆண்டில் ஏற்பட்டது. இது தென்காசி விசுவநாத சுவாமி கோயில் நடுவிடத்துக் கருப்ப கிருகத்தின் மேலைப்புற அடிச்சுவரிலும் தெற்குப்புற அடிச்சுவரிலும் காணப்படுகிறது. தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது. இருபத்தெட்டு வரிகளையுடையது.

இச் சாசனத்தில் முற்பகுதியில் "பூமிசை வனிதை மார்பினில் பொலிய" என்று தொடங்கும் இவனது மெய்க்கீர்த்தி அமைந்துள்ளது. அதில் இவனது வெற்றிகளும், திருப்பணி களும், குணச் சிறப்பும் கூறப்பட்டுள்ளன. பிற்பகுதியில் இவன் தென்காசியில் கட்டிய விசுவநாத சுவாமி கோயில் நாள்வழி பாட்டிற்கும், ஆண்டு விழாக்களுக்கும் தென்வாரி நாட்டிலுள்ள தென்காசி (செங்கோட்டை) வாயுளான் குடிப்பற்று, கடைப்பற்று பராக்கிரமபாண்டிய நல்லூர் பற்று ஆகிய ஊர்களையும், வடவாரி நாட்டிலுள்ள பைம்பொழில் பற்றைச் சேர்ந்த நல்லாண் பெற்றான் பற்று, விசுவாதேசுவரிபற்று ஆகிய ஊர்களையும் இறையிலி தேவதானமாகக் கொடுத்ததோடு, தென்னாலி நாட்டைச் சேர்ந்த இராசகுலராம நல்லூர் என்னும் புலியூர்ப்

---

* Pudukottai State Inscriptions No. 260, pp. 145-146

† இவன் சடையவர்மன் பராக்கிரமபாண்டியன் என்றும், அரிகேசரி தேவர் என்றும் அழைக்கப்பட்டான். பிற்காலப் பாண்டிய மன்னர் களில் இவன் பெயர் பெற்றவன். செந்தமிழ்ப் புலமையும், வடமொழிப் பயிற்சியுமுடையவன். சிவபக்தி யுடையவன். இவனை அக் காலத்தி லுள்ளவர்கள் 'பொன்னின் பெருமான்' என்றும் மான கவசன் என்றும் பாராட்டி வந்தனர்.

இவன் சிங்கை, அனுரை, இராசை (சங்கரநயினார் கோயில்), செண்பை (குற்றாலம்), விந்தை (விந்தனூர், சாம்பூர்வடகரை), அரந்தை, முதலை (முதலைக்குளம்), வீரை (வீரகேரளம்புதூர்), வைப்பாறு முதலிய இடங்களில் பகைவர்களை வென்றான் என்று கூறப்படுகிறது. இவன் விந்தனூர் முதலிய ஐந்து ஊர்களில் அகரங்கள் அமைத்து அந்தணர்

பற்று, வீரபாண்டிய நல்லூர்ப்பற்று ஆகியவற்றையும் தான மாகக் கொடுத்த செய்தி கூறப்படுகிறது.

அரிகேசரி பராக்கிரமபாண்டியன் கி. பி, 1422 முதல் 1463 ஆம் ஆண்டுவரை தென்காசியில் இருந்து தென் பாண்டிய நாட்டை ஆட்சி செய்தான். இச் சாசனம் இவன் ஆட்சியின் இருபத்தொன்பதாவது ஆண்டு ஏற்பட்ட தெனவே, இதன் காலம் கி. பி. 1462 ஆம் ஆண்டு என்னலாம்.

சாசனம்

(1) சுபமஸ்து—
பூமிசை வனிதை மார்பினிற் பொலிய

---

களைக் குடியிருக்கச் செய்தான். செண்பகவனம் (திருக்குற்றாலம்) மருதூர் (திருப்புடை மருதூர்) ஆகிய இவ்வூர்களிலுள்ள சிவாலயங்களில் மண்டபங்கள் கட்டினான். வேணுவனம் என்னும் திருநெல்வேலி சிவன் கோயிலில் அர்த்தயாம வழிபாட்டிற்கு நிபந்தங்கள் கொடுத்தான்.

இவன் தென்காசிப் பெரிய கோயிலைக் கட்டி அதன் நாள் வழி பாட்டிற்கும் ஆண்டு விழாவிற்கும் தேவதான இறையிலியாகப் பல ஊர் களைக் கொடுத்தான். அக்கோயிலைக் கட்டிமுடிக்கப் பதினேழாண்டுகள் சென்றன என்பர். ஆயினும் இவன் அக்கோயிலில் எடுத்த ஒன்பது நிலைக் கோபுரத்தின் திருப்பணி முடிவதற்கு முன் இறந்து விட்டான், அக்கோயிலைப் பாதுகாத்து வருமாறு சிவனடியார்களுக்கும், அவர்கள் வழித் தோன்றல்களுக்கும் பணித்து அப்பணியை இவ்வரசனே செய்யுளில் பாடிக் கோயில் கோபுரத்தில், இன்றும் எல்லோரும் காணும்படி பொறித்தான். பிற்காலப் பாண்டிய மன்னர் முடிசூட்டு விழாக்கள் இக் கோயிலிலேயே நடைபெற்று வந்துள்ளமை குறிப்பிடத் தக்கது.

குடிமக்கள் நலத்தின் பொருட்டு விசுவநாதப் பேரேரி என ஓர் ஏரியை இவன் வெட்டுவித்துள்ளான். சிவபக்தியிலும், ஆட்சி நலத் திலும் சிறந்து விளங்கிய இவன் கி. பி. 1422 முதல் 1463 ஆம் ஆண்டு வரை ஆட்சிபுரிந்தான். கி. பி. 1463 இல் இறந்தான்.

குறிப்புரை

**1. சுபமஸ்து:** இது கடிதம் முதலியவற்றின் தொடக்கத்திலும் இறுதியிலும் வாழ்த்துதலாக வரும் ஒரு வடமொழித்தொடர். 'மங்கள முண்டாகுக' என்பது இதன்பொருள். முந்திய சாசனங்களின் தொடக் கத்தில் 'ஸ்வஸ்திஸ்ரீ' எனத் தொடங்கியுள்ளமையும் அறிதற்பாலது.

**பூமிசை வனிதை** - *திருமகள்* ; **நாமிசை** கலைமகள் - *சரசுவதி* ; **நலனுற** - *நன்றாக* ; **புயவரை** - *புயங்களாகிய மலை* ; **சயமகள் புணர** -

நாமிசை கலைமகள் நலனுற விளங்கப்
புயவரை மீது சயமகள் புணரக்
கயலிணை யுலகின் கண்ணெனத் திகழச்
சந்திர குலத்து வந்தவ தரித்து
முந்தையோர் தவத்தின் முளையென வளர்ந்து
தென்கலை வடகலை தெளிவுறத் தெரிந்து
மன்பதை புரக்க மணிமுடி புனைந்து
சங்கர சரண பங்கயஞ் சூடிச்
செய்கோ லோச்சி வெண்குடை நிழற்றி
வான வாரியு மன்னருள் வாரியுந்
தான வாரியுந் தப்பா தளித்து
மறக்களை பறித்துநல் லறப்பயிர் விளைத்துச்
சிங்கையி லனுரையி லிராசையிற் செண்பையில்

வெற்றி பொருந்த; செல்வம், கல்வி, வெற்றி இவை ஒருங்கே யமைய என்றபடி.

**கயலிணை** - இணையான இரு கயல்கள்; பாண்டிய மன்னரது கொடிகளில் இணையான இருகயல்கள் வரையப் பெற்றிருக்கும்; அவை உலகத்திற்கே இரு கண்ணெனத் திகழும் என்பது.

**சந்திரகுலம்**: சேர, சோழ பாண்டிய மன்னர்கள் முறையே அக்கினி குலத்தையும், சூரிய குலத்தையும், சந்திர குலத்தையும் சேர்ந்தவர்கள். முந்தையோர் - முன்னோர்; முளை - தோன்றல்; தென்கலை - தமிழ் நூற் பயிற்சி; வடகலை - வடமொழி நூற் பயிற்சி.

**மன்பதை** - உலகத்து மக்கள்; சங்கர சரண பங்கயஞ் சூடி - சிவ பெருமானிடத்தில் பக்திகொண்டு என்றபடி; சங்கரன்-சிவன்; சரணம்-பாதம்; பங்கயம் - தாமரை.

**செய்கோலோச்சி வெண்குடை நிழற்றி**: செங்கோல், வெண்குடை இரண்டும் அரசனது ஆணையையும் ஆளுகையையும் குறிக்கும். ஓச்சி - செலுத்தி; நிழற்றி - நடாத்தி.

**வானவாரி** - மழை; அரசன் அறநெறி நிற்பின் மழை பெய்யு மென்பது பற்றி, அரசனே வானவாரி அளித்தான் என்று கூறப்பட்டது. மன் அருள் வாரி - நிலையான கருணை: தானவாரி - கொடை; வாரி என்றது, இங்கு மிகுதியைக் குறித்து நின்றது.

**மறக்களை பறித்துநல் லறப்பயிர் விளைத்து**: மறத்தைக் களையாகவும் அறத்தைப் பயிராகவும் இவ்வடியில் உருவகித்துள்ளார். மறம் - தீமை; அறம் - தருமம்.

**சிங்கையில்............மிசை விளக்கேற்றி**: சிங்கை, அனுரை, இராசை, செண்பை, விந்தை, அறந்தை, முதலை, வீரை, வைப்பாறு இவ்விடங்

விந்தையி லறந்தையில் முதலையில் வீரையில்
வைப்பாற் ெ.... .... .... .... ன்னரை வென்கண்
டெப்பாற் றிசையு மிசைவிளக் கேற்றிப்
பதினெண்.... ... .... ... கம் போற்றப்
பதினெண் பாஷைப் பார்த்திப ரனைவரும்
திறையுஞ் சின்னமு முறைமுறை குணர்ந்து
குறைபல விரந்து குரைகழ லிறைஞ்ச
வவரவர் வேண்டிய தவரவர்க் கருளி

---

களில் பகை மன்னரை வென்று எல்லாத் திசையிலும் தன் புகழைப் பரப்பி என்றபடி.

இராசை - சங்கரநயினூர் கோயில்; இது சங்கரநயினூர் கோயில் தாலூகாவிற்குத் தலைநகர். செண்பை: இது செண்பக வனம் என்னும் திருக்குற்றாலத் தலமாகும்; தென்காசித் தாலூகாவிலுள்ளது. இதனை நான்குனேரியை யடுத்த சண்பகராசபுரம் என்பாருமுளர்.

விந்தை - விந்தனூர்; இது தென்காசியை யடுத்த செங்கோட்டைப் பகுதியிலுள்ளது. 'பராக்கிரம பாண்டியன் சதுர்வேதி மங்கலம்' என்றும் இதற்கு ஒரு பெயர் உண்டு. இப்பொழுது அது 'விந்தை கோட்டை' என்று வழங்குகிறது. இதனைச் 'சாம்பூர் வடகரை' என்பாருமுளர். அறந்தை; இவ்வூர் எந்த இடத்தில் உள்ளதென்று இப்பொழுது விளங்க வில்லை. முதலை - முதலைக்குளம் என்னும் ஊர். இது நான்குனேரித் தாலூகாவிலுள்ளது. வீரை: வீரகேரளம்புதூர்; செங்கோட்டைப் பகுதியிலுள்ளது.

வைப்பாறு - வைப்பாறு ஓடும் பகுதி; இது தென்காசி வழியே ஓடும் ஒரு நதி. வென்கண்டு - புறங்கண்டு, வெற்றிகொண்டு; எப்பாற் றிசையும் - எல்லாத் திசையும்; இசை விளக்கேற்றி - புகழ் பரப்பி.

பதினெண் பாஷைப் பார்த்திப ரனைவரும் - பதினெண் மொழி வழங்கும் பதினெண் நாட்டு அரசர்களும்; திறையுஞ் சின்னமும் - திறைப் பணமும் அடையாளப் பூ முதலியனவும். முறை முறை - வரிசையாக.

குறைபல விரந்து - தமக்குண்டான பல குறைகளையும் கூறி; குரைகழ லிறைஞ்ச - அடிகளில் விழுந்து வணங்க. வீரக்கழல் அணியும் அடிக ளாதலின், அரசன் அடிகள் 'குரைகழல்' எனப்பட்டன.

சிங்கை, அனுரை, இராசை, செண்பை, விந்தை, அறந்தை, முதலை, வீரை முதலிய இடங்களில் பகை மன்னரை வென்றதும், பதினெண் மொழி வழங்கும் பதினெண் நாட்டு அரசர்களிடத்தும் திறை வாங்கிய தும் அரிகேசரி பராக்கிரம பாண்டிய தேவன் வெற்றிகளாகும்.

செந்தறலோம்ப - யாகம் வளர்க்க; விந்தை முதல் அகரமைந்திடத் தியற்றி - விந்தனூர் முதலிய ஐந்து இடங்களில் அந்தணர் தங்கி வாழ்வ

அந்தண ரனேகர் செந்தழ லோம்ப
விந்தை முதல்அகர மைந்திடத் தியற்றிச்
சிவனெறி யோங்கச் சிவார்ச்சனை புரிந்து
மருதூ ரார்க்கு மண்டப மமைத்து
முன்ஒரு தூர்மூங்கி லுள்புக் கிருந்த
சிற்பரர் தம்மைத் திருவத்த சாமத்துப்
பொற்கலத் தமுது பொலிவித் தருளிச்
சண்பக வனத்துச் சங்கரர் தமக்கு
மண்டப மமைத்து மணிமுடி சூட்டி
(2)விழாவணி நடாத்தி விரைப்புன லாடல்

---

தற்கு அகரங்கள் ஏற்படுத்தி என்பது. விந்தை - செங்கோட்டைப் பகுதியிலுள்ள விந்தனூர். விந்தை முதல் என்றது, விந்தனூர் அறந்தை, முதலை, வீரை, வைப்பாறு ஆகிய ஐந்திடங்களையும் குறிக்கும். அகரம் - அக்கிரகாரம், அந்தணர் தங்குமிடம்.

**சிவனெறி** - சைவம்; சிவார்ச்சனை - சிவ பூசை; அந்தணர்களைக் கொண்டு சைவ சமயம் வளரும்படி சிவ பூசை முதலியன செய்து என்பது.

**மருதூரார்** - திருப்புடை மருதூரில் எழுந்தருளிய சிவபெருமான்; திருப்புடைமருதூர் அம்பாசமுத்திரம் தாலூகாவிலுள்ளது. அங்குள்ள கோயில் மண்டபத்தை அரிகேசரி பராக்கிரம பாண்டியதேவன் கட்டினன்.

**முன்ஒரு............சிற்பரர்** : முன்னொரு காலத்தில் மூங்கிலடியில் எழுந்தருளிய சிவபெருமான் என்பது. இது திருநெல்வேலித் தலத்துச் சிவபெருமானைக் குறிக்கும். தூர்மூங்கில் - மூங்கில் தூர், மூங்கிலடி. **அத்த சாமம்** - நள்ளிரவு; அரிகேசரி பராக்கிரம பாண்டிய தேவன், திருநெல்வேலியில் எழுந்தருளிய சிவபெருமானது அர்த்தயாம வழிபாட்டிற்கு நிபந்தங்கள் கொடுத்தான் என்பது.

**சண்பகவனத்துச் சங்கரர்** : சண்பகவனமென்னும் திருக்குற்றாலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான். அரிகேசரி பராக்கிரம பாண்டிய தேவன் இங்குள்ள சிவன் கோயிலுக்கு மண்டப மமைத்ததுமன்றி, திருமஞ்சன மாட்டுதல் முதலிய திருவிழாச் சிறப்பும் செய்வித்தான்.

**2.** **விழாவணி**- திருவிழா, **விரைப் புனலாடல்** - திருமஞ்சன மாடுதல். **வழாவகை** - தவறாதபடி. **வற்று வருவி** - குறையாத நீர் வீழ்ச்சி; **வற்கட முற்ற விக்காலத்து** - பஞ்சம் உண்டான இந்த நாளில்; **நின்மன்னருள் த(ன்)னால் உறுபுனல் நல்கென** - உனது நிலையான கருணையால் நல்ல நீர்பெற அருள்வாய் என்று வேண்ட என்றபடி. **வேண்டியப்பொழுதே** - உறுபுனல் நல்கென வேண்டிய அப்பொழுதே.

வழாவகை நடாத்த நின்மன் னருள்தனால்
வற்ற வருவியும் வற்ற வற்கட
முற்றவிக் காலத் துறுபுனல் நல்கென
வேண்டியப் பொழுதே வேறிடத் தின்றிச்
சேண்டரு புனலிற் செழும்புன லாட்டி
மின்கால் வேணி விசுவநா தர்க்குத்
தென்கா சிப்பெருங் கோயில் செய்து
நல்லா கமவழி நைமித் திகமுடன்
எல்லாப் பூசையும் எக்கோ யிலினும்
பொருள்முத லனைத்தும் புரையற நடாத்தித்
திருமலி செம்பொற் சிங்கா சனமிசை
உலக முழுதும் உடையா ருடனே
இலகு கருணை யிரண்டுரு வென்ன
அம்மையு மப்பனு மாயனைத் துயிர்க்கும்
இம்மைப் பயனும் மறுமைக் குறுதியும்
மேம்பட நல்கி விற்றிருந் தருளிய
ஸ்ரீ அரி......................தேவரான
பராக்ரம பாண்ட்ய தேவர்க்கு யாண்டு—

---

**சேண்டரு புனலில்** - சேணிடத்திருந்து கொண்டு தரப்பட்ட நீரில்; **சேண்** - சேய்மை; தூர இடம். 'நின்மன் னருள்தனால்......வேறிடத் தின்றி' என்பதால், இங்கு மழையைக் குறிக்கும்போலும். **செழும்புன லாட்டி** - திருமஞ்சனம் செய்து.

**மின்கால்வேணி** - மின்னலைக் கக்குகின்ற சடை. **விசுவநாதர்**: இது தென்காசிப் பதியில் எழுந்தருளிய சிவபெருமான் பெயர். **தென்காசிப் பெருங்கோயில்** - தென்காசிப் பதியிலுள்ள பெரிய கோயில்.

**ஆகமவழி** - ஆகம நூல் கூறு முறை; **நைமித்திகம்** - விசேஷ காலங்களில் நிகழ்வது; **பொருள் முதல் அனைத்தும்** - எல்லாவற்றையும்; **புரையற** - குற்றம் நீங்க.

**திருமலி** - திருமகள் பொலிந்த; **உலக முழுதும் உடையார்**; இஃது அரிகேசரி பராக்கிரம பாண்டிய தேவனது பட்டத்தரசியைக் குறிக்கும். **இலகு கருணை யிரண்டுரு வென்ன** - விளங்கும் கருணையே இரண்டு உருவெடுத்தாற் போல; இஃது உலக முழுதுடையாளுடன் அரிகேசரி பராக்கிரம பாண்டிய தேவன் வீற்றிருந்தமைக்கு உவமை.

**அம்மையு மப்பனுமாய்** - தாயும் தந்தையுமாக; **இம்மைப் பயன்** - புகழ்; **மறுமைக்குறுதி** - முத்திநெறி.

இருபத்தெட்டாவதின் எதிராவது............ற்று இருபத்தொன்றாந் தியதியும் பூர்ணையும் வெள்ளிக்கிழமையும் பெற்ற சோதி நாள், தென் வாரி நாட்டு சித்ரநதி உத்தர தீரத்தில் தக்ஷிண காசியிலே உடையார் விஸ்வநாதனுக்கு அபிநவமாக உபாநாதி ஸ்தூபி பரிய்யந்தமுந் திருப்பணி செய்து உடையார் விஸ்வநாதனையும் பிரதிஷ்டித்து அர்த்த மண்டபம், இடைநாழிகை, மஹாமண்டபம், ஸோபாநம் இவை

---

விந்தை முதல் ஐந்திடங்களில் அந்தணர்களைக் குடியேற்றுவித்துச் சிவார்ச்சனை புரிவித்தது, மருதூரார்க்கு மண்டபமமைத்தது, மூங்கிலடியி லெழுந்தருளிய சிற்பரர்க்கு அர்த்தயாமத்து வழிபாட்டிற்குரிய நிவந்த மளித்தது, செண்பகவனத்துச் சங்கரர்க்கு மண்டபமமைத்துத் திருமஞ்சனமாட்டுதல் முதலிய திருவிழா நடத்துவித்தது, தென்காசிப் பெரியகோயிலைக் கட்டிப் பூசை முதலியன செய்வித்தது முதலியவை அரிகேசரி பராக்கிரம பாண்டியதேவன் செய்த திருப்பணிகளாகும்.

**யாண்டு இருபத்தெட்டாவதின் எதிராவது** - இருபத்தொன்பதாவது ஆண்டு; **தியதி** - தேதி; **பூர்ணை** - பௌர்ணமி. பதினைந்தாவது திதி; **சோதி நாள்** - பதினைந்தாவது நாளான சுவாதி நாள்; **நாள்** - நட்சத்திரம்.

அரிகேசரி பராக்கிரம பாண்டிய தேவன் அவன் ஆட்சியின் இருபத்தொன்பதாவது ஆண்டு.........இருபத்தொன்றாந் தேதி பௌர்ணமியும் வெள்ளிக்கிழமையும் கூடிய சோதி நாள் தென்வாரி நாட்டுச் சித்திரா நதியில் வடகரையிலுள்ள தென்காசிப் பதியில் விசுவநாதசுவாமி கோயிலைக் கட்டி, சுவாமியின் திருவுருவத்தை அதில் பிரதிஷ்டித்தது மன்றி, மண்டபங்களும் கட்டி, விசேஷ பூசை; திருநாள் செலவு முதலியவைகளுக்குப் பல ஊர்களைத் தானமும் செய்தான் என்பது.

**தென்வாரி நாடு** - இது பாண்டிய நாட்டின் தென்பகுதி போலும்; **சித்ரநதி உத்தர தீரத்தில்** - சித்திரா நதியின் வடகரையில்; சித்திரா நதி தென்காசி வழியாய் ஓடும் ஒரு சிற்றாறு. **உடையார் விஸ்வநாதன்** - இது தென்காசிப் பதியில் எழுந்தருளிய சிவன் பெயர். **அபிநவமாக** - புதிதாக.

**உபாநாதி ஸ்தூபி பரிய்யந்தமும்** - அடிமுதல் முடிவரையும்; **திருப்பணி செய்து** - கோயில்கட்டி முடித்து; **விஸ்வநாதனையும் பிரதிஷ்டித்து** - விசுவநாத சுவாமியின் படிவத்தையும் உள்ளே வைத்து; **அர்த்த மண்டபம்** - கருப்ப கிருகத்தைச் சார்ந்த மண்டபம்.

**இடை நாழிகை** - அர்த்த மண்டபத்திற்கும், மகா மண்டபத்திற்கும் இடைப்பட்ட இடம்; **மஹா மண்டபம்** - அர்த்த மண்டபத்தை யடுத்துள்ள பெரிய மண்டபம்; **ஸோபாநம்** - படிக்கட்டு; தாழ்வாரம் எனினு

யுக் திருப்பணி செய்து, திருப்பள்ளி அறை நாச்சியார் முதலாக உள்ள திருவுடம்புகளும் ஏறி அருளப் பண்ணுவித்து, ஆவரண கோபுராதிகளும் ஆரம்பித்து மேல்—

3. உடையார் விஸ்வநாதந் பூஜைக்கு அமுதுபடி சாத்துப்படி திருமாலைத் திருப்பரிவட்டக் திருவிளக்கு உட்பட்ட பல நித்யநியமங்களுக்கும் பல விசேஷ பூஜை திருநாட்செலவுக்கும் முன்னாள் இரண்டாவதின் எதிர் இருபத்து மூன்றுவது முதலுக்கு நாம் தேவதானமாக விட்ட பற்றுகளில் தென்வாரி நாட்டுத் தென்காசிக்குப் பெருநான் கெல்லையாவது—கீழ் எல்லை புலியூற்பற்றுன காராண் குளத்தில் நீர்நக்கலுக்கும், பரிம்புக்கும் புலியூர் அகரப்பற்றில் புஞ்சைக்கும், நாராயண ஸ்ரீ பாதங்கள் மடப்புறத்தில் மேல் எல்லைக்கு

---

மாம். திருப்பள்ளி அறை - கோயில் மூர்த்தி இரவில் பள்ளிக்கு எழுந்தருளும் அறை; நாச்சியார் - பெண் தெய்வம்.

திருவுடம்புகள் - விக்கிரகங்கள். ஏறி அருளப் பண்ணுவித்து - எழுந்தருளும்படி செய்து, பிரதிஷ்டை செய்து; ஆவரணம் - சுற்று மதில்; கோபுராதி - கோபுர முதலிய; ஆரம்பித்து - தொடங்கி; எனவே, இவன் கோபுரம் கட்டி முடிக்கவில்லை என்று தெரிகிறது. மேல் - அதன் பின்பு.

3. திருப் பரிவட்டம் - தெய்வத்துக்குச் சாத்தும் ஆடை; நித்ய நியமம் - தினசரி செய்ய வேண்டுவன; முன்னாள் - இருபத்தொன்பதாவது ஆண்டுக்கு முன்பு; இரண்டாவதின் எதிர் - மூன்றுவது; அஃதாவது இருபத்து ஆறுவது ஆண்டு என்றபடி; இருபத்தைந்தாவது என்பாருமுளர். முதலுக்கு - இருபத்தாறுவது ஆண்டு முதல் என்பது.

பற்று - பல கிராமங்களையுடைய நாட்டுப் பகுதி; தென்காசிக்குப் பெருநான் கெல்கை - தென்காசிப் பற்றுக்கு நான்கு எல்லையாவது; புலியூர்: இது தென்காசித் தாலூகாவிலுள்ளது; 'இராசகுல ராம நல்லூர்' என்பது இதன் மற்றொரு பெயர். புலியூர்பற்றுன காராண்... நீர்நக்கலுக்கும் - புலியூர்ப்பற்றைச் சேர்ந்த காராண் குளத்து நீர் நக்கலுக்கும் என்றபடி. நீர்நக்கல் - ஏரியின் உள்வாய் நீர் தேங்கும் பகுதி; வாய்க்கால் எனினுமாம். பரிம்பு - காராண் குளத்து நீர் நக்கலையடுத்த பரிம்பு; பரிம்பு - பாழ் நிலம்; இக்காலத்தில் 'பரம்புக்காடு' என்பர்.

புலியூர் அகரப்பற்று - புலியூர் அக்கிரகாரம் என்பது. நாராயண ஸ்ரீபாதங்கள்; இவர் ஒரு வைணவ அடியார் என்று தெரிகிறது. இவர் வாழ்ந்த மடம் 'நாராயண ஸ்ரீ பாதங்கள் மடம்' எனப்பட்டது. மடப்புறம் - மடத்திற்குத் தானமாக விட்ட நிலம்.

மேற்கும், தென் எல்லை சித்ர நதிக்கு வடக்கு, மேல் எல்லை குன்றக்குடிப் பரிம்புக்குக் கிழக்கும், வ......சென்னுப் பொற் றைக்கும் குத்துக் கல்லுக்கும் தெற்கும் ஆக இன்னான் கெல் ......ட்ட பற்றும், |இந்த நதிக்கு தக்ஷிண தீரத்தில் வாயுளான் குடிப்பற்றுக்குப் பெருநான் கெல்லையாவது | கீழ் எல்லை புலி யூர் அணைக்கும் திருச்சாலைக் குடிப்பற்றுக்கும் ஆழங்காலுக்கு மேற்கும், தென் எல்கை திருச்சாலைக் குடிப்பற்றுக்கும் பராக் கிரம ப்ராண்டிய சதுர்வேதி மங்கலத்து பட்டகள் அகரப் பற் றில் வடவெல்லைக்கும் உடையார் திருக்குற்றாலமுடைய நாய ஞர் பழந் தேவதானத்துக்கு வடக்கும், மேல் எல்கை வாயு ளான் குடி அணைக்குக் கிழக்கும், வட எல்கை சித்ர நதிக்குத் தெற்கும் ஆக இன்னான் கெல்கைக் குட்பட்ட பற்றும் |குன்றக் குடிப் பற்றுக்குப் பெருநான்—

---

குன்றக்குடிப் பரிம்பு : இது தென்காசிப் பற்றுக்கு மேற்கு எல்கை யாக அமைந்துள்ளது ; மேலே, குன்றக்குடிப் பற்று என்று ஒருநிலப் பகுதி கூறப்பட்டுள்ளது ; அதனை யடுத்துள்ளது போலும் இக் குன்றக் குடிப் பரிம்பும்.

தென்காசிப் பற்று, கிழக்கே புலியூர்ப் பற்றிலுள்ள காராண்குளம் நீர்நக்கல், அதனை யடுத்த பரிம்பு, அங்குள்ள அகரப்பற்று நஞ்சை நிலம், நாராயண ஸ்ரீ பாதங்கள் மடப்புறம் ஆகியவற்றையும், தெற்கே சித்திரா நதியையும், மேற்கே குன்றக்குடிப் பரிம்பையும், வடக்கே செந்நாய்ப் பொற்றை, குத்துக்கல் ஆகியவைகளையும் எல்கைகளாக உடையது.

இந்த நதிக்குத் தக்ஷிண தீரத்தில் - சித்திரா நதிக்குத் தென் கரையில் ; ஆழங்கால்: இஃது ஓர் ஊரின் பெயர். பராக்கிரம பாண்டிய சதுர்வேதி மங்கலம் : இது செங்கோட்டையை யடுத்த விந்தனூருக்குரிய மற்றொரு பெயர் ; பட்டகள் அகரப்பற்று - பட்டர்கள் வாழும் அக்கிரகாரம் போலும். உடையார் திருக்குற்றாலமுடைய நாயனார் - சண்பகவனத்துச் சிற்பரர் ; பழந் தேவதானம் - முன்புள்ள தேவதானம்.

வாயுளான் குடிப்பற்று, கிழக்கே புலியூர் அணை, திருச்சாலைக்குடிப் பற்று, ஆழங்கால் ஆகியவற்றையும், தெற்கே திருச்சாலைக் குடிப்பற்று, விந்தனூர், பட்டகள் அகரப்பற்று, குற்றாலம் சிவன் கோயில் தேவ தானம் ஆகியவற்றையும், மேற்கே வாயுளான்குடி அணையையும், வடக்கே சித்திரா நதியையும் எல்கைகளாக உடையது. இலத்தூர் : இது செங்கோட்டையை யடுத்ததோர் ஊர் ; நிலம் ஒன்பதுமா முந்திரிகை யின் மூன்றுமா முக்காணியும் - $599\frac{1}{2}$ குழி ; மா - $\frac{1}{20}$ வேலி, 100 குழி நிலம் ; முந்திரிகை - $\frac{1}{320}$ ; காணி - $\frac{1}{80}$.

4. கெல்கையாவது—கீழ் எல்கை இடைமலைப் பரிம்புக்கு மேற்கும், தென் எல்கை சித்ர நதிக்கு வடக்கும், மேல் எல்கை செங்கோட்டை பிடாரியார் கோயிலுக்கும் இலத்தூற்குப் போகிற பெருவழிக்குக் கிழக்கு, வட எல்லை கடமர் குளத்துக் குத் தெற்கு ஆக இன்னான் கெல்லைக்குட் பட்ட பற்றில் உடையார் திருக்குற்றாலமுடைய நாயனார் தேவதானமான நிலம் ஒன்பதுமா முந்திரிகையின் மூன்றுமா முக்காணியும் நீங்கலாக உள்ள பற்றும், பராக்கிரம பாண்டிய நல்லூர் பற்றுக்குப்பெருநான் கெல்கையாவது—கீழ் எல்கை இலுப்பைத் தொண்டிற் பெருவழிக்கு மேற்கும், தென் எல்கை இக்குளத்தின் நீர்நக்கலுக்கு வடக்கும், மேல் எல்கை உடையார் திருக்குற்றாலமுடை...........ா பழக் தேவதானமான திருச்சாலைக்குடிப் பற்றுக்குக் கிழக்கும், வட எல்கை சித்ர..........தெற்கும் ஆக இன்னான் கெல்கைக்குட்பட்ட பற்றில் இருங்கிண்டி ஸ்ரீபத்மநாபன் தான இறையிலி நில மிரண்டுமாவும் நீங்கலாக உள்ள பற்று, நல்லூர் பற்றில் வள்ளை மூட்டமும், இக்குளத்தில் நீர் பாயு நிலமாய் வடவூற் பற்றில் நின்றுங் கூட்டின நிலம் மூன்றுமா அரையும் ஆக இப்பற்றுக்குப் பெருநான் கெல்கையாவது-கீழ் எல்கை காடேற்றிப் பற்றுக்கும் மேற்கும், தென் எல்கை வடவூர் பற்றில் செங்குளத்தில் நீர்பாயு நிலத்துக்கும் தஞ்சாவூற் பெருங் காலுக்கும் அனுபோகமழகியான் குளத்தில் நீர்பாயும் பற்றுக்கு வடக்கும் மேல் எல்லை—

---

4. **குன்றக்குடிப் பற்று**: இது செங்கோட்டைப் பகுதியிலுள்ளது. கிழக்கே இடைமலைப் பரிம்பையும், தெற்கே சித்திரா நதியையும், மேற்கே செங்கோட்டைப் பிடாரியார் கோயிலுக்கும் இலாத்தூருக்கும் போகிற பெருவழியையும், வடக்கே கடமர் குளத்தையும் எல்லைகளாக உடையது. இவ்வெல்லைக்குட்பட்ட நிலத்துள் ஒன்பதுமா முந்திரிகையின் மூன்றுமா முக்காணி நிலம்: திருக்குற்றாலம் சிவன் கோயில் தேவதானமாகும்.

**இக்குளத்தின்**: இஃது இலுப்பைத் தொண்டிக்குளம் போலும். **திருச்சாலைக் குடிப்பற்று**: இது திருக்குற்றாலம் சிவன் கோயில் தேவதானம்; பராக்கிரமபாண்டிய நல்லூர்ப்பற்றுக்கு மேற்கெல்லையாகவும், வாயுளான் குடிப் பற்றுக்குக் கிழக்கெல்லையாகவும் உள்ளது. **இருங்கிண்டி**; இஃது ஓர் ஊரின் பெயர்.

**பராக்கிரமபாண்டிய நல்லூர்ப்பற்று**: இது பராக்கிரம பாண்டியன் பெயரால் பெற்ற பெயர்; கிழக்கே இலுப்பைத்தொண்டிப் பெருவழியை

**5.** இக்குளத்தில் நீர் நக்கலுக்கும், தவணை பற்றுக்குங் கிழக்கு, வட எல்கை தஞ்சாவூரில் நின்றும் தவணைக்குப் போகிற பெருவழிக்குத் தெற்கும் ஆக இன்னான் கெல்கைக் குட்பட்ட பற்றும், விட்வாரி நாட்டுப் பைம்பொழிற் பற்றில்நல் லாண் பிள்ளைப் பெற்றாளுக்கும் விஸ்வநாதப் பேரேரிக்கும் பெருநான் கெல்கையாவது—கீழ் எல்கை செங்கோட்டைப் பிடாரியார் கோயிலுக்கும் இவ்வூரில் நின்றும் இலத்தூற்குப் போகிற பெருவழிக்கு மேற்கு, தென் எல்கை ஆற்றுக்கு வடக்கு, மேல் எல்கை பைம்பொழிலில் நின்றும் நல்லூருக்குப் போகிற பெருவழிக்கு முழங்கால் முட்டிப்பாறைக்குங் கிழக்கு வட எல்கை தேனிடு பொற்றைக்குத் தெற்கு ஆ...............ன் கெல்கைக் குட்பட்ட பற்றும், முப்பதாவது மேஷ ஞாயிற்று இருபத்தெ.......தியதியும் பூர்வ பக்ஷத்து பஞ்சமியும் திங்கட் கிழமையும் பெற்ற புணர் பூசத்து நாள் நாம் முன்பு விட்டபற் றுக்கள் நீக்கலாக நாளது பூஜெைச் சிலவுக்கு விட்ட தென்

---

யும், தெற்கே இலுப்பைத் தொண்டிக் குளத்து நீர் நக்கலேயும், மேற்கே திருக்குற்றால முடையார் தேவதானமான திருச்சாலேக்குடிப் பற்றையும், வடக்கே சித்திரா நதியையும் எல்லேகளாக வுடையது. இப்பற்றில் இரண்டு மா நிலம், இருங்கிண்டி ஸ்ரீ பத்மநாபன் தேவதானமாகும்.

**5.** **நல்லூர்ப் பற்றும்; வடவூர்ப் பற்றும் சேர்ந்த நிலம்:** இது கிழக்கே காடேற்றிப் பற்றையும், தெற்கே வடவூர்ப் பற்றில் செங்குளத்து நீர்பாயும் நிலம், தஞ்சாவூர்ப் பெருங்கால், அனுபோக மழகியான் குளத்து நீர்பாயும் பற்று ஆகியவற்றையும், மேற்கே நல்லூர்ப் பற்றுக் குளத்தில் நீர் நக்கல், தவணைப் பற்று ஆகியவற்றையும், வடக்கே தஞ்சாவூரினின்று தவணைப் பற்றுக்குப் போகிற பெருவழியையும் எல்கை களாக வுடையது.

**பைம்பொழில்:** இது தென்காசித் தாலூகாவிலுள்ள ஓர் ஊர். இவ் வூரை யடுத்த பகுதி 'பைம்பொழில் பற்று' எனப்பட்டது. இப் பற்றின் ஒரு பகுதி, கிழக்கே செங்கோட்டைப் பிடாரியார் கோயிலுக்கும் இலாத் தூருக்கும் போகிற பெருவழியையும், தெற்கே ஆற்றையும், மேற்கே பைம்பொழிலினின்று நல்லூருக்குப் போகும் வழி, முழங்கால் முட்டி பாறை ஆகியவற்றையும், வடக்கே தேனிடு பொற்றையையும் எல்கை களாக வுடையது.

**செங்கோட்டைப் பிடாரியார் கோயில் பெருவழி:** இது குன்றக்குடிப் பற்றுக்கு மேல் எல்கையாகவும், பைம்பொழில் பற்றுக்குக் கீழ் எல்கை யாகவும் உள்ளது. செங்கோட்டை திருநெல்வேலிச் சில்லாவில் தென்காசித் தாலூகாவிலுள்ளது.

வாரி நாட்டு இராசகுல ராம நல்லூரான புலியூர்ப்பற்றுக்கும், வீரபாண்டிய நல்லூர்ப் பற்றுக்கும் பெருநான் கெல்கை யாவது-புலியூர்ப்பற்றுக்குப் பெரு நான்கெல்கைக் கீழ் எல்கை திருவெண்காட்டு முதலியார் மடப்புறமான பாட்டக் குறிச்சிப் பற்றுக்கு மேற்கு, தென் எல்கைச் சிற்றூற்றுக்குவடக்கு,மேல் எல்கை பழந்தேவதானமான.

**6.** தென்காசிப் பற்றுக்குக் கிழக்கு, வட எல்கை ஆயக் குடி பற்றுக்குத் தெற்கு ஆக இன்னான் கெல்கைக்குட் பட்ட பற்றில் உடையார் திருக்குற்றாலமுடைய நாயனார் தேவதான மும், உடையார் விக்ரமப் பாண்டீஸ்வரமுடைய நாயனார் தேவ் தானமும், நயினார் திருவிருந்த பெருமாள் திருவிடை யாட்ட மும், ஸ்ரீக்ருஷ்ணன் திருவிடையாட்டமும், பராக்ரம பாண்டிய நல்லூரில் நயினார் திருவேங்கட நாதன் திருவிடையாட்டமும், முகந்தானத்து நாராயண ஸ்ரீபாதங்கள் மடப்புறமும், அகரப்

---

முப்பதாவது - யாண்டு முப்பதாவது; மெஷ ஞாயிறு - சித்திரை மாதம்; பூர்வ பக்ஷம் - வளர் பிறைக்காலம்; பஞ்சமி - ஐந்தாவது திதி. புணர்பூசத்து நாள் - ஏழாவது நட்சத்திரம்; பராக்கிரம பாண்டியன் ஆட்சியின் முப்பதாவது ஆண்டு, மேஷ ஞாயிறு.........தேதி, பூர்வ பட்சத்துப் பஞ்சமியும், திங்கட்கிழமையும் கூடிய புனர்பூசத்து நாள் என்றபடி.

நாம் முன்பு விட்ட பற்றுக்கள் - தென்காசிப் பற்று, வாயுளான் குடிப் பற்று, குன்றக்குடிப் பற்று, நல்லூர்ப் பற்று, பைம்பொழில் பற்று என்பன. நாளது பூஜெச் செலவுக்கு - மேல்வரும் பூசைச் செலவுக்கு.

மடப்புறம் - மடத்திற்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலம்; பாட்ட குறிச்சிப் பற்று: இது திருவெண்காட்டு முதலியார் மடத்துக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலம்; புலியூர்ப் பற்றுக்குக் கீழ் எல்கையா யுள்ளது.

பழந்தேவதானமான தென்காசிப் பற்று: இது முன்னாள் பராக்கிரம பாண்டியனால் தென்காசிக் கோவிலுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலம்.

**6.** புலியூர்ப்பற்று: இதன் மற்றொரு பெயர் ‘இராசகுல ராமநல்லூர்’ என்பது. இது தென்வாரி நாட்டைச் சேர்ந்தது. கிழக்கே பாட்டக் குறிச்சிப் பற்றையும், தெற்கே சிற்றூற்றையும், மேற்கே தென்காசிப் பற்றையும், வடக்கே ஆயக்குடிப் பற்றையும் எல்கைகளாகவுடையது. இதில் திருக்குற்றாலமுடைய நாயனார் தேவதானம், உடையார் விக்கிரம பாண்டீஸ்வர நாயனார் தேவதானம், நயினார் திருவிருந்தப் பெருமாள்

பற்றும் நீங்கலாக இன்னூன் கெல்கைக்குட்பட்ட பற்றும், வீர பாண்ட்ய நல்லூருக்குப் பெருநான் கெல்கையாவது - கீழ் எல்கை தட்டான் குளத்துப் பரிம்புக்கு மேற்கு, தென் எல்கை திருச்சிற்றம்பலத்துக்குக் காலான இராசகுலரா....காலுக்கும் நயினர் திருவிருந்த பெருமாள் திருவிடையாட்டமான ஆகவ ராம........துக்கும் வடக்கு மேல் எல்கைதிருவெண்காட்டு முத லியார் மடப்புறமான பாட்டக் குறிச்சிப் பற்றுக்குக் கிழக்கு, வட எல்கை விந்தனூர்ப் பெருவழிக்குத் தெற்கு ஆக இன் னூன் கெல்கைக்குட்பட்ட பற்றும் ஆக இப்பற்றுக்களில்ப் பெருநான்கெல்கைக் குட்பட்ட நஞ்செய், புஞ்செய், மாவடை, மரவடை, பட்டடை, கொடித்தேர்ட்டம், செக்கிறை மற்று முள்ள ஸமஸ்த ப்ராப்திகளும் முப்பதாவது பசான முதலுக் குத் தேவதானமாக விட்ட அளவுக்கு இம்மாதிரியிலே இவ் வோலை பிடிபடாகக் கொண்டு ஆசந்த்ர தாரவத் இவ்வாலையம் உள்ள அளவும்

---

திருவிடையாட்டம், ஸ்ரீ கிருஷ்ணன் திருவிடையாட்டம், நாயனர் திருவேங்கடநாதன் திருவிடையாட்டம், முகந்தானத்து நாராயண ஸ்ரீபாதங்கள் மடப்புறம், அகரப்பற்று ஆகியவையும் அடங்கி யிருந்தன.

**தேவதானம்** - சைவ, வைணவக் கோயில்களுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலம். **திருவிடையாட்டம்** - தேவதான மானியம்; இது வைணவ கோயில்களுக்குக் கொடுக்கப்படுவது போலும். **அகரப்பற்று** - அந்தணர் வாழுமிடம்.

**வீரபாண்ட்ய நல்லூர்ப் பற்று :** இது கிழக்கே தட்டான் குளத்துப் பரிம்பையும், தெற்கே திருச்சிற்றம்பலத்துக் கால், திருவிருந்த பெருமாள் திருவிடையாட்டம் ஆகியவற்றையும், மேற்கே பாட்டக் குறிச்சிப் பற்றையும், வடக்கே விந்தனூர்ப் பெருவழியையும் எல்கை களாக வுடையது.

**நஞ்செய்** - நெல் முதலியன விளையும் நல்ல நிலம்; **புஞ்செய்** - நஞ்செய் யல்லாத நிலம்; **மாவடை** - நிலத்திலடங்கிய விலங்குகள்; கிராமத்தில் கால்நடை அடையும் இடம் எனினுமாம். **மரவடை** - நிலத்திலடங்கிய மரங்கள்; மரங்களுக்குரிய வரி எனினுமாம்.

**பட்டடை** - இறைப்புப் பாசனத்தால் பயிரிடப்படும் நிலம்; குடி வாரம் எனினுமாம். **கொடித் தோட்டம்** - படர்கொடித் தோட்டம்; வெற்றிலைத் தோட்டம் என்பாருமுளர். **செக்கிறை** - செக்கு ஆட்டி எண்ணெய் எடுப்பதற்கேற்பட்ட வரி.

**ஸமஸ்த ப்ராப்திகளும்** - சகல அனுபவங்களும்; **முப்பதாவது பசான முதலுக்கு** - முப்பதாவது ஆண்டு பசான முதலாக. பசானம்: சித்திரை

**7. கையாண்டு கல்லினுஞ் செம்பிலும் வெட்டிப் பூசையுந் தாழ்வற நடத்திப் போதவும் பார்க. இவை கிடாரத்தூருடையான் எழுத்து உதுல்யம்.**

---

மாதத்தில் அறுவடையாகும் ஒருவகை நெல்; எனவே, இங்குச் சித்திரை மாதம் முதலாக என்றபடி. வருடம் என்பாருமுளர்.

**இம்மாதிரியிலே** - இந்த முறையில்; இவ்வோலை பிடிபடாக; இந்தப் பத்திரம் ஆதாரமாக; பிடிபடு - ஆதாரம். **சந்த்ர தாரவம்** - இது சாசனங்களில் வழங்கும் ஒரு தொடர்; சந்திரனும் நட்சத்திரங்களும் உள்ளவரை என்பது இதன்பொருள். **இவ்வாலயம்** - பராக்கிரம பாண்டியனால் கட்டப்பட்ட தென்காசிப் பெரிய கோயில்.

**7. கையாண்டு** - அனுபவித்துக் கொள்ளும்படி என்க. **தாழ்வற** - தடையன்றி. **நடத்திப் போதவும் பார்க**-நடத்திவரும்படி கவனித்துக் கொள்ளவும் என்றபடி.

**கிடாரத்தூருடையான்:** இவன் அரிகேசரி தேவர் சாசனத்தை எழுதியவன்; இவனுக்குச் சொந்தவூர் கிடாரம் போலும். **துல்யம்** - சரி; கையொப்பம் என்னினுமாம். அரசன் கொடுத்த சாசனமாயின் 'அரசன் கையொப்பம்' என்று பொருள்படும்.

### பயிற்சி வினாக்கள்

1. அரிகேசரி பராக்கிரம பாண்டிய தேவன் சாசனம் எங்குளது. அஃது எப்பொழுது ஏற்பட்டது? அதில் கூறப்படும் செய்திகள் யாவை?

2. அரிகேசரி பராக்கிரம பாண்டிய தேவனின் இயற்பெயர், அவனது மெய்க்கீர்த்தியின் முதற்குறிப்பு முதலியன யாவை?

3. அரிகேசரி வரலாறாக அவன் சாசனத்தால் அறியப்படுவனவற்றைத் தொகுத்து எழுதுக.

4. அரிகேசரி பராக்கிரம பாண்டியனது சமயப் பற்றினையும் அவன் செய்த திருப்பணிகளையும் எழுதுக.

5. பராக்கிரம பாண்டியன் செயல்களாகத் தென்காசிச் சாசனம் தெரிவிப்பன யாவை?

6. இராசை, செண்பை, விந்தை, வீரை, மருதூர், சண்பகவனம்—இவற்றுள் எவையேனும் நான்கற்கு இக்காலத்து வழங்கும் பெயர்களைப் புலப்படுத்துக.

7. சண்பகவனத்துச் சங்கரர், மூங்கிலுட்புக்கிருந்த சிற்பரர், மருதூரர், விசுவநாதர்—இவர்களுக்கு அரிகேசரி தேவர் செய்த திருத்தொண்டுகள் யாவை? இம்மூர்த்திகள் எழுந்தருளிய தலங்களின் பெயர்களை இக்காலத்தில் வழங்குகிறபடி தெரிவிக்க.

8. விந்தை முதலகர மைந்திடத் தியற்றியவன் யாவன்? அவன் புதிதாக இயற்றிய திருப்பணி யாது?

9. மருதூரார்க்கு மண்டப மமைத்தார் யார்? அவர் செய்த வேறிரண்டு திருப்பணிகளை எடுத்தெழுதுக.

10. தென்காசி எங்குளது? அங்கு விசுவநாதர் ஆலயம் எடுத்தது யார்? அவன் அத் தேவர்க் கமைத்த நித்ய நியமங்களெவை?

11. "இலகு கருணை இரண்டுருவென்ன, அம்மையு மப்பனுமாய்... ...வீற்றிருந்தருளிய"—வீற்றிருந்தது யார்? விளக்கம் தருக.

12. தக்ஷிண காசி எது? அங்குக் கோயில் கொண்டுள்ள 'கடவுள் திருநாமம்' என்ன? அக்கோயிலுக்குப் பராக்கிரம பாண்டியன் செய்த திருப்பணி யாது?

13. அரிகேசரி தேவன் யார்? அவன் சிறந்த குணங்கள் எவ்வாறு பாராட்டப்பட்டுள்ளன?

14. தென்காசிப் பற்று, பைம்பொழிற் பற்று இவை எந்நாட்டிலுள்ளன? தென்காசிப் பற்றுக்கும், பராக்கிரம பாண்டிய தேவர் பற்றுக்கும் நாலுன்கு எல்லைககள் எவை?

15. நிலம் ஒன்பதுமா முந்திரிகையின் மூன்றுமா முக்காணி'— இதனை இக்கால அளவின்படி இவ்வளவென்பதை விளக்குக.

16. புலியூருக்கு மற்றொரு பெயர் யாது? அஃது எந்நாட்டிலுள்ளது? அதில் முன்பு எந்தெந்தக் கோயில்களுக்கு நிலமிருந்தது?

17. 'இவ்வோலை பிடிபாடாக' என்பதால் யாது? விளங்குகிறது?

18. அரிகேசரி தேவர் சாசனம் எழுதியவர் யார்? அதன் துவக்க மங்கலச் சொல்லும், முடிவுச் சொல்லும் எவை? அவற்றின் பொருள்கள் யாவை?

19. விசுவநாதசுவாமி கோயிலில் பொறிக்கப்பட்ட சாசனம் யார் காலத்தில் ஏற்பட்டது? அவர் செய்த திருப்பணிகள் யாவை?

20. உங்கள் பாடப் பகுதியாக அமைந்துள்ள சாசனங்களில் காணப்படும் பாண்டிய அரசர் யாவர்? அவர்களைக் கால வரையறையைப் படுத்தி எழுதுக.

21. பொருள் தருக:—தென்கலை, வானவாரி, சின்னம், அகரம் அத்தசாமம், வற்கடம், நைமித்திகம், அபிநவமாக, இடை நாழிகை, ஸோபாநம், திருவுடம்பு, ஆவரணம், நித்திய நியமம், தேவதானம், பரிம்பு, மடப்புறம், பொற்றை, தக்ஷிண தீரம், நீர் நக்கல், இறையிலி நிலம், மா, பூர்வபக்ஷம், மாவடை, மரவடை, பட்டடை, கொடித்தோட்டம், செக்கிறை, பசானம், பிடிபாடு, துல்யம்.

22. குறிப்பு வரைக:—உலக முழுதுடையார், தென்வாரி நாடு, தக்ஷிணகாசி, திருப்பரி வட்டம், பற்று, அகரப்பற்று, நாராயண ஸ்ரீ பாதங்கள், மடப்புறம், செங்கோட்டைப் பிடாரியார் கோயில், இருங் கிண்டி ஸ்ரீ பத்மநாபன், தஞ்சாவூர் பெருங்கால், மேஷஞாயிறு, திரு வெண்காட்டு முதலியார் மடப்புறம்.

23. விளக்கி எழுதுக:—இருபத் தெட்டாவதின் எதிராவது, உபா நாதி ஸ்தாபி பரிய்யந்தம், முன்னாள் இரண்டாவதின் எதிர் இருபத்து மூன்றாவது முதலுக்கு, பட்டகள் அகரப்பற்று, நிலம் மூன்றுமா அரை, ஸமஸ்த ப்ராப்திகள், ஆசந்த்ர தாரவத்.

24. நிலங்களுக்கு எல்லை கூறுமிடத்துப் பொதுவாக எது எதனை எல்லைகளாகக் கூறுவது பண்டை வழக்கம்? அரிகேசரி தேவர் சாச னத்திலிருந்து ஆதாரந் தருக.

# 28. அரிகேசரி பராக்கிரமபாண்டியன் சாசனம்-II

## முன்னுரை

அரிகேசரி பராக்கிரம பாண்டியன் இரண்டாவது சாசனம் என்பது, அரிகேசரி பராக்கிரம பாண்டியன்† தென்காசியில் செய்த திருப்பணிகளைப் பற்றிய சாசனமாகும். இச் சாசனம் அவன் ஆட்சியின் இருபத்தைந்தாவது ஆண்டு ஏற்பட்டதாகத் தெரிகிறது. இது செய்யுள் வடிவில் அமைந்தது; தென்காசி விசுவநாதசுவாமி கோயிலுக்கு முன்னர் இடிந்த நிலையிலுள்ள கோபுரத்தின் சுவர்களில் காணப்படுகிறது. தமிழ் மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது; அறுபத்துமூன்று வரிகளையுடையது.

இச்சாசனம் "சுபமஸ்து உ" என்று தொடங்கி, பதினாறு செய்யுட்களைக் கொண்டுள்ளது. அவற்றுள் ஆசிரிய விருத்தம் நான்கு; கட்டளைக்கலித்துறை பதினொன்று; வெண்பா ஒன்று. முதல் செய்யுளில், கோயில் கட்டத் தொடங்கிய நாள் குறிக்கப்பட்டுள்ளது. இரண்டாவது செய்யுளில், கோயில் கருப்பக்கிருகத்தில் இறைவன் திருமேனியை எழுந்தருளுவித்த நாள் குறிக்கப்பட்டுள்ளது. 3, 4 ஆம் செய்யுட்களில் கோயில் கோபுரம் கட்டத்தொடங்கிய நாளும், 5, 6, 7 ஆம் செய்யுட்களில் அரிகேசரி பராக்கிரம பாண்டியனும், பிற அரசிளங் குமாரும் கோயிலைப் பாதுகாக்கவும் சிறப்பிக்கவும் கோயிலதிகாரிகளை வேண்டிக்கொண்டமையும், 8 ஆம்செய்யுளில் கோபுரம் கட்டத் தொடங்கிக் கல் வரிசை முடிந்த ஆறும் ஆண்டில் அரிகேசரி பராக்கிரம பாண்டியன் இறந்தமையும், 9 முதல் 12 செய்யுட்களில், மீண்டும் கோயில் அதிகாரிகளை வேண்டிக்கொண்டமையும், 13 ஆம் செய்யுளில் அரிகேசரி பராக்கிரம பாண்டியன் இறந்தநாளும், 14 ஆம் செய்யுளில், அவன் இறந்தமை குறித்த கையறுநிலையும், 15, 16 ஆம் செய்யுட்களில், அரிகேசரி பராக்கிரமபாண்டியன் புகழும் கூறப்பட்டுள்ளன.

அரிகேசரி பராக்கிரம பாண்டியன் சக ஆண்டு 1344முதல் 1385 வரை ஆண்டான்; அஃதாவது, கி. பி. 1422 முதல் 1463-ஆம் ஆண்டு வரை ஆண்டான். இச்சாசனம் சகம் 1368 ஆம் ஆண்டுக்கு மேலாக ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1447 ஆம் ஆண்டு என்னலாம்.

---

* T. A. S. Vol I, No III, pp. 95.—98.

† இவனுடைய வரலாற்றினை முந்திய சாசனக் குறிப்பில் காண்க.

சாசனம்

(1) சுபமஸ்து உ

(எண்சீர்க் கழிநெடிலடிலாசிரிய விருத்தம்)

அன்பினுடன் சகாத்த மாயிரத்து முன்னூற்
றறுபத் (2) தெட்டதன்மேல்வைய் காசித் திங்கள்
மன்தியதி யீரைந்திற் பூர் (3) வ பக்க
மருவுதெச மியில்வெள்ளி வாரந் தன்னில்
மின்திகழுத் திரநாள்(4)மீ னத்தில் வாகை
வேலரிகேசரிபராக்கிறம மகீபன்
தென்திசையிற் கா(5)சிநகர்க் கோயில்காணச்
சென்று நின்று கர்ஷணைதான் செய்வித்(6)தானே உ 1
அடைவுதிகழ் சகாத்த மாயிரத்து முன்னூற்
றறுபத்(7)தொன்பதின்மேற்செல் மிதுன ஞாயற்
றிடைமருவு தியதி பதினெ—
.... ... .... .... .... ... ...
(8) விற்சனி வார மதனில் மீனத்தில் மன
.... .... .... ...(9).... .... ... ....(10)

---

குறிப்புரை

சுபமஸ்து உ : இஃது இச் சாசனத்தின் தொடக்கத்தில் அமைந்த மங்கலமொழி; சுபமஸ்து - மங்களம் உண்டாக; உ - உபயம்; நன்மை. சகாத்த மாயிரத்து முன்னூற்றறுபத்தெட்டதன் மேல்: சக ஆண்டு 1368 க்கு மேலாக; இது கி. பி. (1368+1+78) 1447 ஆம் ஆண்டுக்குச் சமமாகும். சகம் என்பது, சாலிவாகன சகாப்தம் என்றும் சொல்லப் படும். அது கி. பி. 78 ஆம் ஆண்டில் தொடங்குவது. வைகாசித் திங்கள் - வைகாசி மாதம்; பூர்வபக்கம் - வளர்பிறை; தெசமி - பத்தாம் திதி; வெள்ளி வாரம் - வெள்ளிக்கிழமை; உத்திர நாள் - உத்திர நட்சத்திரத்தன்று; வாகை - வெற்றி; பராக்கிறம மகீபன் - பராக்கிரம பாண்டியன். காசி நகர் - தென்காசி என்னும் ஊர்: கோயில்காணுதல் -கோயில் கட்டுதல்; கர்ஷணை - தொடக்கத்திற்கு அடையாளமாக ஒரு தூணை நடுதலாகிய நிகழ்ச்சி; இதனால் அரிகேசரி பராக்கிரம பாண்டியன் தென்காசியில் கோயில் கட்டுவதற்குச் சகம் 1369 (கி. பி. 1447) ஆம் ஆண்டு வைகாசித் திங்கள் 10 ஆம் நாள் பூர்வபட்சம்தசமி திதி வெள்ளிக்கிழமை உத்தர நட்சத்திரத்தில் தொடக்க விழா நிகழ்த்தினன் என்று தெரிகிறது.

2. அடைவுதிகழ் - முறையாக வரும்; சகாத்தம் - சக ஆண்டு; மிதுனஞாயிறு-ஆனிமாதம்: தியதி - நாள் ; சனிவாரம் - சனிக்கிழமை ;

(உ)டையவரைத் தென்காசிச் சிவலயத்தி
னுள்ளமைத்துத் தெள்ளமுத மூட்டி(11)னனே உ. 2
(12) பன்னு கலியுக நாலாயிரத் தைஞ் நூற்றைம்
பத்தெட்டின் மேலெவரும் பணிந்து போற்றச்
செந்நெல்வயற் றென்காசி நகரில் நற்காத்
திகைத் திங்கட் டியதியைந்திற் செம்பொன் வார
(14) மன்னிய மார்கழி நாளில் மதுரைவேந்தன்
வடிவெழு தொண்ணாத பராக்கிரம மகீபன்
சொன்னவரை போல்(15) திருக்கோபுரமும் காணத்
துடியிடை யாயுபான முதல் துடங்கி னனே
ஏராருஞ் சகா(16)த்த மாயிரத்து முன்னூற்
றெழுபத் தொன்பதின்மேல் காத்திகை மாதத்திற்
சீராருந்(17)தியதியைந்தில் குருவா ரத்திற் 3

மீனம்-நாள்; நட்சத்திரம்; (உ)டையவர் - இறைவன்; இங்குத் தென்காசி விசுவநாதர் திருவுருவத்தைக் குறிக்கும்; அலயத்தினுள்ளமைத்தல் - எழுந்தருளச் செய்தல்; தெள்ளமுது-நிவேதன உணவு; பராக்கிரமபாண்டியன் சகம் 1370 (கி. பி. 1448) ஆம் ஆண்டு ஆனித்திங்கள் 17 ஆம் நாள் சனிக்கிழமை காசி விசுவநாதன் திருவுருவத்தைக் கோயிலில் எழுந்தருளச் செய்து, பூசை முதலியன நடத்தினன் என்பது. இப்பாடலில் திதி நாள் முதலியன பற்றிய வரிகள் சிதைந்துள்ளன. இதனால் இக்கோவில் கி. பி. 1447 வைகாசியில் கட்டத்தொடங்கி 1448 ஆனியில் கட்டி முடிந்ததென்பது பொருந்தாது; அந்நாளில் கோயில் கருப்ப கிருகத்தைக் கட்டுதற்குரிய நிகழ்ச்சி நடந்ததென்னலாம். ஏனெனில் தென்காசிக்கோயில் கட்டுதற்குப் பதினேழு ஆண்டுகள் சென்றன என்று இக்கால வரலாற்றாசிரியர் கூறுகின்றனர்.

3. கலியுகம் - கலி ஆண்டு: இது சக ஆண்டிலும் 3179 ஆண்டுகள் மிக்கும், கி. பி. ஆண்டினைவிட 3101 ஆண்டுகள் மிக்கும் எண்ணப்பட்டு வந்தது. எனவே, கலியுகம் 4558 மேல் என்பது சகம் 1379 எனவும், கி. பி. 1457 எனவும் கொள்ளப்படும். காத்திகைத் திங்கள் - கார்த்திகை மாதம்; தியதி ஐந்து - ஐந்தாம் நாள்: செம்பொன் வாரம் - வியாழக்கிழமை; மார்கழி நாள் - மிருக சீரிட நட்சத்திரம்; மதுரை வேந்தன் - மதுரையை யாண்ட மன்னனான பராக்கிரம பாண்டியன்; சொன்னவரைபோல் - சொன்ன வரை போல, மேரு மலையைப்போல; காண - கட்ட; துடியிடையாய்: இது மகடூஉ முன்னிலை; உபானம்-அடியிடம்; அஸ்திவாரக்கல், எனவே பராக்கிரம பாண்டியன் தென்காசிக் கோயில் கோபுரத்தைக் கி.பி. 1457 ஆம் ஆண்டு கட்டத் தொடங்கினன் என்பது.

சிங்க முகுர்த்தத்தில் மிருகசீ ரிஷந்(18)தன்னி
.... .... .... .... .... .... ... ...
லரனருளால் வழுதி பராக்கிரம மகீபன்
கூரா(19)பானமுதல் .... .... .... ....
.... ... ... ... .... .... .... கோட்டி னனே உ. 4

(20) சேலே றியவயற் றென்காசி யாலயந் தெய்வசெய
லாலே சமைந்த திங்கென்(21)செயலல்ல வதனையின்ன
மேலே விரிவுசெய் தேபுரப் பாரடி வீழ்ந்தவர்(22)தம்
பாலே வல்செய்து பணிவன் பராக்கிரம பாண்டியனே உ. 5

மனத்தால்(23)வகுக்கவு மெட்டாத கோயில் வகுக்கமுன்னின்
றனைத்தான் பணிகொண்ட(24)நாதன்றென் காசியை
யென்று மண்மேல்
நினைத்தா தரஞ்செய் துதங்கா வல்(25)பூண்ட நிருபர்பதந்
தனைத்தாழ்ந் திறைஞ்சித் தலைமீதி யானுந் தரித்தனனேஉ 6

(26)பூந்தண் பொழில்புடை சூழுந்தென் காசியைப் பூதலத்திற்
றாந்தங் கிளைவுட(27)னேபுரப் பார்கள்செந் தாமரையாள்

---

4. இப்பாடல் முந்திய பாடலில் கலியுக ஆண்டாகக் கூறியவற்றைச் சக ஆண்டு முறையில் கூறுகின்றது. சகாத்தம் 1379 ன் மேல் என்பது கலியுக ஆண்டு 4558 க்குச் சரி. காத்திகை மாதம் - கார்த்திகைத் திங்கள்; குருவாரம் - வியாழக்கிழமை; இதனை முந்திய பாடலில் 'செம்பொன் வாரம்' என்றார். சிங்க முகூர்த்தம் - சிங்கராசி; முந்திய பாடலில் இராசி (ஓரை) கூறப்படவில்லை; மிருக சீரிஷம் - மிருக சீரிடநாள்: இது முந்திய பாடலில் 'மார்கழி நாள்' என்று கூறப்பட்டிருத்தல் காண்க. அரனருளால்-சிவபெருமான் அருளால்; வழுதி - பாண்டியன்; மகீபன் - மன்னன்; கூராபானம் - ஆழமான அடிப்படைக் கல், கோட்டினன் - கட்டத்தொடங்கினன்.

5. சேலேறிய வயல் - மீன்கள் தவழும் வயல்; சேல்-கெண்டை மீன்; சமைந்தது - கட்டப்பட்டது; விரிவுசெய்து-விரிவாகக் கட்டி; புரப்பார் - பாதுகாப்பார்; ஏவல்செய்து - பணிசெய்து.

6. மனத்தால் வகுக்கவும் - மனத்தால் நினைக்கவும்; வகுக்க - கட்ட; பணிகொண்ட - ஏவல்கொண்ட; நாதன் - தென்காசி விசுவநாதன்; ஆதரம் செய்து - பாதுகாத்து; நிருபர்-மன்னர்; தலைமீதியானும் தரித்தனனே - தலையால் வணங்கினேன்.

7. பொழில் - சோலை; புடை - பக்கம்; பூதலம் - உலகம்; புரப்பார் - காப்பார்; செந்தாமரையாள் காந்தன் - திருமகளுக்குக் கணவன், திருமால். திருமால், காக்கும் கடவுளாதலின், அவர் பராக்கிரம பாண்டிய

காந்தன் பராக்கிறமக் கைய்த(28)வன் மான கவசன்கொற்கை
வேந்தன் பணிபவ ராகியெந் நாளும் விளங்குவரே உ. 7

காண்டகு சீர்புனை தென்காசிக் கோபுரக் கற்பணியா
றுண்டில் முடி(30)த்துக் கயிலைசென் றுனகி லேசர்பதம்
பூண்டுறை சிந்தை யரிகே சரிவிந்தை(31)ப் போர்கடந்த
பாண்டியன் பொன்னின் பெருமாள் பராக்கிறம பாண்டியனே உ. 8

(32) ஆராயினு மிந்தத் தென்காசி மேவும்பொன் னாலயத்து
வாரா(33) தோர்குற்றம் வந்தாலப் போதங்கு வந்ததனை
நேராக வே(34)யொழித் துப்புரப் பார்களை நீதியுடன்
பாரா ரறியப் பணிந்தேன்(35)ப ராக்கிறம பாண்டியனே.உ 9

அரிகே சரிமன் பராக்கி றமமா றனருளால்
(36)வரிசேர் பொழிலணி தென்காசிக் கோயில்வ குத்துவலம்
புரிசேர் கடற்புவி (37) போற்றவைத் தேனன்புபூண்டி தனைத்
திரிசேர் விளக்கெனக் காப்பார்பொற் (38)பாதமென் சென்னி
யதே உ. 10

னுக்கு உவமையாகக் கூறப்பட்டார்: திருமகள் என்பது இங்கு நாட்டிற்கு உவமை. இப்பாடலில் பராக்கிரம பாண்டியன், செந்தாமரையாள் காந்தன் எனவும், பராக்கிறம கைய்தவன் எனவும், மான கவசன் எனவும், கொற்கை வேந்தன் எனவும் குறிக்கப்பட்டிருத்தல் குறிப்பிடத்தக்கது.

**8.** சீர்புனை - சிறப்புக்கள் நிறைந்த; கற்பணி - கல்லால் கட்டப்பட்ட கோபுரம்; ஆறு ஆண்டில் முடித்து கயிலை சென்றுன் - கற்கோபுரம் கி. பி. 1458 இல் கட்டத்தொடங்கி ஆறு ஆண்டுகளுக்குப் பின் இறந்தான். எனவே அவன் கி. பி. 1463 ஆம் ஆண்டு இறந்தான் என்பது போதரும். இப்பாடலிலும் அவன் 'அகிலேசர் பதம்பூண்டு உறை சிந்தை அரிகேசரி' எனவும், 'விந்தைப்போர் கடந்த பாண்டியன்' எனவும், 'பொன்னின் பெருமாள்' எனவும் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளான். அகிலேசர் - சிவபெருமான்; விந்தைப்போர் - விந்தனூரில் நடந்த போர்; பொன்னின் பெருமாள் - திருமால்.

**9.** ஆராயினும் - எவராலும்; மேவும் - பொருந்திய: பொன்னாலயம் - அழகிய கோயில்; பாரார் - உலகத்தார்; இக்கோயிலுக்கு எத்தகையோரால் கேடு வரினும் அதைத் தீர்த்து வைப்பவர்களை யான் பணிந்தேன் என்பது.

**10.** அரிகேசரிமன் - அரிகேசரி மன்னனான; மாறன் - பாண்டியன்; வரிசேர்பொழில் - வண்டுகள் சூழ்ந்த சோலை; வகுத்து - கட்டி; வலம்புரிசேர் கடல் - வலமாகச் சூழ்ந்துள்ள கடல்; கடல்புவி - கடலால் சூழப்

சாத்திரம் பார்த்திங்கி யான்கண்ட பூசை(39)கள் தாம்நடாத்தி
யேத்தியன் பால்விசு வநாதன்பொற் கோயிலெ(40)ன் றும்
புரக்கப்
பார்த்திபன் கொற்கை பராக்கிறம மாறன் பரிவு(41)டனங்
கோத்திரந் தன்னிலுள் ளார்க்கு படைக்கலங் கூறினனே உ. 11
(42)மென்காசை மாமல ரன்னமெய் யோற்கும் விரிஞ்சனுக்கு(43)ம்
வன்காசு தீர்த்திடும் விச்சுவ நாதன் மகிழ்ந்திருக்கப்
(44)பொன்காசை மெய்யென்று தோட்ட கைக்குமிப் பூதல(45)த்து
தென்காசி கண்ட பெருமான் பராக்கிறம தென்னவனே உ. 12
(46)ஏரார் சகாத்தமுந் நூற்றுட னுயிரத் தெண்பத்தஞ்சிற்
சீராரு(47)மார்கழி சித்திரை நாளிற் சிறந்துகுற்றம்
வாராத பூரணையி னிற்பராக் கிறம மாறனெ .......
.... .... ...(48)..........ரா .... ... ....ரகயிலா யந்தான்
.... ... .... ... .... ... .... ... ... ... ...கண்டனனே உ. 13

---

பெற்ற உலகத்தில் உள்ள மக்கள் கூட்டம். திரிசேர் விளக்கு - எரியும் விளக்கு; சென்னி - தலை; இங்குத் தலையால் வணங்குதலைக் குறித்தது.

**11. சாத்திரம் பார்த்து** - சாத்திர முறைப்படி; கண்ட - செய்து வந்த; விசுவநாதன் - தென்காசிக்கோயில் இறைவன் பெயர்; புரக்க - காத்து வர; பார்த்திபன் பராக்கிறம மாறன் - அரிகேசரி பராக்கிரம பாண்டியன்; பரிவு - தயவு, அன்பு; கோத்திரம் தன்னிலுள்ளார் தன் குலத்தோர்; படைக்கலம்-இஃது அடைக்கலம் என்றிருத்தல் வேண்டும்; கையடையாகக் கொடுத்தல். இதனால் பராக்கிரம பாண்டியன் தென்காசி விசுவநாதன் கோயிலைத் தனக்குப் பின் புரந்து வருதற்கு அதனைத் தன் குலத்தவர்க்குக் கையடையாகத் தந்தான் என்பது.

**12. காசைமாமலர்** - காசை என்னும் மரத்தின் நீலநிற மலர்; நீலமலர் மெய்யோன் என்றது, திருமாலைக் குறிக்கும்; விரிஞ்சன் என்றது, இந்திரனைக் குறிக்கும். இவர்கள் இருவர்க்கும் காசிவிசுவநாதன் குற்றமகற்றி அருள்புரிந்தார் என்பது புராண வரலாறு. வன்காசு-தீக்குற்றம்; பொன் காசு - பொற்காசு, பணம்; மெய்யென்று - நிலையான பொருள் என்று எண்ணி; தோட்ட கைக்குமிப் பூதலத்து : இது 'தேடிப் புதைக்குமிப் பூதலத்து' என்றிருத்தல் வேண்டுமென்பர். தென்காசி கண்ட பெருமான் - தென்காசியையும் அதன் கோயிலையும் கட்டிய மன்னன். செல்வத்தை நிலையான பொருள் என்று கருதிப் புதைத்து வைக்கும் இந்த உலகத்தில்; பராக்கிரம பாண்டியன் தன் செல்வத்தையெல்லாம் தந்து தென்காசிக் கோயிலைக் கட்டினான் என்பது.

**13. ஏர்** - அழகு; ஆர் - நிறைதல்; சகாத்தம் முன்னூற்றுடனு யிரத் தெண்பத்தஞ்சில்-சக ஆண்டு 1385 இல்; மார்கழி-மார்கழித் திங்

(49) கோதற்ற பத்தி யறுபத்து மூவர்தங் கூட்டத்திலோ
தீதற்ற வெள்ளிச் சிலம்(50)பகத் தோசெம்பொனம்பலத்தோ
வேதத்தி லோசிவ லோகத்தி லோ(51) விசுவ நாதனிரு
பாதத்தி லோசென்று புக்கான் பராக்கிரம பாண்டியனே உ. 14

[நேரிசை வெண்பா]

(52)ஓங்கு நிலையொன்ப துற்றதிருக் கோபுரமும்
(53)பாங்கு பதினொன்று பயில்தூணுந்—தேங்குபு(54)கழ்
மன்னர் பெருமான் வழுதிகண்ட தென்(55)காசி
தன்னிலன் றியுண்டோ தலத்து உ. 15

[கட்டளைக் கலித்துறை]

(56) அணிகொண்ட விந்த வணங்குமோன் றேயடி யேற்குனக்கு
மணிகொண்ட வாசல் பணியும்ஒன் றேபகை மன்னரையும்
பிணிகொண்ட காரையு முன்னீரை யும்பெரும் பூதத்தையும்
பணிகொண்ட செண்பகத் தென்னு பராக்கிரம பாண்டியனே உ. 16

---

கள் ; சித்திரை நாள் - சித்திரை நட்சத்திரம் ; கயிலாயந்தான்......... கண்டனனே - சிவனடி யடைந்தான், இறந்தான் ; கயிலாயம் - சிவபதம் ; இதனால் பராக்கிரம பாண்டியன் சகம் 1385 (கி. பி. 1463) ஆம் ஆண்டு மார்கழித் திங்கள் சித்திரை நாள் பௌர்ணமி தினத்தன்று சிவபத மடைந்தான் என்று தெரிகிறது.

14. கோதற்ற - குற்றமில்லாத, தூய மனத்தினையுடைய ; பத்தி - பத்தியுடைய ; அறுபத்து மூவர் கூட்டம் - சிவனடியார் அறுபத்து மூவர் ; வெள்ளிச் சிலம்பகம் - வெள்ளி மலையகம், கயிலாயம் ; செம்பொனம் பலம்-பொன்னம்பலம், இறைவன் நடமாடுமிடம் ; புக்கான்-அடைந்தான். இச்செய்யுள் கையறுநிலை.

15. ஓங்கு நிலை - மேலடுக்கு ; பாங்கு - பக்கத்தில் ; பதினொன்று பயில் தூணும் - பதினொரு தூண்கள் நடப்பட்ட மண்டபமும் , தேங்கு புகழ் - நிறைந்த புகழ் ; மன்னர்பெருமான் வழுதி - பராக்கிரம பாண்டியன் ; கண்ட-கட்டிய; தவத்து - தலத்து-உலகத்து ; இது தென்காசியின் சிறப்பைக் கூறுகின்றது.

16. அணிகொண்ட - அழகிய ; விந்த வணங்கு - வெற்றித் தெய்வமாகிய கொற்றவை, துர்க்கை ; அடியேன் என்றது, இப்பாடலைப்பாடிய புலவரைச் சுட்டும் ; வாசல் பணி - கோயில் வாயிலில் செய்யும் சேவை ; இதனால் தென்காசியில் பராக்கிரம பாண்டியன் கட்டிய கோயில் அவனுக்கு மட்டுமன்றி, எல்லார்க்கும் பொதுவுடைமை என்பது போதரும். முந்திய பாடல்களில், அக்கோயிலைப் புரக்கும் பணியைத் தன் குலத்த

வர்க்கு மட்டுமின்றி எல்லாருடைய கடமையுமாகு மென்று குறித்துள்ளமையும் இதனை வலியுறுத்தும். பின் இரண்டடிகளில் பராக்கிரமபாண்டியன் பகை மன்னரை வென்றது, மேகம், கடல், பஞ்சபூத முதலியவைகளைப் பணிகொண்டது ஆகியவற்றைக் கூறி இதனால், அவன் செயலோடு அவன் முன்னோருடைய செயல்களையும் அவன் மேலேற்றிக் கூறியிருத்தல் குறிப்பிடத் தக்கது.

**பிணிகொள்ளல்**-வெல்லுதல்; **கார்**-மேகம்; **முன்னீர்** (முந்நீர்) - கடல்; **பெரும் பூதம்** - நிலம், நீர், கனல், வளி, வெளி என்னும் பஞ்சபூதங்கள். **பணிகொள்ளல்**-அடிமை கொள்ளல்; **செண்பகத் தென்னு**-செண்பகன் என்னும் பெயருடைய பாண்டியனே ; பாண்டியமன்னர் மேகம் முதலியவற்றைப் பணிகொண்ட வரலாறுகளைத் திருவிளையாடற் புராணத்திலும் புறநானூற்றிலும் காண்க.

## பயிற்சி வினாக்கள்

1. அரிகேசரி பராக்கிரமபாண்டியன் இரண்டாவது சாசனம் எங்குக் காணப்படுகிறது ? அதன் காலம் எது ? அதற்கும் பிற சாசனங்களுக்குமுள்ள வேறுபாடு யாது ?

2. தென்காசி விசுவநாத சுவாமிகோயில் கோபுரத்தில் காணப்படும் சாசனம் யாருடையது ? அதில் கூறப்படும் செய்திகள் யாவை ?

3. அரிகேசரி பராக்கிரமபாண்டியன் கடவுள் பத்தியையும் தமிழார்வத்தையும் சான்றுகள் காட்டி விளக்குக.

4. பராக்கிரமபாண்டியன் தென்காசியில் கோயில் கட்டத் தொடங்கிய நாள், கட்டி முடித்த நாள், இவை எங்ஙனம் குறிக்கப் பெற்றுள்ளன ? இக்கால முறையில் அவை எவ்வாறு குறிக்கப்படும் ?

5. சகாத்தம், கலியுகம் ஆண்டுகளை விளக்கி, அவை இக்காலத்து ஆண்டிற்குப் பொருந்துமாற்றையும் விளக்குக.

6. சகாத்தம், பூருவபக்கம், தெசமி, வாரம், மீனம், கர்ஷணை, மிதுன ஞாயிறு, தெள்ளமுதம், கலியுகம், செம்பொன் வாரம், மார்கழி நாள், சொன்னவரை, உபானம், குருவாரம், முகூர்த்தம், வழுதி, ஆதரம், நிருபர், சித்திரைநாள், பூரணை, விந்தவணங்கு, கார், முன்னீர், பூதம்—பொருள் தருக.

7. சொன்னவரைபோல், திரிசேர் விளக்கென, மென்காசை மாமலரன்ன—எவற்றிற்கு உவமைகளாகும் ? விளக்கி எழுதுக.

8. பராக்கிரமபாண்டியன் சிறப்பை விளக்கும் தொடர்கள் ஐந்தைக் குறிப்பிட்டு விளக்குக.

9. பராக்கிரமபாண்டியன் தென்காசியில் செய்த திருப்பணிகள் யாவை ? அவைகளைப் பாதுகாத்தற்கு அவன் வேண்டு மாற்றைக் குறிப்பிடுக.

10. தென்காசிக் கோயில் கோபுரம் கட்டத் தொடங்கிய நாள் எவ்வெவ்வாறு கூறப்பெற்றுள்ளது? அதனை இக்கால முறையில் குறிப்பிடுக.

11. அரிகேசரி பராக்கிரமபாண்டியன் எப்பொழுது இறந்தான்? அவனுக்குக் கையறுநிலையாகப் பாடிய பாடலின் பொருளைக் குறிப்பிடுக.

12. இச்சாசனத்தில் தென்காசியின் சிறப்பு, பராக்கிரமபாண்டியன் பெருமை முதலியவை எங்ஙனம் கூறப்பெற்றுள்ளன?

# 29. குலசேகரதேவ பராக்கிரம பாண்டியன் சாசனம்*

## முன்னுரை

குலசேகரதேவ பராக்கிரம பாண்டியன் சாசனம் என்பது, குலசேகர தேவர் என்னும் பராக்கிரமபாண்டியன் செய்த தானம் பற்றிய சாசனமாகும். இச்சாசனம் இவனது ஆட்சியின் மூன்றாவது ஆண்டில் ஏற்பட்டது. இது தென்காசித் தாலூகாவை யடுத்த செங்கோட்டை என்னும் தலத்திலுள்ள சிவன்கோயில் நடுவிடத்துக் கருப்பக் கிருகத்தின் தெற்குச் சுவரில் காணப்படுகிறது. தமிழ்மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது: இருபத்து நான்கு வரிகளை யுடையது.

இச்சாசனத்தின் துவக்கத்தில் குலசேகர தேவ பராக்கிரம பாண்டியன் வரலாறும், அவனுக்கு வழங்கிய சிறப்புப் பெயர்களும் குறிக்கப்பட்டுள்ளன. பின்னர், அவன் சில நிலங்களைச் செங்கோட்டைச் சிவன் கோயிலுக்குத் தானமாகக் கொடுத்த செய்தி கூறப்படுகிறது. அது சக ஆண்டு 1467 க்குச் சமமான விசுவாவசு ஆண்டு ஐப்பசிமாதம் அமரபட்சத்து ஏகாதசி கூடிய வெள்ளிக்கிழமையன்று நடை பெற்றதென்று குறித்துள்ளமை குறிப்பிடத் தக்கது. இதனால் இவன் ஆட்சியின் தொடக்கம் சக ஆண்டு 1464: அஃதாவது, கி. பி. 1542 ஆம் ஆண்டு என்று அறிய முடிகிறது.

இச்சாசனம் குலசேகரதேவபராக்கிரம பாண்டியன் ஆட்சியின் மூன்றாவது ஆண்டான சக ஆண்டு 1467 ஆம் ஆண்டு ஏற்பட்டது; எனவே, இதன் காலம் கி. பி. 1545 ஆம் ஆண்டு என்னலாம்.

---

* T. A. S., Vol No VI- pp. 103—104.

† இவன் அபிராமபராக்கிரம பாண்டியனுடைய முதற்புதல்வன். இவனுடைய இயற்பெயர், 'குலசேகரபாண்டியன்' என்பது. 'இவன் சடையவர்மன் குலசேகரதேவ பராக்கிரமபாண்டியன்' என்று அழைக்கப்பட்டான். சடிலவர்மன், திரிபுவனச் சக்கரவர்த்தி, கோநேரின்மை கொண்டான் என்னும் சிறப்புப்பெயர்களும் இவனுக்கு உண்டு. இவன் சிவபக்தி யுள்ளவன். இவனுடைய கல்வெட்டுக்கள் கி. பி. 1543 முதல் 1552 ஆம் ஆண்டுவரை காணப்படுகின்றன.

இவன் வரதுங்கராம பாண்டியனுக்குத் தந்தையும் அதி வீரராம பாண்டியனுக்குச் சிறிய தாதையுமாவான் என்று சொல்லப்படுகிறது. இவனைப்பற்றிய பிற செய்திகள் ஒன்றும் தெரியவில்லை.

சாசனம்

1. சுபமஸ்து ஸ்வஸ்திஸ்ரீ புவநேக வீர
2. சந்த்ரகுல ப்ரதீப கோ ஜடி லவர்ம்ம த்ரி
3. புவநச் சக்ரவர்த்தி கோநேரின்மை கொண்டான்
4. பெருமாள் அபிராம பராக்கிரம பாண்டிய தேவர் நந்தந ரான
5. ஸ்ரீ பெருமான் குலசேகர தேவரான பராக்ரம பாண்ட்ய
6. தேவற்கு யாண்டு சகாப்தம் ௲சளசுயிஎல் மூன்ருவது விஸ்வாவ
7. ஸுவர்ஷம் அற்பசி மாஸம் முப்பதாந் தியதியும அபரப

**1—2. புவநேக வீர** - புவந ஏக வீர, உலகத்துக்கு ஒரே வீரனுய்; சந்த்ரகுல ப்ரதீப - சந்திர குலத்தில் தோன்றிய விளக்கான; கோ ஜடில வர்ம்ம-கோமகனுன சடையவர்மன்; ஜடிலம் - சடை; சோழ அரசர் கள் பரகேசரி, இராசகேசரி என்னும் பட்டப் பெயர்களைத் தமக்குள் மாறி மாறி வழங்கியது போல, பாண்டிய மன்னர்கள் சடையவர்மன், மாற வர்மன் என்னும் பட்டப் பெயர்களைத் தமக்குள் மாறி மாறி வைத்து வழங்கி வந்தனர்.

**3. கோநேரின்மை கொண்டான்:** இது சோழ மன்னரும் பாண்டிய மன்னரும் தம் பெயர்களுக்குமுன் சிறப்பாகத் தரித்துக் கொள்ளும் ஒரு பட்டப்பெயர். 'தனக்கு ஒப்பான அரசனை இல்லாதவன்' என்பது இதன் பொருள்.

**4—5. பெருமாள் அபிராம பராக்கிரமபாண்டிய தேவர்:** இது குலசே கரபாண்டியனுடைய தந்தையின் பெயர். பெருமாள் என்பது 'உடையார்' என்பது போன்று அரசர் பெயர்களுக்குமுன் சிறப்பாக வழங்கும் சொல். நந்தநர் - மகனுர்; பராக்கிரமபாண்டியனுடைய மற்றொரு பெயர் குலசே கர தேவர். இதனுல் இவன் அரிகேசரி பராக்கிரமதேவனின் வேறு என்பது போதரும்.

**6. யாண்டு... ... ... ...மூன்ருவது:** குலசேகர பாண்டியனது ஆட்சியின் மூன்ருவது ஆண்டு; அது சகம் 1467 ஆம் ஆண்டு என்பது. இனி, சாலிவாகன சகாப்தம் 1467 இல் மூன்ருவது தடவை யாகச் செய்த தருமம் என்பாருமுளர். சகாப்தம்—சாலிவாகன சகாப் தம்: அது கி. பி. 78 முதல் தொடங்கும் ஓர் ஆண்டுமானம்.

**7. விஸ்வாவஸுவர்ஷம்** - விசுவாவசு ஆண்டு; இஃது அறுபது ஆண்டுகளில் முப்பத்தொன்பதாவது ஆண்டு; அபரபக்ஷம் - கிருஷ்ண பட்சம், தேய்பிறைக் காலம்.

8. க்ஷத்து ஏகாதசியும் சுக்ரவாரமும் வைத்ருதியோகமு
9. ம் ஸிம்ஹகரணமும் பெற்ற உத்திரத்து நாள், தென்னரி
10. நாட்டு செங்கோட்டையில் உடையார் குலசே—
11. கரமுடைய நயினாற்கு தேவதானம் பாட்டமாக
12. குடுத்த நிலம் அரைமாவுக்கு நாம் சேர்த்துக் கொடுத்த
13. நிலமாவது, மேற்படி நாட்டு மேற்படியூரில்
14. மேற்படியார் அஞ்சாலியில் மேல்வாரம் தவிர்த்து
15. க் குடுத்த குளப்புரவு பதினொன்றுங் கண்ணாறு தடி
16. ஆறு நிலம் அரைக்காணி முந்திரிகை பன்னிரண்—
17. டாங் கண்ணாறு தடி எட்டு நிலம் அரைக்காணி மு—
18. ந்திரிகை பதின்மூன்றுங் கண்ணாறு தடி அஞ்சு

---

**8—9.** **ஏகாதசி** - *முதலாவது திதி; திதி என்பது, திதி, வாரம், நாள், யோகம், கரண மென்னும் பஞ்சாங்கங்களுள் ஒன்று.* **சுக்கிர வாரம்** - வெள்ளிக்கிழமை; **வைத்ருதி யோகம்** - வைதிரு யோகம், இருபத்தேழு யோகங்களில் ஒன்று. ஸிம்ம கரணம்-பதினொரு கரணங்களுள் ஒன்று. கரணம் - லக்கனம். உத்திரத்து நாள் - இருபத்தேழு நாட்களுள் பன்னிரண்டாவது நாள், உத்தர நாள் என்பது.

இச் சாசனத்தில், சாசனம் தோன்றிய காலத்தைக் குறிக்குமிடத்து முதலில் அரசனது ஆட்சியின் ஆண்டும், பின் அதற்குச் சரியான சக வருடமும், அதன்பின் தமிழ் ஆண்டுடன் மாதம், பட்சம், திதி, வாரம், நாள், யோகம், கரண முதலியனவும் சொல்லியிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

**தென்னரி நாடு:** இது பாண்டிய நாட்டுப் பிரிவுகளில் ஒன்று; 'தென்வாரி நாடு' என்று இருத்தல் வேண்டும் போலும்.

**10—11.** **உடையார் குலசேகரமுடைய நயினார்:** இது செங்கோட்டைச் சிவன்கோயில் சுவாமியின் பெயர். தேவதானம் பாட்டமாக குடுத்த- கோயில் பாட்டமாகக் கொடுத்த; தேவதானம் என்பது, இங்குக் கோயிலையும் அதன் அதிகாரிகளையும் குறிக்கும்: பாட்டம் - குத்தகை; ஒரு வகைவரி எனினுமாம்.

**12—18.** **அரைமாவுக்கு** - *அரைமா நிலத்தோடு;* மா - 100 குழி நிலம். நாம் : இங்கு குலசேகரப் பாண்டியனைக் குறிக்கும். மேற்படி...... ......மேற்பாடியார்-மேலே - கூறிய தென்னரி நாட்டுச் செங்கோட்டை உடையார் குலசேகர நயினார்; அஞ்சாலி - வரி வகை; நிலவருவாயில் ஐந்தில் நான்கு பங்கைக் குடிகள் தருவது எனினுமாம். 'அஞ்சாலி' என்பதற்கு 'நெல்' என்று பொருள் கொள்வாருமுளர்.

**மேல் வாரம்** - விளைச்சலிலிருந்து சொந்தக்காரருக்குக் கொடுத்தற்குரிய தானியம். தவிர்த்து - நீக்கி, குளப்புரவு - குளத்தின் நீர் பாய்ந்து

19. நிலம் அரைக்காணி இதுவும் ஆக நிலம் அரை மாவும்
20. நாளது முதலுக்கு நாங்கொள்ளும் முறைபாடு எப்பேர்ப்
21. பட்டதும் நம்வரியிலார் கணக்கிலும் தவிர்த்து ஆச
22. ந்த்ர தாரவற் செம்பிலும் சிலையிலும் வெட்டி கை—
23. ய்யாண்டு கொள்ளவும் துல்யம் பாற்க இவை
24. ... ... ... .... .... ....

---

சாகுபடியாகத் தகுந்த நிலம்; கண்ணாறு - பசான வாய்க்கால்; நன்செய் பிரிவு எனினுமாம்.

• **பதினொன்றாங் கண்ணாறு தடி ஆறு** - பதினோராவது கண்ணாற்று ஆறாவது வயல் என்றபடி. தடி - வயல்; அரைக் காணி—$\frac{1}{160}$; முந்திரிகை - $\frac{3}{320}$.

**19. ஆக நிலம் அரைமாவும்:** பதினொன்றாம் கண்ணாறு ஆறாவது வயல் நிலத்தில் $\frac{3}{320}$ மாவும், பன்னிரண்டாம் கண்ணாற்று எட்டாவது வயல் நிலத்தில் $\frac{3}{320}$ மாவும், பதின்மூன்றாம் கண்ணாறு ஐந்தாவது வயல் நிலத்தில் $\frac{1}{160}$ மாவும் ஆக அரை மா ($\frac{1}{40}$) நிலமும் என்றபடி.

**20—21. நாளது முதலுக்கு** - நாளது தேதி முதல்; அஃதாவது குலசேகரபாண்டிய தேவருக்கு ஆண்டு மூன்றாவது முதல் என்றபடி; நாங் கொள்ளும் முறைபாடு - நாம் வாங்கும் வரி; முறைபாடு - அரசிறை.

**22—24. ஆசந்த்ர தாரவம்** - சந்திரனும் நட்சத்திரங்களும் உள்ள அளவும்; தாரவம் - தாரகை, நட்சத்திரம். செம்பிலும் சிலையிலும் வெட்டி - செம்பிலும் கல்லிலும் வெட்டி; சிலை - கல். கையாண்டு-அனுபவித்து; துல்யம் - இவை சரி; கையொப்பம் எனினுமாம்.

## பயிற்சி வினாக்கள்

1. குலசேகரதேவ பராக்கிரம பாண்டியன் சாசனம் எங்குளது? அதில் காணப்படும் செய்திகள் யாவை?

2. குலசேகர தேவ பராக்கிரம பாண்டியன் சாசனத்தின் துவக்கத்தில் காணப்படும் மங்கல மொழிகளையும், அவற்றின் பொருளையும் எழுதுக.

3. குலசேகர தேவ பராக்கிரம பாண்டியன் மற்றொரு பெயர் யாது? அவனுடைய தந்தை பெயர், சிறப்பு முதலியன எங்ஙனம் கூறப்பெற்றுள்ளன?

4. குலசேகர தேவ பராக்கிரம பாண்டியன் சாசனம் ஏற்பட்ட காலம் எங்ஙனம் கூறப்பெற்றுள்ளது? அதிலிருந்து நாம் தெரிந்து கொள்வது யாது?

5. குலசேகர தேவன் யாருடைய மகன்? அவன் செய்த தானத்தையும் காலத்தையும் எழுதுக.

6. குலசேகரதேவ பராக்கிரம பாண்டியன் தானமாகக் கொடுத்த அரைமா நிலத்துக்குரிய வயல் அளவுகள் எங்ஙனம் குறிக்கப் பெற்றுள்ளன? சாசனத்தில் கண்டபடி எழுதுக.

7. பாண்டிய குலாசநி வளநாடு, தென்ஞரி நாடு, வெங்கால நாடு, வேணுடு-இவை இப்போது எப்பிரதேசங்களாகச் சொல்லத் தக்கன?

8. சேர நாட்டுத் தலங்களாகக் குறிப்பிடப் பட்டவை யாவை? அவை யார் யார் காலத்தில் கூறப்பட்டுள்ளன?

9. பொருள் தருக:—நந்தநர், சுக்ரவாரம், பாட்டம், அஞ்சாலி, மேல்வாரம், குளப்புரவு, கண்ணுறு, தடி, மா, காணி, முறைபாடு, வரியிலார், சிலே, தூல்யம், பொன்னேமி.

10. விளக்கம் தருக:—சுபமஸ்து, ஜடிலவர்ம்மன், சகாப்தம் ருசாசுடூள இல் மூன்ருவது, தேவதானம் பாட்டமாக, பதினென்ருங் கண்ணுறு தடி ஆறு நிலம் அரைக்காணி முந்திரிகை, ஆசந்த்ர தாரவம், கல்லிலும் சிலெயிலும் வெட்டி.

11. உடையார், பெருமாள்-இவை கல்வெட்டுக்களில் எந்தெந்தப் பொருளில் யார் யாரைச் சுட்டுகின்றன?

12. பாண்டிய அரசர்களுடைய ஆட்சியைப்பற்றிக் குறிப்பிடுக.

# 30. வீரபாண்டியன் சாசனம்*

## முன்னுரை

வீர பாண்டியன் சாசனம் என்பது, கோச்சடைய பன்ம ரான திரிபுவன சக்கரவர்த்திகள், ஸ்ரீ வீரபாண்டியதேவன் † காலத்தில், அவன் ஆட்சியின் நாற்பத்திரண்டாவது ஆண்டு ஏற் பட்ட சாசனமாகும். இது புதுக்கோட்டையைச் சேர்ந்த

* Pudukkottai State Inscriptions, No. 438; p. 308.

† இவன் மாறவர்மன் குலசேகரபாண்டியன் இரு புதல்வர்களில் ஒருவன். சடையவர்மன் சுந்தரபாண்டியன் என்பான், குலசேகரபாண் டியனுடைய மற்ெருரு மனைவிக்குப் பிறந்த மகன். வீரபாண்டியன் சுந்தர பாண்டியன் இருவர்களில் வீரபாண்டியன் வயதில் இளையவன்; எனினும் குலசேகர பாண்டியன் பாண்டிய நாட்டு ஆட்சியை வீரபாண்டியனுக்கே கொடுத்தான். அதனல், கி. பி. 1310இல் சுந்தரபாண்டியன் தன் தந்தை யான குலசேகர பாண்டியனைக் கொலை செய்து, பாண்டிய நாட்டைத் தன் வசப்படுத்திக் கொண்டான். வீரபாண்டியனுக்கும் சுந்தரபாண்டிய னுக்கும் பெரும் பகை மூண்டது; இருவரும் பாண்டிய நாட்டின் வெவ்வேறு பகுதியில் இருந்து ஆட்சி புரிந்து வந்தனர்.

இக் காலத்தில்தான் அல்லாவுடீன் கில்ஜியின் படைத் தலைவனுன மாலிக்காபூர் பாண்டிய நாட்டின்மீது படை எடுத்து வந்து, நாட்டைக் கொள்ளை யடித்து ஏராளமான பொருள்களைக் கவர்ந்து சென்றுன். இந்நிலையில் சேர மன்னனுன இரவிவர்மன் குலசேகரன் என்பான் பாண் டிய நாட்டின்மீது படை எடுத்துச் சென்று, அந்நாட்டின் சில பகுதி களைத் தன்னுட்சிக்குட்படுத்திக்கொண்டான். சிற்றரசர்களும் பாண்டிய மன்னர்களுக்குத் திறை செலுத்தாது தனியாட்சி புரியத் தலைப் பட்டனர். அவர்களில் தொண்டை மண்டலத்துப் படை வீட்டு இராச்சி யத்து சாம்புவராயர்களும், பாண்டிய நாட்டிலிருந்த வாணதிராயர்களும் குறிப்பிடத் தக்கவராவர்.

வீரபாண்டியன் ஆட்சிக் காலத்தின் பிற்பகுதியில் டில்லி மகமது துக்ளாக் என்பவனல் அனுப்பப்பட்ட ஜவாலுடீன் அசன்ஷா என்ற மகமதியர் தலைவன், வீரபாண்டியனை வென்று அவன் நாட்டைக் கைப் பற்றினன். அவன் சிலகாலம் மகமது துக்ளாக் பிரதிநிதியாக மதுரை யில் இருந்து ஆட்சி புரிந்தான். பின் டில்லி மன்னர் தொடர்பை நீக்கித் தனியாட்சி செய்தான். இவ்வாறு மகமதியராட்சி பாண்டிய நாட்டில் கி. பி. 1330 முதல் 1377 வரை நடைபெற்றது. இக்காலத்தில் பாண் டிய நாடு மகமதியரால் கொள்ளையடிக்கப்பட்டது; சமயக்கொள்கைகள் அடியோடு அழிக்கப்பட்டன.

திருமய்யம் தாலுகா நெய்வாசல் என்னும் ஊரிலுள்ள அகத்தீசுவரர் கோயில் நடுவிடத்துக் கருப்ப கிருகத்தின் வடபுறச்சுவரில் காணப்படுகிறது. தமிழ் மொழியில் கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டது; நான்கு பத்திகளாக அமைந்தது.

இச்சாசனத்தின் முற்பகுதியில், வீரபாண்டிய தேவன் 'கோச்சடையவர்மன்' எனவும் 'திரிபுவன சக்கரவர்த்திகள்'எனவும் குறிக்கப்பட்டுள்ளான். பின்னர், கேரளசிங்க வளநாட்டு அதளையூர் நாட்டுத் தேஹற்றுப்போக்கி லமைந்த சூரைக்குடி என்னும் ஊரிலுள்ள 'சூரைக்குடிப்' பொன்னன் என்னும் மறு பெயருடைய அழகிய பெருமாள் என்பான், கல்வாயில் நாட்டிலுள்ள நாட்டவரிடமிருந்து சில நிலங்களை விலைக்கு வாங்கி, வரி நீக்கி, அந்நாட்டைச் சேர்ந்த நெய்வாசல் என்னும் ஊரிலுள்ள திருவகத்தீசுவரமுடையார் கோயில் இறைவற்குத் தானமாகக் கொடுத்து, அதைக் குடி நீங்காக் காணியாக அந்த நிலத்தில் பயிர் செய்வதற்குத் தானே ஏற்று, அக் கோயில் இறைவற்கு வாரமாக, பசானம் $\frac{1}{4}$ பகுதியும், கோடை $\frac{1}{5}$ பகுதியும், கரும்பு, மஞ்சள், அடைவாழை முதலியன $\frac{1}{6}$ பகுதியும் கொடுத்து வந்ததுமன்றி, அக்கோயில் ஸ்ரீகாரியஞ் செய்பவர்களுக்கும், தேவ கன்மிகளுக்கும் தனித்தனி குறுணி நெல்லும் கொடுத்த செய்தி கூறப்படுகிறது.

வீரபாண்டியன் கி.பி. 1296 முதல் 1342 வரை ஆண்டான். இச்சாசனம் அவன் ஆட்சியின் நாற்பத்திரண்டாவது ஆண்டு ஏற்பட்டதெனவே, இதன் காலம் கி. பி. 1337 ஆம் ஆண்டு என்னலாம்.

---

கி. பி. 1364ல் பாண்டிய நாட்டு மக்களையும் சமயங்களையும் மகமதியராட்சியினின்றும் காப்பதற்கு விஜயநகர மன்னனுன குமார கம்பண்ணன் என்பான் ஒரு பெரும் படையுடன் தமிழ் நாட்டில் புகுந்து மகமதியராட்சியைக் கவிழ்த்து, அங்கங்கே வாணதிராயர்கள் போன்ற குறுநில மன்னர்களை நியமித்து, பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்தான். அதனால் பாண்டிய மன்னர் தங்கள் நாட்டை யிழந்து தவிக்கலாயினர். வாணதிராயர்கள் தங்களை 'மதுராபுரி மகாநாயகர்' எனவும், 'பாண்டிய குலாந்தகர்' எனவும் கூறிக் கொண்டனர்.

பாண்டிய மன்னர் இவ்வாறு மதுரையைக் கைவிட்டுத் தென்பாண்டி நாட்டை அடைந்து, பதினன்காம் நூற்றாண்டின் இறுதிக் கால முதல் பதினேழாம் நூற்றாண்டின் இறுதிக்காலம் வரை ஆட்சி புரிந்தனர். அவர்களில் ஒருவன் வீரபாண்டியன். இவன் கி. பி. 1296 முதல் 1342 வரை ஆட்சி புரிந்ததாகச் சொல்லப்படுகிறது. கோச்சடையவர்மன், திரிபுவன சக்கரவர்த்திகள் முதலியன இவனுக்கு வழங்கிய சிறப்புப் பெயர்களாகும்.

சாசனம்

1. ஸ்வஸ்திஸ்ரீ கொச்சடைய பன்மரான திரிபுவந சக்ர வத்திகள் ஸ்ரீ விரபாண்டிய தெவற்கு யாண்டு சய௨வது தநு நாயற்று அபரபக்ஷத்து துவாதஸியும் வெள்ளிக்கிழமையும் பெற்ற அனிஷத்துநாள் கெரளசிங்க வளநாட்டு அதளையூர் நாட்டுத்தெநாற்றுப் பொக்குசூரைக்குடி பொன்னன் அழகிய

---

குறிப்புரை

1 **கொச்சடைய பன்மரான திரிபுவந சக்ரவத்திகள் ஸ்ரீ விரபாண்டிய தேவர்:** கோச்சடைய பன்மர், திரிபுவந சக்கரவர்த்திகள் இரண்டும் வீரபாண்டிய தேவனுக்கு வழங்கிய சிறப்புப் பெயர்கள். இப்பெயர்கள் முன்னர்க் குலசேகர தேவனுக்கும் வழங்கியுள்ளமை காண்க. யாண்டு சய௨ வது-ஆட்சியின் 42 வது ஆண்டில்; வீரபாண்டியன் கி. பி. 1396 இல் பட்டமெய்தினன். எனவே அவன் ஆட்சியின் 42 வது ஆண்டு என்பது கி. பி. 1437 ஆம் ஆண்டாகும்.

**தநு ஞாயிறு** - தநுமாதம். மார்கழி மாதம் (Month Markali—January) : இங்கு தநுஞாயிறு என்பதற்கு, தநுராசியில் ஞாயிறு இருந்த காலத்தைக் குறிக்கும். அமரபணம்—தேய்பிறை காலம்; துவாதஸியும் வெள்ளிக்கிழமையும் பெற்ற அனிஷத்துநாள் - இரண்டாவது திதியும் வெள்ளிக்கிழமையும் கூடிய அனுட நாள்; அனிஷத்து நாள் - அனுட நாள், 19 வது நாள்; நாள் - நட்சத்திரம்.

**கெரளசிங்க வளநாட்டு அதளையூர் நாட்டுத் தெநாற்றுப் பொக்கு சூரைக்குடி:** சூரைக்குடி என்னும் ஊர் கேரளசிங்க வளநாட்டைச் சேர்ந்த அதளையூர் நாட்டில் பாயும் தேனாறு என்னும் ஆற்றுப் போக்கில் இருந்தது என்பது; எனவே, வீரபாண்டியன் காலத்தில் பாண்டிய மண்டலம், பலவளநாடுகளாகவும், வளநாடு பலநாடுகளாகவும், நாட்டின் பகுதிகளாகவும் பிரிக்கப்பட்டிருந்தன என்று தெரிகிறது. கேரளசிங்க வளநாடு இப்பொழுது இராமநாதபுரத்தி லிருக்கிறது.

**வளநாடு** என்பது, சில நாடுகளையும் கூற்றங்களையும் தன்னகத்தே கொண்டு விளங்கிய பெரு நிலப்பரப்பு; பாண்டிய மண்டலத்தில் இத் தகைய வளநாடுகள் கி. பி. 9 ஆம் நூற்றாண்டு முதலாக இருந்ததென்று தெரிகிறது. அவை மதுரோதய வளநாடு, வரகுணவளநாடு, கேரள சிங்க வளநாடு, திருவழுதி வளநாடு, சீவல்லப வளநாடு, பராந்தக வளநாடு, அமிதகுண வளநாடு முதலியனவாம். இவை அனைத்தும் பாண்டிய மன்னர்களின் இயற்பெயர், சிறப்புப் பெயர்களோடு சார்த்திக் கூறப்பட்டிருத்தல் குறிப்பிடத் தக்கது.

**நாடு** என்பது, ஆட்சி நன்கு நடைபெறுமாறு சங்க கால முதல் தமிழ் நாடுகளில் இருந்த நிலப்பிரிவாகும். பிற்காலங்களில் சில நாடு

பெருமாளென் நியமப் பற்றுக் கல்வாயில் நாட்டு நாட்டவர் பக்கல் நான் விலை கொண்டு நாட்டவர் பக்கல் இறையிலி பண்ணிக்கொண்ட நெல்வாசல்பால் காடவதரையர் குடிக்காடு வளையிற் சுற்றுமுற்றும் கல்வாயில் நாட்டு நெல் வாசல் உடையார் திருவகத்திஸ்வரமுடைய நாயனுற்கு அமுதுபடி உள்ளிட்ட விஞ்செனங்களுக்கு தெவதானமாக குடுத்த காடவதரையர் குடிக்காடு வித்தலி கூழிலி

கள், 'கூற்றங்கள்' எனப் பெயர் பெற்றன வென்று தெரிகிறது. ஆதியில் 'ஒல்லையூர் நாடு' என்று பெயர் பெற்றிருந்த நாடு, கி. பி. 10, 11 ஆம் நூற்றாண்டுகளில் 'ஒல்லையூர்க் கூற்றம்' எனப் பெயர் பெற்றுள்ளமை இதற்குச் சான்றாகும். இனி, அதனையூர் நாடு, 'அடலையூர் நாடு' என்றும், கல்வெட்டுக்களில் வழங்கியுள்ளது. தெநாற்றுப் போக்கு என்பது 'தேனாற்றங்கரை' என்று பொருள்படும்.

**சூரைக்குடி பொன்னன் :** சூரைக்குடி என்னும் ஊரிலுள்ள பொன்னன் : அவன் பெயர் அழகிய பெருமாள் என்றும் வழங்கு மென்பது, 'சூரைக்குடி பொன்னன் அழகிய பெருமாள்' என வரும் தொடரால் அறியப்படுகிறது. அழகிய பெருமாளென்-அழகிய பெருமாளாகிய நான்; இச் சாசனம் இவன் தந்த உறுதிமொழியைக் கூறுதலின், இவ்வாறு குறிப்பிடப்பட்டது. நியமப்பற்று - கோயில் நிலம்; நியமம் - கோயில்; பற்று - நிலம். கல்வாயில் நாட்டு நாட்டவர் பக்கல் - கல்வாயில் நாட்டுச் சபையாரிடத்து. நாட்டவர் - ஊர்ச்சபையார் ; நாட்டாண்மைக்காரர் எனினுமாம். பக்கல் - இடம்.

**விலைகொண்டு** - விலைக்கு வாங்கி; இறையிலி பண்ணிக்கொண்ட - வரியில்லாமல் ஆக்கிக்கொண்ட; இறை-வரி; இறையிலி-வரியில்லாமை ; நெல் வாசல் பால் - நெல் வாசல் என்னும் ஊர்ப் பகுதியில்; இஃது இப்பொழுது 'நெய்வாசல்' என்று வழங்குகிறது.

**காடவதரையர் குடிக்காடு வளையில்** - காடவதரையர் என்பார் குடியிருந்த பகுதியில்; காடவதரையர் என்பார் பல்லவர் குடியைச் சேர்ந்தவராவர். இவர்கள் காடவர், காடவராயர் எனவும் அழைக்கப்படுவர். சுற்றுமுற்றும் - சுற்றிலும்; நான்கு பக்கங்களிலும் எனினுமாம்.

**நெல்வாசல் உடையர்** - நெல்வாசல் என்னும் ஊரிலுள்ள இறைவன்; இவர் அகத்தீசுவரமுடைய நாயனர் என்று அழைக்கப்படுவர். நெல் வாசல் என்னும் ஊர், கல்வாயில் நாட்டில் உள்ளது. அமுதுபடி-அரிசி; உள்ளிட்ட-உட்பட; விஞ்செனங்களுக்கு-கறி வகைகளுக்கு; விஞ்செனம்-வெஞ்சனம், கறியமுது. தெவதாநம்-கோயிலுக்குத்தானமாக இடப்பட்ட இறையிலி நிலம்; காடவதரையர் குடிக்காடு: காடவதரையர் குடியிருக்கும் நிலப்பகுதி; இதனை அழகிய பெருமாள் விலைக்கு வாங்கி அகத்தீசுவரர் கோயிலுக்குத் தானமாகக் கொடுத்தான் என்பது: வித்திலி கூழிலி

2. எரிலியாகக் குடிநிங்காக்காணியாக நான் உழுது இந்நயினர்க்குப் பசானம் நாலிலொன்றுங் கொடை ஐஞ்சில்லொன்றுங் கரும்பு மஞ்சன் அடைவாழை ஆறில் லொன்றுமாக விழுக்காடு இடுவெனுகவும் இப்படி உழுமிடத்து தெவகன்மிகள் ஸ்ரீ காரியஞ் செய்வார்கள்—களுக்குத் தெவர் அரசு கண்காணி மீசு குறுணியமிட்டு இவர்கள் கண்காணிப்படிப் பரிமாறுவதாகவும் கொடடர் கூழரி உழமைச்சூடுகுடிக் கலி பறையன் கண்டபடி. பெறுவெனுகவும் புஞ்சை உள்ளது இம்மரியாதி பெறுவெனுகவும் இப்படி சம்மதித்து இன்

எரிலியாக-விதைத்தல், பயிர்செய்தல், அறுவடை செய்தல் ஆகிய பயிரிடு தொழில் செய்வாரின்றி; வித்திலி - விதைப்பாரின்றி, வித்து - விதை, கூழிலி-பயிர் செய்வாரின்றி; கூழ் - பயிர்; எரிலி - எறிலி; அறுவடை செய்வாரின்றி; எறிதல் - அறுத்தல். இனி 'எரிலி' என்பதை 'ஏர்இலி' எனப் பிரித்து, 'உழுவாரின்றி' என்றும் பொருள் கொள்வர்.

2. குடிநிங்காக்காணியாக - குடியிருப்போர் நீங்காத நிலமாக; குடி - குடியிருப்போர்; காணி - நிலம்; இந் நயினர், - நெல் வாசல் அகத்தீசுரமுடைய நாயனர்: நயினர், - நாயனர்; இறைவர். பசானம் - பசான் நெல்லின் அறுவடைக்காலம்; அஃதாவது சித்திரை மாத அறுவடை; பசான் என்பது சித்திரை மாதத்தில் அறுவடையாகும் ஒரு நெல் வகை. கொடை - கோடை, கோடைப் பயிர் அறுவடையாகும் காலம்; அடை வாழை: அடையும் வாழையும், வாழை இலையும் காயும்; இனி, 'வாழை அடை' என மாற்றி, 'வாழையிலை' எனப் பொருள்கொள்ளினுமாம். விழுக்காடு-வீதம்; இடுவெனுகவும்-கொடுப்பேனுகவும்.பசான அறுவடையில், நாலில் ஒன்றும், கோடை அறுவடையில் ஐந்தில் ஒன்றும், கரும்பு, மஞ்சள், வாழையிலை முதலியவை ஆறில் ஒன்றும் கொடுப்பேனுகவும் என்பது. உழுமிடத்து - உழுது பயிர் செய்யுங் காலத்தில்.

தெவ கன்மிகள் - கோயில் இறைவன் காரியங்களைச் செய்பவர்கள்; ஸ்ரீகாரியம் செய்வார்கள்—கோயில் காரியங்களை மேல் பார்வை செய்பவர்கள்; தேவர் அரசு கண்காணி மீசு—இறைவன் காரியங்களைக் கண்காணிப்போர்க்குத் தானமாகக் கொடுக்கப்படும் களநெல்; மீசு - பொலி; தருமச் செலவின் பொருட்டு முதலில் கொடுக்கப்படும் கள நெல்; தேவகன்மிகள், ஸ்ரீகாரியம் செய்வோர்முதலியவர்களுக்குத் தானமாகக் கொடுக்கப்படும் நெல், 'தேவர் அரசு கண்காணி மீசு' எனப்பட்டது. இதனைப்பின்னர் 'கண்காணிப்படி' எனக் கூறியிருத்தலும் காண்க. இனி, 'மீசு' என்பதை 'மிராசு' எனக்கொண்டு, 'பரம்பரையாகக் கொடுக்கப்படும் உரிமைத் தானம்' என்றும் பொருள்கொள்வர். குறுணியுமிட்டு-குறுணி நெல்லைத் தானமாகக் கொடுத்து; பரிமாறுதல் - கொடுத்தல்.

ணுயனுர்க்கு இக் குடிக்காடு சந்திராதித்தவற் செல்லக் கல் வெட்டிக் குடுத்தென் அழகிய பெருமாளென் உடையார் திரு வகத்திஸ்வரமுடைய நாயனுற்க்கு இப்படிக்கு அழகிய பெருமாள் எழுத்து.

3. இப்படிக்கு நாட்டுக் கணக்கு மயிலெறும்

4. பெருமாள் ஸிவஞாந தெவன் ஆன உருப நாராயண முவெந்த வெளான் எழுத்து.

---

**கொடடர் கூழரி உழமைச்சூடு குடிக்கலி பறையன் கண்டபடி பெறு வெனுகவும்:** இதனுல் கொட்டர், கூழரி, உழமைச்சூடு, குடிக்கலி, பறையன் முதலியோர் ஊரில் கடமை பெறுபவர்கள் என்று தெரிகிறது. இவர்களில் கொட்டர் என்போர் கழஞ்சியம் காப்போர் எனவும், கூழரி என்போர், நெற்பயிர் காப்போர் எனவும், உழமைச்சூடு என்போர், சூட்டு நெல் காப்போர் எனவும் தெரிகிறது. பறையன் என்பான் பதினெண் குடிமக்களுள் ஒரு வகையினன்; பறை கொட்டுபவன் போலும். கண்டபடி-பெறுவது போல.

**புஞ்சை உள்ளது** - புன்செய் நிலத்தில் விளையக் கூடியவை; அவை கரும்பு, மஞ்சள், வாழை முதலியன. **இம்மரியாதி பெறுவெனுகவும்** - இந்தமுறையில் பெறுவேனுகவும்.

**நாயனுர்** - இறைவர்; **குடிக்காடு** - ஊர், ஊர் நிலம்; **சந்திராதித்தவல்** - சந்திரசூரிய ருள்ளளவும்; **கல் வெட்டிக் குடுத்தன்** - கல்லில் வெட்டி உறுதிசெய்து கொடுத்தேன்.

**3. நாட்டு** - இந்த நாட்டுக்கு; அதளையூர் நாட்டுக்கு. **நாட்டுக் கணக்கு** - நாட்டுக் கணக்கனை; அதளையூர் நாட்டுக் கணக்கன் பெயர் மயிலேறும் பெருமாள் சிவஞான தேவன் என்பது; அவனது மற்றொரு பெயர், 'உருபநாராயண மூவேந்த வேளான்' என்பதாகும்.

எனவே இச்சாசனத்தில் கையொப்பமிட்டவர்கள், இச்சாசனத்தை உறுதிசெய்து கொடுத்த அழகிய பெருமாளும், இச்சாசனத்தை எழுதிய நாட்டுக் கணக்கு மயிலேறும் பெருமாள் சிவஞான தேவனுன உருப நாராயண மூவேந்தவேளானுமாவர் என்க.

## பயிற்சி வினுக்கள்

1. வீரபாண்டிய தேவன் யார்? அவனைப்பற்றிக் குறிப்பு வரைக.
2. வீரபாண்டியன் சாசனம் எப்போது ஏற்பட்டது? எங்குக் காணப்படுகிறது? அதில் கூறப்படும் செய்திகள் யாவை?
3. பாண்டிய நாட்டின் பிரிவுகளைப் பற்றி வீரபாண்டியன் சாசன முதலியவற்றிலிருந்து குறிப்பிடுக.

4. வீரபாண்டியன் சாசனத்தில் ஆண்டு எவ்வாறு குறிக்கப்பட்டுள்ளது ? அதனால் அறியப்படுவது யாது ?

5. சூரைக்குடி எங்குள்ளது ? சூரைக்குடி பொன்னன் மற்றொரு பெயர் யாது ? அவன் செய்த தானம் என்ன ? உறுதிமொழிகள் யாவை?

6. "வித்திலி கூழிலி எரிலியாகக் குடி நீங்காக் காணியுமிட்டு" "தேவர் அரசு கண்காணி மீசு குறுணியுமிட்டு" "கொட்டர் கூழரி உழமைச் சூடு குடிக்கலி, பறையன் கண்டபடி பெறுவேனாகவும்"-இவைகளுக்குத் தெளிவான பொருள் தருக.

7. குறிப்பு வரைக:—ஸ்வஸ்தி ஸ்ரீ, தநுஞாயிறு, அபரபக்ஷம், துவாதசி, அனிஷத்து நாள், தொாற்றுப் போக்கு, நியமப்பற்று, நாட்டவர், இறையிலி பண்ணிக்கொள்ளுதல், காடவதரையர், குடிநீங்காக் காணி; கண்காணிப்படி, நாட்டுக்கணக்கு.

8. பொருள் தருக:—குடிக்காடு, வளைவு, சுற்று முற்றும், அமுதுபடி, விஞ்செனம், தேவதானம், காணி, பசானம், கோடை, அடைவாழை, விழுக்காடு, ஸ்ரீகாரியம் செய்வார், மரியாதி, நாயினர், சந்திராதித்தவல்.

9. வீரபாண்டியன் சாசனத்தை எழுதியவர் யார் ? அதில் கையொப்பமிட்டார் யார் யார் ?

10. உருபநாராயண மூவேந்த வேளான் யார் ? அவனுடைய மற்றொரு பெயர் யாது ? அவனைப்பற்றிக் குறிப்பு வரைக.

---

# பிற்சேர்க்கைகள்

## 1. விசேடக் குறிப்புக்கள்

1. **காந்தளூர்ச்சாலைக் கலமறுத்தோர்:-** (1) முதலாம் இராசராசன் (2) முதலாம் இராசாதிராசதேவன்.

2. **திரிபுவனச் சக்கரவர்த்திகள் :—** (1) முதலாம் குலோத்துங்க சோழன் (2) விக்கிரம சோழன் (3) குலசேகரதேவன் (4) சுந்தர பாண்டியன் (5) குலசேகர தேவ பராக்கிரம பாண்டியன் (6) வீர பாண்டியன்.

3. **மனுநெறி நின்றோர் :—**(1) முதலாம் இராசராசன் (2) முதலாம் இராசாதிராச தேவன் (3) முதலாம் வீரராசேந்திர சோழன் (4) முதலாம் குலோத்துங்க சோழன் (5) குலசேகர தேவன் (6) சுந்தர பாண்டியன்.

4. **அசுவமேதயாகம் செய்தோன் :-**முதலாம் இராசாதி ராசதேவன்.

5. **வீராபிஷேகம் செய்தோர் :—**இரண்டாம் இராசேந்திர சோழன்.

6. **ஆறிலொன்று கொண்டோன் :—**முதலாம் இராசாதி ராசதேவன்.

7. **அரசமா தேவியார் :—**முதலாம் குலோத்துங்க சோழன் - தியாகவல்லி உலகுடையாள், ஏழிசை வல்லபி ஏழுலகுடையாள், உலக முழுதுடையாள் (2) விக்கிரம சோழன்-முக்கோக்கிழானடிகள், திரிபுவன முழுதுடையாள், தரணி முழுதுடையாள் (3) சுந்தரபாண்டியன் - உலக முழுதுடையாள் (4) அரிகேசரி பராக்கிரம பாண்டியன் - உலக முழுதுடையாள்.

8. **தானம் செய்த மகளிர்—** (i) ஆழ்வார் பராந்தகன் குந்தவையார் (ii) சாமுண்டப்பை (iii) காமக்கவ்வையள்.

9. **அரசியலதிகாரிகள்:—:—**(1) தந்திவர்மன்—புகழ்த்துணை விசயரயன் (1) சோழ நாட்டுச் சோழரான உலகப் பெருமானார்.

(2) முதலாம் பராந்தக சோழன் - மருதூருடையான் அருணிதிக் கவியன்.

(3) முதலாம் இராசராசன்—பொய்கை நாடு கிழவன் ஆதித்த சூரியன்.

(4) முதலாம் இராசேந்திர சோழன்—பொய்கை நாடு கிழவன் ஆதித்த சூரியன்.

(5) இரண்டாம் இராசேந்திரசோழன்—சேனாதிபதி ஜயங்கொண்ட சோழ பிரமாதிராயர்.

(6) சுந்தர பாணடியன் :—(i) பிள்ளையார் அழகப் பெருமாள் நாயனார் (ii) கண்டன் ஆவுடையானான கல்வாயில் நாடாழ்வான்.

## 2. மெய்க்கீர்த்திகள்

1. முதலாம் இராசராசன் —
"திருமகள் போலப் பெருநிலச் செல்வியுந்......" (6, 7, 8)
2. முதலாம் இராசேந்திர சோழன் :—
"திருமன்னி வளர விருநில மடந்தையும் ....." (13, 14)
3. முதலாம் இராசாதிராச தேவன் :—
"திங்களேர் தருதன் றொங்கல்வெண் குடை ...." (15)
4. இரண்டாம் இராசேந்திர சோழன்:—
"திருமாது புவியெனும் பெருமாத ரிவர்தன் ... ..." (16)
5. முதலாம் வீரராசேந்திரதேவன் :—
"திருவளர திரள்புயத் திருநில வலையந் ....." (17)
6. முதலாம் குலோத்துங்க சோழன் :—
"புகழ்சூழ்ந்த புணரி யகழ்சூழ்ந்த புவியில்ப்......" (18, 19)
7. விக்கிரமசோழன் :—
"பூமாலை மிடைந்து பொன்மாலை நிகழ்தரப் ....." (20, 21)
8. குலசேகரதேவர் :—
"பூவின் கிழத்தி மெய்விற் றிருப்ப ... ... ..." (24)
9. சுந்தரபாண்டியன் :—
"பூமருவிய திருமடந்தையும் செயமடந்தையும்......" (25)
10. அரிகேசரி பராக்கிரம பாண்டியன் :—
"பூமிசை வனிதை மார்பினிற் பொலிய ..... " (27)

## 3. வெற்றிகள்

**1. முதலாம் பராந்தக சோழன்:**—மதுரை கொண்டது.

**2. முதலாம் இராசராசன்:**—காந்தளூர்ச் சாலைக் கலமறுத்தது—வேங்கை நாடு, கங்கபாடி, தடிகைபாடி, நுளம்பபாடி, குடமலை நாடு, கொல்லம், கலிங்கநாடு, இரட்டபாடி, பழந்தீவு, பாண்டிய நாடு ஆகியவற்றை வென்றது.

**3. முதலாம் இராசேந்திரசோழன்:**—இடை துறை நாடு, வனவாசி, கொள்ளிப்பாக்கை, மண்ணைக் கடக்கம் ஆகியவைகளைக் கொண்டது—ஈழப்போரில் ஐந்தாம் மகிந்தனை வென்றது—மலைநாட்டுப் போரில் பழந்தீவு, பரசுராமன் ஆண்ட சாந்திமத் தீவு, காந்தளூர்ச்சாலை ஆகியவற்றை வென்றது— செயசிங்கன் என்பவனை முயங்கி என்னுமிடத்தில் வென்று மேலைச்சாளுக்கிய நாடான இரட்டபாடி ஏழரை இலக்கத்தை வென்றது—கங்கைகொண்டது—கடாரம் கொண்டது.

**4. முதலாம் இராசாதிராச தேவன்:**—தென்னவர் மூவருள் மானு பரணன் தலையைக் கொய்தது, வீரகேரளன் தலையையானையின் காலால் இடறச் செய்தது, சுந்தரபாண்டியனை முல்லையூர்வரை துரத்தியது—வேணாட்டை வென்றது—எலிமலைப் பக்கத்திலுள்ள இராமகுட மென்னும் நாட்டை ஆண்ட இராமகுட மூவர் திருவடி என்பவனை வென்றது—சேரனொருவனைப் புறமிடச் செய்து, காந்தளூர்ச்சாலைக் கலமறுத்தது-மேலைச் சாளுக்கிய (குந்தள) மன்னனான ஆகவமல்லனையும் அவன் மக்கள் விக்கியையும் விசயாதித்தனையும், சங்கமய்யனென்னும் தளகர்த்தனுடன் தோற்கடித்துக் கண்டப்பய்யன், கங்காதரன் என்னும் இரு சேனைத் தலைவர்களைக் கொன்று, கொள்ளிப்பாக்கை என்னுமிடத்தில் தீயிட்டுச் சென்றது—இலங்கை மேல் படை எடுத்துச் சென்று தன்னை எதிர்த்த விக்கிரமபாகு, விக்கிரம பாண்டியன், வீரசலாமேகன், சீவல்லப மதனராசன் ஆகியவர்களை வென்றது இரண்டாவது தடவை மேலைச்சாளுக்கியரோடு (ஆகவமல்லனோடு) போர்செய்து, அவர்கள்தலை நகரான கம்பிலியைப் பிடித்து, அங்குள்ள அரண்மனையை இடித்தது.

**5. இரண்டாம் இராசேந்திர சோழன்:** ஆகவமல்லனோடு கொப்பம் என்னுமிடத்தில் போர்செய்து, அவனைப் புறமிடச்செய்து, அவன் பட்டத்து யானைகளான சத்துருபயங்கரன், கரபத்திரன், மூலபத்திரன் ஆகியவைகளையும், அவன் தேவியர்களையும் சிறை பிடித்தது—இலங்கையில் வந்து எதிர்த்த மானுபரணனையும், கலிங்க மன்னனான வீரசலாமேகனையும் வென்றது.

**6. முதலாம் வீரராசேந்திர தேவன்** - ஆகவமல்லன் மகன் விக்கிரமாதித்தனைக் கங்கபாடியினின்றும் துங்கபத்திரை வரை துரத்தியது—வேங்கை நாட்டில் எதிர்த்த அவன் மாதண்ட நாயகனாகிய சாமுண்டராயனைக் கொன்று, அவன் மகள் நாகலை என்பாள் மூக்கை யறுத்தது—கூடல் சங்கமத்தில் எதிர்த்த ஆகவமல்லன் மக்களான விக்கலன் சிங்கணன் என்பவர்களோடு பல சாமந்தரை வென்று அவன் பட்டத்து யானைகளாகிய புஷ்பகப் பிடியையும், அவன் மனைவியரையும், வராகக் கொடி முதலியவற்றையும் கைப் பற்றியது—பொத்தப்பி வேந்தன், கேரளன், ஜனநாதன் தம்பி ஆகிய இவர்களுடன் போர் செய்து இவர்கள் தலைகளைத் துணித்தது—பாண்டியனான ஸ்ரீவல்லவன் மகன் வீரகேசரி தலையை யானையின் காலால் இடறச் செய்தது—நான்காவது தடவையாக ஆகவமல்லன் தண்டநாயகர்களும் பிறரும் எதிர்க்க அவர்களில் மல்லியணன், மஞ்சிப்பயன் முதலியவர்கள் தலைகளை அரிந்தது - ஐந்தாவது தடவைஆகவமல்லன் விடுத்த கடிதத்தின்படி கூடல்சங்கமத்தில் வந்து, ஆகவமல்லன் வரக் காணாது, அவன் நாட்டைக் கொளுத்தி, கம்பிலி நகரைத் தீக்கிரையாக்கி துங்கபத்திரைக் கரையில் கரடிக்கல் என்னுமிடத்தில் வெற்றித் தூண் நாட்டியது—இரட்டபாடியை ஆகவமல்லன் மகன் விக்கிரமாதித்தனுக்குக் கொடுத்தது—கலிங்கம், சக்கர

கோட்டம் இரண்டையும் வென்று கீழைச் சாளுக்கிய நாட்டுடன் சேர்த்தது.

**7. முதலாம் குலோத்துங்க சோழன்** :—சக்கரகோட்ட மண்டலத்தைச் செயித்து வயிராகத்து யானைகளைக் கவர்ந்தது—வீரராசேந்திரனுக்கு உதவியாகக் குந்தளப் போரில் (மேலைச்சாளுக்கியப் போர்) வெற்றி கண்டது—மேலைச் சாளுக்கிய மன்னனான ஆறுவது விக்கிரமாதித்தனோடும் அவன் தம்பி செயசிங்கனோடும் நங்கிலி என்னுமிடத்தில் போர் செய்து வெற்றி கண்டது—பாண்டியர் ஐவரை வென்றது—சேரநாட்டில் விழிஞம், காந்தளூர்ச்சாலை, கோட்டாறு முதலிய இடங்களை வென்றது—தென்கலிங்க, வடகலிங்கப் போர்களில் வெற்றி கண்டது.

**8. விக்கிரம சோழன்** - தென் கலிங்கத்தை ஆண்ட தெலிங்க வீமனைப் போரில் புறங்கண்டது.

**9. சுந்தரபாண்டியன்** :—மூன்றும் இராசராச சோழனை வென்று சோழநாட்டைக் கொண்டது.

**10. அரிகேசரி பராக்கிரம பாண்டியன்**:—சிங்கை, அனுரை, இராசை, செண்பை, விந்தை, அறந்தை, முதலை, வீரை, வைப்பாறு முதலிய இடங்களில் பகை மன்னரை வெற்றி கண்டது.

## 4. திருப்பணிகள்

**1. விக்கிரம சோழன்** :-தில்லையில் பொன்னம்பலத்தைச் சுற்றியுள்ள திருமாளிகை, கோபுரவாசல், கூடசாலைகள், பலிவளர் பீடம், திருத்தேர்க் கோயில் முதலியவற்றைப் பொன்னால் வேய்ந்தது—தான் பிறந்த உத்திரட்டாதி நாளில் பெருவிழா ஒன்று தொடங்கி இறைவன் திருவுருவத்தைத் தேரில் வரச்செய்தது—அவ்விறைவன் திருவுருவத்திற்கு முத்துமாலைகள் பல கொடுத்தது-கோயில் திருமாளிகையைச் சுற்றித் தன் பெயரால் ஒரு நெடுவீதி எடுத்தது—இறைவன் திருவமுது கொள்ளும் பரிகல முதலாகக் கற்பகத்தரு பரிச்சின்ன முதலியவைகளைப் பொன்னால் செய்வித்தது.

**அரிகேசரி பராக்கிரம பாண்டியன்** :—விந்தை முதலிய ஐந்திடங்களில் அந்தணர்களுக்கு அகரங்கள் அமைத்துக் கொடுத்தது-மருதூரற்கு மண்டப மமைத்தது - திருநெல்வேலிச் சிவன்கோயிலுக்கு அர்த்தயாம வழிபாட்டிற்கு நிவந்தங்கள் கொடுத்தது—குற்றாலத் திறைவற்கு மண்டபமமைத்துத் திருமஞ்சனமாட்டுதல் முதலிய திருவிழாச் சிறப்புக்கள் செய்வித்தது - தென்காசியில் கோயில் எடுத்தது - அதன் நாள் வழிபாட்டிற்கும் ஆண்டு விழாக்களுக்கும் நிவந்தங்கள் கொடுத்து, அதைப் பரம்பரையாகப் பாதுகாத்தற்கு ஏற்பாடு செய்தல்.

## 5. பொதுவான வினாக்கள்

1. சாசனம், அதன் வகை, அஃது எழுந்தகாலம், ஏற்பட்ட முறை, புதுப்பிக்கு முறை, வரலாற்றாராய்ச்சிக்குப் பயன்படும் வகை, தமிழ் ...—இவற்றை விளக்கி எழுதுக.

2. சாசனங்க... ...வெவ் வரசமரபினர் குறிக்கப்பட்டுள்ளனர்? ஒவ்வொரு மரபினர் பெயர்களையும் குறிப்பிட்டு, அவர்களைக் கொண்டு தமிழகத்தின் வாழ்வும், தாழ்வும் எங்ஙனம் அறிதல் கூடும் என்று எழுதுக.

3. மெய்க்கீர்த்தி, அதன்பொருள், இலக்கணம், வழங்கலாறு, வரலாற்றாராய்ச் சிக்குப் பயன்படுமுறை முதலியவற்றை எடுத்துக் காட்டோடும் ஆராய்க.

4. சாசனங்களில் மெய்க்கீர்த்தி அமைத்து எழுதும் வழக்கம் பிற்காலத்தது என்பதை ஆராய்வதோடு, சோழர் மெய்க்கீர்த்திக்கும் பாண்டியர் மெய்க்கீர்த்திக்குமுள்ள வேறுபாட்டைக் குறிப்பிடுக.

5. சாசனத்தால் அறியலாகும் சோழ நாட்டின் பிரிவுகளையும், உட்பிரிவுகளையும், அக்காலச் சிறப்புப் பெயரோடும் இக்காலப் பெயரோடும் கூறி விளக்குக.

6. சாசனத்தால் அறியலாகும் பல வகை வரிகள், அளவைகள், அதிகாரிகள், அவர்கள் கடமைகள் ஆகியவற்றை விளக்கி அவற்றின் வழியாகச் சோழர் அரசியலைப் பற்றி ஒரு கட்டுரை வரைக.

7. சாசன ஆராய்ச்சியால் அறியப்படும் அரசர் உள்ளிட்ட தமிழர் நாகரிகப் பண்புகள் யாவை?

8. கல்வெட்டுக்களில் உள்ள ஊர்கள், நாடுகள், கோயில்கள் இவைகளின் பெயர்களை முறையாகக் கூறி இவற்றில் கண்ட மன்னர் பெயரும், மரபும் வகுத்துரைக்க.

9. ஊர்ச் சபைகளைப் பற்றிச் சாசனங்களால் அறியப்படுவன யாவை?

10. கல்வெட்டுக்களைச் 'சாசனங்கள்' என்று வழங்குவது ஏன்? அவற்றுள் செய்யுள் நடையில் அமைந்த பகுதிக்குப் பெயரும் இலக்கணமும் கூறுக.

11. கோவிலமைப்பு, மேற்பார்வை, வழிபாட்டு முறை, திருப்பதியம்பாடுதல், வரவு செலவு—இவற்றைப் பற்றிச் சாசனத்தா லறியலாவனவற்றை ஆராய்க.

12. சாசனங்களால் அறியப்படும் அறச் செயல்கள் யாவை?

13. இலக்கிய வரலாறுகளுடன் சாசன வழக்காறுகள் ஒற்றுமை பெறும் இடங்கள் சில எழுதுக.

14. தேச சரித்திர விளக்கத்திற்கு மெய்க்கீர்த்தியினும் சாசனங்கள் இன்றியமையாதன என்பதை விளக்குக.

15. தென்னிந்தியப் படம் வரைந்து முதலாம் இராசராசன் வென்ற நாடுகளைக் குறிக்க; அல்லது தென்னிந்தியப் படம் வரைந்து அதில் இரட்ட மண்டலம், வேங்கை மண்டலம், செயங்கொண்ட சோழ மண்டலம், இவற்றைக் குறிக்க.

## 6. பல்கலைக் கழகம் தேர்வு வினாக்கள்

பி. ஏ. ஆனர்சு, எம். ஏ. தமிழ்த் தேர்வுகள்

### March 1954

1. What is the importance of the Thirupparkkadal inscriptions of Parthevendra Varman?

2. Write a note on the Tanjore inscriptions of Raja—Raja I.

### March 1955

1. What are the historical and social data provided by the Thirumalai inscription of Rajendra Chola I?

2. Describe the agricultural practices n d [illegible] n land revenue recovered by the Kannanur inscriptions of Sundarapandian?

### March 1956

1. Assess the value of the Thirupparkkadal inscriptions of Parthevendra Varman to the student of Social and Economic history.

2. Give the resume of the Tenkasi inscriptions of Parakrama Pandya.

### March 1958

1. Describe the terms of the deed agreed upon by the members of the Assembly of Narasingamangalam as found in the Anaimalai inscription of Parantaha I.

2. What information does the Manimangalam Inscription of Veera Rajendra furnish regarding his exploits?

---

## வித்துவான், கீழ்க்கலைத் தமிழ்த் தேர்வுகள்

### மார்ச்சு 1958

[எவையேனும் ஐந்து வினாக்களுக்கு விடை தருக.]

1. அரிகேசரி பராக்கிரம பாண்டியனைப் பற்றி அறிந்தவற்றை எழுதுக.

2. "தத்தா நமரேகாண் என்ற மிலாடுடையார்"—விளக்குக. இத்தொடர் கொண்ட கல்வெட்டில் கூறப்படுவது என்ன?

3. முதலாம் இராஜேந்திரனுடைய வெற்றிச் சிறப்புக்களைக் கூறுக.

4. இராஜாதிராஜனின் வரலாற்றை எழுதுக.

5. முதலாங் குலோத்துங்கனின் மெய்க்கீர்த்தி எவ்வாறு காணப்படுகிறது?

### சாசனத் தமிழ்க்கவி சரிதம்

6. சாசனத் தமிழ்க்கவி சரித ஆசிரியர், சேக்கிழார் காலத்து அனபாயனை யாவன் என்று எங்ஙனம் நிறுவுகிறார்?

7. தம்பிரான்றோழர் மானக்கஞ்சாறரைப் பற்றித் தெரிவதென்ன?